திரு. பன்னாலால் படேல் (பிறப்பு 1912 கி.பி.) அவர்கள் குஜராத்தியில் மிகச் சிறந்த கதாசிரியர். நாவலைத் தவிர கதை, நாடகம் முதலியவற்றின் வாயிலாகவும் மிகப் புகழ் பெற்றவர். அதிகமாக எங்கும் பாராட்டிப் பேசப்படும் அவருடைய படைப்புக்களில் 'மளேலா ஜீவ்', 'மானவீனீ பவாயீ', 'சுக்துக்-நா சாத்தீ'—'தில் நீவாத்', 'ஜமாயீ ராஜ்' (ஓரங்க நாடகங்களின் தொகுப்பு) முதலியவை முக்கியமானவை. திரு. பன்னாலால் படேல் அவர்கள் மனித நியதியின் ஆழ்ந்த தத்துவமும், எளிய நடையும் வாய்க்கப் பெற்ற இணையற்ற கதாசிரியர்.

இந்த நாவல் 'மானவீனீ பவாயீ' (வாழ்க்கை ஓர் நாடகம்) அவருடைய மிகப் பெரிய நாவலின் முதற் பகுதியாகும். இதில் சித்திரிக்கப்பட்டுள்ள பஞ்சத்தையும் உயிர் வாழப் போராடும் முழுக் கிராமப் பகுதி அனுபவிக்கும் நிலைமைகளையும் பார்க்கும்போது இது வெறும் சரித்திர தஸ்தாவேஜ் மட்டும் அன்று, பயங்கரமான அனுபவத்தை நம் கண்முன் நிறுத்தும் ஓர் சிறந்த படைப்பு என்பது புலனாகும்.

அனைத்திந்திய நூல் வரிசை

# வாழ்க்கை ஓர் நாடகம்

பன்னாலால் படேல்

தமிழாக்கம் :

துளசி ஜயராமன்



நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா

புது தில்லி

# மனநிறைவு

திரு. பன்னலால் படேல் அவர்கள் பிறவியிலிருந்தே கதாசிரியர் என்பதை, அவருடைய படைப்புக்கள் வெளிவந்தவுடனே இலக்கிய ரசிகர்கள் கண்டுகொண்டனர். இதே காரணத்தால் தான் திரு. மேகாணி பாயி (காலஞ் சென்ற ஜவேர்சந்த் மேகாணி) அவர்களுடைய அன்பு, அவருடைய நாவல்களான 'பளாமணு' (பிரிவு) 'மளேலா ஜீவ்' (அன்பர்கள்) இரண்டிற்கும் அபரிமிதமாகக் கிடைத்தது. அதன் பிறகு வெளியிடப்பட்ட அவருடைய பல சிறுகதைகள் எல்லாவற்றையும் யாவரும் மதித்து வாங்கினர்.

ஆனல் 'மானவீனி பவாயீ' (வாழ்க்கை) அவை எல்லாவற்றைக் காட்டிலும் தனித்தன்மை வாய்ந்தது. கதையின் முழு மெருகும் 'மளேலா ஜீவ்', 'சுக-துக்–நா சாத்தி' (சுக துக்கங்களில் நண்பன்) எனும் கதைகளில் இருக்கிறது என்பது தெரிந்ததே. ஆனல் கதையின் கலை நுட்பத்தை மட்டும் மனதில் கொண்டு பார்த்தால் 'மளேலா ஜீவ்' என்ற கதையில் காணப்படும் கலையின் பொலிவு ஆங்காங்கே சீராக அமைக்கப் பெருததால் 'மானவீனி பவாயி' என்ற நாவலில் சற்றே குறைந்துதான் காணப்படுகிறது. கலையின் உண்மை – கலையின் தத்துவம், அது ஏற்கும் பொருளின் காரணமாகவேதான் அழகு பெறுகிறது. உணர்வு என்பது ஒவ்வொரு மனிதனிடத்திலும் ஒரே விதமான உள்ளக் கிளர்ச்சியைத்தான் தூண்டி விடுகிறது. அந்த உள்ளக் கிளர்ச்சிக்கான கலையாதாரம் தனி மனிதனுக இருந்தால், அந்தக் கலை அழிவற்றிருக்கும்; ஆனல் சீர்பட்டதாக இருக்க முடியாது. அழகிற்கு இலக்கணமாக ப்ளாட்டோ கூறினர்–அழகு என்பது உள்ளப்பொலிவின் சிறப்பாகும். (Beauty is the grandeur of the good) அதேபோல் கலை என்பது தனிப்பட்ட மனிதனின் குறுகிய இன்பதுன்பங்களை அடிப்படையாகக் கொண்டு படைப்பு முழுவதையும் ஒளிமயமாக்கக்கூடிய கதிர்களின் வழியாக நீந்திச் செல்லும்போது மெருகைப் பெறுகிறது.

இரண்டு கிரௌஞ்சப் பறவைகளின் பிரிவை நினைந்து ஆதிகவியின் உள்ளத்திலே வேதனை ஒளிர்ந்தது. அந்த வேதனைக் குரலுக்குப் பொருளாக அமைந்தது, ராமபிரானின் கானக வாழ்க்கை.

உயர்ந்த கலை தனி மனிதனின் வேதனையையும் பிரிவாற்றாமை யையும் புறக்கணிப்பதில்லை. ஆனால் அதனை உயர்ந்ததாக ஆக்கிப் படைப்பு முழுவதுடனும் ஒன்றச் செய்து, படிப்போரின் வேதனை உணர்வைச் செயலாக்குவதோடு, நோயின் அடிப்படை எது, அதனை நீக்கும் வழி என்ன என்பதையும் மறைமுகமாக எடுத்துக் காட்டுகிறது.

ஆதி பருவத்தில் வரக்கூடிய சந்தனு, கங்கா, சிகண்டி, பீஷ்மன் போன்ற பாத்திரங்களின் படைப்பு அவர்களுடைய தனிப்பட்ட உணர்ச்சிகளை உள்ளபடியே வெளியிடுவதற்காக அல்ல. அவர்கள் குருக்ஷேத்திரம், ஜனமேஜயனின் நாக வேள்வி, இவ்விரண்டிற்கும் ஆதாரமாகத் தானாகவே தோன்றினவர்களாவர்.

'லே மிஸரபிள்' எனும் நூலில் வரக்கூடிய ஜீன் வால்ஜீன் தனி மனிதன் மட்டுமல்ல, முழுச் சமுதாயத்துடைய உணர்வின் சின்னமாவான். அப்படியில்லையென்றால் அந்த நூல் ஒரு ரத்தினத் துண்டு போன்ற சிறு கதையாக, இரண்டாவது அத்தியாயத்திலேயே முடிவடைந்திருக்கும். தனி மனிதனாகவே அவனுடைய கதையை எழுத வேண்டியிருந்திருக்குமானால் அவனது சிறைச் சாலைத் துன்பம் பிஷப்பினால் செய்யப்பட்ட அவனுடைய உள்ள மாற்றம் – இந்த இரண்டு நிகழ்ச்சிகளுடனும், கதை முற்றுப் பெற்றிருக்கும். ஆனால் ஜீன் வால்ஜீனும் பிஷப்பும் மட்டுமே உலக மல்ல, சமுதாயமென்றும் ஒன்றிருக்கிறது. ஜீன்வால்ஜீன் போன்றோர்களைச் சீர்திருத்தவும் கெடுக்கவும் எல்லோரும் முயன்று வருகிறார்கள். ஆதலால்தான் தென்றுடியர் போன்ற போக்கிரி, தாவர உலகில் மூழ்கிக்கிடக்கும் மொப்பு, லட்சிய வாதி ஏஞ்ஜொலர்ஸ், காதலன் மேரியஸ், ஆட்சிச் சட்டத்தின் அடிமை வேட்டை நாய் போன்ற ஜெவர்ட் ஆகிய பாத்திரங்களை ஹ்யூகோ கொண்டுவர நேர்ந்தது. கதையைச் சிறையிலிருந்து துவக்கி, மாதாகோயில் வழியே பாரிஸ் நகரின் புரட்சிக்காரர்களுடைய மறைவிடம் வரையில் கொண்டு செல்ல நேர்ந்தது. ஏனென்றால் ஜீன் வால் ஜீன் தனி மனிதன் மட்டுமல்ல, தென்றுடியரின் பசியால் நலிந்த பைத்தியம் பிடித்த அந்தப் பெண், தான் இறந்தபிறகு மரியம் தன்னை முத்தமிடவேண்டும் என்று விரும்பிய அந்தப் பெண் கூட ஜீன் வால் ஜீனின் ஓர் உருவம்தான். இதே போல் 'காவரோஷ்' அவனது மற்றோர் உருவாகும். புரட்சிகரமான உருவம் அவனது மூன்றும் உருவமாகும். ஹ்யூகோ, ஒரு

சிருஷ்டியின் கதையை எழுத வேண்டி வந்தது. இந்த அரிய படைப்பின்றி அவனது கலைத்திறன் வெற்றி பெற்றதாக அமைய வேறு ஒரு வழியும் இருக்கவில்லை. தனிமனிதனின் கதையை முழுப் படைப்பின் இன்ப துன்பங்களுக்கு ஆதாரமாக ஆக்கும்போது தான் ஒரு பெருங்கலை தன் முழுமையைப் பெறுகிறது.

கவிஞர் தாகூர் அவர்களின் 'படகு மூழ்கிற்று' என்ற நாவலை அவருடைய 'வீடும் வெளியும்' என்ற நாவலோடு ஒப்பிட்டுப் பார்த்தால் இது தெளிவாகத் தெரியும். 'படகு மூழ்கிற்று' என்ற நாவலும் ஒரு கலைப் படைப்புத்தான். ஆனால் 'வீடும் வெளியும்' என்ற நாவலில் வெப்பமும் ஒளியும் இணைந்திருக்குமளவு 'படகு மூழ்கிற்று' என்ற நாவலில் காணப்படவில்லை. காரணம், 'படகு மூழ்கிற்று' என்ற நாவலில் வரும் ரமேஷ், கமலா இருவருடைய பிரச்னைகளும் சற்றுத் தளர்ந்து கொடுப்பவை போன்று காணப் பட்ட போதிலும் அவைகள் அந்தப் பாத்திரங்களோடு தோன்று கின்றன. அவர்களுடனேயே முடிவும் பெறுகின்றன. 'வீடும் வெளியும்' என்ற நாவலில் வரும் நிகில், ஸந்தீப் அல்லது விமலினுடைய இன்னல்களுக் கிருப்பிடம் தனி மனிதன், சமுதா யம் இரண்டுமேயாகும்.

திரு. பன்னுலால் 'மானவீனி பவாயி' என்ற தற்கால சூழ் நிலையை அடிப்படையாகக் கொண்ட நாவலை எழுதி புது வழியை வகுத்துக் காண்பித்திருக்கிறார். இந்த நாவலுக்குத் தனிச் சரித்திர மகத்துவம் உண்டு. காலுவின் வாழ்க்கை அவனது தனிப்பட்ட வாழ்க்கையல்ல. ஆனால் குஜராத்தின் எல்லையில் நாற்பது ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்து வந்த பழைய புதிய காலங்களின் இடைக் கோட்டையடைந்து மாறிவரும் கிராமங் களின் வாழ்க்கையாகும். காலு இதற்கு ஓர் நிமித்தம் — அவ்வளவு தான். நிமித்தமாக இருப்பதனால் இன்ப துன்பங்கள் குறைந்து விடவில்லை. ஆதாரமும் கோணங்களும் மட்டும் மாறி விடு கின்றன.

'மானவீனி பவாயி' ஒரு கிராமியச் சமுதாயக் கதை. அதற்கு விறுவிறுப்பையளிப்பது காலமாகும். காலமே முழுக்கதையின் கதாநாயகன் போலிருக்கிறது. மற்ற எல்லோரும் அதன் இங்கிதப்படி நடக்கின்றனர். சமுதாயம் முழுவதையும் அடிப் படையாகக் கொண்டு அதில் காலுவை ஒரு பாத்திரமாகப் படைத்துக் கடைசி இருபத்தைந்து ஆண்டுகளில் முழு வெற்றிகர

மான கதையென்று சொல்வதற்குப் பொருத்தமான கதை எழுத திரு. பன்னுலால் எங்களிடையில் (குஜராத்தி இலக்கியத்தில்) பல பேர்களுக்கு வழிகாட்டியாகத் திகழ்வார்.

இயந்திரமயமான சமுதாயம் தொடங்கிய பின்னர் மனிதனின் இன்ப துன்பங்களுக்கு ஆதாரம் பெரும்பாலும் மாறிவிட்டது. தனி மனிதனுடைய செயல்களின் பயனுக அவனுக்கு நேரும் இன்ப துன்பங்களைக் காட்டிலும் சமுதாய (குடும்பமல்ல) செயல்களின் பயனுக அவனுக்கு ஏற்படும் இன்ப துன்பங்களின் அளவு பெருகிவிட்டது. இதற்குத்தான் புகழ்பெற்ற சமுதாயச் சிந்தனையாளர் கரஹாஸ் வாலஸ் 'நமது சமுதாயச் சொத்து' என்ற பெயரையளித்தார். வம்சபரம்பரைச் சொத்தைக் காட்டிலும் இந்தச் சொத்துதான் நமது இன்பதுன்பத்தை படைப்பதற்குப் பொறுப்பாளியாக அமையும் என்று அவர் இந்தப் பிரிவினையை வகுத்துள்ளார். அரசியல், பொருளாதாரம், மற்றும் ஓரளவுக்கு மற்றப் பகுதிகளிலும் இந்தத் தத்துவம் முற்றி லும் ஏற்கப்பட்ட போதிலும் இலக்கியத்தில் இது வெற்றிகர மான இடத்தை வகிக்கவில்லை. தனி மனிதனே எல்லாமாவான்—என்ற எண்ணத்துடனேயே இலக்கியம் படைக்கப்பட்டு வந்திருக் கிறது. உலகம் 'பேரக்ரிவ்' பூகோள முறைப்படி சுழன்று கொண்டிருக்கிறது. ஆனல் பள்ளிகளில் 'டோலெமியின் பூகோளம்' தான் கற்பிக்கப்படுகிறது. இந்தக் காட்சியும் இது போலவே முறையின்றி அமைந்துள்ளது. 'சூத்திரதாரன்' என்று சொல்லப்படக்கூடிய பாத்திரங்களுக்கெல்லாம் பாத்திரம் சமுதாயச் சக்தியாகும். அந்தச் சக்தியும் திடீரென்று தோன்று வதில்லை. 'மானவீனி பவாயி' அந்தச் சக்தியை ஏற்றுக் கொண்டதோடு சம்பவங்கள் நிகழ்வதற்கு அது எவ்விதம் காரண மாக இருக்கிறது என்பதையும் தெளிவான இங்கிதத்துடன் எடுத்துக் காட்டியுள்ளது. இந்த நாவல் எல்லோருடைய பெரு மதிப்பையும் பெறுவதற்கு இதுதான் காரணம்.

காலு பயமேயறியாத நாணயமுள்ள ஓர் இளைஞன். கதாசிரி யரின் கூற்றுப்படி, இந்த நாணயத்திற்கும் பயமின்மைக்கும் ஒரே ஒரு ஆதாரம், சொந்தச் சச்சரவுகளை லட்சியம் செய்யாமல் துன்பத்தைத் தாங்கிக்கொள்ளும் நேர்மையின் தந்தையின் பண்பும், தாயின் உறுதி படைத்த உள்ளமுமேயாகும். முதல் ஆறு அத்தியாயங்களில் அமைந்திருக்கும் வாலா படேலின் வாழ்க்கைச் சித்திரம் கதைக்கு உருவளிக்கிறது. நூற்றாண்டு

களாகக் கிராமங்கள் நிலைத்து நிற்பது இரண்டு காரணங்களால்; ஒன்று — சச்சரவைப் புறக்கணிக்கும் போக்கு, மற்றொன்று, துன்பத்தினிடம் தோல்வியை ஒப்புக்கொள்ளாமல், புறங்காட்டி ஓடாமல் நிலத்தோடு ஒட்டிக்கொண்டிருக்கும் குடியானவனின் 'அட்டை' போன்ற போக்கு. துன்பம், பொறுமை — இவ்விரண்டின் உருவான தனது உடன் பிறந்தானின் அன்பற்ற மனைவி மாலி, காலு பிறந்தவுடன், உடலையே சுட்டெரிக்கும்படி வசை மொழிய, அதைக்கேட்டு அவளுக்குப் பதிலளிக்கத் துடிக்கும் தன் மனைவியிடம் கூறுகிறான் — 'பேசாதே, பேசாதே. கடவுள் மனமுவந்து அளித்ததை யாராலும் அழிக்க முடியாது. நீ உள்ளே போ! வசைமொழியைப் போல் உலகில் சாபக்கேடு வேறொன்றுமில்லை.'

மறுபுறம் ஒருவருக்கும் தொல்லை கொடுக்காத அப்பாவி வாலா படேலிடம் துக்கத்தைச் சகித்துக்கொள்ளும் திறமையிருக்கிறது ...... அதுவும் முகத்தைச் சுளித்துச் கொண்டல்ல. பாதி வீரத்துடன், மறுபாதி பக்தியின் பலத்தால். சாது மகாத்மாவின் கோவணத்தைப் பற்றிக் கதை சொல்கிறான் அவன். 'சாது மகாத்மா உலக வாழ்க்கையில் சிக்குண்டபிறகு ஓடி விடுகிறான' என்று குறிப்பிட்டபடியே அவன் கூறுவது காலுவின் வாழ்க்கைச் சாரமாக நமக்குத் தோன்றுகிறது — 'உனக்குத் தெரியுமா? சாது மகாத்மா வியாபாரியாக இருப்பான், இல்லாவிட்டால் அந்தணனாக இருப்பான். விவசாயியாக இருந்திருந்தால் இப்படி ஓட்டம் பிடித்திருக்க மாட்டான்! துக்கங்களைச் சகித்துக் கொள்ளக் கற்றுக் கொண்டவன் உழவன். அவனும் சாது மகாத்மாவைப் போல் ஓட்டம் பிடித்தால் உலகமே அழிந்து விடும். ஏன் ஓட வேண்டும்! பைத்தியக்காரன்! சாது ஓடியவுடனேயே, இனி கட்டிலில் படுத்திருந்தால் முடியாது என்று அவள் தெரிந்துகொண்டு விட்டாள். உடனே அவள் எழுந்து நின்றாள். கச்சத்தை நன்கு வரிந்து கட்டிக்கொண்டாள். குன்றைப் பார்த்து டக் டக் என்று நடந்தாள். – உங்களுக்கெல்லாம் அவள் தென்படுகிறாளோ இல்லையோ, அவள் கோந்துக் கற்களைப் பொறுக்கிக் கொண்டிருக்கிறாள்.' பிறகு தன் மூன்று வயது மகன் காலுவை மலரைப்போல் தூக்கித் தோளின் மீது வைத்துக்கொண்டு சொன்னான் — 'இப்படியிருக்கிறது உலகின் நிலை! பாவம் துக்கத்தை உழைத்து உழைத்துப் போக்கிக்

கொள்ள சாது மகாத்மாவிடம் அவ்வளவு தெம்பு எங்கே? பயிர்த்தொழில் செய்பவனைத்தான் அதற்காகப் படைத்திருக்கிருனே கடவுள்! — அடே! நம் எல்லோருக்கும் எத்தனையோ துக்கங்களிருக்கின்றன. ஆனல் ஒவ்வொரு இன்னலையும் மகிழ்ச்சியுடன் சகித்துத் தள்ளிக்கொண்டே வாழ்வோம் நாங்கள்! இல்லையா மகனே? அப்படித்தானே?'

வருத்தத்தை அப்படியே விழுங்கிக்கொண்டு வாழும் சங்கல்ப சக்தி, இந்தக் கடைக்காரர்களின் அரைப் பரிகாசம், அரை இரக்கம், மற்றும் உழைத்து உழைத்து மடியும் இந்த மக்களின் உண்மை மகத்துவம்—இதுதான் கதையின் முழுப்பெருமையையும் உணர்த்தும் இடம். வாலா படேல் தன்னைப் பற்றியா பேசுகிருன்? – நிலையற்ற தன்மை, கொள்ளை, திருட்டு வியாபாரிகளின் கொடுமை, அபினியின் குரூரச் செயல் – இவற்ருல் நசுக்கப்பட்டு நசித்துப் போகும் தருவாயில் இருந்த போதிலும் வாழத்துணியும் விசித்திர சக்தி வாய்ந்த கிராம மக்களின் கதையை, பாடல்களால் கிராமத்தின் உழைக்கும் சமுதாயத்தின் மகிமையைப் பறை சாற்றும் அழகையல்லவா அவன் நமக்கு எடுத்துரைக்கின்ருன்; இது சற்றே தோன்றி மறையும் ஆவேச உணர்ச்சியின் அடிப்படையில் நிற்கும் மகத்துவமல்ல; அன்றி சரித்திரத்தின் நெருப்பெனும் சாணையில் கடைசல் பிடிக்கப்பட்டு, நிலைத்துப் பரிமளிக்கும் மகிமையாகும். அதாவது இந்த வார்த்தைகள்தான் தன் தந்தையிடமிருந்து காலு பெற்ற வாழ்க்கை ரகசியம், வாழ்வின் தாரக மந்திரம்.

நான்கு வயது காலுவின் காதில் இந்த மந்திரத்தை ஓதிவிட்டுத் தன் மனைவியின் கொடுஞ் சுபாவத்தால் வலுவிழந்த தன் சகோதரன் பரமாவிடம் காலுவை ஒப்படைத்துவிட்டு விடைபெற்றுக் கொள்கிருன் வாலா படேல். அவனுடனேயே அந்தச் சின்னஞ் சிறு கிராமத்திலிருந்து உதித்த ஒரு சத்துவ குணமும் பிரிந்துவிடுகிறது.

இந்தச் சத்துவ குணம் இருந்தவரையில் மாலியின் தீய இயல்பு வெற்றி பெறவில்லை. ராஜிக்கும் காலுவுக்கும் திருமணம் நிச்சயமாகப் போவதை அவள் விரும்பவில்லை - அதற்காக வயிற்றிலும் வாயிலும் அடித்துக்கொண்டு அவள் படுத்திய பாட்டிற்கு ஓரளவு கிடையாது. ஆனல் கிராமத்தில் வளைய வந்து கொண்டிருந்த 'பிசாசு' பூலி வாலாவினிடம் வைத்திருந்த உண்மையான பாசத்தின் காரணமாக மாலியால் அந்தத் திருமண நிச்சயத்தைத்

தடுத்து நிறுத்த முடியவில்லை. வாலா பிரிந்தவுடனேயே அந்த பந்தத்தை அவள் முறித்துவிடுகிறாள். குழந்தைப் பருவத்திலிருந்து ஒன்றாய் விளையாடிய, ஒன்றாய் மணல் வீடுகட்டி விளையாடிய, கிராமத்து வயல் வரப்புகளில் ஒன்றாய்ச் சிரித்து ஆடிப்பாடித் திரிந்து களித்துவந்த அவ்விருவரையும் பிரித்துவிடுகிறாள் — இத்துடன் இறைவன் கூடத் திருப்தியடையவில்லை போலும்! ராஜியை இளைய மாமி என்ற உறவிலும் காலுவை அவளுடைய மருமகன் என்ற உறவிலும் பிணைத்துவிடுகிறது அந்தத் தெய்வம். கடலைக் கடந்து சென்றுவிட்டால் அவர்களைக் கண்டு இவ்வளவு பொறாமை யுணர்ச்சி ஏற்பட இடமிருக்காது. தன் மாமியார் வீட்டிலேயே வெகு அருகில் அவள் இருக்கிறாள். ஆனால் தன் வீட்டில் பலி என்ற பெயரில் ஒரு மரக்கட்டை வந்து வாழ்கிறது! இது போதாதென்று காலுவின் தாய் இறப்பதற்கு முன்பு காலு மறுமணம் செய்து கொள்ளக் கூடாது என்று வாக்குறுதி வாங்கிக்கொண்டு தன் கண்களை மூடியிருக்கிறாள்! காலு ஏதோ கத்தி முனையின் மேல் உறங்குவது போல் தவிக்கிறான். அதை விட்டு இறங்கவும் முடிய வில்லை, வாழ்வின் இறுதிக்கணமும் சீக்கிரமாக வரமாட்டேனென் கிறது — மாமியாரின் வீட்டைப்பற்றி நினைத்து அடிக்கடித் தன் கற்பனைக் குதிரையை அவிழ்த்து விட்டுவிடுகிறான் காலு — 'உலகம் எதை வேண்டுமானாலும் சொல்லிக் கொள்ளட்டும். ஒரு தடவை என் துணிகளை ராஜிக்கு அணியக் கொடுக்கப் போகிறேன். அப்புறம் நடப்பது நடக்கட்டும். ஆனால் முதலில் அவளை வழிக்குக் கொண்டுவர வேண்டுமே!' ஆனால் காலு ராஜிக்குத் தானே அளித்த உபதேச மொழிகளை மறந்தே போய்விடுகிறான் — 'சுபிட்சமான வீடும், அழகான கணவனும் இருந்தால் நன்றாகக் குடித்தனம் செய்ய யாருக்குத்தான் தெரியாது? ஏழை வீட்டில், ஒன்றுக்கும் உதவாத கணவனுடன் நன்றாகக் குடித்தனம் நடத்து வதில்தான் பெருமை இருக்கிறது.'

ஆனால் ராஜியின் சுபாவமே தனி. அவளுக்கு இப்படிப்பட்ட உபதேச மொழிகள் சற்றும் தேவையில்லை. நம் இலக்கியத்தில் சரத்சந்திரர் படைத்த பெண் பாத்திரங்களைப் போன்றவள் அவள்.- இளமையின் துடுக்கு மிடுக்கு, சிரிப்பு, விஷமம்-எல்லா வற்றையும் பிறந்தகத்திலிருந்து புக்ககத்திற்குக் கிளம்பும்போதே பத்து மைல் தொலைவைக் கடக்கும்போதே உதறித்தள்ளி விட்டாள். ஒருமுறை நோய்வாய்ப் பட்டிருந்த தன் கணவனுக்காகத் தன் மூக்குத்தியை விற்கத் தயாராகி விடுகிறாள் ராஜி. அதை

யறிந்த காலு கேட்கிறான், 'கோபித்துக் கொள்ளாதே ராஜி! நீ உண்மையில் தயாள்ஜியைப் பிழைக்க வைக்க விரும்புகிறாயா?'

ராஜியின் முகத்தில் வருத்தம் மேகத்தைப் போல் படர்ந்து கொண்டது. வேதனையுடன் சிரித்தபடி கூறினாள் – 'நீங்களுமா என்னிடம் இப்படிக் கேட்கிறீர்கள்? இந்த மனிதன் சாகமாட்டானா என்று ராஜி காத்துக் கிடக்கிறாள் என்று உலகம் நினைக்கிறது. ஆனால் ஏன்? அப்படி எனக்கு என்ன சுகம் அனுபவிக்கவேண்டும்? ராஜி துக்கம்தான் அனுபவித்துக் கொண்டிருக்கிறாள் என்பது உங்கள் எல்லோருடைய எண்ணமோ? எனக்கென்ன துக்கம்? என் ஓரகத்தியும் மைத்துனரும் என்னிடம் தாய் தந்தை போல் அன்பு காட்டுகிறார்கள். என் அன்பிற்காக ஏங்கும் குழந்தைகள் இருக்கின்றன, கணவர் இருக்கிறார்–' அவள் சிரிக்க முயன்றாள் – உங்களைப்போல் அழகாக இருந்தால் நாளொன்றுக்கு இருபது தடவையாவது திட்டுவார். ஆனால் அவர் நான் சொல்லுவதை மறுப்பதே கிடையாது. என்னைப்பற்றிய அக்கறைதான் அவருக்கு எப்போதும், அப்படியிருக்க, எனக்கென்ன வருத்தம்?'

காலு ராஜியைப் பார்த்துக்கொண்டேயிருந்தான். மிகவும் மரியாதையுடன் ஒரு பாவை பார்த்துக் கூறினான் — 'நம் கிராமத்திலேயே உன்னைப் போன்ற பெண்கள் மிகக் குறைவாகத் தானிருப்பார்கள் ராஜி! நான் உன்னைப்போல் ஒருத்தியைக் கூட இதுவரை பார்த்ததில்லை.'

ஆசிரியர் கூறியது உண்மைதான். ராஜியைப் போன்ற பெண் அந்தக் கிராமத்தில் இருக்கவே முடியாது. சரத் சந்திரரின் ராஜலக்ஷ்மி, அலகா, பைரவி, அன்னதா, பாரோ போன்ற பெண்ணாயிற்றே ராஜி. பெருமைக்குரிய இத்தகைய பல பெண் பாத்திரங்களைக் கண்ட பிறகு நம் படைப்பாளர்களால் கிராம நிலத்தில் வித்திட்டுப் பயிரிடப் பெற்ற புதிய இளஞ் செடியாயிற்றே ராஜி. இந்த இளம் பயிருக்கிணையாக அந்தக் கிராமத்திலேயே வேறு கிடையாது என்றால் அதில் காலு எப்படிக் குறை கூற முடியும்?

கிழவன் வாலாவும் கிராம மக்களைச் சேர்ந்தவன்தான். பயங்கரமான பொறாமையே உருவானவளாக இருந்தபோதிலும் மாலி கூடக் கிராமத்தைச் சேர்ந்தவள்தான். பிசாசாகக் காட்சியளித்த பூலி, காசம், பேசாத் — இவர்கள் யாவரும் கிராமத்தைச் சேர்ந்தவர்கள்தான். ஏன், காலுவும் கூடத்தான். அந்தக் காலத்துச் சேர்க்கையின் போது யுகசந்தியின் விளைவாகத்

தோன்றியவன் காலு. ஆனால் ராஜி கிராமத்தைச் சேர்ந்தவ ளல்ல. அவள் வளர்வதற்கேற்ற சூழ்நிலையும், மற்ற போஷணை களும் கிராமத்திலிருந்து கிடைத்த போதிலும் அவள் கிராமத் தைச் சேர்ந்தவளல்ல.

திரு. பன்னாலால் படேல் அவர்களின் படைப்புத் திறனில் குறை காண்பதாக யாரும் கருதி விடக் கூடாது. திரு. பன்னாலால் அவர்களின் படைப்புத் திறன் கண்டு பிடித்துப் பாராட்டத் தக்கவல்ல. அது ஏற்கெனவே பாராட்டைப் பெற்றது தான். ரவீந்திரர், சரத்சந்திரர் போன்று காலம் முழுதும் வியாபித்துள்ள உள்ள உணர்வு பெற்ற படைப்பாளர்களால் யாரும் ஆட்கொள்ளப் படாமல் இருக்க முடியாது. ஆனால் அதனை எந்தவிதமான ரசாயன முறைப்படி மாற்றி அமைத்துத் தன் கதைத்தளத்தில் ஆசிரியர் புகுத்தியுள்ளார் என்பதுதான் ஒவ்வொரு முறையும் கவனிக்க வேண்டிய விஷயம்.

திரு. பன்னாலால் 'மளேலா ஜீவ்' எனும் தம் படைப்பிலும், இந்த நூலிலும் இந்தத் தத்துவத்தைத் தம் உள்ளத்தில் எடுத்துக் கொண்டுள்ளார், என்று வாசகர் கூறிவிடுவர். ஜீவியும் ராஜியும் எது பேசினாலும், முதலில் தாமே ஒரு முடிவு செய்துகொள் கின்றனர். சுற்றியுள்ள நிலைமைக்குத் தக்கவாறு, தம் முறைப் படி செயல்படுகின்றனர். அவர்கள் முதலிலேயே இப்படித்தான் செயல் படவேண்டும் என்று நினைக்காமலிருந்தால் நன்றாக இருந்திருக்கும். சூழ்நிலையைக் கண்டு வேறு கோணத்திலேயே திரும்பிவிடத் துடிக்கின்றனர். நிலைமையைச் சகித்துக்கொண்டு அதற்குத் தக்கபடி மாறியும் விடுகின்றனர். பயமற்ற, உறுதி யான உள்ளம் படைத்தவர்கள் இப்படித்தான் இருக்கவேண்டும் என்று கருதி இவ்விதம் நடந்துகொள்கின்றனர்.

உலகத்துப் பழக்க வழக்கங்களும், சித்தாந்தங்களும் அவர் களைத் தடுத்து நிறுத்தவில்லை. மிகவும் சிறந்த கருணையுள்ளம் தான் அவர்களைத் தடுத்து நிறுத்தியுள்ளது. காலுவுடன் தன் திரு மணம் தடைப்பட்டதில் தன் மாமனாரின் வீட்டோர் செய்த குற்றம் ஒன்றுமில்லை எனக் கருதினாள் ராஜி. காலுவின் மனைவி பலீயும் தான், பாவம், என்ன குற்றம் செய்தாள்? அப்படியிருக்க, காலு வின் பேரில்தான் எப்படிக் குற்றம் சாட்ட முடியும்? பஞ்சத்தின் போது ராஜியின் வீட்டில் ஒரு நாளைக்கு வேண்டிய தானியம் கூட இல்லை என்று காலு அறிந்துகொள்கிறான். பட்டினிதான். கிராமத்

தில் தானியம் கொடுப்பவர்கள் ஒருவருமில்லை. தினமும் வீட்டிற்கெதிரிலேயே பசியால் மடியும் மக்களின் சிதைகள் தயாராகின்றன. எங்காவது ஏதாவது தானியம் கொஞ்சம் கிடைக்குமோ என்று பார்க்க வீட்டோர் வெளியே சென்றிருக்கின்றனர். இந்தக் கவலையினாலும் பசியினாலும் வாடிநிற்கும் ராஜியைக் காலு கேட்கிறான் — 'நீயும் அடையாளம் தெரியாமல் ஆகிவிட்டாயே! ... வீட்டில் தானியம் கொஞ்சம்கூட இல்லையா, ராஜி?'

ராஜி சிரித்தாள். உடல் முழுவதுமே பொலிவிழந்து கிடக்கும் போது சிரிப்பில் அழகு எங்கிருந்து வரும்? ... 'கொஞ்சம் இருக்கிறது. ஒரேயடியாகத் தீர்ந்துவிடுமா என்ன?' ஆனால் காலு அதை ஒப்புக் கொள்ளவில்லை. அவன் உள்ளே சென்று குதிரில் தன் வில்லை விட்டுப் பார்க்கிறான். உள்ளே ஒன்றுமில்லை. நெருப்பு வாங்கிவரப் பக்கத்து வீட்டிற்குச் சென்றுகொண்டிருக்கும் ராஜியைப் பார்த்துக் கூறுகிறான் — 'வீட்டில் தானியம் இருந்தால்தானே அடுப்புப் பற்ற வைக்கவேண்டும்!' பிறகு ராஜி உள்ளே வந்ததும் கூறுகிறான் .... 'கிளம்பு என்னுடன்!' — ராஜியின் உருவத்தைப் பார்த்து அவனுக்கு அழுவதா சிரிப்பதா என்றே புரியவில்லை. காலு சொன்னான் — 'நீ இவ்விதம் மடிந்து கொண்டிருப்பதைப் பார்த்துக் கொண்டிருக்க மாட்டேன்! இந்தச் சாவு கெட்டது!'

'இந்தக் கொடிய மரணம்தானே நாடு முழுவதற்கும் வந்திருக்கிறது? நான் மட்டுமா சாகப் போகிறேன்? .... உலகம் என்ன சொல்லும்? .... உலகம் கிடக்கிறது. உள்ளம் என்பது எல்லோருக்கும் ஒரு மாதிரியானது தானே!'

'உலகம் நாசமாய்ப் போகட்டும். நான் அதை லட்சியம் செய்யப் போவதில்லை. அதன் எதிரே நிற்க என்னிடம் தெம்பு இருக்கிறது. உள்ளத்தைப் பற்றிப் பேசுகிறாய்! எல்லோருடைய உள்ளத்தைப் போலத்தான் என்னுடைய உள்ளமும்! —' எல்லோரையும் தன் இதயத்தில் ஏற்கும் பேருணர்வு இங்கு பரிமளிக்கிறது.

ராஜி சமுதாயத்தைக் கண்டு அஞ்சுவதில்லை, அந்தந்தக்காலத்து உண்மையான ஊக்கம் படைத்த மக்கள் ஒருபோதும் சமுதாயத்தைக் கண்டு அஞ்சுவதில்லை. மரண பயமும் அவர்களுக்குக் கிடையாது. ராஜியே கூறுகிறாள் — 'உங்களுக்கு மரணத்தைப் பற்றியே கவலையிருக்கிறது .... எங்களுக்கு ... நாங்கள் உயிர் வாழும் நம்பிக்கைக்கே என்றோ முழுக்குப் போட்டுவிட்டோம்...

தினமும் நான்கைந்து சிதைகள் எரிவதைக் காண்கின்றோம். அவற்றோடு ஒருநாள் எங்கள் சிதையும்!' உண்மையான உயிர்ப் புச் சக்தி படைத்தவர் மரணம் வரும்போது அதற்கு அழைப்பு விடுப்பர். ஆனால் ராஜி அதைப்பற்றியும் பரபரப்படைவதில்லை. கவலைப் படுவதில்லை. தன்னைச் சுற்றி நலிவிழந்து கிடக்கும் மக்களுக்கு ஆதாரமாகத்தான் இருக்கவேண்டும் என்பதுதான் அவளது கவலை— இந்த விவேகம் சாஸ்திரங்களையும் மந்திரங் களையும் கற்பதனால் வந்துவிடாது. இது பிறவியிலேயே வரும் இயல்பு. ஆயினும், முயற்சி செய்து பார்த்தாலும், மலர் மணம் வீசுவதை யாராலும் தடுத்து நிறுத்த முடியாது. அதே போலத் தான் உற்சாகமே உருவான மக்களும். அவர்கள் வாழ்வு–சாவு எதையுமே லட்சியம் செய்யாமல், யாருடைய நட்புக் கிட்டு கிறதோ, அவர்களுக்கு உள்ளத் தெம்பைத் தானமாக அளித்துக் கொண்டே யிருப்பர். மாதம் முழுவதற்கும் தானியம் கிடைத்து விட்ட மகிழ்ச்சியில் ராஜி கூறுவாள்— 'ஒரு மாதத்திற்குள் அரசு செலுத்தி விடலாம்!' உழைப்பாளிகளின் தன்னம்பிக்கையின் எதிரொலி இது. ஒவ்வொரு நாளும் ஏர் உழுது உழுது, நிலத்தில் உழைந்து உழைத்து, எருதுகளை ஓட்டி ஓட்டி, ஒரு தன்னம்பிக்கை அவர்களுடைய உள்ளத்தில் குடி புகுந்துவிடுகிறது. நம் தொழி லுடன் நாம் சுகமாக இருக்கிறோம். நம்மை நடுங்கச் செய்ய யாரால் முடியும் – என்று நினைக்கின்றனர். எந்த நாட்டிலிருந்து தானியத்தைக் கொண்டு வந்தாலும் சரி, அதன் பிறகும் கூட மக்களின் தன்னம்பிக்கையை என்னென்று சொல்வது? இதைச் சித்திரித்துக் காண்பிப்பது தான் சிரமமான காரியம். கலைத் திறனை முற்றிலும் தன்வசம் கொண்டிருந்தாலன்றி அது முடியாத காரியம்.

இந்தப் பாத்திரங்களின் பெருமை, ஊக்கம், அலட்சிய மனப் பான்மை, உள்ளப் போராட்டம், அவர்களுடைய மலர்ச்சி– சித்திரிப்பதில், ஐம்பத்தாறும் ஆண்டுப் பஞ்சத்தை ஒரு சாதன மாகக் கொண்டு ஆசிரியர் தம் கலையின் முழுத்திறனையும் காண் பித்து விட்டார். பஞ்சத்தின் போது உள்ள காட்சிகளைத் திறம் பட வர்ணித்து நம் இலக்கியத்திற்கே அத்தகைய வர்ணனையை ஓர் சிறந்த எடுத்துக்காட்டாக அமைத்துவிட்டார் அவர். நெடுங் காலம் வரை அத்தகைய வர்ணனைகள் சிறந்த உதாரணங்களாக விளங்கும்.

புகழ் பெற்ற தற்கால சரித்திர நிபுணர் டாய்ன்பி சவால் விடுத்தலையும், பதிலளிப்பதையும் பண்பாட்டின் சாரமாகக் கருதுகிறார் – challenge and response. தனக்கெதிரேயுள்ள சவாலை ஏற்றுப் பதில் கூறும் சமூகம்தான் சிறந்த பண்பாட்டைப் பெற்றிருக்கிறது என்று நாம் கூறலாம். சமூகம் அதாவது சமுதாயம் உள்ள இடத்தில் பண்பாடு கிடையாது. சவாலை ஏற்காமல் அதற்குக் கீழ்ப்படிந்து நடப்பவர்தான் நிற்கும் நிலத்தின் ஆதாரத்தையே இழந்து விடுகின்றனர். 'மானவீனி பவாயி' நாவலின் காலுவும் ராஜியும் பயிர்த்தொழில் செய்து கொண்டு, அதையே பிரதானமான தொழிலாகவுள்ள சமுதாயத்தில் இருந்துகொண்டு, தம்மையே நசுக்கிப் பிழிந்து மாய்க்க வந்த ஐம்பத்தாறும் ஆண்டுப் பஞ்சத்திற்கு எப்படி பதிலளித்தார்கள்? ஐம்பத்தாறும் ஆண்டுப் பஞ்சம், மறைந்து போகும் பரம்பரையின் நினைவிற்குப் பெரிய அடிகோலியாகத் தோன்றிற்று. அதில் நாநாவைப் போன்ற கணவர்கள் தம் மனைவிமார்களைத் துறந்தனர். தம் மகன்களுடன் வாழ்ந்து வந்த தாய்மார்களுக்கு உடலை மூடத் துணி கிடைக்கவில்லை. பலி–ருக்கி போன்ற பெண்கள் மானத்தைத் துறக்க நேர்ந்தது. பிச்சை எடுத்தோ, திருடியோ, நாயின் வாயிலிருந்து பிடுங்கியோ, அல்லது எச்சில் இலையை நக்கியோ, மனிதர்கள் பெற விரும்பியது உணவு ஒன்றுதான். பெண்களோ, தம் உடலைக்கூட விற்று வயிற்றின் ஜ்வாலையைத் தணித்துக் கொள்ள முயன்றனர். மனிதனின் இத்தகைய வீழ்ச்சியைக் கண்டு சங்கர், கதையில் சொல்வது - உண்மைதான். 'இந்த நிலம் எதையும் அனுமதிக்கிறதே, எத்தகைய நல்லது பார்!' பெண்கள் கணவனிடம், தாய் மகளிடம், மகள் தந்தையிடம் அச்சப்பட்டால் தானே! காலைக்கு உயிர் போகப் போகிறது. இன்று எப்படி வாழ்ந்தால் என்ன? முடியும் வரை வாழலாம். எவ்வளவு அனுபவிக்க முடியுமோ அனுபவித்து விடலாம். நியாயமாவது அநியாயமாவது என்றிருந்தார்கள். இந்தமாதிரி தீவிர உணர்ச்சியில் எல்லோரும் இருக்கையில் இந்த இருவர் மட்டும் என்ன செய்வார்கள், பாவம்?

ராஜி, பசியால் அவதிப்பட்டுக் கொண்டிருந்த போதிலும் மைத்துனனையும் கணவனையும் இழந்த போதிலும் தன் மைத்துனனின் குழந்தைகளைக் காப்பாற்றுகிறாள். இதையெல்லாம் காணும் காலு சமுதாயத்தின் நிலை, கடவுள், சேட் வியாபாரி, அரசாங்கம்

— எல்லோர் பேரிலும் சீற்றமடைகிறான். விவேகத்தை இழக்கும் நிலைக்கு வந்து விடுகிறான். அப்போது ராஜி அவனைக் கடிந்து கொள்கிறாள். — 'ஜாக்கிரதை! இனி இப்படி உளறினீர்களோ அப்புறம்! ... இனி இப்படி நினைத்து நினைத்துப் பாதி உயிர் போய்விடும். உடம்பைப் பார்த்துக் கொள்ளுங்கள்! எல்லா வற்றையும் விடக் கொடிய பிசாசு எது தெரியுமா உங்களுக்கு?'

காலுவிற்கு ராஜியின் வசைகள் வெல்லத்தை விட இனிப்பாக இருந்தன. சிரித்துக்கொண்டே அவன் கூறினான் — 'எல்லா வற்றையும் விடக் கொடிய பிசாசு பசி. ஆனால் ...'

ராஜி கூறினாள் — 'இல்லை .... கவலைதான் எல்லாவற்றிலும் கொடியது.'

விபத்து — விபத்து! நம் உள்ளத்தை அதனால் முறித்துவிட முடியுமா என்ன? உடல் நலிவடைந்து விடுகிறது. ஆனால் மனிதன் இறப்பதில்லை. மனம் முறிந்துவிடுகிறது. உடனே அவன் மடிந்து விடுகிறான். அப்போதுதான் பண்பாடு தோல்வியுறுகிறது.

இறைவன், இயற்கை, சமுதாயத்தின் நிலை, எதிலுமே மனிதனுக்கு நம்பிக்கையிருப்பதில்லை. அந்நிலையிலும் காலு சாதாரண மனிதனின் மனிதத் தன்மையில் நம்பிக்கையிழக்க வில்லை. அவன் கூறுகிறான் — 'மனிதன் கொடியவனல்ல; பசிதான் கொடியது. ஏனென்றால் சாதாரண மனிதனிடமிருந்து நம்பிக்கை மறைந்துவிட்டால் அப்போது மனித சமுதாயத்தையே கடலில் கொண்டு தள்ளவேண்டியது தான். ஆனால் இயற்கை அல்லது சமுதாயத்தின் சீர்கெட்டமுறை மனித சமுதாயத்தையே துக்கக் கடலில் ஆழ்த்துகின்ற போதிலும், மனிதனுடைய ஆத்மா வின் மகிமையை, அதன் சொல்லொணா சக்தியைக் குன்றமெனக் கண்டுணரும் கவிஞன் இவ்விதம் கூறத்தான் செய்வான்: 'என் பின்னே பண்பாடு நாசமடைந்து சிதை பொருளாகச் சூழ்ந்து கிடப்பதைக் காண்கிறேன். இருந்தபோதிலும், நான் மனிதனிடம் கொண்டுள்ள நம்பிக்கையை, சிரத்தையை, ஒரு நாளும் இழக்க மாட்டேன்!' உற்சாகமே உருவான விவசாயி காலுவும் கூறு கிறான் — 'பசிதான் கொடியது. மனிதன் கொடியவனல்ல!' ஆனால் இந்த உண்மையை உணரும் திறமை எல்லோரிடமும் கிடையாது. எவன் தன்மானத்தை விடுவதில்லையோ, அயோக்கி யனுக்குத் தாழ்ந்து போய்த் தன்மானத்தை விட்டுக் கொடுப்ப தில்லையோ, அவனால்தான் இந்த உண்மையை ஆதாரமாக

ஏற்க முடியும். அதனால்தான் — உயிர் போகும் நிலைக்கு வந்தாய் விட்டது, அப்போதும் காலு பிச்சை ஏற்று உயிர் வாழ மறுத்து விடுகிறான். ஊனமடைந்த கையைக் கொண்டு தட்டைப் பள பள வென்று துலக்கிக் கொடுத்து ஒரு கவளம் சோறு வாங்கிச் சாப்பிடுகிறான். ஆனால் தானம் ஏற்போரின் வரிசையில் நின்று கொண்டு அந்தத் தானியத்தை ஏற்க அவன் தயாராக இல்லை. கெட்டிக்காரியான ராஜியின் அறிவுரைகளைக் கூட அவன் ஏற்க மாட்டேன் என்கிறான். ஆத்திரம் தாங்க முடியாமல் எரிமலை போல் அடிக்கடி அவன் குமுறுகிறான்.

'தொல்லையிலும் பெரிய தொல்லை பசி என்று நான் சொன்னேன், நான் இன்னும் ஒன்றைப் பார்த்தேன். பசியிலும் மிகப் பெரிய கொடுமை பிச்சை ஏற்பதுதான். பசி எலும்பை யும் தசையையும்தான் உருக்கிவிடுகிறது. ஆனால் பிச்சையோ, ராஜி! உண்மையாகச் சொல்கிறேன்! நம் கௌரவம், ஆத்மா எல்லாவற்றையும் அப்படியே உருக்கி விடுகிறது.' ராஜி கெஞ்சிக் கேட்டுக்கொண்ட பிறகு அவளுடன் செல்கிறான். ஆனால் தானியம் பெற்றுக்கொள்ள நிற்போரின் வரிசையைக் கண்டதும் அங்கு அவனால் நிற்க முடிவதில்லை — களத்து மேட்டில் பிராம் மணர்களுக்குத் தானமாக அளித்தவர்களும் அங்குநின்றிருந்தனர். உலகத்து மன்னாதி மன்னர்களும் சேட்டுகளும் யாரெதிரே எப்போதும் கை ஏந்தி நிற்பார்களோ, அவனே இன்று கை ஏந்தி நிற்கிறானே! மனம் இதை எப்படி ஏற்கும்? அவன் மக்களின் வரிசையிலிருந்து தள்ளி வந்துவிடுகிறான். சிப்பாய் அவனைத் தடுத்து நிறுத்துகிறான்.

'ஏய் முடம்! எங்கே போய்க் கொண்டிருக்கிறாய்?'

'என் இருப்பிடத்திற்கு!'

'சீ! இங்கு நில்லடா! காது கேட்கவில்லையா?'

'நான் தானம் வாங்கிச் சாப்பிட மாட்டேன்!'

'ஏனடா மாட்டாய்? இத்தனை பேர்கள் கேட்டு வாங்கிக் கொள்ள வில்லையா? பெரிய சேட்டு வந்துவிட்டார், வாங்க மாட்டாராமே!'

காலு ஆத்திரத்துடன் கூறினான் — 'சேட்டாக இருந்தால் வாங்கிக் கொண்டிருப்பேன். விவசாயி நான். அதனால்தான் மாட்டேன் என்கிறேன். என்னை அடித்தாலும் நான் வாங்கிக் கொள்ள மாட்டேன். இதோ, நிற்கிறேனே, அடித்துக் கொள் ளுங்கள்!'

சேட் சுந்தர், பாவம், நல்ல மனிதர். அவனைக் கூப்பிட்டுக் கேட்டார். — 'ஏன் தம்பி படேல்! இதை வாங்கிக் கொள்ள மாட்டாயா?'

காலு என்ன பதில் சொல்வான்? விவசாயியின் உள்ளத்தைப் புரிந்துகொள்ளும் சக்தி இவர்களிடம் எங்கே இருக்கிறது என்று அவனுக்குத் தெரியும். எதிரே குவிக்கப்பட்டிருக்கும் தானியக் குவியல் தன்னுடையது என்றால் அவனை அவர்கள் அடிக்க வருவார்கள். நம்மால் பிறகு ஒன்றும் செய்ய வழியில்லை. ஏன் வழியில்லை? கை ஏந்தி நிற்கும் இந்தச் செல்வர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து கைகளை ஓங்கினால் போதும், இந்தத் துப்பாக்கி பிடிப்பவர்கள் எல்லோரும் வாலைக் குழைத்துக் கொண்டு பதுங்கிக் கொள்வார்கள்! நெருப்பைக் கக்கும் காலுவின் கண்களிலிருந்து கண்ணீர்தான் வந்தது — 'என்ன சொல்வேன் சேட்ஜி! — கண்ணெதிரே நாங்கள் உழைத்துப் பெற்ற தானியக் குவியலைக் கண்டால் மனதிற்கு எப்படியிருக்கிறது என்று என்னத்தைச் சொல்வேன்?'

இந்த அநீதத்திற்கு மாற்று கண்டுபிடிப்பது, இந்த சீர்கெட்ட நிலையை அழிக்க ஓர் வழிதேடுவது. இதுதான் இந்தக் கதையின் 'பரத வாக்கியம்.' சேட்ஜியின் நல்ல குணத்தின் வாயிலாக நாவலாசிரியர் இவ்விதம் கூறச் செய்து விட்டார் என்பது உண்மைதான் — 'தம்பி, நம் தானியத்தைக் கேட்டு வாங்க நாம் கை ஏந்துவதா என்று நீ நினைக்கிறாய். எங்களுக்கும் இதைத் தானமாக அளிக்க எவ்வளவு அச்சமாக இருக்கிறது தெரியுமா? உலகம் முழுதையும் காப்பவரை நாங்கள் எத்தனை நாட்கள் காக்கப் போகிறோம்? - ஆனாலும் என்ன செய்வது தம்பி! இயற்கைக்கெதிரே நாம் எல்லோரும் செயலற்றுக் கிடக்கிறோம். ... எல்லோரிடமும் சொல் ... உங்களுடைய பொருளைத்தான் உங்களுக்குத் தருகிறோம்!'

நடந்துள்ள நிகழ்ச்சிகளுக்கெதிரே சேட் ஒப்புக்கொண்ட இந்த உண்மை அந்தக் காலத்துச் சாதாரண சரித்திர சம்பந்தப்பட்ட சூழ்நிலைக் கேற்றதாக இருக்கும். அது காலுவை அந்தக் கணமே அமைதியுற செய்து விடுகிறது. ஆசிரியர் காலுவை அந்தக் காலத்து மிகச் சிறந்த சமுதாய விழிப்புணர்ச்சியின் பிரதிநிதியாகப் படைத்துள்ளார். ஆதலால் எல்லோரையும் பசியால் மடியச் செய்வதை விடக் கொள்ளையடிக்கச் செய்வது உசிதமாக

அவருக்குப் படுகிறது. பசியால் மடிந்துகொண்டிருக்கும் குறவர்கள் மாடுகளைத் திருட ஆரம்பிக்கின்றனர். கன்னம் வைத்துக் கொள்ளையடிக்கத் துவங்குகின்றனர். தம்மிடம் வேண்டிய போர்க் கருவிகள் இருந்த போதிலும் அவர்களை அவன் அடிக்க முயலவில்லை. ஆனால் மாடுகளை அடிக்க முயன்ற அவர்களை அடித்து மாடுகளைத் தன்னந்தனியாக மீட்டு வருகிறான், வாலா படேலின் அந்த வீரப் புதல்வன் காலு. எதற்காகத்தான் அப்படிச் செய்தோம் என்பதைக் கூட மறந்து தனக்குள் அவன் கூறிக் கொள்கிறான்— 'இவர்களால் எப்படிக் கொல்ல முடியும்? உணவு சாப்பிடும் நிலை இவர்களுக்கு எப்போது வரும்? பாவம், இந்த மாடுகள் எப்போதுதான் விடுபடுமோ?'

கத்தியைக் கீழே வீசி எறிந்துவிட்டுக் கூறுகின்றான் — 'இந்தா, பஞ்சத்தைப் படைத்த தெய்வமே! நீ நாசமாய்ப் போ! நீ இந்நிலைக்கு மனிதனைக் கொண்டுவந்து விட்டாயே!'

கடவுளையும் இம் மாதிரித் திட்டக் கிளம்பிய காலு சேட்ஜியைப் போல் தன் வசமின்மையைத் தெரிவித்துவிட்டுச் சும்மா எப்படி இருப்பான்? அப்படிச் செய்தல் அறிவின்மையாகும். அநீதமாகும், சிக்கலான பிரச்னைக்கு இடமளிப்பதாகி விடும். தானியத்தைப் பத்திரமாகப் பாதுகாக்க வந்த சிப்பாய்களிடம் 'டப் டப்' என்று வெடிக்கும் துப்பாக்கிகளைக் கண்டு அவன் குமுறுகிறான் —

'அடே கொலைகாரப் பயல்களே! வண்டியில் துப்பாக்கிகளைக் கொண்டுவந்து இறக்குகிறீர்களே. தானிய மூட்டைகளை இறக்குவதுதானே! ஏற்கனவே மரணம் இங்கு நடமாடுகிறது. உயிரை மாய்ப்பவர்களை வேறு கொண்டு வந்து இறக்குகிறீர்களே! உயிரளிப்பவர்களைக் கொண்டு வருவதுதானே! கொல்வதில் முப்பத்தாறு கலைகளைக் காண்பிக்கின்றீர்களே, எல்லோரையும் உயிர்ப்பிக்க அவற்றைப் பயன் படுத்துவதுதானே! உங்களை நாங்கள் தேவ வடிவென நினைத்தோம். 'தேவ உருவில் அரக்கர்களாக வல்லவா காட்சியளிக்கிறீர்கள்?'

இங்கு உலகம் முழுவதையும் அன்புடன் தழுவிக் கொள்ளும் மனிதத்தன்மை துடிக்கக் காண்கிறோம். பயங்கரமான சீர்கேட்டு நிலையைக் குலைக்க ஒரு சக்திக்கு விடுக்கும் அறைகூவலைக் கேட்கிறோம்.

கடல் கடந்து வந்த வெள்ளையரின் அறிவு இந்தக் கிராமத்திலேயே கிடந்து, தமக்குள் பூசலிட்டுக் கொண்டிருக்கும் மக்களை

விட அதிகமாகத் தானிருந்தது. ஆனால் பண்பாடு அறிவைக் காட்டிலும் ஒருபடி மேலாகவே இருந்தது. காலுவின் முடிவு— 'இல்லை' என்பதுதான். சரித்திர ஆசிரியர் ரமேஷ் சந்திரா கூட இந்த முடிவின் கையொப்பமிட்டுக் கூறுவார் — 'அவர்களுடைய அரசாட்சியின் போதுதான் பஞ்சம் அதிகமாகத் தலையெடுத்தது!'

இவ்விதம் சரித்திரத்தின் உண்மையும் காவியத்தின் தத்துவமும் ஒன்று சேரக் காண்கின்றோம்.

இந்தத் தத்துவம் இன்று கூடப் பலனற்றுப் போயிருக்கிறது? இன்று கூடக் காலுவின் கூக்குரல் நமக்குக் கேட்கவில்லையா? —

ஒரு அணுகுண்டு அறுநூற்றைம்பது கோடி டாலர்கள் செலவிட்டுச் செய்யப்படுகிறது. ஒரு ஆகாய விமானத்தைச் செய்ய ஒரு சிறு நாட்டின் பள்ளிகளை நிர்வாகிக்கச் செலவிடப்படும் பொருள் தேவைப்படுகிறது. குழந்தைகளுக்குப் பால் கிடைக்கவில்லை, நோயாளிகளுக்கு மருந்து கிடைக்கவில்லை. இருப்பிடமில்லாதவருக்கு வசிக்க இடமில்லை. ஆனால் குண்டுகளும், விஷப் புகைகளும் கப்பல்களும் அதிகரித்துக்கொண்டே வருகின்றன. இதில் ஒரு அரைக்காசு கூடப் பொருள் பற்றாமை காணப்படவில்லை. மனிதனின் அறிவும் ஆற்றலும் கலைத்திறனும் நாசமடையச் செய்யும் சாதனங்களிடம் தம் சேவையை அர்ப்பணித்து விட்டன போலும்! இல்லாவிட்டால் மழைநீரைச் சேமித்து வைத்துப் பஞ்சத்தைத் தோற்கடிப்பது சிரமமான காரியமா என்ன? முப்பத்தாறு கலைகளும் இந்த அநீதக்காரர்களிடம் தன்னைப் பணயம் வைத்துப் பத்திரம் எழுதிக் கொடுத்து விட்டனவே என்றுதான் வருத்தமாக இருக்கிறது. பிரம்மாண்டமான பிரச்னைகளுக்குத் தீர்வு காணக் கிளம்பிய இந்த வாமன அரச அதிகாரிகளிடம் எல்லோரும் ஒன்றாய்ச் சேர்ந்து 'வேண்டாம்' என்று கூறினால்! ஸமஸ்காரத்தின் மன்னன் கலைஞன், விஞ்ஞானி இவர்களுடைய ஒத்துழைப்பைத் தவிர்த்து இந்தப் போர் ஆசை பிடித்த மன்னர்களால் என்ன செய்ய முடியும்?

காலுவின் இந்தப் புகாரைத் தவிர்ப்பதற்காக, உலகின் இந்த அறைகூவல் அவர்களை ஒற்றுமையுடன் பிணைக்க ஏன் ஊக்குவிக்காது? அவர்களுடைய மனிதத் தன்மை விழிப்புற்று எழாவிடில் காலு கூறுவதுபோல் அவர்கள் எல்லோரையும் பசியால் மடிய வைத்து வழிக்குக் கொண்டுவர வேண்டியதுதான். கலைஞன் இம்மாதிரியா விரும்பவேண்டும்?

கலைஞன், விஞ்ஞானி இருவரிடமும் கடவுள் அளித்த பொருள் உள்ளது. எல்லோருடைய நலனுக்காகவும் அதனைப் பயன் படுத்தினால்தான் நல்லது. அப்போதுதான் இன்றைய உலகின் பிரச்சனைக்குத் தீர்வு கிடைக்கும். பொருளை அளித்த இறைவனால் கூட இதற்கிடையே வரமுடியாது. 'மானவீனி பவாயி' ரசிகப் பெருமக்களான வாசகர்களுக்கு விடுக்கும் அழைப்பும் அத்தகையது தான்.

இந்த அழைப்பை விடுப்பதற்காக ஆசிரியர் எத்தகைய மன்றத்தை ஏற்றிருக்கிறார்? எத்தகைய மொழியில் இந்தப் பிரச்சனையை வைத்திருக்கிறார்?

திரு. பன்னலால் அவர்களின் மொழி இப்பிரச்னைக்கென்றே நிறுவப் பெற்றிருக்கிறது. திறமை படைத்த கலைஞன் சிறந்த முறையில் கலைப் பொருளைப் படைப்பதற்கு, முதலிலேயே பலவித சாதனங்களை, மிகச் சிறந்த பொருள்களைச் சீர்ப்படுத்திச் சேமித்து வைத்துக் கொள்வான். அப்படியே இந்தப் படைப்பிற்காக திரு. பன்னலாலும் செய்திருக்கிறார். புதிய சொற்கள் புதிய வாக்கிய அமைப்புகள், விசித்திரமான வர்ணனை அழகு – முதலியன ஒவ்வொரு பக்கத்திலும் காணப்படுகின்றன. எந்த அத்தியாயத்தை வேண்டுமானாலும் திறந்து பாருங்கள். அதன் தலைப்பைப பாருங்கள், பிறகு உரையாடல், வர்ணனை, அதன் ஆழ்நத கருத்து, சூழ்நிலை முதலியவற்றைக் கவனியுங்கள்.

'மானவீனி பவாயி' உழவர் சமுதாயத்தின் கதை. பயிர்த்தொழில் பற்றிய வர்ணனைகள், பலவிதப் பருவங்களில் கண்ணெதிரே காண்பிப்பது போது போல் சித்திரிக்கப்பட்டிருக்கின்றன.

'ஆடிமாதத்து மூன்றும் பிறை நாள். இரவில் ஆகாயம் தொட்டிலில் ஆடுவது போலிருக்கிறது. நள்ளிரவு நேரம். நிலத்தில் புயல் பயங்கரமான போர் புரிந்து கொண்டிருக்கிறது. சேவல் கூவிற்று; மண்ணகமும் விண்ணகமும் அப்படியே மனம் ஒன்றி உட்கார்ந்துவிட்டன.

அதிகாலை ஆனவுடனேயே இந்த மேகங்கள் கர்ஜனை செய்து கொண்டு நிலத்தின குன்றுகளின் வரிசைக்குப் போய்விட்டன. காற்று, சூறுவளி, மின்னல்கள் இவை யாவும் போர்ப் படைகளுடன் செல்லும் பொருள்களைப் போல் மறைந்து போய் விட்டன.

ஓரிரவிற்குள் நிலமகளே ஒரு திரும்புத் திரும்பிவிட்டாற் போலிருந்தது. நேற்றுவரை நிலத்தின் மூச்சே திணறும்படி வெப்பமிருந்தது. ஆனால் இப்போது நிலத்தில் சிறிது படுத்துத் தூங்கலாம் எனும்படி அவ்வளவு குளிர்ச்சியாக, மனதிற்கு அவ்வளவு ரம்மியமாக இருந்தது. ஆங்காங்கே குட்டைகளும் குளங்களும் பளிச்சிட்டன. பல குரல்களை எழுப்பும் இயந்திரங்களைப் போல் தவளைகள் சப்தமிட்டன. முட்புதர் போன்று தோன்றிய அந்தச் செடிகொடிகள் இப்போது இளந்தளிர்களுடன் பொலிவு மிக்கதாகக் காணப்பட்டன. பசும் போர்வையுடன் கண்களுக்குக் குளிர்ச்சியளித்தன. புன்முறுவல் பூத்தன. பறவைகளும், ஆகாயத்து ஏதோ ஒரு முனையிலிருந்து விளையாட, வாழ்த்துக் கூற இறங்கி வந்தன.

நிலம் மட்டுமா என்ன? பயங்கர வேகத்துடன் வீசிய காற்றும் இன்று இனிய காற்றாக வீசிக் கொண்டிருந்தது. தாராளமாக நிலத்தின் மணத்தை அள்ளி வீசியது. தளிர்களைச் சிரிக்கச் செய்தது. கிளைகளை ஊஞ்சலில் ஆட்டிக்கொண்டிருந்தது. நதிக்கரையின் அடர்ந்த மரஞ்செடிகளிலும் தொலைவிலுள்ள குன்றுகளிலும் கண்ணாமூச்சி விளையாட்டு விளையாடிக் கொண்டிருந்தது. அந்த ஆதவன் நேற்று விண்வெளியில் அமர்ந்துகொண்டு ஜ்வாலைகளை கக்கிக் கொண்டிருந்தான். இன்று அவனும் சிவப்பு நிறத்தை வீசிய வண்ணம் சிரித்துக் கொண்டிருந்தான்.

இதன் பிறகு ஆசிரியர் விலங்கினங்களின் மனக்களிப்பு, எருதுகளின் ஓட்டம், விதைப்பதில் தன்னை மறந்து களிப்புறும் கிராம மக்கள் முதலியவை பற்றி வர்ணித்திருக்கிறார்.

படைப்பிலேயே எங்கும் வருத்தமில்லை. சுருதியற்ற நாதத்தைப் போன்ற நிலை கிடையாது. பஞ்சத்தைப் பற்றிய வர்ணனைகளை 'வேதனையில் நசுங்கி', 'சோதனை நாள்', 'உரலில் தலை' போன்ற அத்தியாயங்களில் படியுங்கள்.

'கோடை நாள் — அதிலும் வேலையொன்றும் கிடையாது. தலைக்கு மேல் நிற்கும் கத்திபோல் மரணம் வேறு காத்துக் கிடக்கிறது. நாள் கழிவதே கடினமாகிவிட்டது. ராமா கூறியதும் உண்மைதான் — 'இந்த நாட்களின் கால்கள் முறிந்து விட்டனவோ, பசியால் நலிந்து அசையவே மாட்டேன் என்கின்றனவே!'

வைகாசி மாதச் சுழல் ஆரம்பித்துவிட்டது. இந்த ஆண்டு

வயலில் புல் கூட அசையவில்லை. இருந்தால்தானே அசைவதற்கு? உலர்ந்த சருகுகள் கூட அசையவில்லை.'

அதாவது இலைகள் உலர்ந்து சருகாவதற்கு முன்னமேயே அவற்றை மக்கள் தின்றுவிட்டனரோ என்னமோ.

'வெப்பத்தில் தூசி பறந்ததா, அல்லது மக்களின் உலர்ந்த கேசங்கள்தான் பறந்தனவா?

பன்னிரண்டு மாதங்களாகப் பெய்யாத மழை ஆனி மாதத்துப் பதினைந்து தினங்களுக்குள் பெய்யும் என்று நம்பிக்கையிருந்தது. ஆனால் மேகமன்னன் உறங்கிவிட்டானா என்ன? அல்லது அவனிடமிருந்த நீர் முழுதும் தீர்ந்துவிட்டதா? அல்லது திரும்பும்போது பாதை நீண்டுவிட்டதா?

நிலத்தில் மரணம்தான் மழையெனப் பெய்துகொண்டிருந்தது. கானகத்தில், வயல் வெளிகளில், கடைத் தெருக்களில், பாதைகளில் எங்கு பார்த்தாலும் பிணக்குவியல்கள். யாரை எரிப்பது, யாரைப் புதைப்பது? யாருக்காக வருந்துவது? யாருக்கு ஈமக் கடன்களைச் செய்து முடிப்பது? உயிருடன் தப்பியவர்கள் தம் உற்றார் உறவினர்களை முதலில் அனுப்பிவைத்தது பற்றி ஆறுதலடைந்தனர், மகிழ்வடைந்தனர். பார்க்காமலிருந்தால் வருத்தமில்லாமலிருக்கும் என்று கருதி வந்தனர்.

கிராமத்துப் பருவங்கள், உற்சவங்கள், திருவிழாக்கள் முதலியவை பற்றிய சிறந்த வர்ணனைகளைப் படிக்க வேண்டுமானால் 'நிலச்சுமையைத் தாங்குபவன்' எனும் அத்தியாயத்தைப் படித்துப் பாருங்கள். ஐந்தே வரிகளில் பருவங்களில் வளையவரும் கிராமத்தின் அழகு நம் கண்ணெதிரே வந்து நிற்கிறது.

இந்த நாவலுக்கு 'மானவீனி பவாயி' என்று பெயரளிக்கப் படாமலிருந்தால், 'நிலத்தின் சுமையைத் தாங்குபவன்' எனும் பெயரைத்தான் நானளித்திருப்பேன்.

வர்ணனைகள், இயல்புகளைச் சித்திரிக்கும் அழகு, உரையாடல், வசைகள், மன வேதனைகள்—இம்மாதிரியான இடங்களில் மொழி கையாளப்பட்டுள்ள திறமை மிகவும் ஆழ்ந்து கவனிக்க வேண்டியதாகும். இனிய முத்துக்களின் ஆரங்கள் சில இடங்களில் உள்ளன; நெருப்புக் குவியல்கள் மற்றும் சில இடங்களில் இருக்கின்றன. வாள் வீச்சு ஓரிடம், வாள் போல் உள்ளத்தில் பாயும் வேதனை மற்றோரிடம். மற்றும் உள்ளத்தைக் கடைந்தெடுக்கும் போராட்டத்தில் அலை மோதல் வேறு ஒருபுறம்.

மாலி பேசும் விதம்தான் எல்லாவற்றிலும் பிரமாதம். கிழவி மாலி காலுவின் திருமண நிச்சயத்தைத் தடுத்து நிறுத்தப் படாத பாடுபடுகிறாள். ஆனால் அவளெதிரேயே நடக்கிறது நிச்சயதார்த்தம். அப்போது தன் கணவனிடமும் மகனிடமும் கூறுகிறாள் —

'செத்துப் போகிறதுதானே! எங்காவது போய் சாது சந்நியாசியுடன் சேர்ந்து கொள்வதுதானே! அந்த மடையன் ரண்சோட் எங்கே ஒழிந்தான்? என் வயிற்றில் வந்து பிறந்தானே! உன் பெண்டாட்டியை அவளுடைய பிறந்தகத்திற்குத் துரத்தடா ... உம் நிச்சயமாகிவிட்டது. ஆனால் அந்தக் கரியனுக்குத் திருமணம் நடக்க விட்டேனா அப்புறம் என்னை சீ நாயே என்று கேள்!'

உண்மையில் விவேகமற்ற பகையினால் உந்தப்பட்டு காலு — ராஜி இருவருக்கும் திருமணம் நடக்க அவள் விடவில்லை. 'மாலியின் மரணம்' எனும் அத்தியாயத்தில் நேரம் — வேளை எவ்விதம் மனிதனைப் பரிகசிக்கிறது என்பதை வெற்றியுடன் ஆசிரியர் சித்திரித்துக் காண்பித்துள்ளார்.

அக்கம் பக்கத்தில் வாழ்ந்து வரும் குறவர்கள் எந்த நேரத்திலும் கிராமத்தைக் கொள்ளையிட வந்துவிடுவார்களே என்ற கவலை ஒருபுறமிருக்க, தினந்தோறும் குன்றுகளிலிருந்து, தீவட்டிகள் இறங்குகின்றன. ஒரே கொம்மாளச் சிரிப்பொலி கேட்கிறது.— எல்லோரும் தத்தம் தானியங்களையும் நகைகளையும் ஒளித்து வைக்கின்றனர். ஆனால் மாலி மட்டும் தன் குடும்பத்தினர் அத்தனை பேருடைய நகைகளையும் தன் மடியிலேயே கட்டி வைத்துக் கொண்டிருக்கிறாள். — 'சீ சனியனே! எனக்கெல்லாம் தெரியும். எடு இப்படி உம்! என் தலை நரைத்திருக்கிறது என்றால் சும்மா நரைத்து விடவில்லை நினைவிருக்கட்டும்!'

கிழவி நகை முடிச்சுடன் கொள்ளைக்காரரிடம் அகப்பட்டுக் கொள்கிறாள் ... கால்களைக் கல்லில் அடித்துக்கொண்டு இறக்கிறாள். கொள்ளைக்காரர்கள் உடலை மூட ஒரு சிறு கந்தலைக் கூட விட்டு வைக்கவில்லை. சடலத்தை மூடத் துணி கூட அந்தக் கரியன் காலுவிடமிருந்துதான் கிடைக்கிறது!

சிதையில் கிழவியின் சடலம் வைக்கப்பட்டிருக்கிறது. 'கிழவியின் வாயில் வைக்க' — என்று யாரோ சொல்கிறார்கள்.

நாநா வருத்தமுற்றான் — 'அதிருஷ்டக்கட்டை! நம் கையில் ஒரு வெள்ளி மோதிரமாவது இருக்க விட்டிருந்தால் அதையாவது முறித்து அவளுடைய வாயில் வைக்கலாம். ஆனால் அரை மணங்கு நகையையும் எடுத்துக்கொண்டல்லவா மறைந்துவிட்டாள்!'

காலு மனதிற்குள் இந்த மகன்களை வெறுத்தான். தன் கை மோதிரத்தை உடைத்து ஒரு துண்டை அவளது வாயில் வைத்தான்! ஆனால் சங்கேதமாக ஆசிரியர் கூறிய இந்த வாக்கியத்தை பாருங்கள்! — ஆனால் மாலி இறந்துவிட்டாள் என்று இந்த மக்களுக்கு எங்கே புரியப் போகிறது? இல்லாவிட்டால் காலு வைத்த அந்த வெள்ளித்துண்டை அவள் தூ என்று உமிழ்ந்திருக்க மாட்டாளா?

காலுவும் ராஜியும் சஞ்சலமற்றவர்கள். கிழவி மாலியும் அவளுடைய நாநாவும் அதே மாதிரிதான். ஸ்திரமாக நிற்பவர்கள். கிழவி நகையைப் புதைக்க மறுத்தாள். ஆனால் குதிரைகளை ஓடவிட்டால் கூடக் கண்டுபிடிக்க முடியாத இடத்தை அவள் அடைந்துவிட்டாள். இதை நினைத்து மார்பைக் குத்திக் கொண்டும் அடித்துக் கொண்டும் நாநா அலறினான்— 'ஓடியே போய்விட்டாய். ஆனால் அங்கு, கடவுளின் தர்பாரில் உன்னை ஒரு கை பார்க்காவிட்டால், உன் வயிற்றில் பாறாங்கல் பிறந்தது என்று சொல்!'

காலத்தை அடிப்படையாகக் கொண்ட நாவலைப் படைப்பது கடினமானதோர் கலையாகும். நிகழ்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டு நாவலில் நாவலாசிரியர் நிகழ்ச்சிகளைப் பிணைத்துக் கொண்டே போகின்றார். வரிசையாக வரும் நிகழ்ச்சிகளின் உதவியால் கதையில் தொடர்ச்சியைக் கொண்டுவருவதும் அந்த தொடர்ச்சியில் மற்ற குறைகளை மறந்துவிடுவதும் நூலாசிரியருக்கும், வாசகர்களுக்கும் சுலபமானதாகும். பாத்திரங்களின் இயல்புகளை அடிப்படையாகக் கொண்ட நாவல்களிலும், பாத்திரங்களின் இயல்பு கதையின் போக்கை நிறுவுகிறது. ஆனால் காலத்தை அடிப்படையாகக் கொண்ட நாவலில் காலத்தின் போக்குத்தான் முக்கியமானதாக இருக்கிறது. சிற்சில சமயங்களில் அதன் வேகம் விறுவிறுப்பாகவும் மற்றும் சில சமயங்களில் மந்தமாகவும் இருக்கிறது. பாத்திரங்களும் இயல்பான முறையில் அதன் போக்கை அனுசரிக்க வேண்டியிருக்கிறது. இதில் ஆசிரியர் நிகழ்ச்சிகளைத் தன் விருப்பப்படி பிணைக்க முடியாது. காலம், அதாவது மனிதர்களின் தனிப்பட்டதும், சமுதாயச் சார்புள்ளதுமான செயல்களும், விதி வகுக்கும் வழியும், ஊடும் பாவும் போல் ஒன்றோடொன்று பிணைந்து விடுகின்றன. மனிதனின் தனிப்பட்ட பண்பு ஓரிடத்தில் உருப்பெறு

கின்றது. அதன் முழுமை வேறொரு இடத்தில் காணப்படுகிறது. சூதாட்டச் சபையில் வேறு வழியின்றி தனது சொத்தையும் மனைவியையும் இழக்கும் தரும புத்திரருடைய மயக்கத்தோடு, சூதாட்டக் காய்களின் புகழ் மாலை முதல் சகுனிவரையிலான எல்லாவிதமான செயல்களும் வந்து இணைகின்றன. 'War and Peace' என்ற பெரும் நாவலின் பாத்திரம் 'நாட்டாசா'வின் புற உருவத்திலிருந்து உள்ளத்திலிருந்து தோன்றுவதுபோல் காணப்படும் முடிவுகள் அவளுடைய சொந்த முடிவுகளல்ல. ஆனால் போர் மற்றும் அதைப் போன்ற சில சக்திகளின் முடிவாகத் தோன்றியவையாகும்.

ஆதலால் காலத்தை அடிப்படையாகக் கொண்ட நாவலில் கதாசிரியர் வாசகருக்கும் தனது படைப்பிற்குமிடையே கண்ணாமூச்சி விளையாடவேண்டி வருகிறது. கதாசிரியர் தாம்தான் முடிவை நிறுவுவதாக நினைக்கிறார். ஆனால் உண்மையில் இதைச் செய்வது விதியும் மற்ற சமுதாயச் சக்திகளுமாகும். இவற்றிலிருந்து திறமையுடன் ஒரு வழியை வகுப்பதுதான் கதாசிரியர் கையாளும் கண்ணாமூச்சி விளையாட்டாகும். அந்த விளையாட்டை உணரச் செய்யாமலிருத்தல் சாதாரணக் கலைக்கு இயலாததொன்றாகும்.

'மானவீனி பவாயி'யில் பன்னாலால் படேல் ஒரு சமுதாயம் முழுவதையும் ஒரு காலத்தால் உந்தப்படுவதாகவும், இழுக்கப்படுவதாகவும், அதனோடு போராடுவதாகவும் அல்லது அதற்கு வளைந்து கொடுப்பதாகவும் சித்திரித்திருக்கிறார். கழைக்கூத்தாடி கயிற்றின் மேல் நடப்பது போன்ற கடினமான செயலாகும். ஆயினும் வாலா படேல், பரமா படேல், காலு, பூலி, மாலி போன்ற ஆசிரியரின் படைப்புகளெல்லாம் சிறந்த முறையில் அமைக்கப் பெற்றுள்ளன. அவர்கள் நம் முன்னே வந்தால் நாம் முதல் பேச்சிலேயே அவர்களைப் புரிந்துகொண்டு விடும்படி நமக்கு அவ்வளவு பழக்கப்பட்டவர்கள்.

ஆங்காங்கே சில குறைகளிருந்த போதிலும், அதில் ஆச்சரியப் படுவதற்கில்லை. உதாரணமாக, காசம், சங்கர் முதலியோர் ராஜிக்கு நாநா அளிக்கும் உடைகளை அணிவிக்கத் தயாராக வருவது சிறிதும் பொருத்தமாக இல்லை. காசம் முதலியோர் இதைச் செய்ய ஒருபோதும் தயாராக இருக்க மாட்டார்கள் என்று சாதாரண வாசகன் கூறுவான். இதேபோல் கதையின்

சீர்மைக்கு இந்த நாவலின் முதல் அத்தியாயம் தேவையாகத் தோன்றவில்லை. எந்த வாசகனும் இரண்டாவது அத்தியாயத்தி லிருந்து படிக்க ஆரம்பித்துவிடலாம்.

இதைவிட மோசமானது கடைசி அத்தியாயம்; 'வெறிச்சோடிய வானம்' என்ற அந்த அத்தியாயத்தில் காலுவின் (உள்ளத்) தாகத்தைத் தணிப்பதற்காக ராஜீ தன் மார்பகத்தை அளிக் கிறாள். இதுவும் இன்றியமையாததாகப் படவில்லை. இதனால் கலைச்சுவையும் அதிகரிப்பதில்லை. உலகில் பாலுணர்ச்சியின் விபரீத நிலைகள் பலவகையாக உள்ளன. ஆனால் காலு போன்ற வன் உடலாலும் உள்ளத்தாலும் அதில் சிக்கிக்கொள்ளாமலிருந் தால் அதுதான் இயற்கையாகும்.

ஆனால் சீர்மையின்மையால் விடுபட்ட இத்தகைய குறைபாடு கள் மிகச் சிலவேதான். துன்பத்தால் நசுக்கப்பட்டுச் சிறி தளவு துன்பத்தின் கரு மேகங்கள் நகர்ந்ததும் மதம் பிடித்த முறையில் தமது பாடல்களால் விண்ணை எதிரொலிக்கச்செய்யத் தயாராக இருப்பதும், காட்டுத்தீ பரவிய பின்பும் தான் வளர்ச்சி யுறத் தாமதம் செய்யாததுமான கிராம சமுதாயமும் அதற்கு ஒளிவிளக்குப் போன்ற காலுவும் காணப்படுகிறார்கள். நிலத் தையே ஒலிக்கச் செய்யும் அவனுடைய காலரவத்தைக் கேட்டு ராஜியைப் போல் நமக்கும், நம்பிக்கை தோன்றுகிறது.

மரணமென்ன, காலனே நேரில் வந்துவிட்டாலும் சரி, அந்த ஒலியை அழிக்க அவனுக்கும் திறமை கிடையாது.

மகாபாரதத்தின் யக்ஷனும், கேள்விக்கு விடையளிக்கும்போது 'காலத்தின் கதையே பெருங்கதை' என்று கூறியிருக்கிறான். நாமும் இதனை ஆமோதிப்போம். பன்னாலால் அவர்கள் குண மடைந்து விரைவில் இரண்டாவது பகுதியை அளிக்கவேண்டும் என்று வேண்டிக் கொள்கிறோம்.[1]

—'தர்சக்'

1 இந்த நேரத்தில் ஆசிரியர் இதய நோயால் பீடிக்கப்பட்டிருந்தார். இந்த நாவலின் இரண்டாவது பகுதியான 'பாங்க்யானுப் பேரு' மற்றும் மூன்றா வது பகுதியான 'தம்மர் வலோணும்' எனும் நூலும் குஜராத்தியில் வெளி வந்துவிட்டன.

## 1

## வயல் வரப்பில்

மார்கழி மாதத்து நள்ளிரவு நிச்சப்தமாகக் கழிந்து கொண்டிருந்தது. கோதுமை – கடலை இவற்றின் மென்மையான பயிர்கள் ஒன்றையொன்று அணைத்துக் கொள்ளத் துடித்துக் கொண்டிருந்தன.

வயலைக் காவற்காப்போர் குளிரில் நடுங்கியபடியே முதல் தூக்கம் போட்டுக் கொண்டிருந்தனர். குளிர் காயப் பற்ற வைத்திருந்த நெருப்புக்கூட சாம்பற் போர்வை போர்த்துத் தூங்கிக் கொண்டிருந்தது. வயல்கள் நிறைந்த விசாலமான நிலத்தைச் சுற்றியுள்ள .... மேட்டுப்பாங்கான இடங்களில் அமைந்துள்ள கிராமங்கள் இருளில் மங்கலாகத் தென்பட்டன. நிலமகளே நித்திரையில் ஆழ்ந்திருந்தாள். அதுமட்டுமல்ல, தாரகைகள் நிறைந்த ஆகாயமும் அமைதியாக, சப்தமின்றி ஆழ்ந்த துயிலில் மூழ்கியிருந்தது .... பிரம்மாண்டம் முழுதுமே ஒரே அமைதியாக இருந்தது ....

ஆம், அந்த நதிப்பக்கத்தில் உள்ள மேட்டின் வரப்பு மட்டும் அப்படியில்லை .... அங்கு மட்டும் குளிர்காய அடுப்பு இடைவிடாது எரிந்துகொண்டுதானிருந்தது.

அந்த வரப்பின் முன்பக்கத்தில் மூங்கில்களின் ஆதாரத்தைக் கொண்டு வயது முதிர்ந்தவனைப் போலக் காணப்படும் காவற்காரன் ஒருவன் வயலைப் பார்த்தவண்ணம் உட்கார்ந்திருந்தான். பூசணிக்காய் போன்ற அவனுடைய பெரிய தலையில் சாம்பல் நிறமான ரோமங்கள் லேசாகப் பறந்துகொண்டிருந்தன. உள்ளே இடுங்கிய கண்கள், தொலைவிலுள்ள நதிக்கரையில் — இதனையும் கடந்து விண்ணைத் தாங்கிக்கொண்டு நிற்கும் அந்தச் சுவற்றில் — அதனையும் ஊடுருவி எங்கோ உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தன. குமிட்டி அவனுடைய இடது பக்கத்துக் குளிரைப் போக்கிக் கொண்டிருந்தது. ஆனால் அதுகூட அவனுக்கு நினைவிருப்பதாகத் தெரியவில்லை. நல்ல கட்டுறுதியான உடலிலும் அது உறைத்திருப்பதாகத் தோன்றவில்லை. எது எப்படியோ அவனுக்கு வலப்புறத்துக் குளிரும், இடப்பக்கத்தில் காய்ந்து கொண்டிருக்கும் நெருப்பும் — இரண்டுமே அவனுக்குச் சமமாக இருந்தது.

காவற்காரன் நீண்ட மூச்சு விட்டான். நரம்புகள் உடலில் தசையையும் மீறிக்கொண்டு வெளிப்பட்டுப் பிறகு தத்தம் இடத்தை அடைந்துவிட்டன. இத்துடன் கூடவே அவன் தன் பார்வையையும் திரும்ப இழுத்துக்கொண்டு விட்டான், அவன் குமிட்டியின் பக்கம் இடது கைக்குப் பதிலாக வலது கையை நீட்டினுன். பிறகு குமிட்டியில் காலியான கொட்டாங்கச்சியைப் பிடித்தான். முடமாயிருக்கும் தன் இடதுகையில் அதைவைத்து அழுத்திக்கொண்டான். உக்காவைச் சத்தம் செய்துவிட்டு அதில் புகையிலையை வைத்தான். மெள்ள கொஞ்சம் நெருப்பை வைத்தான்.

உக்காவில் கொட்டாங்கச்சியை வைத்தான், ஒரு மூச்சு இழுத்துக் கொண்டான்—மறுபடியும் அடர்ந்த இருளின் பக்கம் பார்வையைச் செலுத்த ஆரம்பித்தான்.

இந்நிலையில் அவனைப் பார்க்கும் யாருடைய உள்ளத்திலும் இவனைப்பற்றிக் கேள்வி எழக்கூடும் : இருளைத் தவிர வேறொன்றுமே புலப்படாத இந்த எல்லையற்ற சூனியத்தில் அவன் கண் கொட்டாமல் எதைப் பார்த்துக் கொண்டிருக்கிறுன் ?

ஆனுல், அவன் நான்கு பேருடன் உட்கார்ந்திருக்கும்போது கூட இதேமாதிரிதான் பார்த்துக் கொண்டிருப்பான். "ஓய், காலு சித்தப்பா! எல்லாம் சரி....அந்தக் குன்றுகளுக்கும் அப்பாலே நிலத்தின் முனையிலே வைத்த கண் வாங்காமல் என்ன பார்த்துக் கொண்டே யிருக்கிறீர்கள் !" என்று அவனைச் சிலர் கேட்கவும் செய்கிறுர்கள்.

பெருமூச்செறிந்தபடி காலு சில சமயங்களில் பதில் கூறுவான்—'அந்த குன்றுகளில்தான் எல்லாமே இருக்கிறது தம்பி—எல்லாமே தோன்றித் தோன்றி அங்கேதான் சென்று மறைந்துவிட்டன ! இன்னும் சில சமயங்களில் சிரிக்க முயற்சி செய்தபடியே அதே பதிலை வேறு வார்த்தைகளில் கூறுவான் — அந்தக் குன்றுகளில், அவற்றின் குன்றுகளில், அதெல்லாவற்றையும் கடந்துகூட நான் இழந்த என் வாழ்வை — என் கடந்த காலத்து ஐம்பது வருடங்களைத் தேடுகிறேன்.'

இதே சமயத்தில் இப்படியும் சொல்வான் — இந்த இருளில் வீணுகப்போன என் இளமையைத் தேடுகிறேன் — என் உள்ளத்துக்குள் அரவணைத்து வைத்திருந்த போதிலும் அந்நியமாகிப் போய்விட்டாளே அந்த ராஜியை, ஒரே ரத்தத்தின் உறவு இருந்த போதிலும் பகைவனைப் போல் நடந்துகொண்ட என் சித்தப்ப

னின் மகன் நாநாவை, இழந்த என் மகன் பிரதாபைத் தேடு கிறேன்.

மற்றும் ஒருமுறை அவன் பெருமூச்செறிந்தான். முடமான கையினுல் கண்ணீர் நிறைந்த கண்களைத் துடைத்துக்கொண்டான். எதிரே சிதறி விழும் நட்சத்திரத்தின் ஒளியைக் கண்டு சிரிக்க முயற்சித்தபடியே தனக்குள் சொல்லிக் கொள்வான்; 'வாழ்நாள் முழுவதிலும் இந்த சிறு ஒளியாவது தங்கிற்ரு?' இதற்குள் இந்த நட்சத்திரம் ஒளி வீசி எங்கோ மறைந்து விட்டது. காலு தலையை அசைத்தபடி மறுபடியும் சிரித்தான்– அந்தச் சிரிப்பு 'எனக்கும் இதே கதிதான்' என்று கூறுவது போலிருந்தது. 'இல்லாவிட்டால் எனக்கு என்ன குறைச்சல்? என் தந்தைக்கு அறுபது வயதில் பிறந்த ஒரே மகன் .... எனக்கும் கிழித்த கோட்டைத் தாண்டாத மனைவி இருந்தாள், இரண்டு பெண்கள், பிரதாப் போன்ற காளைமகன் ....!'' என்று சொல்லிக் கொண்டே போவான்.

திடீரென்று குரல் பலத்துவிட்டது, பற்றி எரியும் குடல்தான் கூச்சல் போட்டதோ என்னும்படி இருந்தது—அடே! கொலைகார 'நாநா' என் மகள் ராஜியை நீ என்னிடமிருந்து பறித்துக் கொண்டதுமல்லாமல் என் ஒரே மகனையும்—அவனை நீ கொன்றிருக்கலாம் — அவனை சாதுக்களிடம் கொடுத்துவிட்டாயே! — பற்கள் கூட விழுந்து முளைக்கவில்லை .... பாவம் — யார் கண்டார்கள் அவன் இன்று உயிருடன் இருக்கிருனே அல்லது ....

பிறகு, எண்பது வயது கிழவியின் அழுகையைக் கூடத் தோற் கடிக்கும்படி காலு விசித்து விசித்து அழ ஆரம்பித்தான். நிச் சப்தமான நள்ளிரவுகூட இந்த அழுகையைக் கேட்டு ஸ்தம்பித்து நின்றுவிட்டதோ, காது கொடுத்து கவனமாகக் கேட்டுகொண் டிருக்கிறதோ என்று தோன்றிற்று.

'என் மகனே! குதிரைகளைப் போன்ற என் எருதுகளை உன்னைத் தவிர யாரால் ஓட்ட முடியும்! .... யானைகளைப் போன்ற எருமை களை உன்னைவிட யாரால் அடக்க முடியும் .... மகள் ராஜியை எதிர்பார்த்தபடியே என் இளமை முழுவதையும் கழித்து விட்டேன்....மகனே! உன்னை எதிர்நோக்கிக் காத்துக் கிடக்கிறது இந்த முதுமை! ... கடவுளே! இதைவிட ஐம்பத்தாரும் வருடத்து அந்தப் பஞ்சத்திலேயே என்னை நீ கொன்றிருந்தால் இந்த நாட்கள் என் தலைவிதியிலிருந்து விலகிப் போயிருக்கும்.

ராமா! ஆனுல் இந்த நெஞ்சு சொல்வதைக் கேட்கமாட்டேன்

என்கிறது .... மகனே — கேட்கிருயா ... அப்படியாஞல் இப்போது இந்த வியாபாரியின் கணக்குப் புத்தகத்தில் இந்த நிலம் நீச்சு, இந்தக் கிணறுகள், ஜாகீர், இந்த .... மகளே ராஜி! என்னுடைய இந்த வாழ்நாள்கூட இந்தக் கணக்குப் புத்தகத்தில் 'கடன்' என்றுதான் எழுதப்படும்.

ஒரு மணி நேரம் கழித்து காலு தன் சுய நிலேக்கு வந்தான்- இந்த பலவீனமான தன் நிலே குறித்து அவன் வெட்கமடைந்தான். ஒரு தடவை மறுபடியும் உக்காவைப் பிடித்தான். சிந்தனேயைத் தடைப்படுத்த ஒரே சிகிச்சை நித்திரை என்று கருதியோ என்னவோ படுத்துவிட்டான்.

தூக்கமோ வரவில்லே. கண்ணீர் சிந்துவதாலும், மனிதப் பிறவி எனும் நாடகத்தை தான் பாரேன் எனும் வைராக்கிய உணர்ச்சியாலும் உள்ளத்தின் பாரம் சற்று குறையத் தான் செய்கிறது .... இந்த நீண்ட ஆயுள்.... எப்படிப்பட்ட குழப்பங்கள் — 56 ம் ஆண்டின் பஞ்சத்தின் சோதனேக் காலம் ஒருபுறம்... மறுபுறம் எப்படிப்பட்ட மகிழ்ச்சிகரமான நாட்கள் ... சுமார் 50 ஆண்டு வாழ்க்கை கண்களுக்கு எதிரேயுள்ள காலம் எனும் ... சுவர்களின் பேரில் ஒரு நாடக உருவில் காட்சியளித்தது— கிராமத்துத் திண்ணேயில் தெருக்கூத்து தென்படுமே அதே போல்...

# 2

## நல்வாழ்த்து

ஐம்பத்தாறும் ஆண்டுக்கு சுமார் இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு கோடைகாலத்து ஒரு நாள் மால்வா-குஜராத்தைக் கடந்து வியாபாரி தேவா தன் ஐநூறு எருதுகளுடன் குஜராத் எல்லையைத் தாண்டித் திரும்பிக்கொண்டிருக்கிருன். விற்றது போக எஞ்சிய நெய்யைத் தன் தோளில் சுமந்துகொண்டு வியாபாரிகள் தத்தம் கிராமத்தை நோக்கிச் சென்றுகொண்டிருக்கின்றனர். கட்டுறுதியான உடலைக் கொண்ட விவசாயிகள் புல் செதுக்குவதில் ஈடுபட்டிருக்கின்றனர். ஓடுகளைச் சிலர் கூரையில் வைத்துக்கொண்டிருக்கின்றனர். காறையைக் கொண்டு இன்னும் சிலர் சுவர்களைச் செப்பனிட்டுக் கொண்டிருக்கின்றனர்.

பூத்துக் குலுங்கும் பலாச மரங்கள் மேகராஜனை வாழ்த்திப் பாடுகின்றன. நதிக்கரையில், நாவல் மரங்கள் புத்தாடை அணிந்து மாரியை எதிர்கொண்டழைக்க காத்து நிற்கின்றன.

கிராமத்து வேப்ப மரங்கள் அமைதி குலைந்து கிடக்கின்றன. அவற்றில் கடைசிப் பேட்டையில் இருக்கும் அந்த நலிந்த மரமோ உணர்ச்சி வசப்பட்டு சலசலவென்று வரும் காற்றைக்கொண்டு தன் பரந்து விரிந்த கிளைகளுக்கு விசுறுகின்றது.

இரவு நேரம். பேட்டையிலுள்ள குழந்தைகள் உறங்கிவிட்டனர். பாத்திரங்களைத் தேய்த்துக் கழுவும் பட பட சத்தம்கூட நின்றுவிட்டது. முதியோர்கள்கூடக் கட்டிலில் படுத்துக் குர் ... குர் என்று குறட்டை விடுகின்றனர்.

மயானத்தின் தலைவனும் அரக்கச் சிந்தனையுமுள்ள பூதத்தைப் போல் அந்த ஒரே ஒரு பழைய வேப்பமரம் மட்டும் 'உஸ்ஸ் .... உஸ்ஸ்' என்று சத்தமிட்டுக் கொண்டிருந்தது.

அல்லது அந்த மரத்திற்குப் பக்கத்தில் இருக்கும் வீட்டிலிருந்து தான் அந்த ஓசை வருகிறதோ! வெளித் தாழ்வாரத்துக் கட்டிலில் அறுபது வயது கிழவன் ஒருவன் ஒருகணம் படுப்பதும் மறுகணம் எழுந்து உட்காருவதுமாக இருந்தான். ... கதவிடுக்கிலிருந்து தெரியும் ஒளியின் நீண்ட கம்பிகளைக் கண்கொட்டாமல் பார்துக் கொண்டிருந்தான். ஏதோ தானியத்தை உலக்கையால் குத்துவது போல, அவனுடைய மெல்லிய உடலிலிருந்து இதயம் 'படக்' 'படக்' கென்று அடித்துக் கொண்டிருந்தது.

வீடு மரத்தட்டிகளால் ஆனது கூறையில் நன்ருகத் தயார் செய்யப்பட்ட ஓடுகளுக்குப் பதிலாக கையால் செய்யப்பட்ட ஓடுகள் இருந்தன. அந்தக் கிழவனுடைய உடையும் மாட்டிடைய னுடைய உடைபோல் இருந்தது—சிறிய முறப்பான கைத்தறி வேட்டியைக் கச்சம் போட்டு அணிந்திருந்தான். ஆம், ஆணியில் மாட்டப்பட்டிருந்த தலைப்பாகை சற்று மெல்லிய துணியா லானது. உடைமட்டுமா என்ன, அவனே ஒருவிதமாகத் தானிருந் தான் — அவனுடைய சுபாவம் கூட ஒரு தனிப்பட்டதோ என்று தான் எண்ணத் தோன்றிற்று.

இந்தக் கிழவனையே எடுத்துக் கொள்ளுங்களேன் அறுபது வயதான போதிலும் அவனுடைய ஒற்றை நாடி உடல் வலுவாக இருந்தது எலும்புகள் எஃகுபோலிருந்தன.

ஆனால் இப்போது ஒரு கணம் அவன் நோய்வாய்ப்பட்டு சற்றும் பலமில்லாதவன்போல் கட்டிலில் விழுவதும், அடுத்த கணம் இளம் காளையின் விறுவிறுப்புடன் எழுந்து நிற்பதுமாக இருந்தான். மெள்ள வாசற்கதவு வரை வந்துவிட்டு ஏதோ கள வாட வந்தவன்போல் நடுங்கி நிற்பான். பிறகு எதையோ கவனத்துடன் கேட்க முயற்சிப்பான். சிற்சில சமயங்களில் அந்த இடுக்கின் வழியாக உள்ளே எட்டிப் பார்ப்பான்.

ஆனால் என்ன தென்படப்போகிறது? பிரசவக்கட்டில் வெளியே யுள்ள அறையின் மூலையில் இருந்தது.

வேறு வழியின்றி அவன் மறுபடியும் கட்டிலில் வந்து உட்கார்ந்து கொள்வான். அழகிய தாடியுடன் கூடிய முகத்தில் பாலகனைப் போன்ற மகிழ்ச்சி, அல்லது தன் வசமற்ற வருத்தமான நிலை காணப்படும்.

திடீரென்று அவனுடைய செவிகளில் வருத்தம் தோய்ந்த குரல் வந்து மோதியது. கிழவனுடைய உள்ளம் நடுங்கியது. உதடுகள் துடிக்க ஆரம்பித்தன: 'இறைவா! இறுதிக் கரையில் ஓடம் இருக்கிறது. கொடுத்து விடு—ஒரு பிள்ளை தரமாட்டாயா? ....அடடா! மகனுக்காக இரண்டு மனைவிகளை ஏற்றேன்.... ஐந்து ஆண்டுகள் நரகவேதனை அனுபவித்தேன் – இறைவா! அந்த நரகத்திலிருந்து ஒருத்தியை மீட்டுக் கொண்டாய்; பிறகு எனக்கு சுவர்க்க சுகமளித்தாய்! பிரபோ! இன்னும் பிள்ளையை அடையும் நம்பிக்கை என்னை விட்டபாடில்லை – அதனால்தான் —'

அதே சமயத்தில் பிறந்த குழந்தையின் அழுகைக் குரல்

கேட்டது. கிழவனின் இதயமே நின்றுவிடும் போலிருந்தது. சல சலவென்று பேசும் பெண்களின் குரல்களைக் கேட்க அவன் தன் மனத்தை ஒருமுகப்படுத்திக் கொண்டான். ஆனால் அவனால் ஒன்றும் புரிந்து கொள்ள முடியவில்லை. இன்னும் இரண்டு மூன்று கணங்கள் இப்படியே இருந்தால் அவன் எழுந்து உட்கார்ந்து — 'என்ன ஆயிற்று' என்று உரக்கக் கத்தியிருப்பான். அவ்வளவு பரபரப்படைந்துவிட்டான் அவன்.

ஆனால் அதே கணம் —'கர்ர்ர்' ........ என்று கதவு திறக்கப்படும் ஓசை கேட்டது. பரபரப்புடன் வெளியே வரும் பெண்களின் படபடப்பைக் கண்டு கிழவன் புரிந்துகொண்டு விட்டான். அவனது ஒளியிழந்த முகத்தில் மகிழ்ச்சியின் பிரகாசம் படர்ந்தது. அவன் கண்களை மூடிக்கொண்டு நித்திரையில் ஆழ்ந்திருப்பது போல் பாசாங்கும் செய்தான்!

ஆனால் எத்தனை கணங்கள் வரை? உள்ளே பரவிய மகிழ்ச்சி அவனைக் கிளறிவிட்டது. அகல விரித்த கால்களை இழுத்துக் கொண்டான். அவன் உடல் முழுதும் நாய்க்குட்டியைப் போல் சுருண்டுவிட்டது .... 'அண்ணே! எங்கள் வாழ்த்துக்கள்!' என்று அந்தப் பெண் வந்து சொல்வதற்கு முன்னமே அவன் எழுந்து உட்கார்ந்துவிட்டான். இடையே வகுடு எடுத்து காதுப் பக்கங்களில் இரண்டாய்ப் பிரித்து முடிந்திருந்த அந்த தாடி இப்படியும் அப்படியும் சல சலக்க ஆரம்பித்தது — அதுவே சிரிப்பது போலிருந்தது — மீசையோ — அண்ணே! அண்ணிக்கு மகன் பிறந்திருக்கிறான் – என் வாழ்த்துக்கள்!' என்று சொல்வது போலிருந்தது.

விரிந்த கண்களும், திறந்த வாயுமாகக் கிழவன் பார்த்துக் கொண்டே யிருந்தான் — அவனால் சிரிக்கவும் முடியவில்லை, அழவும் முடியவில்லை. அவனுடைய வாயிலிருந்து ஒரு சொல் கூட வெளி வரவில்லை.

ஆனால் கிழவனை யாரும் கவனிக்கவில்லை. எதிரே வந்து நின்ற ஐந்தாறு பெண்கள் மட்டும் ஒரே பாட்டைப் பாட ஆரம்பித்தனர் — 'அக்கா யமுனா! வெறுங்கையுடன் எங்களை அனுப்பிவிடாதே! அறுபது வயசிலே சித்தப்பாவுக்கு மகன் பிறந்திருக்கிறான்!' மற்றொருத்தி இவ்விதம் முடித்தாள் - 'அதுவும் ராஜா மாதிரி மகன்!'

கிழவனின் கன்களில் நீர் சுரந்தது, உதடுகள் துடித்தன, ஆனுல் குரல் எழும்பவில்லை. கனைத்துக்கொண்டு தொண்டையைச் சரிப் படுத்திக் கொண்டான். எதிரே நின்ற பெண்ணைப் பார்த்து — நல் வாழ்த்துச் சொன்னுயம்மா ! என்ருன்.

அவள் ஒன்றும் பேசவில்லை. ஆனுல் அருகே இருந்த அவனு டைய தாய் — 'பதிலுக்கு என்ன தர்றே அத்தைச் சொல்லு' என்ருள். 'தங்கச்சி கேட்கட்டும்' என்ருள் ஆனந்தக் கண்ணீர் நிரம்பிய கண்களுடன் அவனைப் பார்த்தபடியே —

ஐந்தாறு பெண்களும் யோசனையில் ஆழ்ந்துவிட்டனர் — கிழவ னுடைய ஏழ்மையை எண்ணியோ, அல்லது அவனுடைய உதார மான மனத்தை நினைத்தோ சில கணங்கள் வரை யாருமே எதுவும் பேசவில்லை. 'யமுனு நல்லாப் பிடிச்சுக்க !' என்று சொன்னவள் கூட மௌனமாகி விட்டாள். ஆனுல் முற்றிலும் விபரீதமாகச் சொன்னுள். — எது கேட்டாலும் நல்லா யோசித்துக் கேளு. கேக் கணுமின்னு எத்தனை வேணுமானுலும் கேக்கலாம் ஆனு — அண்ணே :.பத்திரம் ... பாத்திரமறிஞ்சு......

'இவ வெட்டிப் பேச்சு ஏன் பேசரு ?' எல்லோரையும் விடப் பருமனுக காணப்பட்ட அவள் வாலாவின் தம்பி பரமாவின் மனைவி தன் முகத்தைக் கோணிக்கொண்டு அவள் சொன்னுள்—வீட்டிலே தண்ணிகுடிக்கிற லோட்டா கூட விரிசல், பெரிசா இவ கேக்க வந்துட்டா ! —....

கல கலவென்று சப்தித்துக் கொண்டு ஓடிய சிற்ருேடையைத் தடுத்து நிற்கும் பாருங்கல்லைப் போலிருந்தன இந்த வார்த்தை கள். ஆனுல் அதுவும் ஒரு கண நேரம் வரைதான், அடுத்த கணமே மகிழ்ச்சி மிகுந்த தாய் கூறினுள் — இதுபாட்டுக்கு இது கடக்குது வாலா ! எல்லா நாளும் ஒரே மாதிரியாகவா இருக்குது ? அண்ணனுக்கு மகன் பிறந்திருக்கான் — நாளைக்கு பெரியவ னுனுல் தானே சம்பாதிக்கிருன் ! 'கிழவி யமுனுவின் பக்கம் திரும்பி—பிராம்மணனும், தங்கச்சியும் இப்படித்தான். ஏதாவது சொல்லிக்கிட்டே யிருப்பாங்க !' என்றபடியே கிழவனைப் பார்த்துக் கேட்டாள் —'எழுந்திரு அண்டாவும் குடமும் கொண்டு வந்து இவங்களுக்குக் கொடு !' பிறகு யமுனுவைக் கேட்டான் — 'இது போதாதுன்னு படல்லியே உனக்கு ?'

'இல்லையே ! அண்ணன் வீட்டிலேயிருந்து ஒரு சின்னத் துணி கிடச்சாக் கூட தங்கச்சியோட மனசு—...!' பூலி கிழவனையும்

கேட்டாள்! 'உங்களுக்கு?'— அவன் மௌனமாக இருப்பதைப் பார்த்து — 'கஷ்டமாயிருக்கிறதா?' என்று கேட்டாள்.

'இல்லையே பூலி அண்ணி! அதெல்லாம் ஒன்றுமில்லே! என்று சிரிக்க முயற்சித்தபடியே வாலா கூறினன் — இந்த மகிழ்ச்சி நேரத்திலே நிறையத் தரணுமின்னுதான் நான் சொல்வேன்; — ஆனல் ஒரு பழமொழியிருக்குதே — முயலுடைய முன் கால்கள் ஓடறவேகம் பின் கால்கள் ஓடாதுன்னு – இல்லாட்டி!'

யமுன இடைமறித்துப் பேசினள் — 'இதென்ன வாலா அண்ணே இப்படிச் சொல்லிட்டே! என் அண்ணன் வீடு நெறஞ்சிருந்தா எனக்கு லட்சம் வந்த மாதிரி — பூலி அம்மா சொன்ன மாதிரி — இன்னும் வாங்கிக்கறதுக்கு எத்தனையோ சமயம் வரப்போகுது!'

'அதான்!' பூலி அம்மா ஆமோதித்தாள். உடனே அவனுக்கு நினைவு வந்துவிட்டது — 'எல்லாரும் இங்கே ஓடியாந்துட்டிங்களே — அவகிட்டே யாரு இருக்கிறது — ஓடுங்க ஓடுங்க ...!'

பூலி அம்மா எல்லோரையும் வாயிற் கதவுவரை வழியனுப்பி விட்டுத் திரும்பிவிட்டாள். 'வாலா அண்ணே! இப்ப நடந்தாப் பலே நினைவுக்கு வருது' — என்று கூறியபடியே கட்டிலருகே வந்தாள். பிறகு சொல்ல ஆரம்பித்தாள். 'ஆடி மாதத்துக் காலை நேரம் — நீங்க ஏர் உழுதுக்கிட்டே பாடுவிங்களே! மயிலைப் பற்றின அந்த ஈரடிச் செய்யுள் பாடிக்கிட்டே இருந்தவங்க திடீர்னு நிறுத்திட்டிங்க. ஏன்னு கேட்டதுக்கு நீங்க என்ன பதில் சொன்னீங்கண்ணே! நினைவிருக்குதா?'

கிழவன் கண்களைக் குவித்துக்கொண்டான் — நினைவை ஒளிமயமாக நினைத்தான் போலும் — அடுத்த கணம் 'ஆமாம் ஆமாம்' என்றன்.

கிழவி இடையே பேசினள் — நானே வருத்தத்திலே இதைப் பாடறேன். ஆன கேட்கறவங்க என்னைக் கேலி செய்வாங்கன்னு சொன்னீங்க.

ஆமாம் அந்தக் செய்யுள்தானே — அம்மா வீட்டு முற்றத்திலே .... ஆமாம் அதுவேதான் — இப்பத்தான் கடவுள் உனக்கு மகன் கொடுத்துட்டாரே ....

கிழவனல் கேட்காமல் இருக்க முடியவில்லை — பூலி, அண்ணி? எப்படி இருக்கான்! எனக்கு ... 'அந்த ஈரடிச் செய்யுளிலே

பாடனிங்களே !' அப்படியேதான் இருக்கிறன் — அதை நினைவு படுத்திக்குங்க ... அப்புறம் — பூலி புன்முறுவல் பூத்தபடியே வாசல் பக்கம் சென்றுள்.

புதிதாய்த் தோன்றிய அந்தப் பச்சை மண்ணுலான மயிலை பூமாதேவிக்கு உள்ளத்தோடு அர்ப்பணம் செய்துகொண்டிருந் தானே எனும்படி கிழவன் வாலா நனைந்து கசிந்த உள்ளத்துடன் உணர்ச்சி வசப்பட்டு அதே ஈரடிச் செய்யுளைச் சொல்லிக் கொண்டே யிருந்தான் — சொல்லிக் கொண்டே இருந்தான் —

தேவ - தேவீனே பாரே மேல் தா –
சௌ கோ மாகா நே பகரா சா டோர்
பண் மாரே தர்தீ நே கோலே மேல வோ
மோங்கீ மாடீனே ரம்தேரோ மோர். [1]

---

[1] தெய்வங்களுக்கு எல்லோரும் கோழிகளையும் ஆடுகளையும் அர்ப்பணிக் கின்றனர். ஆனால் நான் நிலமகளின் விலை மதிப்பிடமுடியாத மண்ணுலானதும் சிரித்து விளையாடுவதுமான மயிலைத்தான் சமர்ப்பிக்க விரும்புகிறேன்.

## 3

## சோதிடன் சொன்னன்

மனிதர்களுக்கு மக்களைப் பெறுதல், அதிலும் மகனை அடைதல் எல்லாவற்றையும் விடப் பெரிய ஆசைபோலும். வாலாவின் தலையில் எத்தனை ரோமங்கள் இருந்தனவோ அத்தனை ரூபாய் கடனும் அவனுடைய தலையில் சுமந்திருந்தது. எல்லோரும் சொல்வது போல் கிழ உடலும், பழைய ஓடும் கீழே சறிய எத்தனை நேரமாகும்?

அறுபது வயதில் பிறந்த குழந்தை எப்போது பெரியவனுகிக் கிழவனுக்கு ஊன்றுகோலாவான், வேலைக்குப் போவான்.

ஆனல் உண்மையில் கிழவனுடைய மனதில் அவன் வேலை செய்யவேண்டும் எனும் எண்ணமேயில்லை. கிழவன் அடிக்கடி சொல்வான் அரை டஜன் குழந்தைகள் பிறந்தன. நம் அதிர்ஷ்டத்திலே அவை பிறக்கும் என்று இல்லாவிட்டாலும், கடவுள் நம்முடன் விளையாடவென்று அவற்றைக் கொடுத்தார். ஓரிரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு சமயம் பார்த்து வாங்கிக்கொண்டுவிட்டார்! ஆனல் கடைசி இரண்டு குழந்தைகள் பிறந்த உடனேயே இறந்துவிட்டன. இது ஏன் என்று இன்னும் வாலாவுக்குப் புரியவில்லை,

மனைவியும் கிராமத்து மக்களும் ஏதேதோ சொல்கின்றனர் — ‘கடவுள் கொடுத்தாரே தவிர எடுத்துக்கொள்ளவில்லை — பிள்ளையில்லாத வீட்டுச்சொத்தை தான் தின்னவேண்டுமென்று அந்த படுபாவி செய்த செய்வினை இது!’

அந்தப்பாவி வேறு யாருமல்ல; வாலாவின் தம்பி பரமாவின் மனைவி மாலிதான். ஒவ்வொரு குழந்தை பிறந்தவுடனும் இதே முடிவிற்கு வருவான் — ‘மந்திரமாவது தந்திரமாவது!’ அக்கம் பக்கத்து கிராமங்களிலிருந்து மந்திரம் செய்பவனை அழைத்து வந்து வீட்டைப் பரிசுத்தம் செய்வான் — ஆனலும் ஒன்றுகூடத் தங்கவில்லை ... அந்த இறைவனின் திருவிளையாடல் இது ...

ஆயினும் மனித உள்ளம்தானே! இம்முறை இறைவனை விழுந்து விழுந்து வேண்டிக்கொண்டான் — ‘இறைவா! இந்தத் தடவையும்

அப்படியே செய்வாயானல் குழந்தையை எடுத்துக்கொள்வதற்கு முன் அதன் அம்மாவுக்கும் பிறகு எனக்கும் சாவைத் தந்துவிடு — ஆனல் குழந்தையை பறித்துக்கொண்டு எங்களை வதைக்காதே... எல்லாம் சரி—தம்பியின் மனைவி பேசும் குத்தலான வார்த்தைகளை என்னல் பொறுத்துக்கொள்ள முடியாது. கழுத்தில் சுறுக்குப் போட்டுக்கொண்டு தொங்கும் நிலை வந்துவிடும் போலிருக்கிறது.

ஆகையால், ஏதாவது ஜோதிடர் வந்தால் குழந்தையின் சாதகத்தைக் கணிக்கச் சொல்லலாமே என்று கிழவன் நினைத்தான். பத்துப் பதினைந்து மைல் தொலைவில் இருக்கும். டேகிடியா கிராமம் வரை இரண்டு மூன்று தடவை சென்றும் வந்துவிட்டான். ஆயிரம் மக்களே கொண்ட அந்தக் கிராமத்தில் அந்தணர் அதிகம் பேர் இருந்தனர். ஆனல் காசிவரை சென்று திரும்பியவர் ஒருவரும் இருக்கவில்லை. ஆனாலும் எது எப்படியானாலும் அந்தணரைத்தான் கூப்பிடுவேன் — அவருடைய நாவிலிருந்து உண்மைதான் வரும். எழுதுவதும் உண்மையாகவே தானிருக்கும்! என்று தன் மனதில் சங்கல்பம் செய்துகொண்டான் கிழவன்.

ஆனல் அவனுடைய துரதிருஷ்டம் பாருங்கள், ஊமை செவிடு என்றிருக்கும் அந்தணர்கள் கூட ஏழை வாலாவிடம் சாக்குப் போக்குச் சொல்லி வந்தனர் ... 'இரண்டு நாட்கள் போகட்டும் — இன்று பஞ்சமிதானே!' என்பர். பிறகு அவனுடைய தலை மறைவில் — 'இவனுக்குக் கொஞ்சமாவது அறிவிருந்தால் இப்படிக் கேட்பானு?' வீட்டிலே சாப்பாட்டிற்கு வழியில்லை ... மகனுக்கு ....

இதற்கிடையே வாலாவின் விருப்பத்தை இறைவனே ஒரு நாள் பூர்த்தி செய்துவிட்டார். ஒரு அந்தணர் யாத்திரிகன் கிராமத் தலைவரின் வீட்டைக் கேட்டுக்கொண்டு பிற்பகலில் வந்து சேர்ந்தான். தலைவனின் மனைவி, அந்தணன் தன் சிறு மூட்டையை தோளிலிருந்து இறக்க முயன்றதுமே அவனைத் திட்ட ஆரம்பித்துவிட்டாள் — 'வந்துவிட்டார்கள் வீட்டைத் தேடிக்கொண்டு! வேறு வேலையில்லை!'

தோளிலிருந்து இறக்க முயன்ற சிறு மூட்டையை மறுபடியும் தோளிலேயே வைத்துக்கொண்டான் அந்தணன்— 'கோபித்துக் கொள்ளாதீர்கள் அம்மா — எங்களைப் போன்ற வழிப்போக்கர்களுக்காகத்தான் இறைவன் மரங்களை....'

இதற்குள் கரம் கூப்பிய வண்ணம் வாலா அந்தணன் முன்

நின்றுவிட்டான். 'அப்படிச் சொல்லலாமுங்களா? சாமி. மனிதன் மனிதனிடம்தானே வருவானுங்க. வாங்க! ஏழை நான் என் குடிசையை புனிதமாக்குங்க! வாங்க!'

அந்தணன் சென்றிருக்க மாட்டான், ஆனல் அவனுடைய தோளில் முடிச்சிட்டுத் தொங்கவிடப்பட்டிருந்த சிறு மூட்டையையே கிழவன் கையில் வாங்கிக்கொண்டு விட்டான். அந்தணனுக்கு வேறு வழியில்லை. செல்ல நேர்ந்துவிட்டது.

மெலிந்த அந்த அந்தணனின் முகத்துக் கோடுகளே அவனைக் காசியைச் சேர்ந்த பண்டிதன் என்று தெரிவித்து விட்டன. நீண்ட சட்டை, வரிந்து கச்சம் போட்டுக் கட்டப்பட்ட வேட்டி, தலையில் சேவலின் கொண்டை போன்ற ஒரு உருண்டையான தலைப்பாகை – இவைதான் உடைகள்.

விசாரித்ததன் பேரில் அவன் பத்திருபது மைலுக்கருகேயுள்ள கிராமத்தைச் சேர்ந்தவன் என்று தெரியவந்தது. அந்தணன் வெளியூருக்குப் போய்க் கொண்டிருந்தான். காரணத்தைக் கேட்டறிந்த கிழவனுக்கு மகிழ்ச்சி நிலை கொள்ளவில்லை- 'கடவுள் தான் ஜாதகம் கணிக்கும் இந்த அந்தணனை என்னிடம் அனுப்பியிருக்கிருர்.'

அந்தணனிடம் பால்விட்டுப் பிசைந்து சுடப்பட்ட ரொட்டி இருந்தது. தன் வீட்டில் ஒரு பிடியாவது சாப்பிட்டு விட்டுப் போகவேண்டும் என்பது வாலாவின் விருப்பம். வீட்டில் பித்தளைப் பாத்திரமோ தாமிரப் பாத்திரமோ கிடையாது. தம்பியின் வீட்டிலிருந்தாவது அண்ணி பூலியின் வீட்டிலிருந்தாவது அவன் எடுத்து வருவான் ஆனல் கோடை காலமாதலால் புதிய மண் குடத்தில் நீர் நிரப்பி வைத்துக்கொள்வதே நல்லது என்று அவனுக்குப் பட்டது.

'எழுந்திருங்கள் சாமி! பொங்கல் வைத்துச் சாப்பிடுங்கள்!' குடத்தை அட்டத்திலிருந்து இறக்கியபடி அவன் கூறினன். அந்தணன் அந்தக் கோடையில் ஒரு தொல்லையிலும் சிக்கிக்கொள்ள விரும்பவில்லை. கிழவனின் பிடிவாதத்தினின்றும் விடுபடுவதற்காக மகனுடைய ஜாதகம் கணிக்க ஆரம்பித்தான்.

கிழவன் அந்தணனுக்குமேல் விடாக்கொண்டனக இருந்தான் 'அதெல்லாம் முடியாது. முதலில் நீங்கள் சாப்பிடுங்கள் என் வீட்டுச் சோறு உங்கள் வயிற்றுக்குள் போயாக வேண்டும் ... அதற்கப்புறம்தான்...'

கடைசியில் அந்தணன் ஒப்புக்கொள்ள வேண்டிவந்தது ‘சரி.. விறகு எடுத்து வந்து நீங்கள் அடுப்பைப் பற்றவையுங்கள். நான் ஜாதகம் கணிக்கும் வேலையைப் பார்க்கிறேன்! சாப்பாட்டுக்கு சாப்பாடும் தயாராகிவிடும், இங்கே என் வேலையும் முடிந்து விடும்!’

கிழவனின் மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. கற்களை வைத்து அடுப்பை தயார் செய்தான். சாப்பிட வாழை இலையும் வாங்கி வந்தான். அரிசியைக் களைந்து வைத்தான் — தன் வேலையில் ஈடுபட்டிருந்த சோதிடனைக் கண்டவுடன் கிராம மக்களை அழைத்து வர நினைத்தான். பழக்கத்திற்கேற்ப வீடு வீடாகச் சென்றழைத்தான்—எல்லோரும் வாருங்கள். ஒரு சோதிடர் வந்திருக்கிறார்— குழந்தைக்கு பெயர் ‘வைக்க வேண்டும்!’

ஒரு மணி நேரத்தில் கிழவனுடைய சிறு முற்றம் மக்களால் நிரம்பிவிட்டது. கிராமத் தலைவன் பரமா அவனுடைய மகன் ரண சோட் இருவரும் வந்து உட்கார்ந்தனர்.

எல்லோரும் நல்ல கட்டுறுதியான உடலைப் போலவே கெட்டியாக நெய்யப்பட்ட கைத்தறி வேட்டியும் சட்டையும் அணிந்திருந்தனர். பால் இடையர்களைப் போன்ற உடை, நாற்பது வயதுக்கு மேற்பட்டவர்கள் எல்லோரும் தலைப்பாகை யணிந்திருந்தனர் மற்ற எல்லோரும் சாதாக் குல்லாய்தான் அணிந்திருந்தனர்.

இந்த முப்பது பேர்களில் சிலர் உக்கா பிடிப்பவர்கள், நான் கைந்து பேர் இரண்டு சேர் கனமுள்ள வேலைப்பாடமைந்த அழகிய உக்கா பிடிப்பவர்கள்.

ஒருபுறம் அந்தணன் கணக்குப் போடுவதில் மும்முறமாக இருந்தான். மறுபுறம் கிராம மக்கள் வம்பளந்து கொண்டு உட்கார்ந்திருந்தனர். எந்த கிராமத்தில் யாருடைய கால்நடைகள் களவு போயின, யார் அவற்றை மீட்டுக்கொண்டு வந்தவர் என்பதிலிருந்து எந்த வெள்ளையன் எந்தப் புதிய நாணயத்தைக் கண்டு பிடித்தான் என்பது வரை எல்லாமே வம்புப் பேச்சில் இடம் பெற்றிருந்தன. தற்போது பழக்கத்திலிருக்கும் நாணயங்களின் நிலை என்னவாகும் என்பது பற்றியும் கவலை தெரிவிக்கப்பட்டது. ஆனால் இந்தக் கவலை பரமா, பூலியின் மகன் சங்கர், மற்றும் கிழவன்–போன்ற இரண்டு மூன்று பேருக்கு மட்டும்தானிருந்தது.

பார்க்கப் போனால் இவர்களிடமும் விரல்விட்டு எண்ணக்கூடிய அளவுக்குத்தான் பணமிருந்தது. ஆனால் இவர்களுடைய உள்ள

மோ ...... மனதை ஒருமுகப் படுத்திக்கொண்டு ஜாதகம் கணிக்க உட்கார்ந்திருக்கும் அந்தணனைத் தொந்தரவு செய்யும்படி பேசு கிறோமே என்ற எண்ணம்கூட இல்லாமல் பரமா கேட்பான்—'ஏன் சாமி! இந்த வெள்ளைக்காரன் எத்தனை வரிவசூல் செய்கிறான்?'

தன் எரிச்சலைச் சிரித்தபடி வெளிப்படுத்தித் தனக்கு இத்தகைய விஷயங்களைப் பற்றி ஒன்றும் தெரியாது என்று கூறினான் அந்த ணன். கவிஞன் தன் சிறந்த படைப்பை ஆர்வத்துடன் வாசித்துக் காண்பிப்பது போல் வாலாவை அருகே அமர்த்திக்கொண்டு ஜோதிடன் மிக்க மகிழ்ச்சியுடன் தான் கணித்த ஜாதகத்தைப் படித்துக்காட்ட ஆரம்பித்தான்.! 'பெரியவரே! மகன் பிறந்திருப் பது மிதுனராசியிலாக்கும்!'

எல்லோரும் ஒரே கவலையில் ஆழ்ந்துவிட்டனர். 'மிதுனராசி யிருக்கட்டும் — பெயர் என்ன வைக்கலாம் சொல்லுங்கள்' பரமா கேட்டான்.

'க, ச,... மிதுனம். அதாவது கஞ்சன்லால், காசிநாதன், கனக சந்திரன். இப்படிப் பெயர் வைக்கலாம். இன்னும் மக்களின் கவலை முகத்தில் காணப்பட்டது. உங்கள் ஜாதிப்படி குபேரன், கச்சரோ, கனகே காலு...'

கிழவன் சொன்னான் — 'சரி சரி ... எங்களுக்கு இந்த மாதிரிப் பெயர்தான் சரியாயிருக்குங்க. காலியா' என்று வைக்கலாம்.

மற்ற எல்லோரும் கூட சம்மதித்தனர் — 'காளியா, கச்சரா' எந்தப் பெயர் வேணுமானாலும் வைக்கலாம்.

அந்தணன் —'காலு நாமாபிதான' என்று அந்தக் காகிதத்தில் எழுதிவிட்டான். பிறகு ஜாதகத்தைப் படிக்க ஆரம்பித்தான்.

மக்களுக்கு ராகு — கேது — சந்திரன் எதிலும் நம்பிக்கை கிடை யாது. பூலியின் கானைமகன் சங்கர் கூறினான் — 'அதெல்லாம் சரி சாமி! எப்படி இருப்பான் பையன்? அதைச் சொல்லுங்கள்!'

அந்தணன் ஜாதகத்தில் ஒரு கண்ணோட்டம் விட்டுப் பிறகு கூறி னான் —'மகன் ஒருவரையும் எதிர்பார்க்கமாட்டான். சுதந்திரமாக வாழ்வான்!' பெருமையுடன் சூழ்ந்திருந்த மக்களைப் பார்த்து விட்டு மேலே சொன்னான் — 'எழுதி வைத்துக்கொள்ளுங்கள் — உண்மையாக இல்லாவிட்டால் கேளுங்கள்.' தலைவனாகாமலேயே தலைவனாக இருப்பான். வாசலில் குதிரையைக் கட்டி வைத்திருப் பான். தன் சாதி மக்களிடையேயும், நாட்டிலும் மிகவும் கௌர வத்தையும் மரியாதையையும் பெறுவான். தன் தந்தையைப் போல் வீரனாக இருப்பான் —

'தந்தையைப் போல்' என்று கேட்டவுடனே மக்கள் எல்லோரும் பிரமித்துப் போயினர். இளமையில் தந்தை சூரனுக இருந்தது இந்த அந்தணனுக்கு எப்படித் தெரியும்? முகலாய எதிரிகளைத் தீர்த்துக் கட்டிய வீரன் அவன் என்பது இவருக்கு எப்படித் தெரிந்தது? ஒருவேளை கிழவனின் முகத்தில் உள்ள நான்கைந்து காய வடுக்களைக் கண்டு சொல்லிவிட்டாரோ!.. எது எப்படியோ, மக்களுக்கு அந்தணனின் வார்த்தையில் நம்பிக்கை உண்டாயிற்று.

'எத்தனை வருடம் அவன் உயிருடன் இருப்பான் சாமி!' கிழவன் கேட்டான். 'ஆயுள் உங்களைவிட அதிகம்' என்று அந்தணன் சொல்லக் கேட்டதுமே கிழவனுக்கு மகிழ்ச்சியின் நிறைவால் கண்களிலிருந்து நீர் வழிந்தது...!' உங்கள் வாக்குப் பலிக்கட்டும்! அதுதான் சாமி எனக்கு வேணும்.'

'இவனுக்குத் திருமணமாகுமா, ஆகாதா? எத்தனை குழந்தைகள் பிறக்கும்?' இம்மாதிரி பல கேள்விகள் கேட்க ஆசைதான். ஒருவேளை அவனுக்குத் திருமணம் செய்துகொள்ளும் யோகமே இருக்கிறதோ என்னமோ?

இதற்குள் ஒரு கேள்வி பிறந்தது — 'கலியாணமா?'

'இரண்டு மனைவிகள்!'

பரமாவின் இருபத்தைந்து வயது ரண்சோட் வாய்விட்டுச் சிரித்தான். 'எதைப் பார்த்துச் சொல்கிறீர்கள் சாமி? இங்கே ஒருத்திக்கே திண்டாட்டம்...!' தம்மையுமறியாமல் ரண்சோடுடன் சேர்ந்து கொண்டு எல்லோரும் சிரித்தனர். ஆனால் அடுத்த கணமே எல்லோருடைய முகங்களிலும் சங்கரின் முகத்தைப் போலவே ஈயாடவில்லை —

வாலா எவ்வளவுதான் தைரியசாலியாக இருந்தாலும் மனிதன் தானே — அவன் மனம் சிடுத்து சொன்னான் — 'திருமணமே ஆகாவிட்டால்தான் என்ன போச்சு! அவன் ஆயுசோடு நன்றாக இருக்கணும்' அதுதான் நான் வேண்டிக்கிறது. கிழவன் கடுகடுத்த முகத்துடன் எழுந்து நின்றுவிட்டான்.

உண்மையில் மணமாகாது என்பது எவ்வளவு வேதனைக்குரிய விஷயமோ, அதே போல் இரண்டு மனைவிகள் (ஒரே சமயத்தில்) இருப்பார்கள் என்று கூறுவதும் வருந்தத்தக்க விஷயந்தான். ஆனால் இதைப் பற்றிக் கேட்கத் தகுந்த மன நிலையில் அவன் இருக்கவில்லை.

அந்தணன் கிழவனைச் சாந்தப்படுத்தி மறுபடியும் அமரச் செய்தான். 'பெரியவரே! நீங்கள் நல்ல அறிவு படைத்தவர்,

உலகத்திற்கென்ன, தன் கண்கொண்டு பார்க்கிறதைச் சொல்லி கொண்டிருக்கும். ஆனால் இந்த ஏழை அந்தணனின் வார்த்தையை நம்புங்கள். நீங்கள் உயிரோடு இருக்கும்போதே திருமணம் நிச்சயமாகும் ... ஆகாவிட்டால், என்னைத் தூற்றுங்கள், இப்போது நம்பிக்கை வந்ததல்லவா? கடைசி வார்த்தை பேசும் போது அந்தணனின் கண்களிலிருந்து ஒளி வீசிற்று. உள்ளத்திலிருந்து சிரத்தை ஊற்றெனக் கிளம்பி வழிந்தது.

அந்தணன் மூட்டையைச் சுருட்டியதைக் கண்டு 'என்ன கொடுத்தனுப்புவது? என்று சிந்தித்தான். என்கிட்டே உங்களுக்குக் கொடுக்க இப்போது ஒன்றுமில்லை....ஒரே ஒரு பெண் எருமைக் கன்றுக்குட்டி இருக்கிறது. அதைத் தரேன் சாமி!'

அந்தணன் வேண்டும்–வேண்டாம் என்று சொல்ல வாயெடுப்பதற்கு முன்னமேயே கிழவனின் தம்பி பரமா கிழவனைக் கோபித்துக் கொண்டான் — 'வீட்டில் எருமையாவது? ஒரு கட்டெறும்பு கூட இல்லை. பெரிதாக ஜம்பம் அடித்துக்கொள்கிறாயே! உன்னைப்பற்றி நீ என்ன வேண்டுமானாலும் நினைத்துக் கொள் ...ஆனால்....'

இதற்குள் சங்கர், மாவஜி போன்ற இரண்டு மூன்று பேர் பூலி சொன்னதுபோல் — 'இப்போது எப்படி இருந்தால் என்ன? குழந்தை பெரியவனாகிவிட்டால் நிலைமை மாறிவிடும்!' என்று சொன்னார்கள்.

'நிலைமை மாறும்போது பார்த்துக்கொள்ளலாம்! ஆனால் ...' பரமா அவர்கள் பேரிலும் சீறி விழுந்தான்! 'புரியவே மாட்டேன் என்கிறது! வாய்ச்சொல்லிலே தானம் வழங்கியப்புறம் இந்தப் பிராமணசாதி தட்சிணை வாங்கிக்கொண்டுதான் மறு வேலை பார்க்கும். கொடுக்காவிட்டால் உன் மானம் .. !'

பரமாவின் வார்த்தைகளைக் கேட்டு அந்தணனின் முகம் வெளுத்துவிட்டது. ஏதோ மாபெரும் பாதகச் செயல் புரிந்துவிட்டாற்போல நாவால் 'சுசுசு' என்று சப்தம் செய்தபடியே எழுந்தான். 'என்ன சொல்லிவிட்டீர்கள் பரமா? கிடைக்காவிட்டால் நான் உருகி விழுந்துவிட மாட்டேன் — 'இதற்குள்' பிரம்ம தேஜஸ் கிளம்பிவிட்டாற் போல அவனுடைய முகம் சிவந்தது— 'ஆனால் நினைவிருக்கட்டும்!' பரமாபடேலிடம் — அந்தணன் சொன்னான்— 'பெரியவர் மனம் வைத்தால் நடக்காதது கிடையாது. காப்பதும் அழிப்பதும் கடவுள்தான்.

ஆனால் இரண்டு வருடங்களுக்குள் அவருடைய நிலைமை சரியாக ஆகாவிட்டால் என் மேலே செருப்பை எறியுங்கள் !'

அருகே இருந்த மூட்டையைத் தோளில் தொங்கவிட்டுக் கொண்டு அவன் எழுந்தான். கட்டிலின்மேல் பூஜை சாமான் களின் முடிச்சைக் கண்டதும் உட்கார்ந்து விட்டான். அதிலிருந்து ஒரு யந்திரத்தை எடுத்து கொடுத்து—' இதற்கு தூபம் காண் பித்து விட்டு குழந்தைக்கு கட்டுங்கள் ' என்று சொல்லியபடியே அந்தச் சிறு மூட்டையைக் கட்டாதபடியே தோள்பையில் போட்டுக்கொண்டு கிளம்பினன்.

கோபங் கொண்ட அந்தணனைச் சாந்தபடுத்த கிராம மக்களனை வரும் முயன்றனர். வாலா தழுதழுத்து நின்றுவிட்டான். நடுவில் பரமாவும் நின்றிருந்தான். ஆனல் அந்தணன் யாரையும் லட்சியம் செய்யவில்லை. ' இனி வாலாவின் நிலை மாறினல்தான் இந்தக் கிராமத்தில் அடிஎடுத்து வைப்பேன் — மாறும் — இந்த ஏழை அந்தணனின் வார்த்தைகள் நினைவிருக்கட்டும்...

எல்லோரும், விரைந்து சென்றுகொண்டிருந்த அந்தணனைப் பார்த்தபடி வாய் புதைத்து நின்றனர்.

அந்தணன் மறைந்துவிட்டான். கண்களில் நீர் ததும்ப வாலா தன் தம்பியைக் கேட்டான் — ' இந்த சாமியைப் பசியுடன் வீட்டை விட்டுத் துரத்திவிட்டாயே, நான் உனக்கு அப்படி என்னப்பா கெடுதல் செய்துவிட்டேன் ?'

' இதெல்லாம் நீ செய்யற வேலை — சனியனே !' என்று எறிந்து விழுந்தான் ரண்சோட்.

பரமா சமாதானம் செய்ய முயன்முன் –'வருத்தமாக இருந்தது என்னல் சொல்லாமல் இருக்க முடியவில்லை ! நீங்கள்தான் தாறு மாருகச் செய்துவிடுகிறீர்கள்.

எதிரிலிருந்து ஒரு பெண்ணின் குரல் கேட்டது. 'தாறுமாரும் தாறுமாறு !' பரமாவின் மனைவி ஆவேசத்துடன் தன் கணவ னிடம் குத்தலாகப் பேசினள் — ' உங்களுக்கு மூன்று பிள்ளைகள் இருக்கிருர்கள் — பிள்ளை யில்லாதவன் சொத்தைச் சாப்பிடலாம் என்று உங்கள் எண்ணம் ! ஏன் பின்னே தாறுமாரு நடந்து கொள்ள மாட்டீர்கள் ! ஆனு இந்த அப்பாவிகளுக்கு இதுகூடத் தெரியமாட்டேன் என்கிறது. வயிற்றிலே கொள்வது பாத்திரத் திலே கொள்ளாதா என்ன ?'

இனி இங்கே இருப்பதில் சுவாரஸ்யமில்லை என்று கிராம மக்க

ளுக்குத் தோன்றிற்று. ஒவ்வொருவராக எல்லோரும் சென்று விட்டனர்—கிழவன் வாலா எவ்வளவோ சொல்லிப் பார்த்தான்— ‘கேளுங்கள் அப்பா, அந்த சாமியும் பசியோட போய்விட்டார். நீங்களும் ஒரு வெல்லக்கட்டி கூட வாங்கிக்கொள்ளாமல் போகிறீர்கள். ஒரு நெல்லிக்காயளவு வெல்லக்கட்டி வாங்கிக்கொண்டு போங்களேன் !’

“இன்னும் நிறைய நாளிருக்கு வெல்லம் வாங்கிக்க – காளியா நல்லா இருந்தா எங்க எல்லோருடைய வாயும் மனமும் இனிக்கும்....” என்றனர் ஓரிரண்டு பேர்.

இந்தக் கடைசி வாக்கியத்தைக் கேட்டு பரமாவின் மனைவிக்குக் கோபம் பற்றிக்கொண்டு வந்தது. ‘காளியாவாம் காளியா பேரைப் பாரு—பேரு வெச்சதுமே அவன் பசியோட எழுந்து போயிட்டான். வந்தவர்கள் எல்லாருமே வெல்லக்கட்டி கூட வாங்கிக் கொள்ளாமல் போகிறார்கள். குதிரைகட்டி வாழு வாளும் — ஆகாசத்திலே! இங்கே முற்றத்திலே கழுதையைக் கட்டக்கூட வழியில்லே ...’ என்று படபடவென்று வெடித்தாள்.

கோபத்தைச் சகித்துக்கொள்ள முடியாமல் வாலாவின் மனைவி வீட்டிலிருந்து வெளியே வந்துவிட்டாள்– ‘இதோ பார்! பத்தினிப் பெண் சாபங் கொடுக்கமாட்டாள். அதை நினைவில் வைத்துக் கொள்! கொடுஞ்சூரியுடைய ...’

கிழவன் வாலா நடுங்கி நின்றான். ‘கொடுஞ்சூரி’ என்ற வார்த்தை கிழவியின் வாயிலிருந்து வந்துவிட்டதே! கிழவியின் வாயைத் தன் கையால் மூடியபடியே வருத்தத்துடன் சொன்னான் –‘பேசாதே பேசாதே– கடவுள் மனது வைத்துக் கொடுத்திருக்கிறார் அவனுக்கு ஒரு குறையும் வைக்கமாட்டார். போ–உள்ளே போ — உலகத்திலே சண்டையைவிட பெரிய சாபக்கேடு வேறொன்றுமில்லே!’

மனைவி பல்லைக் கடித்துக் கோபத்தை அடக்கிக் கொண்டு உள்ளே சென்றுவிட்டாள்.

பரமாவின் மனைவி அகராதியில் இல்லாத வசைகளையும் சாஸ்திரங்களில் எழுதப்படாத சாபங்களையும் பொழிந்துகொண்டிருந்தாள்.

வாலாவின் ஆத்மா விம்மியது. மனதிற்குள் இறைவனிடம் வேண்டிக்கொண்டான் — ‘தெய்வமே! உனக்குத் தெரியாதது ஒன்றுமில்லை. என்னால் சண்டை போட முடியாது. ஏன் சண்டை

போடவேண்டும்? என்னைக் காக்க ஆயிரம் கைகளுடன் நீ இருக்க நான் ஏன் சண்டை போடவேண்டும்?'

வீட்டிற்குள் சென்று அந்த யந்திரத்திற்குத் தூபம் காண்பித்து காலுவின் கையில் கட்டினன்.

பரமாவின் மனைவி மாலி இன்னும் கத்திக்கொண்டிருந்தாள். வாலாவிற்குச் சொல்லொணுத திருப்தி ஏற்பட்டது. 'கேட்காமலேயே இதை அந்தப் பெரியவர் கொடுத்துப் போயிருக்காரே .... சாபமும், தாபமும் என்ன செய்யப்போகிறது?'

# 4

# பிழைப்புக்கள்

ஆடி மாதம். மூன்றும் பிறை — இரவு நேரம். ஆகாயமே ஆட்டம் கண்டதுபோல் புயல் அட்டகாசம் செய்துவிட்டது. கோழி கூவியதுமே பூமியும் ஆகாயமும் ஒன்று சேர்ந்துவிட்டன. விடியற் காலையில் மேகம் கர்ஜனை செய்த வண்ணம்..................................வடக்கு வரிசையில் போய் நின்றுவிட்டது. காற்று, சூறாவளி, மின்னல் எல்லாம் கூடாரத் துணிகளுடன் எங்கோ போய் மறைந்துகொண்டன. ஒரே இரவில் இரண்டு மூன்று மணி நேரத்திற்குள் நிலமகள் ஒரு விசித்திர மாறுதலை அடைந்துவிட்டாள். நேற்றுவரை அங்கு காலடி வைக்க முடியாமல் தகித்துக்கொண்டிருந்தது. இன்று அதே இடம் சில்லென்று குளிர்ந்து மனத்திற்கு மிகவும் மகிழ்வூட்டும்படி மாறிவிட்டது. படுத்துத் தூங்க மனம் விழைந்தது. ஆங்காங்கே குட்டைகள் நிரம்பிக் காணப்பட்டன. தவளைகள் பலவிதமான சுருதிகளில் பாட ஆரம்பித்தன. முட்புதர் போல் காணப்பட்ட மரம் ஒரே இரவில் நீரால் நிரம்பி விட்டது. கண்களுக்குக் குளிர்ச்சியளிக்கும் பசுமை நிறத்துடன் புன்னகை பூத்தது. மழைக்கு வாழ்த்துப் பாடல் பாடுவதற்கென்று கூட்டம் கூட்டமாக ஆகாயத்திலிருந்து புள்ளினங்கள் இறங்க ஆரம்பித்தன. இவ்விதம் ஒரே இரவில் நிலமகளின் உருவமே மாறிவிட்டது.

ஆனால் நிலம் மட்டும்தானா என்ன? பயங்கரமாக வீசிய சூறாவளி இப்போது குளிர்ந்து மென்மையான காற்றாக வீசிற்று. தாராளமாக நிலத்தின் மணத்தை அள்ளி வீசத் தொடங்கியது. தளிர்களைச் சிரிக்கச் செய்தது. கிளைகளை ஊஞ்சலாடச் செய்தது. நதிக்கரையின் மரங்களிலும் தொலைவிலுள்ள குன்றுகளிலும் ஒளிந்துக்கொண்டு கண்ணாமூச்சி விளையாடிக் கொண்டிருந்தது.

ஆதவனோ! நேற்றுவரை ஆகாயத்தில் நெருப்பைக்கட்டி எரித்துக் கொண்டிருந்தான். நெருப்பு உருண்டைபோல் இருந்தவன் இன்று வர்ண ஜாலங்களை வீசியபடி சிரிக்க ஆரம்பித்துவிட்டான். தண்ணீர் நிரம்பி வழியும் நீர்நிலைகளில் தம் முகங்களைப் பார்க்கும் சிறுவர்களுடன் ஆதவனும் தன் முகத்தைப் பார்த்துக் கொண்டான். சிறுவர் அவனைக் கல் வீசி வீசித் துரத்த முற்

பட்டனர். ஆயினும் எட்டிப் பார்த்தபடி, சிறுவர்களுடன் சிறுவனாக அவன் விளையாடிக் கொண்டிருந்தான்.

இரவு முழுவதும் முளையடித்துக் கட்டப்பட்டிருந்த கால்நடைகளும் வீட்டைவிட்டு வெளியே வந்தவுடனேயே வெளியே நடந்து கொண்டிருந்த லீலைகளைக் கண்டதும் எல்லாமே அடைந்துவிட்டாற்போல் காணப்பட்டன. அவைகள் குனிந்துகொண்டு நடக்கவில்லை. நதிக்கரையில் சென்று புல் மேயும் பரபரப்புக் கூட அவைகளிடம் இன்று இல்லை. அவைகள் உலவியபடியே சென்று கொண்டிருந்தன.

ஆனால் இன்று இந்தக் கால்நடைகளுடன் எருதுகள் இல்லை. எப்படி இருக்கும்? அவைகள் இன்று மிகவும் முக்கியமாக எல்லோருக்கும் தேவைப்பட்டன. அவற்றை வீட்டு முற்றத்தில் கட்டி அவற்றிற்குத் தீனி வைக்கப்பட்டிருந்தது. ஆடி மாதத்துக் காலையில் உபயோகிப்பதற்காக வீட்டுக்குதிரில் பத்திரமாக சேமித்து வைக்கப்பட்டிருந்த தானியமும் கொடுக்கப்பட்டது. வைக்கோல் மாட்டையும் மூடும்படி குவித்துப் போடப் பட்டிருந்தது. சில எருதுகளின் கழுத்தில் மணிகள் கட்டப் பட்டிருந்தன. ஏர் உழுவதற்குப் போகவேண்டுமென்று இல்லத் தரசிகள் சர்க்கரைப் பொங்கலிட்டனர். கிழவன் வாலாவைப் போன்ற ஏழையின் வீட்டில்கூட ஒரு ஆழாக்கு நெய் வாங்கி வரப்பட்டது. வேலை செய்ய ஆட்கள் வீட்டில் உள்ளவர்கள் முற்றத்தில் குளிர்காய இருக்கும் அடுப்பில் குளிக்க வெந்நீர் வைத்தனர். வருடத்தில் முன்னூற்றறுபத்தைந்து நாட்களும் சண்டை பூசல் நடக்கும் பரமாவின் வீட்டில்கூட இன்று அமைதி நிலவியது. அது மட்டுமல்ல, பிறந்ததிலிருந்து ஒருபோதும் சிரித்தறியாத மாலி போன்ற பெண்மணியின் முகத்தில் கூட மகிழ்ச்சி நிறைந்த புன்னகை நடமாடியது. 'நாசமாய்ப் போகட்டும் சாவட்டும், எறிஞ்சு போகட்டும்' போன்ற சொற்களுக்குக் கூட ஆடி மாதத்து விசேஷ நாளன்று அவர்களுடைய நாவிலிருந்து விமோசனம் கிடைத்துவிட்டது. சம்பாதிக்க வெளியூர் செல்லும் மகனுக்குத் தாய் அன்புடன் உணவளிப்பதுபோல், எப்போதும் சிடுசிடு வென்றிருக்கும் பெண்கள்கூட அன்புடன் தம் வீட்டவர்களுக்கு உணவளித்தனர். வாலாவின் அண்டை வீட்டு மஞ்சா சித்தி எருதுக்கு ஏர் பூட்டிவிட்டுத் தன் கணவன் மால்ஜிக்குக் கட்டளை பிறப்பித்தாள்—' இதோ பாருங்கள், வாயைத் திறந்து

பேசக்கூடாது. நினைவிருக்கட்டும் - பிள்ளையாருடைய பெயரைச் சொல்லிக்கொண்டு நேரே ஆலமரத்துப் பக்கத்து வயலைப் பார்க்கப் போங்கள். விதைக் கூடை, புகையிலை - இன்னும் எல்லாவற்றையும் நான் எடுத்து வருகிறேன் !'

பழைய மணிகளை எருதுகளின் கழுத்தில் பூட்டிய வண்ணம் சிரித்துக்கொண்டே வாலா சொன்னான்—'இல்லாவிட்டால் ஆடி மாதத்து நல்ல நாளிலேயே யாராவது வம்புப் பேச்சு பேசுவார் களா என்ன ?'

'எனக்கென்ன பைத்தியமா பிடிச்சிருக்கிறது' என்றான் கிழவன் எருதை ஓட்டிக்கொண்டே.

'பைத்தியமில்லேண்ணே! அப்பாவியாச்சே நீ!' 'அதெல்லாம் நீங்க நெனக்கிறது............!' நிமிர்ந்து பெருமையுடன் நின்ற மஞ்சா கணவன் ஏதாவது பேசிவிடப் போகிறானோ என்று நடுங்கிவிட்டு அவனைத் தடுத்து நிறுத்தினாள். 'கடவுள் பெயரை சொல்லிக்கொண்டு நேரே போங்கள் !'

'கடவுள் பெயரைத்தான் இராப் பகலா சொல்லிக்கொண்டிருக் கிறோமே !' எதைச் சொல்லக்கூடாதோ அதையும் கிழவன் சொல்லிவைத்தான்—அதுவும் உரத்த குரலில் - 'ஏய் ! நெருப்பு கொண்டுவர மறந்துடாதே !'

'நெருப்பு' என்றவுடனே எல்லோரும் கொல்லென்று சிரித்த னர். மஞ்சாவினால் கூட சிரிக்காமலிருக்க முடியவில்லை. 'நீங்கள் நாசமாய்ப் போனீங்க !— எத்தனை தடவை சொன்னேன் !'

'இதிலே தப்பென்ன அண்ணி ! அக்னிதான் தேவதையின் பெய ராச்சே' வாலா சொன்னான். 'தொந்திக் கணபதியே !' என்று சொன்னபடியே கிழவன் எருதுகளை ஓட்டிக்கொண்டு இளைஞனைப் போல் நிலமகளின் மடியிலுள்ள மண்ணைக் கிளறப் புறப்பட்டான்.

கிராமத்துப் பாதைகளெல்லாம் சிறிது நேரம் கலகலவென்று மணியோசை கேட்டது. நேற்றுவரை சூனியமாகக் கிடந்த வயல் கள் – மனிதர்களும், கால்நடைகளும் எட்டிக்கூடப் பார்க்காத வயல்கள் இன்று உழவர்களின் கோலாகலத்தால் நிரம்பி விட்டன. சிலர் விதைக் கூடையை எடுத்துக்கொண்டு வந்தனர். சிலர் காலியான கூடையை எடுத்துக்கொண்டு வீடு திரும்பினர். குழந்தைகளுக்கோ இன்று திருவிழா தினமாயிற்றே ! புகையிலை, உக்கா, தண்ணீர்க் கிண்ணம், நெருப்பு முதலியவற்றை மகிழ்ச்சி யுடன் அவர்கள் எடுத்துவந்து கொடுத்துக் கொண்டிருந்தனர்.

முதியோருக்கும் அதே மாதிரி கொண்டாட்டம். இல்லாவிட்டால் நேற்றுவரை விஷக்கடியினுல் கட்டிலேவிட்டு அசையாமல் இருந்தவர், தண்ணீர் குடிக்கக்கூட அடி எடுத்து வைக்க முடியாதவர் இன்று ஏர் உழக் கிளம்ப முடியுமா என்ன ?

பரமாவின் மகன் ரண்சோடின் காய்ச்சல் கூட வெயிலோடு மறைந்தோடிவிட்டது. கிழவன் வாலாவினுல் மட்டும் தன் முதுமையை இன்று விட முடியவில்லை. கிராமத்து எல்லா மக்களும் தயாராக இருந்தனர். கண்ணில்லாத கிழவன் லால்கூட தடியை ஊன்றிக்கொண்டே வயலின் வரப்பில் போய் உட்கார்ந்து விட்டான் - வீட்டு நிழலேவிட மேகங்களின் நிழல் இன்னும் அதிகக் குளிர்ச்சியாக இருந்தது போலும்! வீட்டுக் கூரையைவிட விண்வெளிக் கூரை அதிக சுகமளித்தது போலும்.—

ஒவ்வொரு விவசாயியின் மனத்திலும் இன்று ஒரே எண்ணம் தான்—'இந்த வயலே உழுதுவிட்டு அந்த வயலைப் பார்க்கலாம். இந்த இரண்டு நாட்கள் மழை பெய்யாமலிருந்தால் சோளம் நன்ருக விளேயும், பிறகு இந்த பெரிய பாத்தி நிரம்பிப் போய் விண்விடும். தானியமும் நன்ருக.....................'

ஆனுல் வாலாவின் மனதிலும் அதே எண்ணம்தான். 'காலுவுக்கு எங்காவது திருமணம் நிச்சயமாகிவிட்டால் நிம்மதியாக கங்கையிலே குளிக்கலாமே. இந்த இரண்டு வருடத்திலே ஆனுல் தான் ஆனது. இல்லாவிட்டால் யாரும் அவனேத் திரும்பிகூடப் பார்க்கமாட்டார்கள் !' கிழவன் பெருமூச்சு விட்டான்—'தெய்வமே! எல்லாவற்றையும் பொறுத்துக்கொள்வேன்! ஆனுல் இந்த தம்பியின் பெண்சாதி இருக்கிருளே, அவளுடைய குத்தலான பேச்சைத்தான் என்னுலே சகிக்கவே முடியவில்லை !'

கிழவனின் வருத்தம் உண்மையானது. நிச்சயதார்த்தம் இப்போது நடக்கப்போகிறதில்லை. ஆனுலும் எங்காவது அதுப்பற்றி பேச்சு நடந்தால் தம்பியின் மனேவி ஆரம்பித்து விடுவாள்—'பெரிய மனிதர் என்ருல் ஏன் இப்படித் திருமணம் ஒரு இடத்திலே கூட நிச்சயமாக மாட்டேன் என்கிறதுன்னு கேட்கிறேன் ?'

'உன் மகனுக்கு ஆகட்டும்...... வீணுக வந்து.......' வாலா வாக்கியத்தை முடிப்பதற்குள் மாலி கச்சையை வரிந்து கட்டிக்கொண்டு வந்துவிடுவாள் — 'பின்னே இல்லாமலா. என் பிள்ளேகளேத் தொட்டிலிலே போடும்போதே எல்லோரும் வந்து மொய்த்துக்

கொள்வார்களே! விருந்தாளிகள் வந்து, உட்கார்ந்தே மாசத்திலே இரண்டு கட்டில்கள் உடைந்து போகுமே...'

கிழவன் மனம் வருந்துவான். தன் நிலைப்பற்றி யல்ல, தம்பி வீட்டோர் அடித்துக் கொள்ளும் பெருமையைப் பற்றித்தான் 'ரொம்பப் பெருமையடித்துக் கொள்ளாதே. பணம் நாய் மாதிரி—வாலாட்டிக்கொண்டு வந்தாலும் வரும், வாலைக் குழைத்துக் கொண்டு ஓடினாலும் ஓடும்! இந்தக் கண்ணாலே நானும் எத்தனையோ பார்த்திருக்கேன்....' என்பான் கிழவன்.

இந்த வார்த்தைகளையும் பரமா விபரீதமாகப் புரிந்துகொண்டு எரிந்து விழுவான்—'உன் ஆசை அதுவானால், அப்படியே ஆகட்டுமே!' பரமாவின் மகன் ரணசோட் கிழவனை அடிக்கக் கூட கையை ஓங்கிக்கொண்டு வருவான். ஏழெட்டு வயது சிறுவன் கூட நாய்க்குட்டி போல் அவன் பின்னே அடிக்கடி வருவான். கிழவனைக் கண்டு பயந்து ரணசோட் தொலைவிலேயே நின்றுவிடுவான்—'பார்த்துக்கொண்டே இரு! எங்களுக்கு எப்போது கெட்ட காலம் வரும் என்று பார்த்துக்கொண்டே இரு. ஆனால் ஒன்று ... எங்கள் வீட்டு மனிதர்களுக்கோ, மாடுகளுக்கோ ஏதாவது கெடுதல் வந்ததோ அப்புறம் உனக்கு நல்ல காலமில்லை—ஆமாம்!'—என்று சீறி விழுவான்.

இம்மாதிரி சண்டை பல தடவைகள் நடப்பதுண்டு. ஒரு வாரம் கூட நிம்மதியாகக் கழிந்தால் அதிருஷ்டம் என்றுதான் சொல்லவேண்டும்.

'இப்படிப்பட்ட சகோதரர்களுடன் வாழ்வதைவிடக் கானகத்தில் வாழ்வது சிறந்தது' என்ற பொருளுடைய வடமொழி சுலோகம் கிழவனுக்குத் தன் போன்றவருடைய அனுபவத்தில் தோய்ந்த சொல் என்று படும்!

இளமையாயிருந்தால் மூட்டை முடிச்சுக்களைக் கட்டிக்கொண்டு வாலா கிளம்பியிருப்பான். தம்பியின் குடும்பமே உட்கார்ந்து தின்னவென்று இருந்தது. சண்டையை நினைத்தாலே அவன் நடுங்கிப்போய் இப்படியும் எண்ணுவதுண்டு — 'காலுவுக்கு கலியாணம் நிச்சயமாகாவிட்டாலும் சரி—இந்தப் பரமாவின் வீட்டவர்கள் மகிழ்ச்சியுடன் இருந்தால் அதுவே போதும். சண்டை பூசல்கள் அபசகுனமான விளைவைக் கொண்டு சேர்க்கும் என்று கிழவன் அடிக்கடி அஞ்சுவான். 'அரிவாளின் காயத்திலிருந்து கூடப் பிழைத்துவிடலாம், ஆனால் அவச்சொல்லின் காயத்திலிருந்து தப்பவே முடியாது!' என்று அவன் அடிக்கடி கூறுவான்.

கிராமத்து மக்கள் எல்லோருமே பரமாவின் வீட்டைக் கண்டாலே நடுங்கினர். கருத்துக் கூறப்போய்க் கைகலப்பு நேர்ந்ததும் உண்டு. பிறகு யார் எந்தக் கட்சிப் பக்கம் செல்வது. ஆகையால் காலுவின் திருமணம் சம்பந்தமாக எந்தவிதமான சிபாரிசும் செய்ய உற்றுர் உறவினர், கிராம மக்கள், எல்லோருமே அஞ்சினர்.

சூரத்தனமாக நடந்துகொள்பவள் ஒரே ஒருத்திதான். அவள் தான் 'பூலி'—'காலுவுக்குக் கண்ணுலம் நிச்சயம் செய்ய ஒருத்தருக்குமே தெம்பில்லேன்னு பரமா வீட்டில் நெனைச்சுக்கிட்டு இருந்தாங்க....ஆனு...'

ஆனுல் அவளும்தான் என்ன செய்வாள்? திருமணத்திற்குகந்த பெண்ணே அந்தப் பேட்டையில் இல்லையே! பிரசவ அறையிலேயே திருமணம் — நிச்சயமாகிவிடும். பிரசவிக்கப் போகும் பெண்களை நம்பிக்கையுடன் எதிர்பார்த்திருந்தாள் பூலி - வாலாவிடமும் இது பற்றி ஒன்றும் கூறவில்லை. தன் மகன் சங்கரிடமும் அவள் தன் மனத்தைத் திறந்து காண்பிக்கவில்லை.

சரியாக இரண்டு மாதங்கள் கழிந்தன — மாரிகாலம் — கிராமத்தில் தூர உறவுக்காரனை கல்லாவின் மனைவி ஒரு பெண் குழந்தையைப் பெற்றெடுத்தாள். மகப்பேறு பார்த்தவள் பூலிதான்—நல்லதை உடனே செய் என்பதற்கேற்ப வாலாவின் மகனை அவளுடைய மகளுக்குத் திருமணம் செய்து தருமாறு கேட்டாள். கேட்பதாவது கட்டளையே பிறப்பித்துவிட்டாள்—'இதோ பாரு—இந்தப் பெண்ணுக்கு வாலாவுடைய மகனைத்தான் கொடுக்கணும் தெரிஞ்சுதா!' பெண்ணின் தாய்க்கு காலுவின் அழகையும் உடல் உறுதியும்விட வாலாவின் சுபாவம் ரொம்பப் பிடித்திருந்தது. காலுவின் தாயோ அவளுக்கு உயிர்த்தோழி, ஆகையால் அவள் உடனே பதில் சொன்னுள்—'நான் ஏன் வேண்டாங்கப் போறேன் சித்தி! உங்க மருமகன் வாலாவுக்குப் பிடிச்சிருந்தா சரி!'

'அவன் என்ன சொல்வான்?' பூலிக்குத் தெம்பு வந்துவிட்டது. சமயம் பார்த்து வாலாவிடமும் பேசிவிட்டாள். அவனும் அதே மாதிரிதான் பதிலளித்தான்— 'பெண்ணேட அம்மா சரின்னு எனக்கென்ன? ஆனு அவங்களோட மாமன் வீட்டிலே என்ன சொல்லுவாங்களோ?'

'கேட்டுப் பார்க்கணும்' பூலி எப்படி முடியாது என்று சொல்லுவாள் - ஆனுல் சற்று அவளுக்குப் பயம்தான். ஏனென்ருல்

பெண்ணின் மாமன் வீடும் பரமாவின் மகன் ரணசோடின் மாமி யார் வீடும் ஒன்று.

'கவலையில்லை. அவங்க பரமாவின் சம்பந்தி முறையாகணும் எனக்கும் கொஞ்சம் உறவுண்டு.'

எப்படி உறவு என்று பூலியிடம் கேட்டால் போதும், விசித்திர மாக உறவைக் கோத்துச் சொல்லிக் கொண்டே போவாள். 'என் மாற்றாந்தாயின் மாமாவுக்குச் சித்தி மகளுடைய மகள் தான் என் மருமகனுடைய பெண்சாதிக்கு அம்மா!' என்பாள். கிராமத்துடன் கூட அவள் சேர்த்துச் சொல்லும் உறவு பிரமாத மாக இருக்கும்.

வேரிலிருந்து இலை வரையில் மரத்தின் பிரிவுகளுடன் இணைத்துச் சொல்வது போல் சொல்வாள். அவளுடைய ஞாபக சக்தியே அபாரம்! தன் கிராமத்தைப் பற்றி மட்டுமல்ல அருகேயுள்ள ஏழெட்டு கிராமங்களிலுள்ளவர்களின் ஏழைப் பரம்பரை பற்றி வாய்ப்பாடு போல் ஒப்பிப்பாள். யார் எங்கிருந்து வந்து தங்கி ஞர்கள். எந்த நிலம் யாரிடமிருந்து யாருக்குச் சொந்தமாயிற்று. என்றெல்லாம் சொல்வாள். சொத்தைப் பிரித்துக் கொள்ளும் போது உண்டாகும் சண்டை சச்சரவிலோ, அல்லது திருமண நிச்சயத்தின் போதோ வேறு உறவு பற்றிய விஷயம் இடையே குறுக்கிட்டால் பூலியிடமிருந்து ஒரு வார்த்தை வரும்வரை எல்லா வேலையும் அப்படியே நிறுத்தப்பட்டுவிடும்.

இப்படி எத்தனையோ சண்டைகளைச் சேர்த்து வைத்திருக்கிருள் பூலி. கடந்த பத்தாண்டுகளாக மற்ற ஜாதியினரின் சச்சரவுகளி லும் தலையிட்டுச் சரி செய்ததுண்டு. இந்த இரண்டாண்டுகளாக இவளுடைய கருத்தின்றி திருமணமே நிச்சயம் செய்யப்பட்ட தில்லை என்று சொல்லலாம்.

காலுவின் திருமணம் நிச்சயிக்கும் பொருப்பை இவள் தானே ஏற்றுக் கொண்டு விட்டாள். பெண்ணின் மாமன் வீட்டிலும் மறுக்க மாட்டார்கள் என்பது இவளது நம்பிக்கை. ஆதலால் வெளிப்படையாகச் சொல்வாள்—'வாலாவுக்கும் வேண்டியவங்க கிராமத்திலே இருக்காங்கங்கறதை மாலிக்குக் காண்பிச் சாகணும். காலுவுக்கு நிச்சயம் செய்து காட்டாவிட்டால் என் பேரு பூலியில்லே!'

அதே போலத்தான் நடந்தது. பெண்ணின் மாமன் வீட்டில் மறு பேச்சுக் கூறவில்லை ஆனல் மகிழ்ச்சியுடன் ஒப்புக்கொண்

டனர்—'நீங்க வந்து கேட்கறப்போ, அவங்க வேறே எந்த ஜாதிக் காரங்களானாலும் சரி......'

'இது போதாது உங்கள் வீட்டிலிருந்து யாராவது ஒருத்தர் என்னுடன் வந்து மருமகப்பிள்ளை வீட்டிலே சர்க்கரைப்பொங்கல் சாப்பிட்டு விட்டுப் போனால்தான் நான் ஒப்புக்குவேன்!' திருமண விஷயத்தில் மட்டும் எல்லோரும் ஒருமுகமாக ஒப்புக் கொண்டாலொழிய நான்கு மாதங்களானாலும் ஒரு முடிவுக்கு வர முடியாது என்பதைக் கிழவி அறிந்திருந்தாள். இன்னும் ஒரு வாரத்திற்குள் வருவதாக அவர்களிடம் வாக்கு வாங்கிக் கொண்ட பின்புதான் கிண்ணத்தில் பரிமாரப்பட்ட பொங்கலைக் கிழவி தொட்டாள்.

ஏழு நாட்களுக்குப் பதிலாகப் பதினைந்து நாட்கள் கழிந்து விட்டன. வாலா காலையிலும் மாலையிலும் நடந்தவண்ணமிருந் தான். பரமாவின் மருமகன் நான்கைந்து நாட்கள் வரை பிறந்த வீட்டுக்கும் புகுந்த வீட்டுக்குமாக அலைந்து கொண்டிருந்தான்.

ஆனால் கிழவி தன் சங்கல்பத்தை நிறைவேற்றி விட்டாள். நிச்சயதார்த்த தினம் குறிக்கப்பட்டது. வாலாவுக்குச் செய்தி யனுப்பப்பட்டது 'நாளைக்கு அதாவது, திங்கட்கிழமை யன்று கல்லாவின் மகளுக்குத் திருமணம் நிச்சயிக்க எல்லோரும் வரப் போகின்றனர்.'

கிழவன் வாலா சுய அறிவையே இழந்துவிட்டான். கடவுள் தான் வரப் போகிறாரோ என்றிருந்தது அவனுக்கு. எள்ளை விதைக்கக் கூட மறந்துவிட்டான். பத்து வீடுகளுக்குப் போய்த் திரும்பினான். ஒரு வீசைக்கு பதிலாக இரண்டு வீசை நெய் காய்ச்சி வைத்தான். கோதுமையை வாங்கித் தானே மாவரைத்து மனைவிக்குக் கொடுத்தான். ஒன்றேகால் மடங்கு விலை கொடுத்து ஐந்து வீசை வெல்லம் வாங்கிவந்தான். விருந்தினராக வரும் பெண்களுக்காகப் பழைய படுக்கைகள் வேறு நான்கைந்து வாங்கிவந்தான்.

மனைவியின் மகிழ்ச்சியை பற்றிக் கேட்கவா வேண்டும்! ஏனிருக் காது உள்ளங்காலில் வெள்ளெலும்பாட வீடுவீடாக ஓடினாலும் பிள்ளைக்குப் பெண்-கிடைப்பது அரிதாயிருக்கும்போது கிராமத் தில் மிகவும் நன்றாக வாழ்ந்துவரும் குடும்பங்களில் ஒன்றிலிருந்து தானாகவே நிச்சயம் செய்ய வரப்போகிறார்கள். பரமாவின்

மூன்று பிள்ளைகளில் ஒருவனுக்குத்தான் இப்படி ஒரு சம்பந்தம் கிடைத்தது.

அதனால் பரமாபடேலின் வீட்டுச் சூழ்நிலையே ஒரே சிடுசிடுப்புடன் காட்சியளித்தது.

திங்கட்கிழமை, அதிகாலை நேரம். மூத்தமகன் ரண்சோடின் மனைவி தன் ஒரு வயது மகளை அடித்துக்கொண்டிருந்தாள். ரண்சோட் தன் மனைவியைத் திட்டிக்கொண்டிருந்தான். மாலியோ தன் கணவன் பரமாவுக்கே வசைமாரி பொழிந்து கொண்டிருந்தாள் ... 'நாசமாப் போங்க எங்கேயாவது சாதுக்களோட போங்க. அந்த மடையன் ரண்சோட் எங்கே? என் வயித்திலே கள்ளி முளைத்த மாதிரி வந்து ஏன்தான் பிறந்தானோ? உன் பெண்சாதியை அவளோட அம்மா வீட்டுக்குத் துரத்து. அவங்கதான் இந்த வீட்டையே முழுகடிச்சவங்க. போதும் போதும். சரியாப் பார்த்து என் தலையிலே, கட்டினீங்க!'

இதற்குப் பிறகு மாமியார் - மருமகளுக்கிடையே சண்டை மூண்டது. மகன்—தாய் இருவருக்கு மிடையிலே படபடவென்று நெருப்புப் பொறிகள் பறந்தன. மாலிக்குப் பறிந்துகொண்டு தந்தைக்கும் மகனுக்குமிடையே சண்டை—பதினைந்து வயது சிறுவன் எருதை ஓட்டிக்கொண்டு வயல் பக்கம் போயிருந்தான் நிலத்தை உழுவதற்கு அவனும் இதில் பங்கெடுத்துக் கொண்டான் — 'எல்லாரும் சேர்ந்து மண்டையை உடைத்துக்கொள்ளுங்கள்!' தூணுக்கு எதிரே நின்றுகொண்டு எட்டு வயது சிறுவன் அழுது கொண்டிருந்தான், தாரை தம்பட்டத்துடன் நாதசுவர இசை சேர்ந்தாற்போலிருந்தது.

நிச்சயதார்த்தத்திற்கு வந்திருந்த நான்கு பெண்டிருடன் பூலியும் இருந்ததால் பிழைத்தான் வாலா—இல்லாவிட்டால் மாலி வாலாவின் வீட்டுக்கு வந்து தன் மண்டையை உடைத்துக் கொண்டிருப்பான்—ரத்தக் காயத்துடன் கத்தியிருப்பான்—'எங்களிடம் ஒரு வார்த்தை கேட்டீர்களா? நிச்சயம் செய்ய வந்துவிட்டீர்களே—நெருப்பில்லாமலேயே எங்களைச் சுட்டெரிக்கிற வேலையில்லே இது?' என்று பயங்கரமான உருட்டல்—மிரட்டல்களில் இறங்கியிருப்பாள்.

ஆனால் அவளால் என்ன செய்ய முடியும். பூலி தன் புடவைத் தலைப்பில் மாலியைப்போல் பத்துப் பதினைந்து பேர்களை முடிந்து

கொண்டு சுற்றினுள். 'வரட்டும் என் எதிரில்' என்று சொல்லி அவளை எதிர்பார்த்து நின்றுள் பூலி—

'வந்தால் என்ன செய்வது?' வந்திருந்த ஏழெட்டுப் பெண்களில் மூக்குப்பொடி போட்டுக்கொண்டிருந்த ஒருத்தி கேட்டாள்.

ஒரு ஆண்மகன் கூட ஆடவர்களுக்கிடையே அப்படிப் பேசக் கூசுவான். அத்தகைய பதிலளித்தாள் பூலி.

பூலியின் உடல் பலத்தைக் காட்டிலும் அவளிடம் உள்ள ஒரு சக்தியை அந்த பெண்கள் எல்லோரும் அறிந்திருந்தனர். அதனுல் தான் எல்லோரும் ஒரே மாதிரி நினைத்தனர்— 'மாலி இங்கே வந்தால் வாலாவின் வீட்டில் உயிரற்ற தூணுக நின்றுவிடுவாள், அல்லது எறிந்து சாம்பலாகி விடுவாள்!'

இந்தப் பெண்கள் மட்டுமல்ல, அக்கம் பக்கத்து ஊர்களிலுள்ள எல்லா ஆடவரும் பெண்டிருமே பூலியைப் பிசாசு என்றுதான் நினைத்தனர். பூலியின் காதில் இது விழுந்தது. உடனே நான் கைந்து பேர்களைத் திட்டித் தீர்த்துவிட்டாள்—'உண்மையாக நான் பிசாசா யிருந்தால் நிரூபித்துக் காட்டேன்.'

காகிதத்தைக் கொண்டு வந்து எழுதிக் காண்பிக்க யாரால் இயலும்? அதுமட்டுமா காகிதத்தில் எழுத்து வேலை எந்தப் பிசாசு செய்யும்?

பஞ்சாயத்தில் விசாரணை செய்யப்பட்டது. அவர்களுக்குத் தண்டனையளித்த பின்புதான் அவர்கள் தப்பினுர்கள். அத்துடன் கூட பூலியைப் பாராட்டி அவளுடைய மகிமையை ஒப்புக் கொள்ள வேண்டி வந்தது. இதில் கிடைத்த பணத்தை பூலி தானே எடுத்துக்கொள்ளவில்லை. பெரிய பெரிய பாத்திரங்கள் வாங்கி நீதி வழங்கியவர்களுக் களித்துவிட்டாள்.

மகிழ்ச்சியுடன் இருக்கும்போது பூலியை யாராவது — 'பூலி அம்மா? உங்களைப் பிசாசுன்னு ஏன் எல்லோரும் சொல்கிறுர்கள்?' என்று கேட்டால் அவள் சிரித்தபடியே பதில் கூறுவாள்- 'யார் கண்டாங்க தங்கச்சி? எல்லோரும்தான் என்னைப் பிசாசு பிசாசுங்கருங்க, ஆனு நல்லதோ கெட்டதோ எல்லாத்துக்கும் எனக்கு அழைப்பு நிச்சயம் வந்துடுது. என்ன செய்யறது? குடுவையோட வாயை வேணுமாஞு துணியால் கட்டி மூடிடலாம். ஆனு பெருங்கிணத்து வாயை எப்படி மூடறது?... எனக்குத்தான் என்ன குறைச்சல்? சங்கரைப் போல குடும்பத்துக்கு ஒத்த புள்ளை. மகனுக்கும் ஒரு மகள் இருக்கிறுள் — நான் பிசாசாக

இருந்தால் என் குழந்தைகளையே விழுங்கியிருக்க மாட்டேனு? சொல்லிவிட்டுப் போகட்டும். கண்ணுலம் நிச்சயம் செய்யறதுக்குப் பெரிய ராசா மகன் வந்தாக்கூட என்னை ஒருத்தராலும் அடக்க முடியாது. அதனுலேதான் என்னைப் பிசாசுங்கறுங்க. ஆனு அந்த மடப் பசங்களுக்குப் பெண் பிள்ளைங்க அரசாளக் கூடச் செய்வாங்கங்கறது தெரியமாட்டேங்குது. வெள்ளை காரங்க இருந்தாங்களே அவங்கள்லே ஒருத்தி அரசியாக இருக்கல்லே?' ... பிறகு நினைவு படுத்திக்கொண்டு சொல்வாள்- 'ஆமாம், விக்டோரியா அரசி அரசாளல்லே? அறிவில்லாமலா அவள் ஆசாண்டிருப்பாள்? இதை நம்ப ஆளுங்க புரிஞ்சுக்கறதேயில்லே!' பிறகு விஷயத்தை முடித்தபடி கூறுவாள்– 'விட்டுத் தள்ளுங்க ... சொன்னுச் சொல்லட்டும். அவங்க வாய்தானே வலிக்கப் போவுது. நேர்மையா நடக்கறவங்களை யாருதான் என்ன செஞ்சிட முடியும்?'

பூலி சொன்னது சரிதான். மக்களிடையே பலவிதமான பேச்சுக்கள் இவ்விதம் நடந்துகொண்டுதானிருந்தன. அமாவாசைக்கு முதல் நாள் நள்ளிரவில் கிழவி நதியோரம் செல்வதைப் பார்த்தேன் என்று ஒருவன் சொல்வான், 'முதலையின் மேல் உட்கார்ந்து ஏதோ தியானத்திலே இருந்ததைக் கூடப் பார்த்தானும்!' என்று மற்ருெருவன் செய்தி கொண்டு வருவான். ஆனுல் பார்த்தவன் யாரென்று எவருமே நிச்சயமாகத் தெரிந்து கொள்ளவில்லை. இது மட்டுமல்ல, யாருடைய வீட்டிலாவது திருமணம் நிச்சயமாகிப் பிறகு தடைப்பட்டு விட்டாலோ, அல்லது அவர்களுடைய வீட்டில் துரதிருஷ்ட வசமாக ஏதாவது குழந்தைக்குக் காய்ச்சல் வந்து விட்டாலோ உடனே எல்லோரும் ஆரம்பித்து விடுவார்கள் — பார்த்தாயா வேண்டாம் என்று சொன்னேனே! மகளுக்குக் காய்ச்சல் வந்துவிட்டது பார்!'

பேய் பிசாசு பற்றிய விஷயங்களில் பூலியை நடமாடும் பிசாசாகவே கருதி வந்தனர் மக்கள். நம்பாதவர்கள் கூட இதனை நம்பவேண்டி வந்தது. ஒருமுறை ஒரு செப்பிடுவித்தைக் காரனின் குடுமியைப் பிடித்து அவனைப் படாதபாடு படுத்திக் குற்றத்தைச் சொல்லி மன்னிப்புக் கேட்க வைத்துவிட்டாள் பூலி — 'அம்மா! சும்மா-நான் ஏதோ காலத்தைக் கழிக்க இப்படிச் செய்யறேனுங்க. பாவி வயிறு ஒண்ணு இருக்குது பாருங்க!

அதற்காக இத்தனை பித்தலாட்டம் பண்ண வேண்டியிருக்கு துங்க !'

உண்மையில் இந்தச் சம்பவத்திற்குப் பிறகு மக்கள் பூலியைச் சரியான பிசாசு என்று ஒப்புக்கொண்டு விட்டனர். 'அந்த செப்பிடுவித்தைக்காரன் மந்திரத்தை உச்சரித்தவுடனேயே பூலி சுவற்றிலிருந்து கிளம்பி வந்தாள் என்பான் ஒருவன்—மற்றொருவன்—'கதவின் தாழ்ப்பாள் தானே திறந்துகொண்டது' என்பான்.

பிசாசு என்று பெயரெடுத்த போதிலும் பூலி ஒருத்திதான் கிராம மக்கள் அனைவரின் அன்புக்கும் பாத்திரமானவள். அவளிடம் பல வீட்டு மருமகள் எல்லோரும் வந்து தம் குறையைச் சொல்லிக்கொண்டு அழுவர், மாமியார்கள் மருமகளுக்குப் புத்தி கூறும்படி பூலியைக் கேட்டுக்கொள்வர். ஆடவரும் கடன் விவகாரத்தில் சரியாகத் தீர்ப்புக் கூற பூலியிடமே வருவர்.

மகப்பேறு விஷயத்தில் அவள் டாக்டரேதான். இருபது முப்பது மைல் தொலைவிலிருந்து கூட அழைப்பு வருவதுண்டு. இது மட்டுமா, குழந்தைகளுக்குச் சுளுக்கு எடுக்கவும் கழுத்து சரிவர நிற்கும்படி செய்யவும் பூலிதான் வருவாள்.

குழந்தைகளின் பல விதமான நோய்களுக்கும் சிகிச்சை செய்யும் விதம் அவளுக்குத் தெரிந்திருந்தது. ஆனால் இந்த உலகத்தைத்தான் என்னவென்று சொல்வது? இம்மாதிரி உடல் சம்பந்தப்பட்ட நோய்களைப் பற்றியும் மக்கள் விசித்திரமாகக் கூறுவர்—'தனக்கும் கைகால்களைப் பிடித்து விட்டுச் சிகிச்சை செய்யத் தெரியும் என்று காண்பித்துக் கொள்ளத்தான் அப்படி செய்கிறாள். உண்மையில் மந்திரத்தின் பலத்தினாலேயே குழந்தைக்குக் குணமாகிவிடுகிறது.'

இப்படி ஒரு நம்பிக்கையும் பயமும் கொண்டிருந்த காரணத்தால்தான் மாலி வாலாவின் வீட்டுப் பக்கம் எடுத்தடி வைக்கவில்லை. தான் வருவது ஒருபுறம் இருக்கட்டும். அங்கு வரும் பெண்களின் பெயரைக் கூட உச்சரிக்கப் பயந்துகொண்டிருந்தாள். வாலாவை அவளும் திட்டாமலில்லை — கிராமத்திலே உறவை விட்டுக் கொடுக்காமல் எல்லோரும் நடந்துகொள்கிறார்கள்—அப்படியிருக்க கூடப் பிறந்தவர்கள் என்று பெயர் வைத்துக் கொண்டு ஏன் என்றுகூடக் கேட்கமாட்டேன் என்கிறாய்? விருந்தினருக்குச் சாப்பாடு போடுவதற்கு முன்பு 'பாவம் வாலாவின் மனைவி' ஒரகத்தியைக் கூப்பிடப் போனாள். ஆனால்— 'உனக்கு

வேண்டியவர்களுக்குச் சாப்பாடு போட்டுக்கொள்!' என்று கூறி விட்டாள் மாலி. வாலாவுக்கும் அவனுடைய மனைவிக்கும் மிகவும் வருத்தமாகிவிட்டது.

ஆனால் பூலி பரமாவின் வீட்டோர் பொருமைப் படுவதைக் கண்டு மகிழ்ந்து போனாள். தான் உழைத்த உழைப்புக்கு அது தான் பெரிய ஊதியம் என்று அவள் கருதினாள்.

இரவில் நேரங்கழித்துச் சாப்பிட்ட பிறகு வாலாவின் வீட்டுச் சுத்தமான சிறு தாழ்வாரத்தில் உட்கார்ந்து எல்லோரும் பேசிக் கொண்டிருந்தனர். அதே நேரத்தில் பூலி வாய் திறந்து சொல்லி யும் விட்டாள் — 'இந்தப் பரமா— மாலி இரண்டு பேர் வயிறும் எரியட்டுமின்னு தான் நான் இந்த மாதிரி நிச்சயதார்த்தம் செய்யப் படாத பாடு பட்டேன்!'

முற்றத்துத் தட்டிக்குப் பின்னால் நின்றுகொண்டு மாலி இதைக் கேட்டாள். பல்லைக் கடித்துக் கொண்டாள் — பட படவென்று பொறிந்து தள்ளினாள் — 'ராக்கசி! நான் பிறக்கறத்துக்கு முன்னாலேயே எனக்குப் பகையாக வந்து முளைச்சவ இல்லே நீ அது எனக்கு நல்லாத் தெரியும். என்கிட்டே பாச்சா பலிக்காது. வேறே யாரையாவது போய் எரியவை.'

'பூலி அண்ணி! அதெப்படி நீங்க சொன்னீங்க .... நீங்க கண்ணாலம் செய்துகிட்டு வந்ததிலிருந்து என் வீட்டைப் பற்றி உங்களுக்குக் கவலையுண்டே! அதை நான் மறைச்சுப் பேச முடியுமா? வாலா கூறினான்.

'அது சரிங்க தம்பி! ஆனா உங்களுக்கு என் சுபாவம் தெரியுமில்லே!' பிறகு கிழவனை விரலால் சுட்டிக் காண்பித்தாள். உண்மையைச் சொல்லுங்க. உங்க காலுவுக்கு ஒண்ணரை வயசாகப் போவுது. ஆனா எப்பவாச்சும் அவனுக்கு நிச்சய தார்த்தம் செய்யணுமின்னு எங்கிட்டே சொல்லியிருக்கீங்களா நீங்க!'

'பொய் ஏன் சொல்லப் போறேன்! இல்லவே இல்லை!'

'சரி அது கிடக்கட்டும். எனக்குக் கண்ணாலமாகாத மகன்........'

ஒரு பெண் வேடிக்கையாகச் சொன்னாள்— 'பூலி அம்மா! சங்கர் தம்பிதான் இருக்குதே என்னைக்கும் இளமையான அதிஸ்டத்தோட!'

சற்று கம்பிரமாக பூலி ஆரம்பித்தாள்— 'மகளோட அப்பா அம்மாவே வாயெத் திறக்காதெப்போ, அதைப் பற்றி நான் பேசத் தேவை என்ன?'

'எங்க கிட்டே அவ்வளவு அன்பு உங்களுக்கு !' காலுவின் தாய் கூறிஞள்.

'இல்லே ரூபி! அன்போ, வேறே எண்ணமோ, ஒண்ணு மில்லே! என்ஞலே இந்த மாலியோட பேச்சைப் பொறுத்துக்க முடியலே. பரமாவோட எண்ணங்கூட என்ன தெரியுமில்லே! அண்ணன் வாலா, கெஞ்சிக்கிட்டு வந்து நம்ம கிட்டே விழணும் ...'

'அப்படிச் செய்யறத்துக்கு முன்னே நான் என் தலையையே சீவிக்கிடுவேன்!... நான் போய் அவங்கிட்டே என் மகன் காலு வுக்கு கண்ணுலம் நிச்சயம் செய்யணுமின்னு கேட்கவே மாட் டேன்!'

'எனக்குத் தெரியும். அதஞலே தானே வாலா தம்பிக்கும் உறவுக்காரர்கள் இருக்காங்கன்னு காட்டறதுக்கு எல்லோரை யும் இழுத்துக்கிட்டு வந்தேன்!'

'இழுத்துக்கிட்டு வர்ற மாதிரிதான் செஞ்சிருக்காங்க!' ஒருவன் அதை ஆமோதித்தான்.

ஆனுல் வாலாவின் கவனம் வேறெங்கோ இருந்தது. இறைவ னின் திருவிளையாடல் என்ன என்று ஆராய்ந்து கொண்டிருந்தான் அவன். 'தெய்வமே' உன் திருவிளையாடலை என்ன வென்று சொல்வேன்! நான் கெட்ட காரியம் செய்யவேண்டு மென்று சிலபேர் நினைக்கிருர்கள் ஆனுல் கெடுதலுக்கும் நடுவிலே நீ நல்லதைச் செய்துவிடுகிருய்!' கிழவனின் ஆத்மா புளகமடைந் தது. 'இறைவா! கடவுளே!— எங்கேயிருந்த கயிற்றையோ நீ எங்கோ கொண்டுவந்து பிணைத்துவிடுகிருய்!'

இதற்குப் பிறகு கிழவன் வாலா, தடைப்பட்ட விபத்துக்களின் சிக்கல் கயிறுகளைப் பிணைத்து வாழ்க்கையின் ரகசியங்களை அறிந்து கொள்வதில் மூழ்கி விட்டான்......... பூலியின் வார்த் தையை ஆமோதித்தபடியே எங்கோ கவனமாக அவனும் சொன்ஞன்- 'ஆமாம் ஆமாம்—உண்மைதான்-'

# 5

## பூநம் கொய்பியரு

ஆவணி மாதத்து இரவு ஒரு கணம் நிலவொளியில் மின்னிற்று, மறுகணம் இருளைப் போர்த்துக்கொண்டு நகரத் துவங்கியது. இரவின் ஒலிபோல் பூச்சிகள் சப்தமிட்டன.

குழந்தைகளின் அழுகை நின்று விட்டது. வெளியே கட்டப் பட்டிருந்த மாடுகளுக்குப் புல் போட்டாகி விட்டது. சோள வயலின் வரப்பில் படுத்துறங்க ஆடவர்களும் சென்றுவிட்டனர். பகல் முழுதும் நாற்றுப் பிடுங்கி நட்டதனாலும், புல் மாட்டுத் தீனி முதலியவற்றைச் சுமந்து வந்ததாலும் களைத்துப் போய்ப் பெண்களும் தூங்கிவிட்டனர்.

ஆனால் சிற்சில இடங்களில் இயந்திரங்களில் மாவு அரைக்கப் பட்டது. 'சர்சர்' என்று தயிர் கடையும் ஓசையும் ஓரிரு இடங்களிலிருந்து வந்துகொண்டிருந்தது. இது தவிர கிராமம் முழுதும் நிச்சப்தம் நிலவியது. சில நேரங்களில் நரிகள் ஊளையிடும் ஒலி கேட்டது ஓரிரு கணங்கள் நாய்கள் குரைத்துக் கொண்டிருந்தன. பட்டணத்தைச் சுற்றிவிடும் காவற்காரனைப் போல் வயல் களிலிருந்து காவலர்களின் ஒலி கேட்டது. 'ஹோ...... ஓய் ...'

இரவு நேரமாக ஆக, இயந்திரம், தயிர் கடையும் ஓசை, நரி, காவல் எல்லாமே மயங்கி விழுந்துவிட்டன. முற்றத்தில் படுத் திருந்த பரமாவின் உக்கா கூட சுவரில் சாய்ந்துகொண்டு தூங்க ஆரம்பித்தது.

தூங்காதவர்கள் பூலியும் அவளுடன் சேர்ந்த ஐந்தாறு பெண் களும் தான். மாலியும் முற்றத்துத் தூண் மறைவில் எவ்வளவு நேரமாகவோ நின்றுகொண்டிருந்தாள். இவ்வளவு நேரம் வரை அவள் தன் வாழ்வில் ஒரு நாள் கூட நின்றிருக்க மாட்டாள்.

ஆனால் அதுபற்றி அவளுக்குச் சிறிதும் கவலை கிடையாது. அவளுடைய கவனம் முழுதும் பூலியின் பேச்சில்தான் லயித் திருந்தது. இவ்வளவு நேரம் அவள் பேசாமல் இருந்தாளே அதுவே பெரிய விஷயமாயிற்றே!

இதற்குள் காலுவின் தாய் கூறினாள்—'இந்த மாதிரி வேளை யிலே நீங்கள் காலுவுக்கு நிச்சயதார்த்தம் பண்ண ஏற்பாடு செய்து விட்டீர்கள். நாளைக்கு விடிந்ததும் பாருங்கள். அவள் வாயிலேயிருந்து நெருப்பாகக் கொட்டும்...'

மாலி ஒளிந்திருக்க வேண்டும் என்பதைக் கூட மறந்து விட்டாள். அந்தத் தூணிலிருந்து பூதம் கிளம்பியது போல் கிளம்பினாள்— 'என் வயிற்றெரிச்சலை ஏன் கொட்டிக் கொள்கிறாய்? யாரோ பெற்ற பிள்ளையை எடுத்துக்கொண்டு வந்து......'

கிழவன் வாலாவின் மனைவி தன்னை மறந்து விட்டாள்— யாரோ பெற்ற பிள்ளை - என்று கேட்டதுமே, எங்கிருந்து ஆத்திரம் பீறிக்கொண்டு வந்ததோ தெரியாது - மடியில் விளையாடிக் கொண்டிருந்த குழந்தையை ஒரு தள்ளுத் தள்ளிவிட்டு எழுந்து நின்றாள் – 'இன்றைக்கு உன்னை உயிருடன் விட்டேனா பார்!' என்று கூறியபடி பத்திரகாளியைப் போல் மாலியை நோக்கி விரைந்தாள்.

மாலியின் உள்ளத்திலும் பல நாட்களாகப் பொறாமை பதுங்கிக் கிடந்தது. கிழவியை அடிக்கச் சரியான வாய்ப்பு இன்று கிடைத்தது என்று கருதி—'வா வெளியே!' என்று கத்தியபடி முன்னால் அடி எடுத்து வைத்தாள்.

ஆனால் கிழவியின் கோபத்தை இன்று அவள் புரிந்துகொள்ளவில்லை. கிழவி எருமையின் காதைப் பிடிப்பதுபோல் மாலியின் காதையும் தலைமுடியையும் பிடித்துக்கொண்டு 'பட் பட்' என்று முகத்தைப் பார்த்து அறைந்தாள்.

'அம்மாடி! செத்தேன்!........' மாலி கூக்குரலிட்டாள். வெளி முற்றத்திலிருந்து பரமாவும் பின்பக்கத்து அறையிலிருந்து ரண்சோடும் ஓடிவந்தனர். வாலா, பூலி முதலியவர்கள் காலுவின் தாயுடனேயே நின்றுவிட்டனர்.

பூலி எல்லோருக்கும் முன்னால் இருந்தது நல்லதாய்ப் போயிற்று. இல்லாவிட்டால் பரமாவும் அதற்கு மேல் ரண்சோடும் சித்தியைத் தீர்த்துக் கட்டியிருப்பார்கள். வாலாவும் தந்தை-மகன் இருவரையும் ஒரு கை பார்த்திருப்பான். 'ஆத்திரக் காரனுக்கு புத்திமட்டு' எனும் முதுமொழி கிராமத்தில் பிரசித்தியடைந்திருந்தது. இதற்குள் பூலி பெண் சிங்கத்தைப்போல் கர்ஜித்தாள். 'பத்திரம், பெண்பிள்ளை மேலே கை பட்டுதோ, ஆமாம்.........' தன் நாவின் முழு பலத்தாலும் சண்டையிட்டுக் கொண்டிருந்த இருவரையும் பிரித்து வைத்தாள் கிழவி பூலி—

மூக்கிலிருந்து ரத்தம் சொட்ட அழுத படியே வசைமாரி பொழிந்துகொண்டு மாலி தன் வீட்டிற்குள் போய்விட்டாள். காலுவின் தாய் நடுங்கிக்கொண்டே எச்சரிக்கை செய்தாள்—

'எது வேணுமானாலும் சொல்லட்டும், யாராவது என் குலத்தை பற்றிக் களங்கமாகப் பேசினுங்களோ? கழுத்தை நெறிச்சுப் போட்டிடுவேன்! ஆமாம்!'

பயத்தினாலோ, அல்லது வேறு எந்தக் காரணத்தாலோ மாலி வீட்டு வாசலில் உட்கார்ந்து முகத்தைக் கழுவிக்கொண்டு உள்ளே சென்றாள். தன் வீட்டவர்கள் பேரில் குறை கூறிக்கொண்டே இருந்தாள் — 'பேருக்கு மூன்று பிள்ளைகள் — இனிமேல் இருந்த இடத்தை விட்டு எழுந்திருக்காதீர்கள்' மீசை முளைத்த ஆண் பிள்ளைகள் இரண்டு பேர் இருந்தும்கூட பார்த்துக்கிட்டுத்தானே இருந்தாங்க! கையிலிருந்த லோட்டாவை வைத்துவிட்டு விரல் களைச் சொடுக்கிக் கொண்டு, பல்லைக் கடித்துக் கொண்டு பேசினாள்—'நீங்கள் எல்லோரும் நாசமாய்ப் போங்க! நிர்மூல மாக அழிஞ்சு போங்க!'

உள் அறையில் தூங்கிக் கொண்டிருந்த ரன்சோடின் மனை விக்கு மனதிற்குள் மட்டற்ற மகிழ்ச்சி. நாதாவின் மனைவியும் அங்கு செல்ல நினைத்தவள், கட்டிலில் படுத்துத் தூங்கியே போய்விட்டாள்.

'பத்திரகாளியைப் போல் இவளுக்கும் நீண்ட நாக்குதானே' என்று கருதியோ அல்லது பூலியிடம் உள்ள பயத்தாலோ நித்திரையில் ஆழ்ந்துவிட்டாள்.

பரமா இருதரத்தோரையும் இரண்டு திட்டுத் திட்டிவிட்டு மௌனமாகிவிட்டான். வாலாவின் வீட்டில், ஒன்றுமே நடக்க வில்லை போல் அமைதி நிலவியது. பூலி ஒருத்திதான் கட்டிலில் படுத்திருந்தபடியே காலுவின் அம்மாவிடம் சொல்லிக் கொண் டிருந்தாள் — 'எனக்கு ரொம்ப சந்தோஷம்! முள்ளை முள்ளாலே தான் எடுக்க முடியும். அவளுக்கு அடிதான் சரியான மருந்து. இனி மேல் அவள் உன் பெயரைக் கூட வாயால் உச்சரித்தால் என்னை ஏண்டின்னு கேளு!'

'அதெல்லாம் இல்லை சித்தி— இரண்டு நாளாகட்டும் பாருங்க! பழைய குருடி கதவைத் திற என்கிறாப் போலத்தான். மான மில்லாதவங்களுக்கு. சூடு சொறணை ஏது? என் தலைவிதி இன்றைக்கு நான்.............. '

வெளி முற்றத்தில் உட்கார்ந்திருந்த கிழவன் வாலாவுக்கும் வருத்தமாக இருந்தது. இவளுக்கு இன்றைக்கு என்ன ஆகி விட்டது? அறிவில்லாதவள் என்று இவளைச் சொல்வது! "கொம் புளதற்கு ஐந்து, குதிரைக்குப் பத்து முழம்" என்கிற மாதிரி

மாலி கண்ணிலே படாமல் தொலேவிலே இருக்கிறது தான் நல்லது......' அடிக்கடி சிந்தித்தவண்ண மிருந்தான் வாலா—'ஒருநாளும் நடக்காதது இன்று ஏன் நடந்துவிட்டது? வீண் சண்டை. சண்டை எனக்குப் பிடிக்காது. கத்துபவர்களின் வாய் தானே வலிக்கும். நான் சொல்லிச் சொல்லிச் சலித்துப் போனேன். ஆனால் யாருக்குத் தெரியும் இன்று இப்படி..........'

சிறிது நேரங் கழித்து அவனும் நித்திரையில் ஆழ்ந்துவிட்டான்.

எங்கும் ஒரே அமைதி. மாலி மட்டும் வசை மாரி பொழிந்து சலித்த பின்பு அழ ஆரம்பித்தாள். 'அம்மா — அப்பா தான் சரியில்லே ....... பிறந்த வீடுதான் அந்த நிலேமையிலே இருக்கிறது என்றால், இங்கேயும் எல்லாம் ஒரே பகை! யாரைத்தான் நான் அண்டிப் பிழைக்கறது! என் குறையை யாரிடம் சொல்லி அழுவேன்.... ...'

நள்ளிரவும் கழிந்து விட்டது. ஆனால் காலுவின் தாய்க்கு மட்டும் தூக்கமே வரவில்லே. பெருமூச்சு விட்டபடியே பக்கத்துக் கட்டிலில் தூங்கிக் கொண்டிருந்த பூலியைக் கூப்பிட்டாள் — 'பூலி அம்மா! விழிச்சிட்டிருக்கீங்களா?' ஒரு உலுக்கு உலுக்கி அவளே எழுப்பலாமா என்றிருந்தது அவளுக்கு. ஆனால் மனம் துணியவில்லே. 'விழித்துக்கொண்டிருந்தாலும் தான் என்ன பயன்? அந்தச் சனியனின் வாயை மூட யாராலே முடியும்?' என்று நினேத்தபடியே பெருமூச்செறிந்து புரண்டு படுத்தாள்-'உயிருடன் இருக்கும் வரையிலே தானும் சுகப்படமாட்டாள். மற்றவர்களேயும் சுகமாக வாழவிடமாட்டாள்!'

அதே சமயத்தில் மஞ்சா சித்தி பேசியது காதில் விழுந்தது. 'இனி சும்மா இரு ... உனக்குத்தான் தூக்கம் வரலேன்னு மற்றவங்களேயாவது தூங்கவிடேன், இரண்டாம் ஜாமமாயிடிச்சு!'

மாலி அதைக் காதில் வாங்கிக்கொள்ளவே இல்லே—'அம்மா—அப்பா என்னே அதோகதியாக விட்டுட்டு... ...'

'யார் சொன்னது உன்னே அனாதைன்னு! சிங்கம் மாதிரி மூனு பசங்க இருக்காங்க......'

'அம்மா அப்பா, புருசன், பசங்க எல்லோரும் இருந்து கூட ஒரு சுகமில்லே!'

'எப்படி சுகம் கிடைக்கும். நீயோ எப்போது பார்த்தாலும் கடுகு வெடிக்கிற மாதிரி வெடிக்கிறாய்! பார்க்கப் போனால் இந்தக் கிராமத்திலேயே உன்னே மாதிரி கொடுத்து வைத்தவர்கள் கிடையாது. ஆனால் உன் வீட்டுக்காரருடைய தலேவிதியைப்

பார்—எப்போது பார்த்தாலும் சண்டையும் பூசலும் தான். பொழுது விடிஞ்சால் சண்டையும் கூடவே தொடங்கிவிடுகிறது. இந்தக் கஷ்டம் உன் வீட்டுக்காரரைப் போல வேறே யாருக்கு இருக்கிறது சொல்லு.'

'சித்தி, என் வீட்டிலே தான் ஊர்ப்பிள்ளைங்கள் எல்லாம் நிரம்பியிருக்குதுங்களே! என்ன செய்வேன்?'

'செய்யறது என்னத்தை? உனக்கும் வயதாகிவிட்டது உன் நாவைக் கொஞ்சம் அடக்கிக் கொள்ளவேண்டும்!'

இதற்குப் பிறகு மஞ்சா சித்தி மிகவும் இதமான நல்வார்த்தைகள் கூறினாள். 'உன்னைவிட வாலா நூறு மடங்கு சுகமா இருக்கிறான் காசு இருந்தால் வயிறு வேண்டுமானால் நிரம்புமே தவிர, மனதுக்கு நிம்மதி கிடைக்காது' என்று அந்தக் கிழவன் சொல்வதில் எள்ளளவு கூடத் தவறில்லை. நீயே சொல். நீங்கள் எல்லோரும் சாப்பிடுகிற மாதிரிதான் அவனும் சாப்பிடுகிறான். இன்னும் பார்க்கப் போனால் அவனுடைய துணியிலே தான் இரண்டு ஒட்டுக்கள் அதிகமாகவெ போட்டிருக்கும். ஆனால் நாள் முழுதும் கிழவனும் கிழவியும் எவ்வளவு ஒற்றுமையாக இருக்கிறார்கள் பார்த்தாயா? சண்டை பூசல் கிடக்கட்டும், சத்தம் போட்டுக் கூடப் பேசிக் கொள்ள மாட்டார்கள், தாறு மாறாப் பேசிக் கொண்டு திரியாதே மாலி, மானம் மரியாதையாக இருக்கக் கற்றுக்கொள். போ, உள்ளே போய்த் தூங்கு!' மாலியை உள்ளே போக வைத்துவிட்டு மஞ்சா சித்தி தன் வீட்டிற்குச் சென்றாள்.

ஆனால் கட்டிலில் போய்ப் படுத்த மாலிக்கு மஞ்சா சித்தியின் உபதேச மொழிகள் மன நிம்மதியளிப்பதற்குப் பதிலாக இன்னும் அதிக வருத்தத்தை உண்டாக்கின—'இந்தப் பாவிப்பசங்க கூட—இந்தக் கிழவனுக்குச் சாப்பிட வீட்டிலே ஒன்றுமில்லை, ஆனாலும் நம்மைவிட சுகமாக இருக்கிறார்கள் என்று சொல்றாங்களே—என்னைக்கித்தான் இந்தக் கிழவனும் கிழவியும் எரிஞ்சு சாம்பலாய்ப் போவார்களோ! சுகமாம் சுகம்—சுகமாக எப்படியிருப்பார்கள். நேற்று நான்கு விருந்தாளிகள் வந்ததும், நான்கு வீடுகளில் அலைந்து போய் நெய் வாங்கிக்கொண்டு வந்தார்கள்........'

உள்ளேயிருந்து யாருடைய குரலோ கேட்டது – 'ஆனாலும் அவன் உன்னைவிட எவ்வளவோ மகிழ்ச்சியுடன் தானிருக்கிறான்.'

மாலி மறுபடியும் ஆரம்பித்து விட்டாள் — 'மகிழ்ச்சியா! அவங்கதலே! பூலிப் பிசாசு ஆயிரம் சிபாரிசு செஞ்சிருப்பா அதனாலேதான் மகனுக்குத் திருமணம் நிச்சயமாகியிருக்குது!'

உள்ளேயிருந்து எதிர்ப்பும் வந்தது. 'பொய் பேசாதே ராத்திரிதான் பூலி சொன்னதைக் கேட்டாயே. அவளுக்கு உன் பேரிலே தான் கோபம். நீ தான் பெரிய ஆர்ப்பாட்டம் செய்தாய்! இப்போது நன்றாகக் கேட்டுக்கொள். உன் மூன்று பிள்ளைகளிலே ஒருத்தனுக்காவது இப்படி நிச்சயமாயிற்றா? அதுவும் இவ்வளவு பக்கத்திலேயிருந்து! உன் ஒரே ஒரு மகனுக்கு அப்படியாச்சுன்னு உலகத்திலே எல்லோரும் பேசிக் கொள்கிறார்கள். அவ்வளவுதான். அதுவும் உன் புருசன் ஒருத்தருக்கும் தெரியாம அலே அலேன்னு அலேஞ்சப்புறம்! இங்கே கிழவன் யாரிடமும் சிபாரிசுக்குப் போகவில்லே!... இதில்லே ஒசத்தி! ...'

மாலியின் கோபம் அதிகரித்தது — 'நாசமாய்ப் போகட்டும். இவங்க வாழ்ந்தாலும் நான் இவங்க வீட்டிலே துக்கம் விசாரிக்கப் போகப் போறதில்லே ...' சலித்துப் போய் மாலி புரண்டு படுத்தாள்.

ஆனால் இன்னும் அவளை யாரோ தொந்தரவு செய்தவண்ணமிருந்தனர். 'குழி வெட்டறவனே அதிலே விழுவான். பார்த்துக் கொண்டே இரு–கெடுவான் கேடு நினைப்பான் – இவங்க வீட்டிலே நெருப்பு வச்சிட்டு நான் போய்க்கிட்டே இருப்பேன் ஆமாம்! வெளியே பார்க்கறதுக்குக் கழுதை கூடத்தான் பிரமாதமா இருக்குது ....' அழுகைக் குரலில் மாலி பேசினாள்.

அருகேயிருந்த கட்டிலில் படுத்திருந்த நாதாவின் மனைவியால் சும்மா இருக்க முடியவில்லே – 'இன்னும் கொஞ்ச நேரமாவது தூங்க விடுங்களேன்-பேய்—பிசாசு பிடிச்சிடுச்சா என்ன?'

'ஆமாம் உன் அம்மாக்குத்தான்......' திடீரென்று நாவை அடக்கிக்கொண்டு வேறு விதமாக ஆரம்பித்தாள் — 'நீ நிம்மதியாக இரு.... இதோ நான் வெளியே போயிட்டேன்– போதுமா?'

ஆனால் வெளியே அயர்ந்து தூங்கிக்கொண்டிருக்கும் பரமாவைப் பார்த்ததும் மாலிக்குத் துக்கம் பீறிட்டுக்கொண்டு வந்தது – பரமாவை வெடுக்கென்று கடித்துவிடலாம் போன்று கோபம் மூண்டெழுந்தது. 'தூக்கம் ஏன் வராது? எனக்குத்தானே எல்லா துக்கமும் வந்திருக்கு...... இந்த உலகத்திலேயே நான் ஒருத்தி தானே கெட்டவள்.'

கோபத்தைப் பொறுத்துக்கொள்ள முடியாமல் மாலி தூணில் சாய்ந்துகொண்டு உட்கார்ந்து விட்டாள். ஒன்றும் தோன்ற வில்லே. தூணில் தன் தலையை 'டம் டம்' என்று மோதிக் கொண்டாள்—'ஐயோ! மருமகள் என்னை 'வெளியே போ'ன்னு சொல்லிட்டாளே......'

பரமா, ரண்சோட் இருவரும் எழுந்தனர். ஆனால் நாதாவின் மனைவி ஊமைபோல் இருந்தாள் ...... வெளியே மெள்ள வந்து சொன்னாள்— 'அடடா யாராவது கேட்டால் என்ன சொல்வார்கள்?'

'தானும் நிம்மதியா இருக்க மாட்டாள் மற்றவர்களையும் இருக்க விட மாட்டாள் என்றுதான் சொல்வார்கள்'......என்று கூறியபடியே பரமா கோபத்துடன் மாலியிடம் கேட்டான் — 'உனக்கு என்ன ஆயிடுடிச்சு, சொல்லித் தொலையேன். இந்த இரவு வேளையிலே ஏன் இப்படி விழித்துக்கொண்டு கிடக்கிறே! பூதம் கிளம்பிடிச்சோ.... அது கூட இப்படி நடந்துகொள்ளாதே!'

விழுந்தவுடன் மாலியின் குரூரமான கண்களைப் பார்த்து உண்மையில் அவளுக்குப் பேய் பிடித்திருக்கிறது என்று மக்கள் முடிவு செய்துவிட்டனர். அவளைச் சரிப்படுத்தக் கூடாதோ? ஆனால் நள்ளிரவு, போதாததற்கு மாலையிலிருந்து மாலி சண்டையில் ஈடுபட்டிருந்தாள். அதனால் 'பொறுமைக்கு அறிவேது' என்று அவளுடைய வீட்டோர் சும்மா இருந்து விட்டனர்.

ரண்சோட் அவளை வீட்டிற்குள் இழுத்துச் சென்றான். போர்வையால் அவளை மூடி 'அம்மா, துங்கு-நன்றாகத் தூங்கு. சரியாகப் போய்விடும்' என்று சொன்னான்.

மாலி மேலே பார்ப்பதற்கு அமைதியுடன் போர்வைக்குள் கிடந்தாளே தவிர, அவளை உள்ளே பேயாட்டம் ஆட்டிக் கொண்டிருந்தது. 'போதும் போ பெரிய நிச்சயதார்த்தம் செஞ்சிட்டாங்க. அந்தக் கரியனுக்குக் கண்ணாலமாக விட்டேன்னா, ஏன் நாயே என்று என்னைக் கேட்கட்டும்!'

# 6

## சாதுவின் லங்கோடு

மகனுக்குத் திருமண நிச்சயம் முடிந்த பிறகு கிழவன் வாலா வின் உடலில் இன்னும் அதிகத் தெம்பு வந்துவிட்டது. எருதுகள் உயிரற்று இருந்தன. பரமாவின் எருதுகள் போல் தெம்புள் ளவை அவனிடம் இருந்தால் ஒரே ஒரு முறை உழுது இரண்டு மடங்கு விளைச்சலைக் கண்டிருப்பான்.

உண்மையில் மகனின் நிச்சயதார்த்தக் கவலைகளும் அம்பார மாகக் குவிந்துவிட்டன. வீட்டில் இரண்டே கட்டில்கள் இருந்தன. யாராவது உறவினர் வந்தால் ஒவ்வொரு தடவையும் யாரிடம் கடனுக்குப் போவது? போர்வைகளையும் தைத்தாக வேண்டும். ஆனால் எப்படி? வேட்டிகள் புடவைகள் இவற்றைக் கொண்டு ஆண்டுக்கு நான்கு உறைகள் தயாரித்து விடலாம். அதுவும் பாதி ஜீரணமான பிறகுதான் அவற்றை ஒரு மூலையில் வைக்கமுடியும். அப்போதுதான் அவை ஒட்டுகள்போட உதவும். அது வரை அவை அணியும் துணிகளாயிற்றே. இதைத் தவிர வீட்டின் கூரை யும் எப்போது கீழே விழலாம் என்று காத்துக் கொண்டிருந்தது. கறவைப்பசு இல்லாமல் எப்படிக் காலங்கழிக்க முடியும்? மகனின் மாமியார் வீடு மிகப் பெரிய குடும்பம். யாராவது ஓரிருவர் வந்து கொண்டே யிருப்பார்கள். வீட்டில் இரண்டு மூன்று பசுக்களிருந் தால் சமாளித்துக் கொள்ளலாம், மகனுடைய மாமனார் வீட்டில் இருபது இருக்கின்றன. இங்கே ஒன்றுகூடக் கிடையாது. எருமை யில்லாமல் கொட்டில் எப்படி இருக்கும்? எல்லாவற்றையும் விடப் பெரிய பிரசனை எருதுகளைப் பற்றியதுதான். இரண்டு எருது களும் கிழமாகி விட்டன .... இவ்விதம் கணக்கிட்டுப் பார்த்தால் கவலைகளுக்கு ஒரு முடிவே கிடையாது.

ஒருமுறை குளிர்காலத்தில் கிழவனுடைய வயலில் பட்டாணி தின்றபடி ஏழெட்டு பேர் உட்கார்ந்திருந்தனர், அவர்களில் காலு வின் மாமனார் கல்லா, பூலியின் மகன் சங்கர் முதலியவர் குறிப் பிடத்தக்கவர்கள். பேச்சு வாக்கில் கிழவனுடைய கவலை பற்றிய பிரஸ்தாபம் வந்தது. கிழவனால் சொல்லாமல் இருக்கமுடிய வில்லை. 'மனிதனை மாயையில் இறுகப் பிணைச்சிட்டான் கடவுள் ........பாருங்களேன். காலு பிறக்கும் வரை ஒரு கவலையிருக்க வில்லை. தங்கைகள் இருந்தார்கள். அவர்கள் தங்கள் தங்கள்

மாமியார் வீட்டுக்குப் போய் விட்டார்கள். எங்கள் இரண்டு பேரின் வயிற்றைக் கழுவும் கவலைதானிருந்தது. இதற்குள்ளே கடவுள் எங்கள் முதுமையைப் பார்த்து...பிள்ளை என்கிற மாயையைக் கொடுத்து விட்டார். இப்போது எண்ணிப் பார்த்தால் எத்தனை தொல்லைகள்?' பிறகு சிரித்தபடியே தாடியைத் தன் உள்ளங்கையால் தடவிக்கொண்டே சொன்னான். 'இது அந்த சாதுவின் லங்கோட்டுக் கதை போல ஆயிடிச்சு...'

'சாதுவின் லங்கோட்டுக் கதை என்ன சித்தப்பா?' என்று உற்சாகமுடன் விளங்கிய கிழவனைக் கேட்டான் சங்கர்.

மற்ற எல்லோரும் ஒன்று சேர்ந்து அவனை வற்புறுத்தினர் — 'சொல்லுங்க, சொல்லுங்க சித்தப்பா; லங்கோட்டுக் கதையைச் சொல்லுங்க!'

குளிர்காலம். காலை நேரம். கையால் சேர்த்துக் கட்டப்பட்ட வயல் வரப்பின் ஒருபுறம் கட்டில் போடப்பட்டிருந்தது. கட்டிலுக்கு அடியில் கத்தியிருந்தது. மறுபுறம் வைக்கோலால் ஆன பாய் ஒன்றிருந்தது. பாயின் மேல் ஒரு வில்லும், பத்துப் பதினைந்து அம்புகள் கொண்ட அம்புராத் தூணியும் இருந்தன. அடுப்பு தகதக வென்று எரிந்து கொண்டிருந்தது.

பாயின் ஓரத்திலுள்ள ஒரு கந்தல் துணியைப் போட்டு அதில் வாலா உட்கார்ந்து கொண்டான். மூன்று வயது காலுவும் அதே வயதுள்ள அவனுடைய மைத்துனனும் — அதாவது கல்லாவின் மகன் கோதர் — இருவரும் வரப்புக்கெதிரே விளையாடிக் கொண்டிருந்தனர். சங்கரும், மற்ற சிறுவனும் தானியத்தைக் குத்திப் புடைத்துக் கொண்டிருந்தவர்களுக்கு உதவிக் கொண்டிருந்தனர்.

பேசாத் நெருப்பில் காய்ச்சினான். வாலா உக்காவை நிரப்பும் பொறுப்பை ஏற்றுக் கொண்டான்.

'வாலா சொல்லுங்கள், லங்கோட்டுக் கதை கேட்கணுமே.' கல்லா தன் சம்பந்தியை வற்புறுத்தினான்.

'எல்லாரும் அந்தக் கதையைக் கேட்டிருப்பீர்கள். ஆனால் கேட்கணுமானால் சொல்றேன் தாங்க உக்கா!'

'கண்ணா' மூக்கு வெச்சுச் சொல்லுங்க சித்தப்பா!' புதிதாய்க் கிளம்பிய அருகு மீசையில் வியர்வை முத்துகள் பளபளக்கத் தலையில் சுற்றப்பட்டிருந்த துணியைக் கழற்றியபடியே கேட்டான் பேசாத். ஏதோ வேலை செய்யத் தயாராகி விட்டாற்போல் அவன் கழுத்தைத் தடவிக்கொண்டான்.

கிழவன் வாலா ஒரு கனைப்புக் கனைத்துக்கொண்டு 'உம், உம்' என்று கதை கேட்கும் வேலையை சங்கரின் பொறுப்பில் விட்டு விட்டுக் கதையை ஆரம்பித்தான் —

'நீலகண்ட மகாதேவன் கோயில் மாதிரி ஒரு கோயில்' — கிழவன் சிரித்தான் — 'அடே மறந்துவிட்டேனே..... என்னைப் போல ஒரு சாது மகாத்மா இருந்தார். அவரிடம் இரண்டே லங்கோடுகள். அதாவது கோவணங்கள் இருந்தன. ஒன்றை உடுத்திக் கொள்வார். மற்றொன்றைத் துவைத்துக் காயப்போட்டிருப்பார். அவரிடம் உள்ள சொத்தே இதுதான்.

'ஒருநாள் திடீரென்று குளிக்கும்போது பார்த்தார்—அவருடைய கோவணம் எப்போதுமிருக்குமிடத்தில் காணப்படவில்லை. சாதுவுக்கு ஒரே கவலை. இறைவனும் நம்மைப் போலத் தானே இருக்கிறான். ராமனாவது கிருஷ்ணனாவது இருந்தால் அவனுடைய துணியிலிருந்து ஒரு துண்டு கிழித்துக் கொள்ளலாம். மகாதேவனும், சாதுவும் ஒரே மாதிரியாயிற்றே. அக்கம் பக்கத்தில் பிட்சை கேட்கப் போகும்போது பிட்சையுடன் ஒரு துணியும் வாங்கி வந்தார் சாது. அதைக் காயவைக்கும் இடத்தை மாற்றிவிட்டார்.

'பொழுது விடிந்தது. பார்த்தால் மறுபடியும் லங்கோட்டைக் காணோம். சாது கவலையில் ஆழ்ந்தார் — 'இந்தத் திருடன் யாராக இருக்கமுடியும்?'

'மறுபடியும் ஒரு கோவணத்தை வாங்கி வந்தார். இந்தத்தடவை இரவு முழுவதும் கண் விழித்துத் திருடனைப்பிடிக்க முயற்சித்தார். கையில் தடி, பார்வை எதிரே உலர்த்தப்பட்டிருந்த கோவணத்தின் மேல்.'

'நள்ளிரவாகி விட்டது. இரண்டு மூன்று முறை கஞ்சாப் புகை பிடித்து விட்டார். இன்னும் திருடனைக் காணோம். கோவணத் துணி அப்படியே இருந்தது. சாதுவின் கண்களிலிருந்து கஞ்சாவின் போதை இறங்கிவிட்டது. தூக்கத்தின் போதை கவ்விக் கொண்டது.

'சாதுவின் பிடிவாதமாயிற்றே – அயரும் கண்களுக்கும் எச்சரிக்கை விடுத்துவிட்டார்—'மூடிக்கொண்டாயோ, கொள்ளிக் கட்டையை வைத்துவிடுவேன்!'

'இதே சமயத்தில் வெளியே விறகுகள் சற்று அசைந்தன. தயாராகத் தடியைக் கட்டிலின் அடியிலிருந்து சாது எடுத்துக் கொண்டார். கதவருகே மறைந்து நின்றுகொண்டார் — 'வரட்டும்,

ஒரே அடியிலே மண்டையைப் பிளந்து விடுகிறேன்' என்று மனதிற்குள் நிச்சயம் செய்துகொண்டு ஒரு நீண்ட மூச்சு விட்டார் சாது மகாத்மா.

'திருடன் இப்போது வந்து விடுவான், இப்போது வந்து விடுவான்' என்று காத்துக் கொண்டிருந்தால் – வந்தால்தானே ?– 'தெரிந்து கொண்டு விட்டான் போலிருக்கிறது. எதற்கும் வரட்டும் ஒரு கை பார்த்துவிட்டு மறுவேலை !' என்று சாது எண்ணினார்.

'மறுபடியும் அடுப்பருகே குளிர்காய வந்து உட்கார்ந்தார் சாது. புகையை ஒரு இழுப்பு இழுக்கப் பார்த்தார் அதற்குள் வாயும் கண்களும் அப்படியே நின்று விட்டன. உலர்த்தியிருந்த கோவணத் துணியைக் காணோம். சாதுவுக்கு சந்தேகம் உண்டாயிற்று : ' ஈசுவரன் எங்காவது திருடுவானா ?'

கதை கேட்டுக் கொண்டிருந்தவர்கள் நான்கைந்து பேர் பட்டாணி கொறிப்பதைக் கூட விட்டுவிட்டு கண்களை அகல விழித்துப் பார்த்தனர். ஒருவன்—'கடவுள் மகாதேவன் தான் சாதுவைப் பரிசோதிக்க வந்திருக்கிறார்' என்றான்.

சங்கர், காசம் எல்லோருடனும் சேர்ந்து கிழவனும் சிரித்தான். — 'மகாதேவனில்லை ... காதுகளை நிமிர்த்திக் கொண்டிருக்குமே அந்த மகாதேவன்தான் என்பது சாதுவுக்குப் பிறகு புரிந்தது !'

இன்னும் இரண்டு மூன்று பேர்களுக்கு புரியவில்லை.

'எலி மாமா தான் தம்பி !' கல்லா விவரித்துக் கூறினான். எல்லோரும் கொல்லென்று சிரித்தனர். 'சீ ! போயும் போயும் எலி தானா ! கடவுள் மகாதேவன்தான் சாதுவைப் பார்க்க வந்துட்டாரோ என்றல்லவா நாங்கள் நினைத்தோம் ! 'கதை முடிந்து விட்டது என்று நினைத்துக்கொண்டு — 'இதுதான் லங்கோட்டு சாதுவின் கதையா சித்தப்பா ?' என்று கேட்டனர்.

'இன்னும் பெரிசாச்சே கதை ! இனிமேல்தான் ரசமாயிருக்கும்!'

சங்கர் ஆரம்பித்தான்—' சரி அப்புறம் என்ன நடந்தது வாலா சித்தப்பா ! எலி மாமாவை சாது பார்க்கிறார்... அப்புறம் ? '

'ஒரு எலி இரண்டு எலியா என்ன ? ஏழெட்டு எலிகள் ஒரேயடியா வந்துவிட்டன. எத்தனையைத்தான் சாது அடிப்பார் லங்கோட்டை எங்கே ஒளித்து வைப்பார் ? ...... சாதுவுக்கு ஒரே கவலை அடிக்கடி யார் கோவணத் துணி கொடுப்பார்கள் ? கேட்பதற்கும் அவருக்கு வெட்கமாயிருந்தது...

'முடிவில் கல்லா மாதிரி ஒருவர் ஒரு வழி சொல்லித் தந்தார்! 'ஒரு காரியம் செய்யுங்கள் சாமி. வீட்டிலே பூனைகுட்டி போட்டு ஒரு மாதம்தான் ஆகிறது. ஒரு குட்டியை எடுத்துக்கொண்டு போங்கள்.'

'சாதுவுக்கு ஒரே மகிழ்ச்சி......அந்த பூனைக்குட்டி எலி வராமல் பார்த்துக் கொள்ளவே அதன் பேரில் அவருக்கு ஒரே பிரியம் உண்டாயிற்று. 'நீ எனக்கு உதவி செய்கிறாய் நான் இரவில் கண்விழிப்பதை நிறுத்திவிட்டாயே!' என்று சொல்லி அன்புடன் அதற்குச் சாப்பாடு போட்டான்.

'இந்த மாதிரி சாதுவின் ஒரு கவலை ஒழிந்தது. ஆனால் அதற்காக அதிகப்படியாக ஒரு வீட்டிற்குப் போய் பிட்சை வாங்க வேண்டியிருந்தது.

கல்லா பட்டாணி முறத்தைக் காண்பித்தபடி சொன்னான்—'இந்தாங்க பட்டாணியையும் கூடவே கொறியுங்க!' சங்கர் கூறினான்—'இவர் பட்டாணி தின்பாரா கதை சொல்லுவாரா? நமக்குத் தின்ன நிறையக் கிடைக்கும் என்று தானே நான் கதையையே ஆரம்பித்து வெச்சேன்.'

ஆனால் கிழவன் வாலா சங்கரைப் போல பத்துப் பேரை அடக்கும் திறமையுடையவன். அவன் பதிலுரைத்தான்—'உன்னை விட நாற்பது வருடங்கள் அதிகமாகச் சாப்பிட்டுத் தண்ணீர் குடித்தவன் நான்—தெரியுமில்லே. நமக்குப் பட்டாணி நிறையக் கிடைக்குமின்னு நீ நினைத்தாய், நமக்குத்தான் பல்லில்லையே, நீங்கள் எல்லோரும் தின்பதையாவது பார்க்கலாமே என்று நான் நினைத்தேன்.'

'உம்...........' சங்கரை எதிரே கண்டு பேசாத் மற்றும் நான்கைந்துபேர் மகிழ்வுற்றனர். தலையை அசைத்துக்கொண்டு யாரோ ஒருவன் சொன்னான்—'ஓகோ! பார்த்தாயா! வாலா சித்தப்பா ஒன்றுமே அறியாத அப்பாவி என்றீர்களே!'

'சரி......சாதுவுக்குப் பூனைக்குட்டியைப் பார்த்து ஒரே மகிழ்ச்சி. அப்புறம்......?' சங்கர் கதையைப் பற்றிக் கேட்டான்.

'ஆமாம். இதுதான் மாயை! வேறென்ன? பூனைக்குட்டி பாவம் குழந்தைதானே—அதற்கு ஒரு அம்மா வேண்டுமே! சாதுவாலே என்ன பயன்? நாள்முழுதும் மியாவ்—மியாவ் என்று கத்திய படியே மகாதேவன் கோயிலைச் சுற்றிக் கொண்டிருந்தது.

'சாதுவுக்கு மறுபடியும் கவலை வந்து விட்டது. 'மியாவ்—

மியாவ்' என்று கத்தியே உயிரை விட்டுவிடும் போலிருக்கிறதே. பிறகு இந்த எலிகள் என் உயிரையே எடுத்துவிடும் ....... என்ன தான் செய்வது? சனியன் இளைத்துத் துரும்பாய் போய் விட்டது!

' சாது எங்கே போனாலும் இந்த பூனையைப் பற்றியே பேசினார். இதை என்ன செய்வது என்று ஒவ்வொருவரிடமும் கேட்டார்.

உங்களையும் என்னையும் போல சில பேர் உபாயமும் சொன்னார்கள் — 'ஒரு பசு வைத்துக் கொள்ளுங்கள். இல்லாவிட்டால் குடிக்கப் பாலில்லாமல் பாவம் இறந்து போய்விடும்.'

' பசு கொடுக்கவும் ஒருவன் அகப்பட்டான். பிராம்மணனுக்குப் பசுவைத் தானமாகக் கொடுக்கலாம். சாது மகாத்மா — பிராம்மணன் யாருக்குக் கொடுத்தால் என்ன என்று நினைத்து சாதுவுக்கே கொடுத்துவிட்டான் ஒரு பக்தன். 'இந்தாங்க சாமி இன்னக்கி நல்ல நாளாயிருக்குது. எடுத்துக்கிட்டுப் போங்க.'

பேசாத் பேசாமலிருக்க முயன்று பார்த்தான். ஆனால் அவனால் பேசாமலிருக்க முடியவில்லை—'சபாஷ்! சாது சும்மா, எல்லைமீறிப் போயிட்டாரே!' 'இன்னும் நீ முழுக் கதையையும் கேளு.' சங்கர் உடனே கதையை மேலே துவக்கி வைத்தான் — 'உம் சாது மகாத்மா பசுவை வாங்கிக்கொண்டு கோயில் பக்கம் வந்தார்....'

கிழவன் தலையில் பறட்டையாக இங்குமங்குமாகப் பறந்திருக்கும் முடியை ஒதுக்கிக் கொண்டான். முன் பக்கம் அவ்வளவாக இல்லாவிட்டாலும், பின்புறம் பின்னிவிடலாம் போல் நீண்டிருந்தது முடி. அவற்றை முன் பக்கம் சேர்த்து எடுத்தபடி கூறினான் — ' அப்புறம் என்ன? சாதுவுக்கு வேலை அதிகமாகி விட்டது. சாதுவைச் சுற்றிலும் ஒரே வைக்கோலும் புல் கட்டுமாக இருந்தன. இரவில் துணி உலர்த்தும் கொடியில் கூட வைக்கோல் தானிருந்தது. கருமானின் வீட்டிலிருந்து அவர் ஒரு அரிவாள் வாங்கி வந்தார். ஏதோ ஒரு வீட்டிலிருந்து ஒரு சிறு எலிப் பொறி வாங்கி வந்து வைத்தார். வைக்கோலால் ஒரு தட்டி கட்ட ஏற்பாடு செய்தார். அக்கம் பக்கத்துப் புல்வெளியிலிருந்து புல் செதுக்கிச் சேமிக்க ஆரம்பித்தார்.

'இந்த மாதிரி இரண்டு மாதங்களில் சாதுவுக்குப் போதும் போதுமென்றாகி விட்டது. பூனைக் குட்டியோ பாலைக் குடித்துக் குடித்துக் கொழுகொழு வென்றாகி விட்டது. சாது இளைத்துத் துரும்பாய்ப் போய்விட்டார். மாட்டைத் துரத்திவிட்டால் பூனை

இளைத்துச் செத்துவிடும். பூனை இறந்துபோனால் சாது இரவு முழுதும் கண்விழித்தாக வேண்டும்.'

காசம் சொன்னார்—'பாவம், சாது சரியாக மாட்டிக்கொண்டார்.'

கிழவன் ஒரு நீண்ட மூச்சு விட்டு மேலே கதையைச் சொன்னான் — 'இப்படியே கவலையுடன் சில நாட்களைக் கழித்துவிட்டார். பிறகு உங்களையும் என்னையும் போல் எவனோ எருக்குக் கட்டை வெட்டிவர அங்கு போயிருப்பான். கோயிலருகே புகைபிடித்துக் கொண்டிருந்திருப்பான். சாணத்தால் தரையை மெழுகிக் கொண்டே சாது அவனிடம் ஒரு குரல் அழுதார்— நாள் முழுதும் இதே தொல்லையில் கழிந்துவிடுகிறது. கடவுள் மகாதேவனுக்குக் கூட ஒரு பணி செய்ய முடியவில்லை. அவனைத் துதிசெய்து பாட நேரமெங்கே?

'ஒரு காரியம் செய்யுங்கள் சாமி. அந்த வரப்பைத் தாண்டி குறவர்களின் குடிசைகளிருக்கின்றன. அவர்களில் யாரையாவது வேலை செய்ய வைத்துக் கொள்ளுங்களேன்! புல்லைக் காலையில் வெட்டிக் கொண்டு வருவான். சாலேம் போட்டுத் தரையை நன்றாக மெழுகித் தருவான். ஒரு ரொட்டி கொடுத்தால் போதும்' என்று கூறினான் அவன்.

மகிழ்ச்சியால் சாதுவின் மீசையும் தாடியும் ஒரு அங்குலம் நீண்டு விட்டன... ஒன்றென்ன இரண்டு ரொட்டி தரத் தயார். ஆனால் யாராவது கிடைத்தால் போதுமே! மாட்டுக்கும், பூனைக்கும் இரண்டுரொட்டி தந்துதானாக வேண்டியிருக்கிறது. கூட இரண்டு ரொட்டி. அவ்வளவுதானே.

ஏதோ சொல்லுவார்களே அப்படி சாது மனம் விட்டு கூவினார் — 'ஹரே ராமா ஹரே ராமா!'

பேசாத் மற்றும் நான்கைந்து பேர்கள் சேர்ந்து பேசினர்— 'சரிதான். வேறே வினையே வேண்டாம்.'

'அதே கதை தானச்சு. அவனையே பிடித்துக்கொண்டார் சாது. இப்போது நீ வந்திருக்கிறாய். நீயே கொஞ்சம் இந்த வேலையைச் செய்து விட்டுப் போயேன். யாரையாவது இங்கே வேலை செய்ய ஏற்பாடு பண்ணி விட்டுப் போ. உன் கோடாரியைக் கொண்டு வா. அதுவரைக்கும் உன் வேலையை நான் செய்து தருகிறேன், என் வேலையை நீ செய்!'

'அவன் கல்லா மாதிரி நல்ல ஆசாமியாயிருப்பான். 'நான் உங்க வேலை என் வேலை இரண்டையுமே செய்துவிடுகிறேன்.'

அந்தப் பக்கமாகத்தான் போகிறேன்....' என்று கூறியபடி செல்லத் தயாரானான்.

'இன்று நீ இங்கே சாப்பிடலாம் குழந்தாய்!' சாது அவனுக்கு அழைப்பு விடுத்தார்.

ஆனால் அவன் சாதுவிடம் சாப்பிட்டுவிட்டுத் தான் சாதிப் பிரஷ்டம் செய்யப்படுவதை விரும்பவில்லை. சாது எந்தச் சாதியைச் சேர்ந்தவரோ, யார் கண்டார்கள்? நல்ல வேளையாக தப்பித்துக்கொள்ள ஒரு சாக்குக் கிடைத்தது. 'தோசை கட்டி எடுத்து வந்திருக்கிறேன் சாமி!' என்று கூறியபடியே தோளில் கோடரியை வைத்துக்கொண்டு குடிசைகளை நோக்கி நடந்தான்.

ஆனால் சாதுவுக்கு நம்பிக்கை ஏற்படவில்லை; அவர் சொல்லிக் கொண்டேயிருந்தார்—'குழந்தாய், மகாதேவன் உனக்கு நலமளிப்பார், இரண்டென்ன மூன்று ரொட்டிகள் தருகிறேன்—கொஞ்சம் என் வேலையை—'

'பார்த்துக்கொள்ள ஆளை அழைத்துவா', — என்று சங்கர் வாக்கியத்தை முடித்தான்.

'சாது பெரிய குழப்பமில்லே உண்டுபண்ணிக்கிட்டாரு!' என்றான் பேசாத்.

'ஆமாம், குழப்பமேதான்!' சிரித்துக் கொண்டே வாலா கூறினான் — போன மனிதன் ஒரு பெண்பிள்ளையை அழைத்து வந்தான். இடுப்பில் ஒரு குழந்தை. இரண்டு பக்கங்களிலும் இரண்டு குழந்தைகள்.

தன் தலையிலிருந்து இரண்டு மணங்கு கனமுள்ள கட்டையைக் கீழே போட்டபடி அவன் சொன்னான் — 'இந்தாங்க சாமி — ஒரு ஏழை அம்மாளைக் கூட்டிக்கிட்டு வந்திருக்கிறேன்...—மூன்று குழந்தைகளை விட்டு விட்டு அவளுடைய கணவன் இறந்துபோய் விட்டான்! பாவம். இரண்டு ரொட்டி கொடுங்கள். வீட்டை சுத்தம் செய்யறது, தண்ணீர் கொண்டு வர்றது, மாட்டுக்குப் புல் வெட்டி வர்றது எல்லாம் செய்வாள்.'

பிறகு அவளிடமும் அவன் கூறினான்—'இதோ பாரு, சாமிக்கு ஒரு கஷ்டமுமில்லாம வேலை செய்து கொடு. உன் குழந்தைகளையும் சாமி பட்டினி போடமாட்டாரு' பிறகு அவன் எழுந்தான் —'இனி இவள் பாடு உங்கள் பாடு, நான் கிளம்பறேன்' என்று சொல்லிவிட்டுப் புகை பிடித்தபடியே கட்டையைத் தலையில் சுமந்துகொண்டு சென்றுவிட்டான். சாதுவும் அந்தப் பெண்ணும் மட்டுமிருந்தனர்.

'ஓ... ...கோ!' பேசாத் கைதட்டியபடி எழுந்து குதித்தான்.

'சாது நல்லா செம்மையாச் சிக்கிக் கிட்டாரே!' என்ருன் மற்ருெருவன்.

நான்கைந்து பேர் வயிற்றைப் பிடித்துக்கொண்டு சிரித்த படியே இருந்தனர்.—'அடபாவமே! நல்ல குழப்பத்தை ஏற் படுத்திக்கிட்டேப்பா!'

வாலா கதையைத் தொடர்ந்து சொன்ஞன்—அந்தத் தனிமை யானஇடத்திலே நெருப்பும் எண்ணெயும்ஒன்ருகச்சேர்ந்துவிட்டன.

'இது போதாது என்று இன்னும் ஒன்று, அவள் நான்கு மாத கர்ப்பிணி. உலர்ந்த மரமே தளிர் விடும் காலம்......பாவம், குட்டையையும் குளத்தையும் தாண்டிக்கொண்டு அவள் எப்படிக் குடிசையிலிருந்து கோயில் வரை வருவாள்!'

'கோயிலுக்குப் பக்கத்திலேயே ஒரு குடிசை போட்டுக் கொடுத் துட்டார்!' உம், சங்கர் கதையை சுலபமாகத் தொடரச் செய்தான்.

கதையை ஒரு திருப்புத் திருப்பிஞன் வாலா—'சரியாகப் பத்து மாதங்கள் கழிந்தன. சாது மகாத்மாவின் கண்கள் பட்டென்று திறந்தன. ஒரு மாதங் கழித்து கோயிலுக்குப் பின்புறத்துக் குடிசையிலிருந்து குழந்தையின் அழுகை ஒலி கேட்டு அடைத் திருந்த காதுகள் திறந்து கொண்டன. 'அட தெய்வமே! இதென்ன இப்படி வந்து மாட்டிக்கொண்டேனே நான்! இனி எனக்கு யார் பிட்சை தருவார்கள்? இனி நானே சம்பாதிக்க ஆரம்பித்தாக வேண்டும். அதற்கு எருதுகள், பிண்ணுக்கு, வைக்கோல், ஏர், கலப்பை, விதை—எல்லாம் வேண்டுமே!'

சாதுவின் தலை கிர்ரென்று சுழன்றது. 'இந்தத் தொல்லைக்குக் காரணம் இந்தச் சனியன் பிடித்த—'

எட்டங்குலச் சந்தணக் கட்டையை எடுத்து நெருப்பில் போட்டு விட்டுக் கையைக் கட்டிக்கொண்டு அடர்ந்த காட்டுப் பக்கம் போஞர். 'வாப்பா ...' படகு'... சீக்கிரம் வா!' எல்லோரும் ஒரே குரலில் கூவினர். கையில் உக்கா பிடித்த வண்ணம் கிழவன் சிரிக்க முயற்சித்தான். பிறகு தொடர்ந்து சொன்ஞன் – 'நாம்ம எல்லோரும் சாது மகாத்மாக்களில்லே, அதஞலே தான் சாஸ்திரத்திலே சாது மகாத்மாவை விடக் குடும்பம் நடத்தறவங் களைப் பெரியவங்களாகச் சொல்லியிருக்கிறது!'

கல்லா சொன்ஞன்— 'ஆமாம், எல்லோரும் நம்மிடம் வந்து கையை விரித்தால், நாம் எங்கே போவது? மானத்தைப் பார்த்து, மழையை நம்பி—'

ஆனால் பேசாத் முதலியவர்களின் மனம் இன்னும் கதையிலேயே லயித்திருந்தது. அந்தக் கோயிலின் பின்புறத்துக் குடிசையிலிருந்து பிறந்த குழந்தையின் அழுகைக் குரல் அவர்களுக்கு இன்னும் கேட்டுக் கொண்டிருந்தது. அதனால் பேசாத் கேட்டுவிட்டான்—'வாலா சித்தப்பா, அந்தக் குழந்தையும் அதோட அம்மாவும் அப்புறம் என்னவானுங்க?'—

'எல்லாம் ஆனுங்க, எழுந்திரு......போகவேண்டாமா?' என்றபடியே சங்கர் எழுந்து நின்றான்.

அவனுடன் கூடவே ஏழெட்டுக் கட்டுறுதியான உடல்கள் எழுந்து நின்றுகொண்டன. அவர்கள் தங்கள் ஆயுதங்களையும் துணிகளையும் சிர்ப்படுத்திக் கொண்டனர். கல்லா ஆலமரத் தடியில் விளையாடிக் கொண்டிருந்த சிறுவர்களைக் கூப்பிட்டான். வாலா தலையில் தலைப்பாகையைச் சுற்றிக்கொண்டு பதிலளித்தான்—'உங்களுக்குத் தெரியாதா? அந்த சாது வைசியனாக இருக்கணும். வேறே சாதிக்காரனாக இருந்தால் ஓடியிருக்க மாட்டான். பயிர்த் தொழில் செய்து பிழைக்கிறவர்களுக்குக் கஷ்டத்தைச் சகித்துக்கொள்ளவும் நன்றாகத் தெரியும். சாதுவைப் போல இவர்களும் ஓடஆரம்பித்தார்களானால் பூமியின் கதி என்னவாகும்?......பைத்தியக்காரன்......ஏன் ஓடவேண்டும்? சாது போனவுடன் இனி கட்டிலில் படுத்துக் கிடந்தால் முடியாது என்று நினைத்து எழுந்து நின்றாள் அவள். புடவையை இறுக முடிந்து கொண்டு கடகட வென்று படகில் ஏறிக்கொண்டாள்—'

கிழவன் குடிசைக்கு வெளியே வந்து நதியின் அக்கரையில் உள்ள படகுகளை உற்றுப் பார்த்தான். மனதிற்குள் சொல்லிக் கொண்டான்—'உங்களுக்கெல்லாம் தெரிகிறதோ என்னமோ! எனக்கு நன்றாகத் தெரிகிறது, அவள் இன்னும் உட்கார்ந்து கொண்டு தோசைக் கல்லிலே கோந்து உருண்டை பொருக்கிக் கொண்டிருக்கிறாள்!'

இதற்குள் மூன்று வயது காலு வந்து கிழவனின் கனவைத் தகர்த்தெறிந்தான். மலரைப் போல் மகனை வாரி எடுத்தான் கிழவன்—தன் உறுதியான தோளின் மேல் உட்கார வைத்துக் கொண்டு சங்கர் முதலியவர்களைப் பார்த்துச் சொன்னான்—'பாவம், கஷ்ட காலத்திலே போய் உழைத்து வயிற்றுப்பசியைப் போக்கிக் கொள்ள சாதுவால் முடியுமா? நம்மைப் போன்ற உழவர்களைத் தான் கடவுள் படைத்திருக்கிறார்...... எனக்கு

இத்தனை... அடே,... நம்ம எல்லோருக்கும் தான் கஷ்டங்கள் வரு கின்றன. ஆனால் ஒவ்வொன்றையும் நாம் சிரித்துக்கொண்டே சகித்துக் கொள்வோம். இல்லையாடா மகனே, அப்படித்தானே,' என்று கிழவன் காலுவைப் பார்த்துக் கேட்டான்—

காலு– 'ஆமாம் அப்படித்தான்— உம்!' என்று சொல்லிக் கொண்டே யிருந்தான். அவனுடைய குரல் ஒலித்துக்கொண்டே இருந்தது.

# 7

## சிந்நப்பாவின் மடியில்

இதற்குப் பிறகு கடந்த தினங்கள் எல்லாம் காலுவுக்குக் கனவு போல் நினைவுக்கு வருகின்றன. நட்சத்திரங்கள் பிரகாசிக்கும் வானத்தை உற்றுப் பார்த்தபடியே நினைவு படுத்திக் கொள்கிறான். பழைய நினைவில் மூழ்கி எழுந்த உடனே ஒவ்வொன்றாக எல்லாம் வெளிப்படுகின்றன. எளிய சுபாவமுள்ள அவனுடைய மாமன் கல்லா, காட்டிலுள்ள புள்ளிமானை விடச் சிறிய புதிய எருதுகளை வாங்கி வந்திருக்கிறான். வண்டிக்குள் எதையோ எடுப்பதும் போடுவதுமாக இவன் இருக்கிறான். நான்கு வயதுச் சிறுவன் காலு, சோதர், சிறுமி ராஜி — மூவரும் சேர்ந்து சிறு கரண்டியை எடுத்து வந்து வீடு கட்டும் விளையாட்டு விளையாடுகின்றனர்.

இரண்டு கொழுத்த காளைகளை வண்டியில் பூட்டிக்கொண்டு தந்தை கிராமத்துக்கு வெளியே உள்ள வயல் வெளிக்கு ஓட்டி வருகிறான். அவனும் சிறுமி ராஜியும் கூடச் சிற்சில சமயங்களில் செல்கின்றனர். மாட்டை விரட்டுகின்றனர். களைத்துப் போன வாலா காலுவையும் ராஜியையும் கோபித்துக் கொள்கிறான்—'தள்ளிப்போங்க சனியன்களா! பாதையை விட்டுத் தொலையுங்க.' சிறு வண்டியின் கட கட சத்தம், ஓடும் எருதுகளின் ஒலிக்கும் மணியோசை, தந்தையின் இரைச்சல் எல்லாம் காலுவின் உள்ளத்தில் இப்போது கூட ஒலித்துக் கொண்டிருக்கின்றன.... எவ்வளவு ரம்மியமான நாட்கள் அவை! கிராமத்து எல்லைப்புறத்தில்தான் எவ்வளவு பசுமை!....

வாயில் எண்ணெய் விட்டுக்கொண்டு யாராவது கிணற்றின் அடிதளத்தில் இறங்கி வாயிலுள்ள எண்ணெயை உமிழ்ந்தால் வெளிச்சத்தில் கிணற்றின் அடித்தளத்தில் அமிழ்ந்து கிடக்கும் மண்பாண்டத் துண்டுகள், கற்கள், தாமிரப் பாத்திரங்கள், பித்தளைப் பாத்திரங்கள் முதலியன பளிச்சென்று தென்படும். அதேபோல் காலுவின் கண்ணோட்டத்தில் கடந்த நாற்பதாண்டுகள் வரை ஐம்பத்தாறும் ஆண்டுப் பஞ்சத்திற்கு இருபதாண்டுகளுக்கு முன்பிலிருந்து இன்று வரை நடந்த நிகழ்ச்சிகள் பளிச்சென்று தென்பட்டன.

அவன் உட்கார்ந்திருக்கும் வயலின் வரப்பில் அப்போது ஒரு வலுவான வலையடிக்கப் பட்டிருந்தது. நலிந்து போன ஆல மரத்தின் நான்கில் ஒரு பாகம்தான் இப்போது எஞ்சியிருக்கிறது. கிணறு வெட்டப்பட்டிருக்கு மிடத்தில் அப்போது ஒரு சிறு குழி இருந்தது. அந்நாட்களில் நதிக் கரையில் பகல் நேரத்தில் கூடப் போவதற்கு யாருக்கும் தைரியம் கிடையாது.

நீண்ட பெருமூச்செறிந்தபடி காலு புகையிலையை எடுப்பதற்காக அருகிலுள்ள ஐந்து பித்தான்களைக் கொண்ட கருப்புக் கோட்டை எடுத்தான். ஏனோ தெரியாது, அவனுடைய உள்ளம் கடந்த காலம் எனும் தெரு வரிசையிலேயே அலைந்துகொண்டிருந்தது. — 'நிலமகளின் உடை, மனிதரின் உடை இரண்டுமே எப்படி இருந்தன? அப்போது மாட்டிடையன் போல ஒரு துண்டைச் சுற்றிக்கொண்டு ஒரு சிறு சட்டையைப் போட்டுக் கொண்டிருந்தோம். வயதானவுடன் தலையில் ஒரு துணியைத் தலைப்பாகையாகச் சுற்றிக்கொள்ள ஆரம்பித்தோம். இன்று என் போன்ற கிழவனிடம் கூட ஐந்து பித்தான்கள் வைத்துத் தைக்கப்பட்ட கோட்டும், தலைப்பாகையும் உள்ளன...' உக்கா பிடித்தபடி அந்தப் பக்கமே பார்த்தவண்ண மிருந்தான் அவன் ——'இந்த உக்காவையே பாருங்களேன், தினமும் ஒவ்வொரு விதமான உருவில், அழகழகாக வருகின்றது! அழகை வைத்துக் கொண்டு என்ன செய்வது. பயனென்ன? ஐந்தே வருடங்களில் உடைந்து விடுகிறது. பதரி உக்காவில் கூடத்தான் துளை விழுந்து விடுகிறது! அந்தக் காலத்து பதரி உக்கா மிகவும் கனக்கிறது. இந்தக் காலத்து இளங் காளைகளின் கையே வலியெடுத்து விடுகிறதே!.........'

'இந்தக் காலத்திலே மனிதர்களுக்குத் தெம்பு குறைந்து விட்டது. கள்ளமும் கபடமும் அதிகரித்துவிட்டன. இல்லா விட்டால் என் அப்பாவிற்கும் சித்தப்பாவிற்கு மிடையே இவ்வளவு பகை மூண்டிருந்த போதிலும்.......'

உக்கா பிடித்தபடியே காலு அந்தக் காட்சியைக் கண்டு கொண்டிருந்தான். வீட்டின் நடுவே போடப்பட்டிருந்த கட்டிலில் கிழவன் வாலா படுத்துக் கிடந்தான். சாகும் தருவாய் நெருங்கியது. அக்கம் பக்கத்துக் கிராமங்களிலிருந்து வந்திருந்த உற்றார் உறவினர்களால் அந்தச் சிறு அறை நிரம்பிவிட்டது ஏழு வயதுச் சிறுவன் காலுவும் சுற்றி வளைய வருவதை விட்டு

விட்டு, துஷ்டத்தனம் செய்யாமல் கட்டிலினருகே தூணைப் பிடித்துக்கொண்டு நின்றுவிட்டான்..........

ஒரு கணம் முன்பு மௌனமாக இருந்த கிழவன் வாலா முணு முணுவென்று ஏதோ பேசினன். கண் திறந்து குடிக்கத் தண்ணீர் வேண்டுமென்று கையால் சமிக்ஞை செய்தான். நாற்புறங்களும் தன் பார்வையை வீசினன். சுற்றிய பார்வை காலுவிடம் போய் நின்றது. ஓரிரு கணங்கள் அங்கேயே நின்றுவிட்டது. பிறகு சுற்றும் முற்றும் பார்த்துவிட்டுப் பாதாளத்திலிருந்து பேசுவது போல் கேட்டான்—'என் தம்பி பரமாவா?'

தலைமாட்டில் உட்கார்ந்திருந்த பரமா எழுந்து நின்றான். எதிரே வந்து வாலாவின் கண்களுக்கருகே முகத்தைக் கொண்டு வந்து சொன்னன்—' தம்பி இதோ இருக்கிறேனே!'

'தம்பி!' கிழவனின் கண்களிலிருந்து கண்ணீர் தாரையாக வழிந்தோடிற்று. தொண்டையைக் கனைத்துச் சரிப்படுத்திக் கொள்ள அவன் முயன்றான். 'தம்பி, என் மகனை யார் கிட்டே ஒப்படைப்பேன். இவனுடையமாமன் கல்லா எனக்கும் முன்னே போய்ட்டார். உன்னைத் தவிர இவனுக்கு இப்போது வேறே யார் இருக்காங்க?'

தந்தையின் தழுதழுத்த குரலைக் கேட்டு ஒன்றுமறியாத காலு அழுதான். தாய் அவனைக் கட்டிலருகே அழைத்து வந்து தன் மடியில் உட்கார்த்திக் கொண்டாள்.

பரமாவும் கவலையில் ஆழ்ந்துவிட்டான். அண்ணனுக்கு என்ன பதிலளிப்பது? ஆறுதலளிக்க உள்ளம் விழைந்தது. 'ஆனல் அவன் வெட்கத்தால் சற்றுத் தயங்கி நின்றுவிட்டான். 'யார் இதை நம்புவார்கள்?' அண்ணனைப் பார்க்கும் போதெல்லாம் அவனுடைய மனம் இன்னும் அதிகமாகக் குழம்பிற்று. அழுகை கலந்த குரலில் சொன்னன்—'ஒரு வயிற்றில் ஒன்றாக இருப் பாங்க, ஆனல் இவ்வளவு பெரிய உலகத்தில் ஒற்றுமையாக வாழமாட்டாங்கன்னு நீ சொல்லுவியே அண்ணே! அது சரியான வார்த்தை.' பத்தங்குலம் வரை பாயக் கூடிய அளவுக்குப் பரமாவின் கண்களிலிருந்து கண்ணீர் சுரந்தது. கண்களின் விளிம்பையும் தாண்டி தாரை தாரையாக வழிந்தோட அவன் அழுதான்.

தந்தை காலுவைத் தன்னருகே அழைத்தான். அழும் மகனைத் தேற்ற, அவனுடைய கண்ணீரைத் துடைக்க அவன் மிகவும் ஆசைப்

பட்டான். ஆனால் தன் கண்ணீரையே துடைத்துக்கொள்ள முடியவில்லையே, பின்பு ........

தொண்டையைக் கனைத்துக் கொண்டு கூறினான். 'மகனே, உன் சித்தப்பாவை சித்தப்பா என்று கூப்பிடு. அப்பத்தான் என் ஆத்மாவுக்கு நல்ல கதி கிடைக்கும்!'

காலு ஒருபோதும் பரமாவை 'சித்தப்பா' என்று கூப்பிட்டது கிடையாது. அதற்குத் தேவையும் இருக்கவில்லை. ஏன் இருக்கப் போகிறது? அவன் பரமாவின் வீட்டிற்குச் செல்வதே கிடையாது. எப்படிச் செல்வான்? முகத்தை உம்மென்று ஊதவைத்துக் கொண்டிருக்கும் மாலியின் பொறாமை நிரம்பிய கண்கள் அந்த வீட்டுப் பக்கம் எடுத்து அடிவைக்க விட்டால்தானே? அண்ணன் ரண்சோடும் அவனுடன் கடு கடு சிடு சிடு வென்று தான் பேசுவான். இளையவனான நாதா மட்டும் காலுவை அன்புடன் வீட்டிற்குக் கூப்பிடுவான்—ஆனால் வீட்டில் அவனுடைய அதிகாரம் செல்லாது. ஆதலால் காலு தன் சித்தப்பாவுடன் ஒருவிதமான உறவும் வைத்துக் கொள்ளவில்லை. தேவை ஏற்படும்போது 'நீங்கள்' என்று கூப்பிட்டுச் சமாளித்து விடுவான்.

'சொல்லப்பா!— இவன் உனக்குச் சித்தப்பா, மகனே! நாங்கள் இரண்டு பேரும் ஒரு தாயின் வயிற்றிலேயிருந்து பிறந்தவர்கள். ஒரு குலைக் காயப்பா, சித்தப்பா என்று கூப்பிடு .... அப்பத்தான்'

தாயும் காலுவுக்கு அறிவுரைகள் கூற ஆரம்பித்தாள். இதற்குள் பரமா —'அவன் சொல்லாட்டி நான் சித்தப்பா இல்லையா என்ன?' என்று சொல்லியபடியே காலுவைத் தன் மடியில் அழைத்து வைத்துக்கொள்ள முயன்றான். பிறகு தன் அண்ணனுக்கு ஆறுதலளிக்க முற்பட்டான்.

இதற்குள் காலு ஒப்புக்கொண்டான். பெருமுயற்சி செய்து மடிந்திருந்த நாவை நிமிர்த்தி 'சித்தப்பா' என்று கூப்பிட்டபடியே பரமாவின் காலடியில் வந்து நின்றுகொண்டான். பெருமகிழ்ச்சியுடன் பரமா அவனை எடுத்து மடியில் வைத்துக்கொண்டான்.

இந்த மங்களகரமான காட்சியைக் கண்ட வாலா கூறினான் — 'அவன் சித்தப்பான்னு உன்னைக் கூப்பிட்டான், நீயும் அவனை எடுத்து மடியில்....'

கிழவன் வாலாவின் பலமற்ற கழுத்து ஒரு புறம் சாய்ந்து விட்டது. ஆனால் மகிழ்ச்சி இன்னும் அவனுடைய அழகிய மீசை—தாடிகளிலிருந்து ஒளிவீசிக் கொண்டிருந்தது.

கிழவனின் சடலத்தை இறக்கிக் கீழே வைக்கக் குனிந்த நாதா மற்றும் பல உறவினர்களின் உள்ளத்தில் அன்றைய சித்தப்பா—அண்ணன் மகன் இருவரின் அன்புப் பிணைப்பு உறைந்துவிட்டது....

தன் வீட்டு வாசலில் உட்கார்ந்திருந்த மாலிக்கு இது பிடிக்கவில்லையோ என்னமோ, விஷம் போல் நைத்ததோ என்னமோ தெரியவில்லை. ரண்சோடை விடப் பதினைந்து வயது சிறியவனை தம்பியின் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தது.

நான்கு தினங்களுக்குப் பிறகு சித்தப்பா, சங்கர், அத்தையின் கணவர் இவர்களுடன் சென்று கடைக்காரனிடம் தந்தையின் ஈமக்கடன்களுக்காகச் சாமான்கள் வாங்கி வந்தான். உற்றார் உறவினர்களை விருந்துக்கு அழைத்தான். ஒருபுறம் ஐநூறு பேர் விருந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தனர். மறுபுறம் மாலி பரமாவைக் கண்டபடி திட்டிக் கொண்டிருந்தாள் — 'உங்க தம்பிக்கு வக்காலத்து வாங்கிக்கிட்டு அந்தக் கரிமூஞ்சிக் காலுவை வேறே தத்துப் பிள்ளையா எடுத்துக்கிட்டீங்க. மூணு பிள்ளைகள் உங்களுக்குப் பத்தல்லியா ?...'

பரமா அவளைப் பலவிதமாகச் சமாதானப்படுத்திப் பார்த்தான் — 'நான் ஒண்ணும் வக்காலத்து வாங்கிக்கிட்டுப் போகல்லே. நீ வேணுமானு, நோட்டீஸ் வருமில்லே. பார்த்துக்க அதிலே என் பேரு இருந்தாப் பாரேன்'....

ஆனால் மாலி பொறிந்து தள்ளினாள்— 'ஏன அவங்க கிட்டே போகணும் ? தம்பியை நெனச்சவுடனேயே மனசு பாகா உருகிடிச்சாக்கம்.' பந்தியில் விருந்து சாப்பிட்டுக் கொண்டிருந்த உறவினர் அத்தனை பேரும் —'இப்படியும் ஒரு பெண் ஜன்மமா?' என்று வியந்தபடியே வாயில் அல்வாத் துண்டை போட்டுக் கொண்டனர். சிலர் கேலியாகப் பேசிக் கொண்டனர்—' அப்பாவோட நினைவுலே விருந்து சாப்பிடறதுன்னு சும்மாத்தானு ? இவளுடைய வசையும் கொஞ்சம் கேட்டுக்கத்தான் வேணும் !'

மறுபுறம் பரமாவிடம் நிலைமை குறித்து அனுதாபம் தெரிவித்தவர்களும் உண்டு. ஆயினும் எல்லோரும் அவனைப் பாராட்டிப் பேசினர் —'வீட்டிலே கருநாகத்தை வைத்துக்கொண்டு கூடத் தம்பியை அதோகதியாகச் சாக விடவில்லை. தண்ணீரைத் தடியாலடித்தாலும் அது பிரிந்து போகாது என்று சரியாகத்தான் சொல்லிப் போயிருக்கிறார்கள் பெரியவர்கள்!— '

வாலாவைப் போன்ற வயது முதிர்ந்தவர்கள் பெருமூச்செறிந்து மனதிற்குள் வேண்டிக்கொண்டனர்—'தம்பி கிடைத்தால் இப்படிக் கிடைக்கவேண்டும்—நிம்மதியாகச் சாக முடியும் பார் !'

## 8

## நிலத்தில் விழுந்த விதை

காலுவுக்கு ஏழெட்டு வயதாகி விட்டது. இன்னும் வேட்டியைச் சரியாகக் கட்டிக்கொள்ள கூட அவனுக்குத் தெரியாது. ஆனால் அவனுக்கு மாட்டை மேய்க்கக் கற்றுக்கொள்ள வேண்டி வந்தது. அவன் தன் தாயின் வருத்தத்தையும் கண்ணீரையும் புரிந்து கொள்ள ஆரம்பித்துவிட்டான்.

சித்தப்பா அவனைத் தத்து எடுத்துக்கொண்டது உண்மைதான். ஆனால் அவனும்தான் என்ன செய்வான்? சுமார் பத்துவருடங்களாக அவன் எருதுகளின் பக்கம்கூட எட்டிப் பார்க்கவில்லை, ஏன் பார்க்க வேண்டும்? பிள்ளைகள் பெரியவர்களாகி விட்டார்கள். அதைத் தவிர வேலை அதிகமாகி விட்டால் தினக் கூலிக்கு ஓரிரண்டு ஆட்களைக் கொண்டு ஏர் உழ ஏற்பாடு செய்து விடுவான். ஆகையால் இந்த வயதில் மழையையும் சித்திரை வெயிலையும் சகித்துக் கொள்வது கடினமாகி விட்டது. ஆயினும் சிற்சில சமயங்களில் அவற்றையும் சகிக்க வேண்டி வந்து விடுகிறது! அப்போதெல்லாம் வீட்டில் போராட்டம் மூள ஆரம்பித்து விடும்.

வீட்டை விட்டுப் போனால் போதும் என்றாகிவிடும் அவனுக்கு. பரமா ரண்சோடை அழைத்து நல்லுபதேசம் செய்தான்....... 'எப்படியிருந்தாலும் அவன் உன் தம்பி. சொந்த பெரியப்பாவின் மகன். நீ அவனுடைய கஷ்டத்தைக் கவனிக்காவிட்டால் வேறு யார் கவனிப்பார்கள்? உலகம்தான் என்ன சொல்லும்? பெரிய குடும்பமாயிருக்க வேண்டும் என்று எல்லோரும் விரும்புகிறார்கள் என்றால் ஆபத்துக் காலத்தில் ஒருவருக்கொருவர் கை கொடுக்கத்தானே?'

ரண்சோடுக்கும் காலுவின் பேரில் இரக்கம் வந்தது. ஆனால் அவன் சொற்படி வீட்டில் எல்லோரும் நடந்தால்தானே? பத்திரகாளி அம்மாவின் அனுமதியின்றி ஒருவரும் தண்ணீர் கூடக் குடிக்கக் கூடாதே, அப்படியிருக்கக் காலுவுக்கு அடைக்கலம் அளிக்க யார் துணிவார்?

'அந்தக் கரியனுக்கு யாராவது உதவினீங்களோ, அவன் கிணற்றிலே விழுந்தால் கூட எடுத்துக் காப்பாற்ற யாராவது போனீங்களோ அதே கணத்திலிருந்து அவன் என் மகனில்லை -

நானும் அவனுக்கு அம்மாயில்லே. இப்போ வீட்டிலே நடக்கிற தர்பாருக்கு யார் காரணமின்னு நினைச்சீங்க? உங்க பரதேசி அப்பாவுக்கு கந்தலேப் போல இரண்டு துண்டு நிலம் இருக்குது அவ்வளவுதான். இந்த வீட்டைக் கட்டினது நாளுக்கம்! அதுவும் எங்கப்பா நெற்றி வியர்வை நிலத்தில் வழிய சம்பாதிச்ச பணத்திலே' — என்று கூறியபடியே எச்சரித்தாள். 'ஏதாவது தப்பா நடந்துக்கிட்டீங்க, உடுத்தியிருக்கிற துணியைக் கூட உருவிக்கிடுவேன்—ஆமாம்!'....

நம் காலில் வந்து விழுந்தால் உதவலாம் என்று எண்ணியிருந் தாள் மாலி. தன் கணவனிடம் கூட இதை அவள் கூறியிருந்தாள் —'அந்தக் கரியனுடைய அம்மாகாரி நம்ம வீட்டைப் பெருக்கி மெழுகத் தயாராயிருந்தா வேணுமானு ...'

மாலி ஆடிமாத மழையை எதிர்பார்த்துக் குண்டு சட்டி போன்ற தன் கன்னங்களில் சிரிப்புத் ததும்ப அதையே நினைத்து கொண்டிருந்தாள்.

'அவளுக்குப் பின்னே வேறே வழி? வயசாயிடிச்சு கிழவிக்கு-ஆறு தன் வீட்டு வேலைகளை எப்படி செய்துக்கறுளாம்? ....... பிள்ளைக்கு சாதகம் ஏன் கணித்தாளாம்? மகன் குதிரை கட்டி வாழ்வானுமே! பெரிய அரசாளப் போறுனுமே அரசு! அதெல் லாம் நடக்கறப்போ நடக்கட்டும். இவனை இப்போ மாடு மேய்க்க வைக்காட்டி உலகம் என்னை எப்படிப் புரிஞ்சுக்கும்?'

இந்த உலகில் ஒரு காரியமும் குறிப்பிட்ட ஒருவர் இல்லை என்றால் தடைபட்டு நின்றுவிடாது என்பது மாலிக்குத் தெரிய வில்லை.

காலுவின் வயலுக்கு எரு போய்ச் சேர்ந்துவிட்டது. வீட்டிற்கு அடுப்பெரிக்க விறகு போய்ச் சேர்ந்துவிட்டது. வீட்டு நிர்வாக விஷயத்தில் பத்தாண்டுகளுக்குக் கவலை கிடையாது. காலுவின் மாமன் தான் உயிருடனிருக்கும்போதே எல்லாவற்றையும் சரி வரச் செய்து வைத்திருந்தான். ஓடு மாற்ற வேண்டியிருந்தது. அதையும் சங்கா, காசம், மாவ்ஜி முதலியவர் சீர்படுத்தி விட்டனர். இவை எல்லாவற்றையும் பற்றிப் பிறகுதான் மாலிக் குத் தெரியவந்தது.

'ஏன் வீணுகப் பயனின்றி உளவு பார்க்க வேண்டும்!' என்று பரமாவுக்குத் தோன்றிற்று, தன் அண்ணியிடம் – காலுவின் அம்மாவிடம் போய், உங்கள் ஓரகத்தியிடம் உதவி கேளுங்களேன்

என்று சொல்லிவிடலாமா எனக் கூட அவன் நினைத்தான். ஆனல் சொல்ல நெஞ்சம் துணியவில்லை. மனைவியின் சுபாவத்தை எண்ணிப் பார்த்தால், 'கிராமத்து மக்களே எப்படியாவது பொறுப்பை வகித்துக் கொள்ளட்டும். அதுவே நல்லது!' என்று அவனுக்குத் தோன்றிற்று. அதுவுமின்றி 'அவளா! அவள்தான் தேள் கொடுக்காயிற்றே', என்று அண்ணி குறிப்பிட்டதும் அவனது நினைவுக்கு வந்தது.

ஆயினும் கிழவன் பரமா சங்கரின் வாயிலாக விசாரித்துப் பார்த்தான். அவன் நினைத்தபடியே பதில் வந்தது —'என் மகனுடைய வாழ்க்கையைக் கெடுக்கவேண்டுமானல் தான் என்னை என் ஓரகத்தியிடம் உதவி கேட்க அனுப்பவேண்டும். சங்கர், உன் சித்தப்பா என்ன சொல்வார் என்று உனக்கு நினைவிருக்கிறதா? 'தீயினலே சுட்ட புண் ஆரும், வாயினலே சுட்டபுண் நாம் செத்தபிறகு தான் மறையும்!' என்று சொல்வாரே அதனலே இந்தப் பேச்சையே என்னிடம் சொல்லாதே ...'

ரூபாவின் இவ்வார்த்தைகளைக் கேட்டு மரணப் படுக்கையில் கிடக்கும் பூலி கூட மனமகிழ்ந்து போனள். பெருமூச்சு விட்டுக் கூறினள்—'பாவம் காலுவின் மாமன் உயிருடனிருந்தால் இந்த மாதிரி கஷ்டமே வந்திருக்காது!'

ஆனல் விதிக்கு மருந்தேது? காலுவின் மாமன் வீட்டிலும் எல்லோரும் வயதில் சிறியவர்கள்.

வயதில் காலுவைப் போலத்தான் ஏழெட்டு வயது நிரம்பிய சிறுவன். ஆனல் ஆறு மைல் தொலைவிலுள்ள அவனுடைய மாமன் நல்ல நிலைமையில் இருந்தான். கோதரின் வீட்டு நிலைமையும் நன்ருக இருந்தது. விவசாய வேலைக்கு ஆட்களும் இருந்தனர். ஆனல் காலுவின் நிலையோ! மேலே வானம், கீழே பூமி என்றிருந்தது!

ஆடி மழை பொழிந்தது. உழவர்கள் சேர்ந்தாற் போல் எருதுகளை ஓட்டி நிலத்தை உழ ஆரம்பித்தனர். கிண் கிண்ணென்று மணியோசை ஒலிக்கும் எருதுகளுடன் எல்லோரும் வயலை நோக்கிப் புறப்பட்டனர்.

சிறுவன் காலு எருதுகளுக்குத் தீனி வைத்து விட்டு ஒரு கணத்தில் ஏர் கலப்பையைச் சீர்ப்படுத்தி யெடுத்துக்கொண்டான். ஏரைத் தடவிப் பார்த்துவிட்டு கயிறு சரியாக இருக்கிறதா என்று பார்த்தான். இங்குமங்கும் நடந்துகொண்டு ஒரே பர

பரப்புடன் காணப்பட்டான் காலு. கிராமத்தில் யாராவது சிறுவர் தென்பட்டால்தானே அவர்களுடன் விளையாட மனம் நாட்டம் கொள்ளும்?

அவன் தன் தாயிடம் அடிக்கடி கேட்பான் — 'அம்மா, ஏர் உழட்டுமா?...... அன்று நான் உழுதேனே? அப்பா இருந்தால் ஆமாம் என்று சொல்வார் — தனியாகப் போன வருடமே உழவில்லையா அம்மா?'

கண்ணீர் விடுவதைவிடத் தாய் வேறென்ன பதிலுரைப்பாள்? சொன்னாலும் காலு கேட்டால்தானே? அவனோ ஒரே பிடிவாதமாக இருந்தான்......'நான் விதை விதைப்பேனம்மா... நீ விதையை எடுத்துக்கொண்டு வயலுக்குப் போ, எனக்கு ஏர் பூட்டிக் கொடு. நான் எப்படி ஓட்டி உழுவேன் தெரியுமா?—'

இவ்விதம் இந்தச் சின்னஞ்சிறு உழவன் துடிப்புற்றான், பரபரப்படைந்தான். தாயின் பேரில் கோபித்துக்கொண்டான்!

ஓரளவு உயரம் கூடச் சிறுவனில்லை என்பதைத் தாயறிவாள். அதை நேராகப் பிடித்துக் கொள்வது, எருதுகளை நேராக ஓட்டுவது, விதை விதைப்பது இவை எல்லாம் இந்தத் தளிர்க் கரங்களால் எப்படி முடியும்?

காலுவின் தாய்க்கு இந்த ஐம்பதாண்டுகளில் ஒருபோதும் இவ்வளவு துக்கம் வந்தது கிடையாது. தன் கணவன் இறந்த பிறகு திருமாங்கலியச்சரட்டைக் களைந்தபோது ஏற்பட்ட வருத்தத்தை விடப் பலமடங்கு வருத்தம் ஆடிமாதத்துப் பகல் நேரத்தில் வாசலில் எருதுகள் கட்டியிருந்ததைக் கண்டு அவளுக்கு உண்டாயிற்று.

ஏன் இருக்காது? ஒவ்வொரு வீட்டிலும் ஒரே கொம்மாளம். குதூகலம், கொண்டாட்டம், உற்சாகம் ஊற்றெடுத்துப் பெருகியது. சிலர் விதையை எடுத்துக்கொண்டு போய்க்கொண்டிருந்தனர். மற்றும் சிலர் உக்காவும் கையுமாக விரைந்து கொண்டிருந்தனர். ஒரு சிறுவனுடைய கையில் எரியும் வறட்டித் துண்டு இருந்தது. மற்றும் ஒரு சிறுவனுடைய சட்டைப் பையில் புகையிலை இருந்தது —

உடலின் எல்லா அங்கங்களும் ஒரேமாதிரி வளர்ச்சி பெற்றிருந்த மாலி வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்த வண்ணம் மூக்குப் பொடியை உறிஞ்சிக் கொண்டிருந்தாள். ஒவ்வொரு கட்டளையாகப் பணித்துக் கொண்டிருந்தாள். 'நாதாவின் பெண்சாதி எங்கே

போயிட்டாள்? இன்னொரு குடம் தண்ணீர் வயலிலே கொண்டு கொடுத்திட்டுவா, ஒரு குடத்தில் நாலுபேர் என்ன செய்வாங்க?' பிறகு ரண்சோடின் மனைவி பக்கம் திரும்பினாள்—'ஜீவலி! நீ என்ன செய்துகிட்டிருக்கே? அந்தப் பாத்திரத்திலே எவ்வளவு பொங்கல் இருக்குதுன்னு பாரு. பகல் சாப்பாட்டுக்கு எஞ்சியிருக்கிற பொங்கலையும் சேர்த்து எடுத்துக்கிட்டுப்போ. ரொட்டி கொஞ்சம் குறைவாகச் சுடு, போதும். நானியாவுக்குக் கோதுமை ரொட்டி தான் பிடிக்கும்.'

இதைக் கேட்ட காலுவின் அம்மாவிற்கு வெளியே எடுத்தடி வைக்கக் கூடத் துணியவில்லை. 'நானே போய் உழுதுவிட்டு வரட்டுமா?' என்று மனதிற்குள் ஆசை பொங்கி வந்தது. ஆனால் என்ன செய்வாள்? சாஸ்திரம் ஆகும் என்கிறதோ, ஆகாதென் கிறதோ அது சாஸ்திரம் படித்தவர்களுக்குத் தான் தெரியும். மற்றவர்களுக்குத் தெரியாது என்பதைக் காலுவின் தாய் அறிவாள். நிலத்தை ஏர் கொண்டு எந்தப் பெண்ணாவது எப் போதாவது உழுததாக இதுவரை அவள் கேள்விப்படவில்லை. அப்படியிருக்க அவள் என்ன செய்வாள்?

கணவனின் வார்த்தைகள் ஒவ்வொரு கணமும் நினைவுக்கு வந்தன. 'இருபது மைல் நடந்துவிட்டு வரலாம். ஆனால் ஆடி மாதம் விதை விதைக்கும் ஒரு சில அடி தூரத்தை விதைக்காமல் விட்டுவிடக்கூடாது — வாழ்நாள் முழுதும் இது உள்ளத்தில் உறுத்திக் கொண்டேயிருக்கும் —' சங்கர், காசம் முதலிய வர்கள் அவளுக்கு ஆறுதலளித்தனர் — 'ரூபா சித்தி, கவலைப் படாதீங்க, எங்க வயலை உழுதுவிட்டு அப்புறம் உங்க வயலையும் உழுது தர்றோம்.' ஆனால் இந்தக் கணக்குப்படிப் பார்த்தால் இரண்டு மணங்கு விதை விதைத்தாக வேண்டுமே. சுமார் பதினைந்து — பதினாறு... விதை விதைக்கும் தூரமாயிற்றே. வீட்டிற்கு வெளியே கட்டப்பட்டிருந்த எருதுகளைப் பார்த்ததும் கிழவனின் வார்த்தைகள் நினைவுக்கு வந்தன—'ஆடி மாதத்துக் காலை நேரத்தில் விவசாயியின் வீட்டில் எருது கட்டப்பட்டிருந் தால், அந்த வீட்டில் சுபிட்சம் இல்லை, எங்கோ போய்விட்டது என்று தெரிந்துகொள்.'

ரூபாவின் கண்களிலிருந்து கண்ணீர் வழிந்தது. அவள் வீட்டு வேலையில் மனதைச் செலுத்த முயன்றாள். ஆனால் இன்று வீட்டிலும் வேலையே இல்லை. மாவு ஒன்றரை பங்கு இருந்தது.

நான்கு மாதங்களுக்கு வேண்டிய அரிசியைக் குத்தி வைத்தாகி விட்டது. தண்ணீரும் விடியற்காலையிலேயே கொண்டுவந்து நிரப்பிவிட்டாள். காலுவுக்குப் பொங்கல் கொடுத்தாகிவிட்டது. தனக்கோ பசிக்கவே இல்லை. ஒன்றுமே தோன்றவில்லை. வீட்டைச் சுத்தம் செய்யலாம் என்று துடைப்பத்தை எடுத்துக் கொண்டாள். சுத்தம் செய்துகொண்டே வெளிமுற்றத்திற்கு வந்தாள் ரூபா —

பார்த்திருக்கக் கூடாது எனினும் மாலியின் வீட்டுப் பக்கம் அவளுடைய பொல்லாத கண்கள் திரும்பிவிட்டன. கூடைகளை வைத்துக்கொண்டு நான்கைந்து பெண்கள் மாலியினருகே உட்கார்ந்திருந்தனர். பரமாவிற்கு விதை அளக்கும் வேலைக்காக அவர்கள் வைக்கப்பட்டிருந்தனர்.

கேட்டிருக்கக் கூடாது. ஆயினும் மாலியின் வார்த்தைகள் காது வழியாகச் சென்று நேரே இதயத்தைப் பிளந்தன.

மாலி அந்தப் பெண்களிடம்தான் பேசிக் கொண்டிருந்தாள், ஆனல் அது தன் ஓரகத்தி கேட்பதற்காகச் சொல்லப்பட்ட வார்த்தைகள்தான் — 'எவ்வளவு விதை வேண்டுமானலும் எடுத்துக்கிட்டுப் போங்க. நல்லா விதையுங்க. விதைக்கிற அளவுக்குத் தகுந்தப்படிதான் விளைச்சலும் கிடைக்கும். இல்லா விட்டால் விட்டிலே உட்கார்ந்து கொண்டிருந்தால், புழுதிதான் விளையும்.'

பிறகு காலு அவிழ்த்துவிட்ட அந்த எருதுகளைப் பார்த்துச் சொன்னுள் — 'வீட்டிலே எருதைக் கட்டிவைத்திருந்தால்தானே குதிரை கட்டி வாழ முடியும்! ... இஇ' என்று சிரித்தாள். அந்தப் பெண்களும் வேறு வழியின்றி அவளுடன் சேர்ந்து சிரிக்க நேர்ந்தது.

இது போதாதென்று நேரடியாக ரூபாவைப் பார்த்துக் கூறினுள் — 'நாங்களாவது அப்பாவுடைய ஊதியத்திலிருந்து எல்லாம் செய்துக்கறோம். நீங்கதான் சொந்தமாக உழைக்கிற வங்களாச்சே. ஆடிமாதத்துக் காலை நேரத்திலே ஏன் இப்படி கையைக் கட்டிக்கிட்டு உட்கார்ந்திருக்கிறே?'

வாசற்படியைத் தாண்டின ரூபாவின் கால் அப்படியே நின்று விட்டது. உள்ளே செல்வதற்குப் பதிலாகக் கால் திரும்பிற்று. முழுதும் திரும்பிற்று. அந்த வயது முதிர்ந்த முகத்துச் சுருக்கங் களிலிருந்து வாலிபப் பொலிவு மிளிர்ந்தது. இடுங்கிய கண்களி

லிருந்து சுயாபிமான நெருப்புப் பொறிகள் தெறித்தன. எருது களுக்குப் புல்லை எடுத்துக் கொடுத்துக் கொண்டிருந்த சிறுவனிடம் கூறினாள். — 'எழுந்திரு மகனே, ஏர் உழப் போ. கலப்பை எடுத்துக்கொண்டு நான் வெளியே வைக்கிறேன்.'

இன்னும் நம்பாமல் காலு தன் தாயையே உற்றுப் பார்த்த வண்ணம் நின்றான்.

இதற்குள் தாழ்வாரத்திலிருந்து தாய் ஏர் கலப்பையை எடுத்துவரக் கண்டான்.

அந்தச் சிறு விவசாயியின் மனத்தில் குதூகலம் தாண்டவமாடியது. அதேகணம் எருதுகளின் பக்கம் திரும்பினான்— 'எழுந்திரு, எழுந்திரு .... நாம்ம ஏர் உழப் போகலாம் வா ...'

இரு எருதுகளையும் ஏரில் பூட்டித் தாய் கயிற்றைத் தன் மகன் கையில் கொடுத்தாள். மற்றொரு கையில் கலப்பையைப் பிடித்துக் கொள்ளச் செய்து— 'ஆலமரத்துப் பக்கத்திலுள்ள வயலில் போய் உழு. நான் விதை எடுத்துக்கொண்டு வருகிறேன்' என்று கூறினாள்.

எருதுகளின் பின்னால் சென்றுகொண்டிருக்கும் காலுவை மாலி கடைக்கண்ணால் பார்த்துக்கொண்டேயிருந்தாள். உயரமான எருதுகள் ஏரில் பூட்டிச் செல்ல பின்னால் சின்னஞ்சிறு அடி வைத்துச் சென்றுகொண்டிருக்கும் காலு மகாபலிக்குப் பின்னால் சென்றுகொண்டிருக்கும் வாமனனைப் போல் காட்சியளித்தான்.

ஆனால் ரூபா விதைக் கூடையை எடுத்துக்கொண்டு வயல் பக்கம் செல்வதைப் பார்த்து மாலி சிரிக்கவே ஆரம்பித்து விட்டாள். எரிச்சலுடன் பேசினாள் — 'இந்த தரித்திரப் பசங்க— ஒரு பிடி விதை விதைத்து என்னத்தைக் காணப்போறாங்க! அது இருந்தா பொங்கித் தின்னவாவது உதவுமே! ஏன் அதையும் வீணா இறைக்கறாங்க? ...'

அந்தப் பெண்களிடம் நல்ல நிலை, அவலநிலை இரண்டையும் பற்றிப் பேச ஆரம்பித்தாள்— 'அவல நிலையிலே எல்லாமே விபரீதமாத் தோணும். இப்ப பாத்தீங்க இல்லே? இது அவல நிலை செய்யற வேலை. வேறே ஒண்ணுமில்லே!'

இதற்குள் குடத்தைக் கொடுத்துவிட்டுத் திரும்பிய நாதாவின் மனைவியது முணுமுணுப்புக் கேட்டது— 'உங்களைப் போன்ற குடும்பிகள் பிரமாதமாத்தான் வாழப் போறீங்க!'

மருமகளின் இந்த வார்த்தைகளில் ஆத்திரமும் அலட்சியமும் கண்ட மாலி இன்னும் வேகமாகப் படபடத்தாள்.— 'என்னடி யாச்சு?' பிள்ளைகள் தமக்குள் ஏதாவது சண்டையிட்டுக் கொண்டார்களோ என்ற கவலை மாலிக்கு.

'உங்க ஓரகத்தி அழகா சோளம் விதைக்கிறுங்க! ரொம்ப நன்ருக இருந்தது... நீங்க என்னடான்ளு '

'ஐயோ! இந்தப் பீடை என்ன சொல்லுது? கரியனுடைய அம்மா ஏர் உழ ஆரம்பிச்சுட்டாளா?'

'ஏர் உழாமல் என்ன? காலுவும் அவளுடைய முந்தாணியைப் பிடித்துக்கொண்டு மெள்ள நடந்துநடந்து போய்க்கிட்டிருக்கிருர்.'

வெளியிலிருந்து பரமா படேல் திரும்பி வருவதைப் பார்த்து மாலி சிரித்துக்கொண்டே ஆரப்பித்தாள்— 'அண்ணனுடைய வயலிலே ஏதோ வித்தை காட்டற பொம்மை ஆடுதாமே! இ.. இ...இ..'

உச்சியிலிருந்து உள்ளங்கால் வரை பரமாவுக்குப் பற்றிக் கொண்டு வந்தது. 'உன்னைப் போன்ற அதிருஷ்டக்கார ஓரகத்தி கிடைத்திருக்கிருளே, அதனுல்தான்—' பரமா உடனே வயல் பக்கம் சென்றுவிட்டான். ஒரே ஆத்திரமாக வந்தது அவனுக்கு.

'அப்பா! இந்தப் பெண் வர்க்கத்திலிருந்து கடவுள் தான் நம்மைக் காக்கவேணும். ஒரு நொடியிலே என்னென்ன வேலை செஞ்சு விடுவாங்கன்னு சொல்லவே முடியாது ... ... இல்லா விட்டால் இந்தக் காலுவின் தாய் .. ஒரு நொடியில் ஏழு பரம் பரையிலுள்ள எல்லோருடைய மானத்தையும் பறக்க விட்டு விட்டாளே! ராம, ராமா! நரிக்குறத்தி மாதிரியில்லே வேலை செஞ்சிட்டா. படேல் வம்சத்திலே அறியாமல் ஏர் கலப்பையிலே பெண்ணின் கை பட்டு விட்டால், 'வந்தது நாசம்' என்று அமர்க்களமாகி விடுமே!' ...

மாலியின் மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. பார்ப்பதற்குக் கோபம் கொண்ட காளியைப் போலிருந்தாள். காலுவின் அம்மா ஏழு பரம்பரையின் சொத்து சுதந்திரம், வீடு வாசல் எல்லா வற்றையும் நாசமாக்கிவிட்டாற் போல் அடித்துக்கொண்டாள், சனியன்! குடும்பத்துக்கே கோடரியாக இல்லே வந்து வாச் சிட்டா! மகன் தலை நிமிர்ந்து வாழ வழியில்லாமதானே செஞ்சிட்டா!'

மாலியும் பரமாவும் மட்டுமா என்ன? பெரும்பாலும் கிராமப்

பெருமக்கள் எல்லோருமே கவலையில் ஆழ்ந்து விட்டனர்— 'அம்மாடியோ! இதென்ன பெண் பிள்ளையம்மா?'

தத்தம் வயல்களில் ஏர்களை நிறுத்தி வைத்துவிட்டு எல்லோரும் காலுவின் வயலை நோக்கிப் புறப்பட்டனர். 'கிராமத்திலே இருக்கிறவங்க எல்லோருடைய மானத்தையும் வாங்க வந்திருக்கும் சனியன்! — இந்தக் கிழவியை வெளியே துரத்து... ஏரிலே போய்க் கையை வைத்துவிட்டாளே! ஒரு மணி தானியம் விளையுமா? .. பஞ்சமில்லே வந்துடும்!'

'ஏரிலே கை வைப்பதாவது, காலு தானே எருதை ஓட்டிக் கொண்டிருந்தான். அந்தச் சிறு பயலை சாமானியமாக எண்ணி விடாதீங்க!' என்று இடைமறித்துப் பேசினர் சங்கர், காசம், காஞ்சி முதலியவர்கள். ஆனால் குறத்தியைப் போல் விதைக் கூடையைக் கையில் வைத்திருந்தது ஒன்றே போதுமே! ....

இந்த சர்ச்சையையும் ஆர்பாட்டத்தையும் கண்டு காலு அழ ஆரம்பித்தான். தாய் மிகவும் மன உறுதியுடனிருந்தாள். ஒவ்வொருவரையும் பேச அனுமதித்துவிட்டுப் பிறகு சுருக்கமாகவும் தெளிவாகவும் கூறினாள்—

'நான் வேலை செய்யாமல் வெட்டியாளாக வீட்டில் இருந்து கொண்டு பசியால் சாகவேண்டும் என்று நீங்கள் எல்லோரும் நினைக்கிறீர்கள்? ஆனால் வேலை செய்வதில் என்ன குறைந்து விட்டது? பிறரை அண்டிப் பிழைப்பதுதான் ஈனமான செயல். இது உங்களுக்கு அவமானமாகத் தோன்றினால் உங்கள் வீட்டுப் பெண்களிடம் போய் மற்றவர்களுடைய வீட்டைச் சுத்தம் செய்து...'

கண்களில் நீர்ததும்ப மகனிடம் அவள் கூறினாள்— 'எழுந்திரு கண்ணே! எருதை ஓட்டு.'

மக்கள் அவளைப் பார்த்தபடி நின்றுவிட்டனர். சிலர் சொல்லவும் ஆரம்பித்தார்கள் —' இப்போது போனால் போகிறது. ஆனால் மழை பெய்யாமல், விளைச்சல் சரியாக இல்லையானால் உன் நிலை என்னவாகும் தெரியுமா கிழவி! ...'

சங்கர், காசம், பரமாபடேல் முதலியவர்கள் காலுவின் தாயுடைய கேள்வியைத் தம் கேள்வியாகவே கருதினர் — 'சரியான வார்த்தைதானம்மா! வேலை செய்து பிழைப்பது ஈனமல்ல, பிறரை எதிர்பார்த்துப் பிழைப்பது தான் சின்னத்தனம்'— திரும்பிச் சென்றுகொண்டிருந்த மக்களைப் பார்த்துத் தனக்குள்

சொல்லிக்கொண்டான் காசம் —'கஞ்சி குடித்தாலும் பிறருக்கு அடிமையாயிருந்து குடிக்காதே' என்று ஒரு பழமொழி யிருக்குதே. அது உண்மைதான்!'

இந்தப் பழமொழியும், 'வேலை செய்வது ஈனமா?' எனும் கேள்வியும் பிற்பகலுக்குப் பிறகு கிராமத்துப் பெண்களின் நாவில் நடமாடிக் கொண்டிருந்தன.

ஏன் நடமாடாதிருக்கும்? பிற்பகல் சாப்பாட்டிற்கு வீடு திரும்பிய கணவன்மார் காலுவின் தாயை உதாரணமாகச் சுட்டிக் காண்பித்துக் கூறினர் — 'உன்னைப் போன்ற ஒருத்தியிடம் குழந்தை வளர்க்கும் பொறுப்பு வந்தால் குழந்தையை விட்டு விட்டு வெளியே கிளம்பிடுவாய்; உன்னை ந மற்றவர்களின் வீட்டைச் சுத்தம் செய்துதான் பிழைக்க நேரிடும். ஆனல் ரூபாவைப் பார்த்தாயா? என்ன துணிச்சல்? பிரமாதம்! எப்படிப் பிழைக்க வேண்டும், என்று அவளிடம் போய்க் கொஞ்சம் கற்றுக்கொண்டு வா.'

பிழைக்கக் கற்றுக்கொள்ளத் தான் வந்திருப்பது போலவே அன்று மாலை முதலில் ஏழெட்டு, பிறகு பத்துப் பதினைந்து பெண்கள் ரூபாவை ஒரே கேள்வி கேட்டனர். 'உங்களுக்கு எப்படி அவ்வளவு துணிவு வந்தது என்று நினைத்தால் எங்களுக்கு ஒரே வியப்பாக இருக்கிறது ரூபா.' ரூபா பெருமைப் படவுமில்லை, வியாகூல மடையவுமில்லை. அவளுடைய குரல்தான் பேசிற்று, அவளுடைய உதடுகள்தான் அசைந்தன. ஆனல் பேசும் ஆத்மா மட்டும் வாலாவினுடையதாகக் காணப்பட்டது. 'என்ன செய்வது, தலையில் எழுதியாகிவிட்டது.' பிறகு நீண்ட மூச்செறிந்து சிரித்த படியே கூறினள் - 'என்னைக் குத்தலாகப் பேசினவள் நல்லாயிருக்கட்டும், அவள் அப்படிச் செய்யாதிருந்தால் நான் விதையைக் கூடையில் போட்டு எடுத்துக்கொண்டு போயிருக்க மாட்டேன். மற்றவர்களுடைய இரக்கத்துக்குப் பாத்திரமாயிருந்து கை ஏந்தி வாழ நேர்ந்திருக்கும்.'

இதைக் கேட்ட மாலியின் அந்தராத்மா கரையில் விழுந்த மீனைப் போலத் துடித்தது.

இதற்கிடையே மழை சற்றுக் குறைந்துவிட்டது. சமயம் பார்த்து மாலி சுற்றிவளைத்துப் பேச ஆரம்பித்தாள்— 'பெண் பிள்ளை ஏர்கலப்பை எடுத்தா மழை ஏன் பெய்யும்! ஒரு சொட்டுக் கூட பெய்தால் மாலி சொன்னதை நினைவு வச்சிக்குங்க.'

ஆனால் இதில் மாலி சொல்ல என்ன இருக்கிறது? அக்கம் பக்கத்து கிராமத்து மக்கள் எல்லோருக்குமே பெண் ஏர் உழுது விட்டாள், இனி மழை பெய்யாது என்ற நம்பிக்கை இருந்தது.

ஏர் உழுத பெண் பிள்ளையை நிலத்தில் போட்டு, உழுத மண் கட்டியை அவள் மேலிருந்து எடுக்கவேண்டும். இல்லாவிட்டால் விளைச்சலிருக்காது என்று பரமாவுக்குத் தெரிவிக்க வேண்டும்—என அக்கம் பக்கத்துக் கிராமங்களலிருந்து செய்திகள் வந்தன.

கிராமத் தலைவன் பரமா மட்டுமல்ல, கிராமம் முழுதுமே கவலையில் ஆழ்ந்துவிட்டது. மழை எப்போது வரும் என்று வானிலை ஜோஸ்யம் சொல்பவர்களையும் கேட்டுக் கேட்டு அலுத்து விட்டனர் மக்கள். வானத்தைப் பார்த்துப் பார்த்தும் சலித்துப் போயினர். பஞ்சமி, சப்தமி, ஏகாதசி என்று நாள் குறித்துக் கெடுவைத்துப் பார்த்தும் நம்பிக்கையிழந்து விட்டனர். மற்றொரு புறம் தளதளவென்று வளர்ந்திருந்த பயிர்களும் உலர ஆரம் பித்தன. பார்த்தவர்கள் எல்லோருடைய வாயிலிருந்தும் ஒரே குரல்தான் கிளம்பியது—'இதென்ன இப்படியாகிவிட்டதே.'

விருப்பத்துடனும் விருப்பில்லாமலும் ஒரு நாள் மாலை கிராம மக்களனைவரும் ஒன்று கூடினர். ஆம், கிராமத் தலைவன் பரமா வின் வீட்டில்தான். வயலில் ரூபாவைத் தூங்கச் செய்து பிறகு உழுத மண் கட்டியை அவள் மேலிருந்து எடுக்கவேண்டும். இதைத் தவிர தப்புவதற்கு வேறு வழி கிடையாது, என்பதை சங்கர், பேசாத் போன்ற எல்லோரும் ஒப்புக்கொண்டனர். இந்த நேரத்தை விட்டுவிட்டால், இன்னும் இரண்டு நாட்கள் தாமதப்பட்டால், மழை வராது, சோளப் பயிர் வேருடன் கருகிப் போய்விடும்—ஆனால் இதை ரூபாவிடம் கூற யார் செல்வது?

இது பற்றிப் பரமாவின் வீட்டில் விவாதம் நடந்துகொண் டிருந்தது. 'நீ போ' என்று ஒருவர் சொல்ல, மறறவரும் 'நீ போ' என்று சொல்லிக்கொண்டிருந்தனர்.

எதிர் வீட்டில் மக்கள் கூடியிருக்கும் காரணத்தை ரூபாவும் தெரிந்துகொண்டாள். உள்ளே உறைந்து கிடக்கும் இறைவனை வேண்டிக்கொண்டாள்—'கடவுளே! துக்கத்தில் நலிந்து கிடக்கும் என்னை ஏன் இன்னும் அதிக வருத்தத்தில் ஆழ்த்துகிறாய்? உற்றார் உறவினர்தான் ஏனென்று கேட்பதில்லையென்றால் நீ கூடவா இப்படிச் சோதிப்பாய்? அப்படி நான் என்ன பாவம் செய்துவிட்டேன் ராமா! எப்படியோ அவதிப்பட்டு வாழ்க்கையை

நடத்திக்கொண்டு போகிறேன். அது கூடவா உனக்குப் பிடிக்க வில்லை, இறைவா?' பிறகு இறந்து போன வாலாவிடம் முறை யிட்டுக்கொண்டாள்— 'என்னை விட்டு ஒரேயடியாகப் போய் விட்டீர்கள். என்னை யார் காப்பாற்றுவார்கள்?... உங்களுக்குத் தெரியவில்லையா? கிராமம் முழுதும் கூடியிருக்கிறது... ஏதாவது வழி செய்யுங்களேன் .... கண்ணில்லாத தெய்வத்தினிடம் ...'

கிழவியின் மனம் துடித்தபடியே கூறிற்று — 'பொய்! நான் ஏரைத் தொடவே யில்லை. அதனால் மழை வரவில்லை யென்பது முழுப்பொய்—நான் நிலத்தில் போய் அமிழமாட்டேன். கிராமம் முழுதும் ஒன்றாய் சேர்ந்து என் பேரில் பாய்ந்தாலும் சரி ... எவன் என்னிடம் வந்து சொல்கிறான் என்று பார்த்துவிடுகிறேனே ... அவனுடைய மண்டையை இரண்டாகப் பிளந்து விடுவேன். ஆமாம்...'

இவ்விதம் உறுதியுடன் உட்கார்ந்திருந்த ரூபா பரமாவின் வீடு வரை சென்றுவிட்டாள். அங்கு நடக்கும் விவாதத்தைக் கேட்டுக் கொண்டிருந்தாள். வருபவரை எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள்.

'சௌத்ரி, உங்கள் அண்ணிதானே. நீங்களே போய்ச் சொல் லுங்கள். ஆமாம் சங்கர், கிழவிக்கும் உனக்குமிடையே நல்ல அன்புறவு உண்டு... நீதான் போயேன்...? இல்லாவிட்டால் காசம், காஞ்சி யாராவது போனாலும் சரி, நாலு வார்த்தைகள் பேசவும் செய்வான்.'

ஆனால் காசம் மறுத்துவிட்டான். 'கிராமத்தில் மட்டுமல்ல உலகம் முழுவதுமே பஞ்சம் வந்தாலும் சரி. இந்த நாக்காலே ரூபா சித்தியிடம் கிளம்புங்கள் என்று அந்த வார்த்தை சொல்ல மாட்டேன். உண்மையில் எனக்கு இதில் நம்பிக்கையும் கிடை யாது.'

நான்கைந்து விநாடிகள் தாழ்வாரம் முழுவதும் ஒரே அமைதி யற்ற நிலையில் இருந்தது. 'எல்லோருமே மறுத்தால், பிறகு யார்தான் கூப்பிடுவது? வெட்கத்தையும் மரியாதையையும் பார்த்தால் கிராமம் முழுவதையும் பசியால் வதைப்பதா என்ன?'

வாசற்படியில் உட்கார்ந்திருந்த மாலி சிரித்தபடியே ஆரம் பித்துவிட்டாள். 'நாலு பேர் போய் அவளைத் தரதரன்னு இழுத் துக்கிட்டு வரமாட்டாங்களோ! வெத்துப் பசங்க!' மாலி உரத்த குரலில் கருத்துத் தெரிவித்தாள். இதற்குள் ரூபா வாயிலை விட்டு

வெளியே வந்து பேசினாள் — 'நீங்கள் சொல்லாமலேயே நான் வெளியே வருகிறேன், கிளம்புங்கள். நான் ஒருத்தி செய்த பாவத்தாலே நீங்கள் எல்லோரும் ஏன் மடியவேண்டும்? எழுந்திருங்கள்.' ரூபாவின் கண்களிலிருந்து ஒரு விசித்திரமான ஒளி வீசியது. கணவனுடன் உடன் கட்டையேறச் செல்லும் பத்தினி போல் காணப்பட்டாள் அவள். கால்களிலும் அதே போன்ற தளர்வற்ற தன்மை. வேப்பமரத்தடியில் நின்றபடியே அவள் காசமை அருகே அழைத்தாள். தொண்டையை அடைத்துக் கொண்டு வரும் அழுகையைச் சிரிப்பினால் மறைக்க வீண் முயற்சி செய்தவளாய்க் கூறினாள்— 'காசம்! ... தம்பி ... வேறு ஒன்றும் நான் சொல்ல விரும்பவில்லை. என் காலு உன் பொறுப்பில் இருக்கிறான். எருதுகளுடன் போனான் .... யாருக்குத் தெரியும். அவன் ஒருவேளை ...' வாக்கியத்தை முடிக்காமலேயே விட்டு விட்டு ரூபா நேராக வயல் பக்கம் கிளம்பினாள்.

காசம் சூனியமான மனத்துடன் அவளைப் பார்த்தபடி நின்றான் — 'அந்த வராந்தாவில் ஐந்தாறு கட்டில்கள் இருக்கின்றன. ஆனால் எல்லோருமே காகிதத்தாலான பொம்மைகளா?' காசம் கூறிய இவ்வார்த்தைகள் அரைகுறையாகத்தான் கேட்டன. அதற்குள் எல்லோருக்கும் கிலி பிடித்துவிட்டது! 'இதென்ன விபரீதம்!'

இப்படித்தான் நடக்கவேண்டும் என்றிருந்தது. கிராமத்து மக்களுக்காக கலப்பையின் கீழிருந்து எழுந்தாக வேண்டும். அதன் பிறகு மழை பெய்கிறதோ, இல்லையோ—ஆழமான நதியோ இருக்கிறது உயிரை மாய்த்துக்கொள்ள—

இதைக் கூறுவிட்டாலும் ரூபாவின் முகத்திலிருந்தும், அவளுடைய நிமிர்ந்த முதுகிலிருந்து கூடத் தெரியவந்தது. 'நெஞ்சு கொதித்து அவள் சாபம் கொடுத்தால்'—ஆனால் சாபமின்றியே மழையில்லாத காரணத்தால் எல்லோரும் மடியவிருக்கிறார்களே, அதற்கென்ன செய்வது?

காசம் முற்றத்திலிருந்தவர்களின் தூக்கத்தை விரட்டினான்— 'ஏன்? உங்களில் யாருமே ஏன் எழுந்திருக்கவில்லை?'

'உம்உம்? ...' என்றான் பரமா. 'எழுந்திரு.' பேசாத்தின் சித்தப்பா எழுந்திருந்தான். அவனுக்குப் பின்னால் முழுத் தாழ்வாரமுமே எழுந்துவிட்டது.

மாலி கிராமத்து மக்களுக்குத் தந்திரம் கற்றுக் கொடுத்தாள் — 'அவளோ கலப்பையின் கீழிருந்து வெளியே வந்தாகணும்,

ஆனாலும் பெயருக்கு ஏர் கலப்பையை எடுத்துக்கிட்டுப் போங்க எல்லோரும். அப்பத்தான் அவனுக்குக் கடவுள் பேரிலே நம்பிக்கை உண்டாகும்.'

ஆனால் இந்த வார்த்தைகளை யாருமே லட்சியம் செய்யவில்லை. எப்படிச் செய்ய முடியும்? அவர்கள் எல்லோருடைய கவனமும் இனி வரப்போகும் பயங்கரமான எதிர்காலத்திலேயே இருந்தது.

வீட்டை விட்டுக் கிளம்பிய ரூபா வழியில் தென்பட்ட வயலை விட்டு விட்டு ஆலமரத்தருகே உள்ள வயலை வந்தடைந்தாள். உடனே தோட்ட வேலையில் ஈடுபட்டாள். அங்கு வந்திருந்த கிராம மக்களிடம் கூறினாள்— 'என் தேவை ஏற்படும்போது கூப்பிடுங்கள்.'

மறுபடியும் பேசாத்தின் சித்தப்பா மௌனத்தைக் கலைத்தான்— 'எருதை ஓட்டிக்கிட்டு வா ... யாருடைய ஏர் கலப்பை வரப் போகுது? இப்படியும் அப்படியுமாகப் போய்க்கொண்டிருந்தால், பகல் நேரம் கழிந்துவிடும்.'

ஒரு ஆள் வேலைதான், ஆனால் நாநாவுடன் மூன்று பேர் எருதை ஓட்டிவரச் சென்றனர். ஏழெட்டுப் பேர் இங்குமங்கும் கிடந்த மண் கட்டிகளை எடுத்து ஒப்பிட்டுப் பார்த்து, முடிவிற்கு வருவதற்காகக் கிளம்பினர்.

இதைத் தவிர அந்த ஆலமரத்தடியிலிருந்த மக்களின் கூட்டம் சற்றும் குறையவில்லை. ஆனால் அது அதிகமாகிக் கொண்டே வந்தது. கிராமத்து மக்கள் அனைவரும் ஆவலுடன் ஓடிவந்தனர். ஆதவன் கூட இந்த வேடிக்கையைப் பார்க்கவென்று மேற்புறத்துக் குன்றருகே நின்றுவிட்டான்.

பலருடைய பார்வை ரூபாவின் மேல் இருந்தது. மற்றும் சிலர் ஏர், கலப்பை, எருது இவற்றை எதிர்நோக்கிக் காத்திருந்தனர். காசம் மட்டும் வடகிழக்கு முனையில் கிளம்பிய மேகத்தை ஒருவருக்கும் தெரியாமல் பார்த்துக் கொண்டிருந்தான். மனதிற்குள் கடவுளை வேண்டிக் கொள்ளவும் செய்தான் — 'கடவுளே! உன் பக்தர்களின் மானத்தைக் காக்க வேணும். இது உன் கையில் தானப்பா இருக்கிறது.'

சங்கர், பேசாத், ராமா எல்லோருடைய கவனமும் அந்த மேகத்தின் மீதுதானிருந்தது. 'இந்த மாதிரி மேகம் தினமும்தான் இருண்டு திரண்டு வருகிறது' என்று அவர்கள் நினைத்தார்கள்.

இதற்குள் காசமிற்கு யாரோ நம்பிக்கை யளித்தார்கள்—'ஏர் உழ உழப் பாரு. மழை கொட்டும்.'

இதற்குள் நாநா தன் நான்கு எருதுகளையும் ஓட்டிக்கொண்டு அங்கு வந்தான். எருதுகளைப் பார்த்தவுடனேயே காசம் எறிந்து விழுந்தான்—'மூஞ்சியைப் பாரு, குரங்கு!' இந்தக் கிழ எருதுகளை ஓட்டிவர உனக்கு வெட்கமாயில்லையா? இதுங்க மனிதர்களைக் கொல்லாமல் விடுமா?'

பரமாபடேல் நாநாவை அடிக்க ஓடினான்—'இந்த அசட்டு வேலை செய்யச் சொன்னது யார் உன்கிட்டே?'

'யாரா? என் அம்மாதான்! ....'

இதற்குள் ரண்சோட் அவனைத் தொடர்ந்து வந்தான். அவனுடைய வார்த்தைகள் அறை குறையாகவே நின்றுவிட்டன.

அங்கிருந்து ரூபாவும் வந்துவிட்டாள்— 'கிளம்பு தம்பி!' அவள் பேசியிருக்கக் கூடாது. ஆயினும் பேசிவிட்டாள். 'மனிதன் மேலே அடிவைத்து நசுக்கும் வழக்கம் மனிதர்களிடம் தானப்பா உண்டு. மாடு தெரியாமல் மிதிக்கும். கிடக்கட்டும்—உழ ஆரம்பி. மழை எங்காவது வந்துவிட்டால், விருப்பம் நிறைவேறாமல் போய் விடுமே ...!'

இதே சமயத்தில் இரண்டு விஷயங்கள் பற்றி எல்லோருடைய கவனமும் சென்றது. மேகம் இருண்டு வந்தது, ஒன்று— இரண்டாவது, ஒருவரும் ஏர் கலப்பை கொண்டு வரவில்லை. ஒவ்வொருவரும் மற்றவரைப் பார்த்தபடி நின்றிருந்தனர். 'எடுத்துவா ஏர்கலப்பையை' என்று சொல்லுமளவுக்கு உள்ளத் துணிவு ஒருவருக்குமே யில்லை.

இப்போது அதன் தேவைதான் என்ன? வடகிழக்குத் திசையிலிருந்து புயற்காற்று வீச ஆரம்பித்து விட்டது. சினங்கொண்ட ருத்திர தேவனைப் போல் மேக கூட்டமும் உள்ளுக்குள் குமுறிக் கொண்டிருந்தது. சடையின் சிக்கலிலிருந்து தண்ணீர் கிளம்ப ஆரம்பித்துவிட்டது.

இவை மழைத்துளிகளல்ல, நெருப்புப் பொறிகள்—ரூபாவின் சாபம்தான் பொழிந்து கொண்டிருக்கிறது என்று மக்களுக்குத் தோன்றிற்று.

நிலத்தோடு நிலமாகச் சலனமற்று நின்றுவிட்டது மக்கள் கூட்டம். சமயம் பார்த்து காசம் பிடித்துக்கொண்டான்— 'ஏன்? ஏன் இப்படி எல்லோரும சிலையாக நின்றுவிட்டீர்கள்? நாசமாப் போச்சு என்று ரூபா சித்தியைத் திட்டினீர்களே, இப்போது என்ன சொல்கிறீர்கள்?'

முகபாவத்துடன் அவன் தன் குரலையும் மாற்றிக்கொண்டான். ‘இப்போது நம் எல்லோர் பேரிலும் கடவுள் அருள் சுரந்து விட்டார் என்று சொல்லுங்கள் — ரூபா சித்தியை ஏரின் நுனியி லிருந்து கிளம்ப வைத்திருந்தீர்களோ, உங்கள் கிராமத்தையே வேரோடு பிடுங்கிப் போட்டிருப்பேன்— இல்லாவிட்டால் மீசை யையே எடுத்திருப்பேன். ஆனால்—’ அவன் ரூபாவின் பக்கம் திரும்பினான். கரங் கூப்பிய வண்ணம் நாத்தழுதழுக்கக் கூறினான்— ‘வாலா சித்தப்பா அடிக்கடி சொல்லக் கேட்டிருக் கிறேன். மனிதனைவிட உலகத்தில் சிறந்த தெய்வமில்லை என் பார். அதை இன்று நான் என் கண்களால் பார்த்தேன்— அம்மா! உங்களுக்கு உதவி செய்ய மேக ராஜனே கீழே இறங்கி வர நேர்ந்தது பாரு.’

ஆனந்தக் கண்ணீர் ததும்ப புன்சிரிப்புடன் நின்ற ரூபா உண்மையில் ஒரு தேவியைப் போல் பிரகாசித்தாள்.

சங்கர் கூட மன்னிப்புக் கோரினான்—‘நாங்க பெரிய பாவம்..’ இதற்குள் அமைதிபிழந்து ரூபாவே கூறினாள்—

‘போ போ, அசட்டுப் பயலே, இதிலே என்ன பாவத்தைக் கண்டுவிட்டாய்? போகட்டும்— கடவுள் உன் மானத்தையும் என் மானத்தையும் காப்பாற்றினார் அது போதும்.’

ஆயினும் வயது முதிர்ந்த சிலர் மனதிற்குள் ரூபாவை வணங் கினர் காசம் அவளைத் தன்குழந்தைகள் வணங்கும்படி செய்தான். இதற்குப் பிறகு அந்தக் கொட்டும் மழையில் ரூபாவின் காலடி யில் குழந்தைகள் கொம்மாள மடித்துக் கொண்டிருந்தனர்.

வேடிக்கைப் பார்க்க வந்த மாலியின் முகம் சோகை பிடித்துப் போய்விட்டது. முதுகைத் திருப்பிக்கொண்டு தனக்குள் கூறிக் கொண்டாள் — ‘சனியன்! மெள்ள ஆடி அசைந்துகிட்டு எழுந்தா- இல்லாட்டி இத்தனை நேரத்திலே மானம் கப்பலேறியிருக்குமே!’

திரும்பி வந்த மக்களுக்கு மகிழ்ச்சியை விடத் தாம் செய்ய முற்பட்டதைக் குறித்து வருத்தம்தான் மேலிட்டிருந்தது. ‘பிரமா தம் போ! என்னதானிருக்கட்டும்! ரூபா பத்தினிப் பெண்ணா யிற்றே! இதில் எள்ளளவும் சந்தேகம் கிடையாது—’

அந்த இரவு கிராமத்துப் பெண்களில் பெரும்பாலோர் ரூபா வின் வீட்டிற்கு வந்து உட்கார்ந்து கொண்டனர் — ‘சொல்லுங் களேன்! ரூபா அம்மா! நீங்க எந்தத் தேவியை வேண்டிக்கிட்டு...’

நீர்ததும்பிய கண்களுடன் ரூபா தனக்குள் சொல்லிக்கொண்

டாள்— ‘உண்மையில் என் கணவனைத்தான் வேண்டிக் கொண் டேனம்மா!’ பிறகு சிரித்தபடி கூறினுள்— ‘கடவுளைத்திட்டினேன். அவ்வளவுதான்—’

மக்கள் இரண்டையும் ஒன்ருகப் பிணைத்து விட்டனர். ரூபா தன் கணவனிடம் வேண்டிக் கொண்டாள். வாலா கடவுளிடம் போயிருப்பார். கடவுள் கட்டளையிட்டிருக்கிருர் – அதனுல்தான் ஜோவென்று மழை பெய்திருக்கிறது! இல்லாவிட்டால், இன்று வரை மேகமே இருக்கவில்லை. எப்படிச் சரியான வேளையில் மழை பெய்திருக்க முடியும்?

மறுநாள் அக்கம் பக்கத்துக் கிராமங்களுக்குக் கூட செய்தி பரவிவிட்டது. ‘ரூபா பிரமாதமான காரியத்தைச் செய்து விட்டாள். மேகமில்லாமலேயே நரசிம்ம மேத்தா பொழிந்து தள்ளினுர். இன்று ரூபா பொழியச் செய்துவிட்டாள்... பயங் கரமான கலியுகத்தில் கூட ரூபாவைப் போன்ற உண்மையான மக்கள் இருக்கின்றனர். நிலத்தில் விழுந்த விதை வீண் போகாது என்பார்களே, அது உண்மைதான் – இது கண்ணுல் கண்ட காட்சியாயிற்றே......’

# 9

# குழப்பம்

இதற்குப் பிறகு எள் விதைக்கும்போது காலு தனியாக எருதுகளை ஓட்டிக்கொண்டு வந்திருக்கவேண்டும். ஆனால் தாயும் உடன் வந்தாள். இப்போது எருதுகள் கூட மாற்றப்பட்டன. சங்கரின் எருதுகள் ஓட்டிவரப்பட்டன.

தாய் ஏரைப் பூட்டிக் கொடுத்தபடி கூறினாள்—'ஓட்டு மகனே.... மெள்ள ஓட்டு.' ஒரு முறை உழும் வரை அவளும் கூடவே அலைந்தாள். இரண்டாம் முறையும் உழுது முடித்த பிறகுதான் அவள் வீடு திரும்பினாள்.

'எருதுகள் தொந்தரவு கொடுத்தாலோ, அல்லது ஏர் ஏதாவதாகிவிட்டால் அந்தப் பக்கம் உன் மச்சானுடைய வேலையாள் ஏர் உழுது கொண்டிருப்பான். அவனைக் கூப்பிட்டுக்கொள். நான் வீட்டைச் சுத்தம் செய்துவிட்டு, தண்ணீர் நிரப்பிவிட்டு வந்துவிடுகிறேன்! ஏர் நேராகப் போய்க்கொண்டிருந்தால் தொல்லை இருக்காது. எருதுகளைச் சும்மா அடித்து ஓட்டாதே.'

இதற்குள் காலுவின் கைகள் பழகி விட்டன. தண்ணீர் பால்டியைச் சரியாக வைத்துக் கொண்டு உழவும் கற்றுக் கொண்டு விட்டான். ஆனால் களைப்பும அதிகரித்துக்கொண்டே வந்தது. 'உலர்ந்த கட்டைக்குப் பின்னால் சுற்ற வேண்டுமே என்று எல்லோரும் சொல்வார்களே அது உண்மைதான்.'

அப்படியிருந்தும் அவனுடைய ஊக்கம் குறையவில்லை. ஆனால் தானே தனித்திருந்து ஏர் உழ வேண்டி வந்தது. ஆகையால் மிகுந்த உற்சாகத்துடன் வேலை செய்துவந்தான் காலு. அவன் தன் தாயிடம் கூறினான் — 'எனக்கும் இப்போது நன்றாகத் தெரியும். நீ போ அம்மா. மாடுகளைக் கட்டி விட்டு வா.' உண்மையில் தாய் சென்றதும் காலுவுக்கு நிம்மதியாக இருந்தது. ஏனிருக்காது?

வரப்பு சரிந்து விழுந்தாலே ஏனென்று கேட்க ஒருவரும் இல்லை. சிற்சில சமயங்களில் எருதுகள் ஏரை விட்டு வெளியே வந்துவிடும். அப்போது ஒரு சுற்றுச் சுற்றி காலுவும் நெளிய நேரிடும். அருகே நின்று கொண்டு சிரிப்பவர்களோ பரிகசிப்பவரோ ஒருவருமில்லை. வெகு தொலைவில் ரண்சோடும் நாநாவும்

இருந்தனர். அவர்கள் சிரித்தாலும் அழுதாலும் காலுவுக்கென்ன? தான் பார்த்தால்தானே கோபம் வரும்!

அவன் நினைத்தான் — அம்மா வருவதற்குள் இந்த நிலத்தை முடித்துவிட வேண்டும், ஆதலால் ஒரு கணம் கிராமத்துக் கோடியிலுள்ள தெருவைப் பார்ப்பான், பிறகு மிகுந்திருந்த நிலத்தைப் பார்ப்பான். உழுது முடித்த நிலத்தையும் ஒரு பார்வை பார்ப்பான். பிறகு எருதுகளை அடித்து ஓட்டுவான் — 'உம் சீக்கிரம்! அம்மா வருவதற்குள் இந்தக் கோடியை முடித்துவிடலாம். உம். சீக்கிரம்.'

ஆனால் இதற்குள் தெருக்கோடியில் இரு சிறுவர்கள் வருவதைக் கண்டான் — காலு. அவர்கள் யார் என்று தெரிந்து கொண்டவுடனேயே மனதில் ஒரு பெருஞ்சுமை போல் பாரமாக இருந்தது.

அவர்கள் கோதர் — ராஜி இருவரும்தான் — அண்ணனும் தங்கையும். ராஜி உடை உடுத்திக் கொள்வதற்காகவல்ல, செல்வந்தர் வீட்டு நிலையைக் காண்பிக்கும் அழகான வேலைப்பாடமைந்த சிறு பாவாடையைச் சுற்றி ஒரு சிறு துணி கட்டிக் கொண்டிருந்தாள். தலையில் முத்துக்கள் வைத்து வைத்துத் தைக்கப்பட்ட சிறு துணியின் மேல் தண்ணீர் நிரம்பிய பாத்திரம் ஒன்று வைத்திருந்தாள். பாத்திரத்தின் மேல் காலை நேரத்து ஆதவன் ஆடிக்கொண்டிருந்தான்.

பின்னால் வந்துகொண்டிருந்த கோதரைப் பார்த்து ராஜி ஏதோ கேட்டுக்கொண்டே வந்தாள். சிவந்த கழுத்துள்ள நாரையைப் பற்றி ஏதோ கேட்டாள், பிறகு குதித்து ஓடிய வண்ணம் தவளையைக் காண்பித்தாள்.

ஆனால் காலுவுக்குத் தன்னைச் சுட்டிக் காட்டி ஏதோ பேசுகிறாள் என்று தோன்றிற்று. அந்த இளங்காதலனுக்கு, கணவனுக்கு ஆத்திரம் வந்தது, வெட்கமடைந்தான். இந்தச் சிறு ஆண்மகன் தலை நிமிர்ந்தபடி உழத் தொடங்கினான், மண்கட்டி கிளம்பினால் திடீரென்று ஏருடன்கூட அவனும் குதிக்க நேரிடும். இந்தக் கவலையுடன் அதிக முன்ஜாக்கிரதையாக இருந்தான்.

ஆனால் ஆலமரத்தருகே வந்த பிறகுதான் ராஜியின் பார்வை காலுவின் பேரில் பட்டது. சின்னஞ்சிறு கண்கள் சிரித்தன. உருண்டையான முகம் பரந்து விரிந்தது. முத்துப் போன்ற வெண் பற்கள் ஒளிவீசின. பேசாமலேயே ஒரு பார்வையைக் கோதரின் மீதும், மறு பார்வையை காலுவின் மீதும் வீசினாள்.

கோதர் ராஜியை விட அதிகம் மகிழ்வுற்றான். அவனுடைய

பார்வை காலுவுடன் ஒன்றிவிட்டது. மகிழ்ச்சியின் மிகுதியால் கேட்டான்— 'காலு, நான் ஓட்டட்டுமா ?'

'ஓ! ஓட்டேன். ஆனால் உன்னால் முடியாதப்பா!' காலு கவலையுடன் கூறினான். கோதரும் சற்று அஞ்சினான். காலு கூறினான்— 'சரி வா, நான் உனக்குக் கற்றுக் கொடுக்கிறேன்.'

கோதர் சென்றால் ராஜியும் சென்றாக வேண்டுமே. சிறு உழவனின் முகத்தில் காணப்பட்ட வியர்வைத் துளிகளைக் கண்டோ, அல்லது தண்ணீர் கொடுத்தால் நம்மையும் ஏர் உழ விடுவான் நன்றாக விளையாடலாம் எனும் ஆசையினாலோ, ராஜி உடனே கேட்டாள் — 'தண்ணீர் குடிக்கிறாயா ?' காலு அவளிடமிருந்து தப்பித்துக்கொள்ள முயற்சிப்பதைக் கண்டு ராஜி சற்று அருகே சென்றாள், 'ஏய் !' மெல்லிய கழுத்து அசைந்துவிட்டது, தலையிலிருந்து தண்ணீர் தளும்பியது.

மறுபுறம் கோதர் ஏரைப் பிடித்துக்கொண்டான் — 'நீ தண்ணீர் குடி ... இதற்குள், கொண்டுவா அந்த முள்தடியைக் கொடு !'

'அடேடே ! வரப்பு சறிந்து விட்டதே !' காலு ஏரைப் பிடித்துக் கொண்டு சொன்னான். ராஜியின் அந்தச் சின்னஞ்சிறு தலையில்தான் எத்தகைய அறிவிருந்ததோ, கடவுளுக்குத்தான் தெரியும். காலுவின் பேரில் இரக்கம் கொண்டோ அல்லது ஏர் உழச் செல்லும் ஆசையினாலோ, மூன்றாம் முறையாக அவள் கேட்டாள்— 'குடிக்கிறாயா ?' இந்தத் தடவை எருதுகளுக்கு மிகவும் அருகே வந்துவிட்டாள். 'தண்ணீர் குடியேன் ?'

பாத்திரத்தைப் பார்த்ததிலிருந்து காலுவுக்கு ஒரே தாகம். ராஜியிடமிருந்து தப்பித்துக் கொள்ளவும் நினைத்தான் காலு. ஒன்றும் தோன்றாததால் கோதரிடம் ஏர் கலப்பையைக் கொடுத்துவிட்டான் அவன். ராஜியின் தலையிலிருந்து தண்ணீர்ச் செம்பை எடுத்து வாயருகே கொண்டு சென்றான்.

ஏரையும் மறந்து, ராஜி மடக் மடக்கென்று தண்ணீர் குடிக்கும் காலுவையே பார்த்துக் கொண்டிருந்தாள். இரண்டு வயிறளவு தண்ணீர் குடித்துவிட்டான். இன்று ஒரு படி தண்ணீர் பிடிக்கும் பாத்திரத்திலிருந்து பாதி தண்ணீரைக் காலி செய்துவிட்டான். அப்படியிருந்தும் ராஜி வற்புறுத்தினாள் — 'பூராவையும் குடித்து விடேன் நான் மறுபடியும் எடுத்துக்கொண்டு வருகிறேன்.'

ராஜி நம்மை விட்டுப் போனால் போதும் என்றிருந்தது காலுவிற்கு. 'போதும் போதும். எடுத்துக்கொண்டு போயேன்.' ராஜியின் தலையில் பாத்திரத்தை வைத்து விட்டு ஏரைப்

பார்க்கச் சென்றான். கோதர் நேராக உழாமல் சற்று வளைந்து சென்றுகொண்டிருந்தான்.

'அடேடே ஏர் குத்திவிடும், கால் பத்திரம். எருதுகளை நிறுத்து கோத,' என்று கூறியபடி ஓடினான்.

தண்ணீர்ப் பாத்திரத்தை வைத்துவிட்டு ராஜியும் ஏர் பக்கம் ஓடினாள். அவள் காலுவின் கையைப் பிடித்துக்கொண்டாள் — 'என்னை ஓட்டவிட்டால் தானே.'

காலு பயந்தபடி கூறினான் — 'ஏதாவது குழப்பம் செய்து விடாதே, என் அம்மா வந்தால் திட்டுவாள்.'

'என்னிடம் கொடு' என்று கோதர் சொல்ல, 'என்னிடம்' என்று ராஜி கூறினாள் — காலு இந்தப் போட்டிக்கிடையே ஏரைச் சரி படுத்த முயன்று கொண்டிருந்தான். 'அடே ஒரு தடவை ஏரைச் சரிசெய்ய விடேன். கோதர் எருதுகளைக் குத்தி ஓட்டாதே .... பெண்ணால் ஏர் உழ முடியாது. நினைவிருக்கட்டும்.'

கோதர் மாட்டை அடிக்க, காலு கயிற்றை இழுத்தான். நல்ல எருதுகள் கூட இந்த அமர்களத்தில் மக்கு எருதுகளாகி திமிறிக் கொண்டு ஓட ஆரம்பித்தன. அவைகளால் இழுக்கப்பட்டு காலுவும் ஓட ஆரம்பித்தான். கோதரின் முகம் தொங்கிப் போய் விட்டது. ராஜிக்கு இதையெல்லாம் பார்த்து மகிழ்ச்சி அதிகரிக்கவே, அவள் தன் பிஞ்சுக் கரங்களைத் தட்டியபடி சிரித்தாள்.

அந்தப் பக்கம் பதினைந்து பதினைந்து வயதுள்ள நாநாவுக்கு வேடிக்கையாக இருந்தது — நாநா ஏரைப் பிடித்து நிறுத்தினான் — கலப்பையின் நுனி பட்டுவிட்டால் மற்றவர்களுடைய எருதுகள் —

'உனக்குப் பொறுமையாக இருக்கிறதா ?' நாநாவுக்கு முன்னால் ஏர் உழுதபடியே நாநா கூறினான் .... ஆனால் ரண்சோட் மட்டும் ஒன்றுமே சொல்லவில்லை.

ஆனால் நாநாவின் கவனம் முழுதும் காலுவிடமிருந்தது. 'அடே கயிற்றை விட்டு விடு. எருதுகள் போனால் போகட்டும். தானே நின்றுவிடும்!' இதற்குள் நாநா செய்தி சொன்னான் — 'அதோ அவனுடைய அம்மா ஓடி வருகிறாள். வேடிக்கையொன்றும் செய்யாமல் வந்துவிடு.'

நல்ல வேளையாக ஏர் தனியாக வந்துவிட்டது. இல்லாவிட்டால், ஏதாவது ஒரு எருது நொண்டியாகி யிருக்கும் — இன்னும் காலுவின் கையிலிருந்து கயிறு விடுபடவில்லை. விட வேண்டும் என்ற எண்ணமே அவனுக்குத் தோன்றவில்லை.

ஆனால் கோதருக்கு ஒரு உபாயம் தோன்றிற்று. சவுக்கை

எடுத்துக்கொண்டு எதிரிலிருந்து எருதுகளைத் தடுக்க ஓடினான். பின்னால் ராஜியும் ஓடினாள். இதற்குள் மூச்சுத் திறை காலுவின் தாயும் வந்து சேர்ந்தாள்.

மூன்று சிறுவர்களும் ஒருவர் பேரில் மற்றவர் குற்றம் சுமத்தினர். கோதர் பேரில் பழியைப் போட்டான் காலு. கோதர் ராஜியைப் பற்றிப் புகார் செய்தான்—'இந்த ராஜியின் மேல் துணியைப் பார்த்து அந்த எருதுகள் மிரண்டுவிட்டன. அதனால் தான் இவ்வளவு அமர்க்களம்.'

ஆனால் ராஜிக்கு இப்போது கூட மகிழ்ச்சிதான். கட்டைவிரலை ஆட்டியபடி காலுவிடம் கூறினாள் — 'பார்த்தாயா? என்னை ஓட்ட விடமாட்டேன் என்று சொன்னாயல்லவா? வேண்டும்... நன்றாக வேண்டும்!'

தாய் இந்தக் குழந்தைகளில் யாரைக் கடிந்துகொள்வாள்? மிரண்ட காளைகள் அவளுக்கே அடங்கவில்லையே!

நாநாதான் வர நேர்ந்தது. மறுபக்கம் குதிரை மீது வந்து கொண்டிருந்த ராஜியின் மாமா ரண்சோடின் ஏர்பக்கம் வந்து குதிரையை நிறுத்தி விட்டார். தன் மருமகப்பிள்ளை பக்கம் கையை நீட்டியபடி வணக்கம் செய்தார். காலுவின் வயலைப் பார்த்தபடி கேட்டார், 'இதென்ன குழப்பம் ரண்சோட்?'

குழப்பமாகத்தானிருந்தது— காலுவின் தாய் ஏரை எடுத்துக் கொண்டு வந்துகொண்டிருந்தாள். கோதரும் ராஜியும் அவளைப் பின் தொடர்ந்து வந்துகொண்டிருந்தனர். நாதா எருதுகளைச் சற்று சாந்தப்படுத்தி நுகத்தடியைச் சீர்ப்படுத்திக் கொண்டிருந்தான். காலு கையில் கிடைத்த கயிற்றை உருவிக் கொண்டிருந்தான்.

ரண்சோட் கூறினான் — 'தெரியாதா உங்களுக்கு? உங்கள் சம்பந்தியம்மா குறத்தி மாதிரி விதையைத் தன் கையாலேயே விதைத்தார்களே! சோளம் விதைத்தாள். மருமகப்பிள்ளை ஏர் உழ ஆரம்பித்தான். காளைகள் திமிறிக் கொண்டன. நல்ல வேளையாக நாதா வந்தான்—இல்லாவிட்டால்—'

நாதா முடித்தான் — 'சிதறிப் போயிருக்காதா மானம் மரியாதை யெல்லாம்!' இந்த வாக்கியம் அவனுடைய தாய் மாலியினுடையது.

ரண்சோட் கோபத்துடன் கூறினான் — 'இந்த மாதிரி பேசாதே. சும்மா உட்காரு.'

குதிரையின் மேல் உட்கார்ந்திருந்த ராஜியின் மாமா அந்த

அமர்க்களத்தையே பார்த்தபடியிருந்தார். பிறகு குழந்தைகளை விரட்டினார். — 'இங்கே வாங்கடா பசங்களா கோதர், ராஜி.'

மாமாவைக் கண்டவுடனேயே குழந்தைகள் ஓடினர். 'மாமா வந்து விட்டார் — மாமா வந்து விட்டார்.' ராஜி விடாமல் மாமா விடம் கேட்டுக்கொண்டே யிருந்தாள் — என்னையும் குதிரையின் மேல் உட்கார்த்துங்கள் — மாமா—என்னை ....மாமா — என்னை ....'

ஆனால் மாமாவின் முகம் கோபத்தால் சற்று ஊதியிருந்தது. அன்புடன் நடந்துகொள்வதற்குப் பதிலாகத் திட்டினார் — 'உன் வயலை விட்டு விட்டு அங்கே என்ன வேலை உனக்கு?'

ராஜியைத் தூக்கி மடியில் வைத்துக்கொண்டு சொன்னார் — 'இல்லம்மே அங்கே போனாயா ... என்னைத் தெரியாது உனக்கு—' கோதரை வயலுக்குப் போகச் சொன்னார் — 'போய்த் தண்ணீர் கொடுத்து விட்டு வா. பாவம் அந்த ஆளுக்கு ஒரே தாகமாக இருக்கும —'

கோதர் மூக்கால் அழுதுகொண்டே கூறினான் — 'தண்ணீரை ராஜி காலூவுக்குக் கொடுத்துவிட்டாளே, நான் எங்கே போய்—'

மாமாவினால் இந்த வார்த்தைகளைக் கூடப் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. தனக்குள் முணுமுணுத்தார் — 'இந்த ராஜியை....என்ன செய்யட்டும் நான்? அவள் செய்த பாவம் எல்லாரும் தலைகுனிய வேண்டி வந்திருக்கிறது. போஜ ராஜா வின் மகளை எண்ணெயாட்டும் வாணிபனுக்குக் கொடுத்த கதை யாகப் போச்சு.' பிறகு கோதரை விழித்துப் பார்த்துச் சொன்னார் ... 'போய்ச் செம்மை எடுத்து வா. ரண்சோட் குடத்திலே தண்ணீர் வைத்திருப்பார், அதிலிருந்து மொண்டு வா.

'கொண்டு வா செம்பு எங்கே, தண்ணீர் தருகிறேன்.' சித்தப் பாவைப் பற்றிப் பேசியபடியே பெருமூச்செறிந்தான் ரண்சோட். பிறகு கூறினான் — 'எங்களுக்கு ஒரே கவலையாக இருக்கிறது. இந்தப் பெண்ணைப் பார்த்தால் வருத்தமாக இருக்கிறது. அந்தக் காகத்தின் கழுத்திற்கு இந்த ரத்தினமா? உங்கள் மரு மகளும் இதையே சொல்லிச் சொல்லிப் பொருமுகிறாள் — ஏன் பொருமமாட்டாள்? சாந்தக்காரர்களும் சரி, சமமாக இருந் தால்தானே, வீட்டில் எடுத்து அடி வைக்க மனம் ...'

'மனமாவது கினமாவது, அதை விட்டுத் தள்ளுங்கள் ரண்சோட்! என்னை நீங்கள் எங்காவது போவதைக் கண்டதுண்டா? மருமக ளின் திருமணம் நிச்சயமாகி நான்கைந்து வருடங்களாகி விட்டன,

சம்பந்தியின் வீட்டு வாசல் எந்தத் திக்கில் இருக்கிறது என்று கூட எனக்குத் தெரியாது.' பெருமூச்செறிந்தபடி குதிரையை ஒரு தட்டுத் தட்டினர்.

'வாருங்கள்! வாருங்கள்! உட்காருங்கள்!' என்று அழைக்கும் சம்பந்தியம்மாளை, காலுவின் தாயைக் கண்டபடி திட்டவேண்டும் போலிருந்தது. 'ஏர் உழுது எங்களுடைய கௌரவத்தையே அதி கப்படுத்தி விட்டாயே! அம்மா!' ஆனால் அவள் அழைத்ததற்கு 'உம்' என்றுகூடப் பதில் சொல்லாமல் காதில் விழாதது போலி ருந்துவிட்டார்.

சம்பந்தியின் பேரில் இருந்த ஆத்திரம் முழுவதையும் வழியில் ராஜியிடம் காண்பித்து விட்டார். 'ஜாக்கிரதை! இனிமேல் விளை யாட அந்த வீட்டுப் பக்கமோ, அவர்களுடைய வயல் பக்கமோ போனயோ, ஆமாம், உன்னைக் குதிரைமேல் உட்கார வைக்க மாட்டேன் .... ஒரு சாண் அளவு இருந்துகொண்டு இப்போதே அவனுக்குத் தண்ணீர் கொடுக்கப் போய்விட்டாள் — ஆனால் அதுவும் சரிதான்.' மஹேகர் மாமா கடைசி வாக்கியத்தை மட்டும் மனதிற்குள் கூறிக்கொண்டார்.

# 10

## கடுங்கோடையில் இளவேனில்

காலுவிற்கு அதிருஷ்டக் கை என்று மக்கள் சொல்லிக்கொண்டார்கள். அதனாலோ, அல்லது தாயும் மகனும் கடுமையாக உழைத்ததாலோ, காலுவின் வயலில் நல்ல விளைச்சல் கண்டது.

இதனால் கடன்காரர்களே வீட்டிற்கு வரவில்லை என்று பொருள் கொள்ளக் கூடாது. மக்கள் சொல்வதுபோல், சட்டியில் பால் பாயசம் பொங்க ஆரம்பித்துவிட்டது. நினைக்கஞ்சி குடித்தவர்கள் இப்போது சோளம் சாப்பிட ஆரம்பித்தனர்.

அடுத்த ஆண்டில் கடன்காரர்களின் வட்டி தராவிட்டாலும் வட்டிக்கு வட்டியாவது செலுத்தப்பட்டது. உடனே காலுவின் மாமனார் வீட்டில் குறைகூற ஆரம்பித்தனர் — 'வளைகள் ஒரேயடியாக மெல்லியதாக இருக்கின்றன. கொஞ்சம் கனமாகச் செய்து போடுங்கள்.'

காலுவின் தாய் அவர்களைச் சமாதானப்படுத்த முயன்று பார்த்தாள். வேறு ஒருவரும் எதிர்க்கவில்லை. ஆனால் மாமா தெளிவாகக் கூறிவிட்டார் — 'எங்கள் குடும்பத்திற்குத் தகுந்தபடி நகைகள் போட்டாகவேண்டும். எங்களுக்கு வேறு ஒன்றும் தெரியாது. முடியுமானால் 'உண்டு' என்று சொல்லுங்கள், இல்லாவிட்டால் 'இல்லை' என்று சொல்லிவிடுங்கள்.'

எப்படியாவது குறை கூறி, நிச்சயமாகியிருந்த திருமணத்தை நிறுத்திவிட வேண்டும் என்பது தான் மாமாவின் எண்ணம் என்பதை ரூபா அறிந்திருந்தாள். அவள் ஒரு கடன்காரனை இப்போதுதான் கெஞ்சிக் கேட்டுக்கொண்டு திருப்பியனுப்பினாள் — சேட், இப்போதுதான் என் மகன் உழைத்து விளைச்சலைக் காண ஆரம்பித்திருக்கிறான். இந்த வருடம் கொஞ்சம் சிரம நிலையில் இருக்கிறோம். மீதியை அடுத்த வருடம் சம்பாதித்துக் கொடுத்து விடுகிறோம்.' ஆனால் மூன்றும் ஆண்டு மறுபடியும் திருமணத்தைப் பற்றி விவாதம் நடந்தது.

ராஜியின் மாமா எப்படியாவது திருமணத்தை நிறுத்த விரும்பினார். ராஜியின் தாய் ஒருபோதும் அவ்விதம் நினைக்கவில்லை. 'ராஜியின் அப்பா தானிருந்து பிணைத்த சம்பந்தம் இது. இதை நான் முறிய விடமாட்டேன்.'

'சரியாய்ப் போச்சு. பூலியிடம் பயந்துகொண்டுதான் நிச்சயம்

செய்யப்பட்டது இது. இப்போது தான் அவள் இல்லையே. சுவர்க்கத்திலிருந்து வந்து உன்னைத் தின்றுவிடவா போகிருள்? கல்லா உயிருடன் இருந்தால் கூட இப்போது இந்தச் சம்பந் தத்தை முறித்திருப்பார்....'

அப்படியும் ராஜியின் தாய் ஒப்புக்கொள்ளவில்லை. இங்கு மாமாவும் தன் பிடிவாதத்தை விடவில்லை. லக்கினப் பத்திரிகை எழுதும்போது அவர் மறுபடியும் தன் சகோதரிக்கு அறிவுறுத் திஞர்—'இப்போதாவது கேளம்மா! ரத்தினம் மாதிரி இருக்கிற மகளை நீயே உன் கையாலே ஏன் கிணற்றில் பிடித்துத் தள்ளு கிருய்? அன்புடன் கோதுமை ரொட்டி கொடுத்துக் கொண் டிருக்கிருய். அங்கே மாமியார் வீட்டில் தினைமாவால் சுடப்பட்ட ரொட்டி தின்று தொண்டை புண்ணுகப் போகிறது....ஆமாம் இனியும் ஒன்றும் குறைந்து விடவில்லை.... இப்போதாவது நான் சொல்லுவதைக் கேள்.'

ஆஞல் ராஜியின் தாய் மனம் ஒப்பவில்லை. அவள் அதையே சொன்ஞள்—'அவர் கையால் செய்த காரியத்தை நான் பாழ் படுத்த மாட்டேன். நீங்கள் விரும்பிஞல் செய்துகொள்ளுங்கள். அந்தப் பாவத்தை நான் என் தலையில் ஏற்கமாட்டேன்.'

'நீ உன் தலையில் ஏற்காவிட்டால் எனக்கென்ன வந்தது?' என்று கூறியபடி வெளியே வந்தார் மாமா. கிராம மக்களுடன் உட்கார்ந்திருந்த அந்தணனிடம் கூறிஞர்—'லக்கினம் எழுதுங்கள். எனக்கு வேலையிருக்கிறது-நான் வீட்டிற்குப் போகிறேன். எழுதி முடிந்ததும் மாப்பிள்ளையின் வீட்டில் கொண்டு போய்க் கொடுத்துவிடுங்கள்.'

குதிரையின் மேல் அவர் உட்காரப் போவதை சங்கர், காசம் முதலிய கிராம மக்கள் தடுத்தனர். ஆஞல் என்ன காரணத் தாலோ தங்கை தடுக்கவில்லை. 'சாப்பிட்டுவிட்டுப் போவது தானே?' என்று மட்டும் கூறிஞள்.

'சாப்பாடு ஆகிவிட்டது.' அண்ணன் தன் ஆத்திரத்தை வெளி யிட்டார்.

அண்ணனின் ஆத்திரத்தைத் தங்கை புரிந்துகொண்டு விட்டாள். ஆஞலும் என்ன செய்வாள்? லக்கினப் பத்திரிகை எழுதப் படுவதை நிறுத்தவேண்டும், அண்ணனின் விருப்பப்படி வேறு ஒரு பையனுடைய பெயரை எழுதவேண்டும். அண்ணனுடைய ஆத்திரத்தைத் தணிக்க இந்த ஒரு உபாயந்தானிருந்தது.

ஆனால் அதெப்படி முடியும்? நிச்சயம் செய்யப்பட்டிருந்த திருமணத்தை நிறுத்த அண்ணன் கூறிய கணத்திலிருந்து விழிப்புடனிருக்கையில் கற்பனையிலும், தூங்கும்போது கனவிலும் அவளுடைய இறந்த கணவன் வந்து அவளிடம் கூறினான். 'இதோ பார் நான் சொத்து சுதந்திரத்தைப் பார்த்து மகளைக் கொடுக்க விரும்பவில்லை. பணம் கால-நேரத்தைப் பொறுத்தது, உண்மையில் நான் குலத்தைப் பார்த்துச் சம்மதித்தேன். உறவினருடைய நல்லெண்ணத்தைக் கருதினேன். இன்னும் ஒன்றைக் கவனித்தேன். மணமகனைப் பார்த்து நிச்சயித்தேன். மகளைப் பற்றி என்ன சொல்வது? அவளுடைய குணத்திற்குத் தகுந்தபடி அவனிருப்பான். பிறர் ஏதாவது பேச இடம் கொடுக்கக்கூடாது. இறந்துபோன என் வார்த்தையை மீறவேண்டாம்......'

அதனால்தான் அவள் அண்ணனின் கோபத்தைக் கூட மறைத்து விட்டு அலட்சியமாக இருந்துவிட்டாள்.

கிராமத்து மக்களில் பெரும்பாலோர் வந்திருந்தனர். பரமாவின் வீட்டிலிருந்து ரண்சோடின் மனைவி மட்டும் வந்திருந்தாள், அதுவும் மாமியாரின் விருப்பமின்மையை லட்சியம் செய்யாமல். பரமா படேல் குதிரை மேலேறிக்கொண்டு இரண்டு நாட்களாக கிராமத்திற்கு வெளியே சுற்றுப் பயணம் சென்றிருந்தான்.

ரண்சோடின் மனைவி தன் அத்தை (ராஜியின் தாய்) யிடம் கேட்டாள்— 'சித்தப்பாவை அழைத்து வாருங்கள் அத்தை. ஒரு வேளை மணமகளைத் திருமண மண்டபத்திற்கு அழைத்துப்போகக் கூட வரமாட்டார்!'

'அவர்கள் எல்லோரும் பெரியவர்களம்மா. வராவிட்டால் போகட்டும். என்னால் ராஜியின் திருமணத்தை இன்றில்லை, நாளைக்குக் கூட மாற்ற முடியாது. ஆமாம், அவராக மாற்ற விரும்பினால் மாற்றிக் கொள்ளட்டும்.'

'அப்படிக் கூடச் செய்ய அவர் விரும்புவாரா?' ஆயினும் சித்தப்பாவை எப்படியாவது தன் வீட்டிற்கு அழைத்துச் சென்று தன் கணவன், மாமியார் முதலியோருடன் சேர்ந்து காலுவுக்கு லக்கினப் பத்திரிகை எழுதப்படுவதை நிறுத்தவேண்டும் என்று தான் ரண்சோடின் மனைவி நினைத்தாள். அவள் எழுந்தும் நின்று விட்டாள்.

ஆனால் அவள் வெளியே வருவதற்குள் சித்தப்பா குதிரைமீது ஏறிவிட்டார். அவள் பேசுவதற்கு முன்பே குதிரையை ஒரு குத்து விட்டார்.

பின்னுலிருந்துகொண்டு அவள் கூப்பிட்டுக் கொண்டே யிருந்தாள்— 'சித்தப்பா! சற்று நில்லுங்கள். நான் சொல்வதைக் கேட்டுவிட்டுப் போங்களேன் ...'

ஆனல் ஒன்று—குதிரை மிகவும் வேகமாகப் பறக்கக்கூடியது. போதாததற்குச் சவாரி செய்பவரின் ஆத்திரம் வேறு சேர்ந்து கொண்டது. நொடியில் அந்த எல்லையை விட்டுப் பறந்தோடியது.

சித்தப்பாவை அவள் விட்டு விட்டாளே தவிர, அந்தப் பேச்சை விட்டபாடில்லை. 'எப்படியாவது சித்தப்பாவிற்குச் சொல்லியாக வேண்டும். உங்கள் தங்கை மகளின் திருமணம் நிச்சயம் செய்வது உங்கள் கையில்தானிருக்கிறது. இதில் பாவமாவது, புண்ணியம்தான் உங்களுக்குக் கிடைக்கும். குழந்தை நல்ல வீட்டில் போய்க் குடித்தனம் செய்தால், உங்களைத்தான் வாழ்த்துவாள்.'

இவ்விஷயத்தை வீட்டிற்கு வந்து அவள் தன் கணவனிடம் கூறினாள். கோபித்துக் கொண்டிருந்த மாமியையும் இந்த வார்த்தைகளால் சமாதானப் படுத்திவிட்டாள். மகிழ்ச்சியின் மிகுதியில் தன் வீட்டில் குதிரை கிடையாது என்பதைக் கூட மறந்து பேசினாள் அவள்— 'ரண்சோட்! எழுந்திரு மகனே, குதிரையைத் தயாராகக் கொண்டுவந்து நிறுத்து. மனேகரின் வீட்டிற்குப் போகவேண்டும்!'

ரண்சோடிற்கும் கோபம் வந்தது. 'கொண்டு வருகிறேன். குதிரை எங்கே? அந்தக் கிழவனுக்குத்தான் காலம் நல்லா......'

வேறு வழியில்லாமல் மாலி கிழவனுக்கு மூட்டை மூட்டையாக வசைமாரி பொழிந்தாள். வெளியே வந்து பாதையின் முனையைப் பார்த்தாள். நாடி வேகமாகத் துடித்துக் கொண்டிருந்தது— 'கடவுளே! ஏதாவது ஒரு குதிரையைக் கொண்டுவந்து நிறுத்த மாட்டாயா?'

'நல்ல காரியத்தில் தாமதம் கூடாது' என்று சங்கர், காசம் எல்லோரும் கூற லக்கினப் பத்திரிகை எழுதிக்கொண்டிருந்த அந்தணன் தான் சிகப்புத் தலைப்பாகையுடன் குதிரைக்குப் பதிலாகக் காட்சியளித்தான்.

மாலியின் பழுப்பு நிற முகத்தில் கருமை படர்ந்தது. ரூபாவின் முகம் அந்தணனைக் கண்டவுடனேயே மலர்ந்து குங்கும நிறமாகி விட்டது. அந்தணனைக் கட்டிலில் உட்கார வைத்துவிட்டு கிராமத்துப் பக்கம் ஓடினான். 'வாருங்கள், லக்கினத்தைப் பூஜையில் வைக்கவேண்டும்.'

பாட்டுப் பாடும் கிராமப் பெண்கள் தான் உண்மையில் இந்த உற்சவத்தைக் கொண்டாடவேண்டும். இல்லையா? திருமணம் செய்துகொள்ளப் போகிறவர் ஒன்பது அல்லது பத்து வயதுக் குழந்தைகள். இது அவர்களுக்கு ஒரு விளையாட்டாக வேடிக்கை யாக இருந்தது. ஆனால் தாய்க்கு மகிழ்ச்சியை விட கிடைத்த வாய்ப்பை நழுவ விடக் கூடாதே என்று கவலையாக இருந்தது.

மரத்தடியில் சான்றோர்கள் கூடுவதைப் போல் ஒரு மணி நேரத்தில் காலுவின் வீடு, கிராமப் பெண்களால் கலகலவென்று ஒலித்தது.

முதல் காரணம் கோடை காலத்து ஓய்வு தினம், மற்றொரு காரணம் லக்கினப் பத்திரிகை கணிக்கப்படும் தினம். அதுவும் முதல் திருமணத்திற்கு. லக்கினப் பத்திரிகையைப் பூஜையில் வைத்த பிறகு பெண்கள் முற்றத்தில் சூழ்ந்துகொண்டனர். இளைஞர்களும் கூட்டம் கூட்டமாக வர ஆரம்பித்தனர்—பாட்டில் சேர்ந்துகொண்டனர்.

வயது முதிர்ந்தவர்கள் முற்றத்துக் கட்டில்களில் அமர்ந்து கொண்டனர். கிராமத்து நாவிதன் முற்றத்தில் ஒரு பக்கம் நெருப்பைப் பற்றவைத்து உக்கா பிடிக்க ஆரம்பித்துவிட்டான்.

அதே சமயத்தில் யமுனாவின் கணவன், காலுவின் அத்தானுடைய குதிரை 'டக் டக்' கென்று வந்து சேர்ந்தது. காலு வீட்டு வாசலில் இடமில்லாததால் அதைப் பரமா வீட்டு வாசலில் கட்டிவைத்தான். அதுவும் மைத்துனன் வீடுதானே? காலுவின் வீட்டில் எல்லோருக்கும் வணக்கம் தெரிவித்துவிட்டுக் கட்டிலில் உட்கார்ந்துகொண்டான்.

மாலியின் வயிறு ஏற்கனவே பற்றிக்கொண்டு எரிந்தது. அதிலும் இந்தத் 'தொண்டன்' வந்து எரியும் நெருப்பில் எண்ணெயை வார்த்துவிட்டான். பிறகு அவள் பட பட வென்று வெடிக்கக் கேட்கவா வேண்டும்?

ஆனால் அவளுடைய ஆத்திரப் பேச்சு யார் காதிலாவது விழுந் தால் தானே! நான்கு மைல் தூரம் வரை ஒலிக்கும் ஆடவர்—பெண்டிரின் பாட்டிற்கெதிரே மாலியின் கூக்குரல் எம்மாத்திரம்?

இளமை தன் முழு போத நிலையில் இருந்தது. வைக்கோல் தட்டி வெயிலை முழுதும் தடுக்கப் போதவில்லை. ஆயினும் தன்னை மறந்த நிலையில் இருந்தவர் அப்போது இதையெல்லாம் லட்சியம் செய்யவேயில்லை. நிகழ் காலத்தையே மறந்திருந்தவர்களுக்குத்

தலையில் படும் வெயிலின் உணர்வு எங்கிருந்து வரும்? பாட்டிற்கு மேல் பாட்டு முழங்கிற்று. பாடல் கற்பனை வாழ்க்கையைத் தொடர்ந்து சென்றுகொண்டிருந்தாற் போலிருந்தது—

உக்மணீ தர்தீ மா கேசர் உடே சே ஓ ரேஷமா!

.... .... .... .... . .. ....

......... .........

.................

மீ ஜாண் யு நண நீரோ வீரோ ஆவேசே ரே லோல்

[ரேஷ்மா! நீ கீழ்த் திசையினின்றும் பறந்து வந்துகொண்டிருக்கிறாய்! என் நாத்தியின் அண்ணன் வருகிறாப்போல் எனக்குத் தோன்றிற்று.]

ஒவ்வொரு பெண்ணின் உள்ளமும் அயலூர் சென்றுள்ள கணவனை எதிர்பார்த்துக் கொண்டிருப்பது போல் இருந்தது. குங்கும நிறத்துக் காலை நேரத்தைக் கண்டால் நம்பிக்கை உறுதிப்படுகிறது, கற்பனையைச் சிறகடித்துப் பறக்கவிடுகின்றாள் அவள்.

மீ ஜாண்யு பங்கடீ ஓ ஜோடி லாவே சே ஓ ரேஷ்மா ........

[வளையல் ஜோடி அவன் கொண்டு வருகிறானே என்று நான் நினைத்தேன்.]

தன்னை எதிர்பார்த்து நிற்கும் மனைவியின் பிரிவுத்துடிப்பில் ஆடவன் ஒன்றிவிட்டான். இந்தப் பாடலைப் பாடும் பெண்களில் யாரோ நம்மை மிகவும் தீவிரமாகக் காதலிக்கிறாள் போலிருக்கிறது என்ற எண்ணமும் அவனிடம் குடிகொண்டு விடுகிறது...

எது எப்படியோ, ஆனால் ஒன்றுமட்டும் நிச்சயம். இந்தப் பெண்டிரும் ஆடவரும் சுய நினைவை இழந்து ஏதோ ஒரு பரந்த உலகில் சுற்றி வந்துகொண்டிருந்தனர்—

ஆத்தமணீ தர்திமா தூல் உடே சே ஓ ரேஷமா .....................

[மேற்குப் புறத்திலிருந்து புழுதி பறக்கிறது ரேஷ்மா! என் நாத்தியின் அண்ணன் வருகிறார் என்று நான் நினைத்துவிட்டேன். பங்குனி மாதத்துத் தடித்த போர்வையை எடுத்து வருகிறார் என்று நான் நினைத்துவிட்டேன்.]

இந்தப் பாடலினாலோ அல்லது வேறு எந்தக் காரணத்தினாலோ, காலுவின் வீட்டு முற்றத்தில் பகல் வேளை வெயில் யாருக்கும் சுடவேயில்லை. அந்த வயது முதிர்ந்தோரின் இதயத்திலும் அந்தப் பயங்கர வெப்பத்தில் இளவேனில் ஒளி வீசியது.

ஆனால் எதிரே மாலியின் வீட்டில் இந்த இளவேனில் கலந்த பாடல் நான்கு மடங்கு வெப்பத்தை அதிகரித்தது.

அந்த வெப்பம் தாங்க முடியாமற் போனதால் தானே என்னமோ ரண்சோட் வெளியே வந்தான். கிளம்பியவுடனேயே வியர்வையால் நனைந்த அவன் அத்தானுடைய குதிரைமீது ஏறிக் கொண்டான். குதிரையைத் தட்டி ஓட்ட ஆரம்பித்தான்.—
'அத்தான் கொஞ்ச தூரம் குதிரையை ஓட்டிக்கொண்டு போய் வருகிறேன்!'

ஆனால் அந்தப் பாடல் ரண்சோடைப் பின் தொடர்ந்து வந்து கொண்டிருந்தது. பாதையில் தான் கேட்டது என்றால், வயல் புறத்திலும் கேட்க ஆரம்பித்தது அந்தப் பாடல். ஒரு மைல் தூரத்தைக் கடந்து மேட்டின் மேலேறிவிட்டான். அப்போதும் குளிர்ந்த இரவு வேளையில் கேட்பது போல் ஒலித்தது அந்தப் பாடல்—

தக்ஷுதா வாவலியா வாவா மாண்ட்யா சே ஓ ரேஷ்மா!

.... .... .... .... .... ....

... ... .... ....

[ரேஷ்மா! தென் திசையிலிருந்து காற்று வீச ஆரம்பித்து விட்டது. என் நாத்தியின் அண்ணன் அழகான சட்டை எனக்கு வாங்கி வருகிறார் என்று நினைத்தேன்.]

கடைசி வரி காதில் விழுவதற்கு முன்பு அந்த மேட்டையும் கடந்து சென்றுவிட்டான் ரண்சோட்! நல்லதாகிவிட்டது. இல்லா விட்டால் எரியும் அவனுடைய உள்ளத்தின் நிலை என்னவாகுமோ!—

மீ ஜாண்யு கால் ஜடே காமண் லாவே சே ரே லோல்!

... ... ... .... ... ... .... .... .... ..

[உள்ளத்தை யாரோ மயக்கிவிட்டார்கள் ரேஷ்மா! வடதிசையிலிருந்து மேகங்கள் சூழ்ந்துகொண்டுள்ளன. என் இதய மயிலைக் கொண்டு வருகிறார். என் உள்ளங்கவர் கள்வன் வந்துகொண்டிருக்கிறார்.]

பாட்டு நின்றதும் சில கணங்கள் அமைதி நிலவிற்று. பாடலைப் பாடுவோர் கேட்போர் இருவருடைய உள்ளத்துக் கற்பனை உலகையும் யாரோ கவர்ந்து சென்றாற்போல் இருந்தது அந்த அமைதி.

# 11

## குலத்துக் கொள்ளி

ரண்சோட் மனோகரின் வீட்டுப் பரந்த வெளியில் தட்டியின் கீழ் குதிரையைக் கட்டினான். சித்திரை வெயில் சற்றுத் தணிந்துவிட்டது. முற்றிலும் வெயில் குறைந்துவிடவில்லை. வெப்பம் அதிகமாகத்தானிருந்தது. ஜீவராசிகளின் உடலை வருத்தி எடுத்துக் கொண்டிருந்தது. ஆகையால் பறவை கூட அங்கு தென்படவில்லை. நாய்கள் கூட கிழக்குப் பக்கத்து வீடுகளில் குளிக்க வைக்கப்பட்டிருக்கும் [illegible]களுக்கு நேரே குழிதோண்டிப் படுத்துக் கிடந்தன. மக்களனைவரும் உள்ளேயிருந்தனர். ஆடவரனைவரும் உள்ளேயிருக்கும் அறைகளில் கட்டில்களைப் போட்டுக்கொண்டு உட்கார்ந்திருந்தனர்.

மனோகர் வீட்டின் விசாலமான தாழ்வாரம், அங்குள்ள தூண்களில் செய்யப்பட்டிருக்கும் சித்திர வேலைப்பாடுகள், ஐந்து பலகைகள் கொண்ட ஜன்னலில் பிணைக்கப்பட்டிருக்கும் பித்தளைத் தகடு, பித்தளை வளையங்கள் முதலியவற்றைப் பார்த்தவுடனேயே இது செல்வந்தருடைய வீடு என்பது தெரிந்துவிடும். ஆனால் வீட்டு நிலைமையைக் கண்டவுடனேயே, வீடு இருக்குமளவுக்கு இங்கிருப்பவர்களில்லை என்று கூறிவிடுவர், இல்லாவிட்டால்....

முப்பது அடி நீளமான அந்த முற்றத்து வடபுறம் பழைய இடிந்த அறைகளிருந்தன. சுற்றும் முற்றும் சிதறிக் கிடக்கும் சாம்பலைப் பார்த்தால் அந்த அறைகள் சாம்பல் கொட்ட உபயோகிக்கப்படுவன போல் தோன்றின. அதைத் தவிர உடைந்த ஏர் கலப்பை, வண்டிச் சக்கரங்கள், முறிந்த கட்டில்கள், குப்பைகூளம் இவையாவும் வைக்கப்படும் இடமாக இருந்தது அந்த இடம். நாய்களுக்[illegible]து இருப்பிடம் என்றே சொல்லிவிடலாம். இதைத் தவிர தினசரி உபயோகிக்கப்படும் இரண்டு மூன்று கட்டில்க[illegible] போடப்பட்டிருந்தன. நடுவில் அடிக்கப்பட்டிருந்த முளையைப் பார்த்தால் இரவு வேளைகளில் கன்றுக்குட்டிகள் கட்டப்பட்டிருக்கும் போல் தோன்றியது. இதன் பிறகு இரண்டு கட்டில்கள் போடுமிடத்தில் சிமெண்டு பூசப்பட்டிருந்தது.

தெற்குப் பக்கத்திலும் கிட்டத்தட்ட இதே நிலைதான். சுவரருகே பத்துப்பன்னிரண்டு முழு நீளமான மறைவு ஒன்று கட்டப்பட்டிருந்தது. நல்ல ஏரும் கலப்பையும் அங்கிருந்தன. வண்டியின் நுகத்தடி வேறு இடத்தை அடைத்துக் கொண்டிருந்தது. அருகே ஒரு சிறு குமிட்டி கிடந்தது. அதன் நிலையைப் பார்த்தால் இந்த வெப்பமான தினங்களில் உபயோகிக்கப் படவில்லை என்பது நன்ருகத் தெரிந்தது.

ரண்சோட் உள்ளே நுழைந்ததும் மூடப்பட்டிருந்த தாழ்வாரத்தின் பக்கம் தன் பார்வையைச் செலுத்தினுன். 'யாராவது இருக்கிருர்களா?' என்று அவன் கேட்டுக்கொண்டே சென்ருன். பிரமித்துப்போன அவனுக்கு மேற்புறத்து வாயில் தெரியவேயில்லை.

கதவு திறந்து தானிருந்தது. பத்துப்பன்னிரண்டு அடி நீளமும் அகலமும் உள்ள ஒரு திண்ணையில் விறகுக் கட்டு போடப்பட்டிருந்தது. சமயலறை தனியாக ஒதுக்கப்பட்டிருந்தது. அந்தத் திண்ணைக்குக் கீழே மாவரைக்கும் இயந்திரமிருந்தது. நடுவே உரல் புதைக்கப்பட்டிருந்தது.

ரண்சோட் உள்ளே நுழைந்ததும் உரலில் தானியமிருந்தது. ஒரு ஓரத்தில் அரைமணங்கு கனமுள்ள உலக்கை கிடந்தது. மறுபுறம் மஞேகரின் நாட்டுப் பெண் அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்தாள். அருகே தொட்டிலில் குழந்தை தூங்கிக்கொண்டிருந்தது.

ரண்சோடின் குரலைக் கேட்டு அவள் எழுந்திருக்கவில்லை. ஆனுல் அறையோரத்துக் கட்டிலில் படுத்திருந்த மஞேகரின் மனைவி—கிழவி—எழுந்துவிட்டாள். திடுக்கிட்டவள் போல் கட்டிலிலிருந்து இறங்கிக் கூறினுள் — 'ஓகோ! வாருங்கள், ரண்சோட் தம்பியா? இந்தக் கடும் வெயிலிலா? வாருங்கள். உங்கள் சித்தப்பா அந்தப் பின் பக்கத்து அறையில் உக்கா பிடித்தபடி படுத்திருக்கிருர்,'

விஷயம் உண்மைதான். பயங்கரமான இருளடைந்த அறையில் இடது பக்கத்தில் சுவரில் சாய்த்து வைக்கப்பட்டிருந்த உக்காவின் நெருப்பு மெள்ளச் சிரிப்பது போல் காட்சியளித்தது. 'சித்தப்பா' என்று கூப்பிட்டதுமே மஞேகரும் எழுந்துவிட்டான். இலவம் பஞ்சடைக்கப்பட்ட மிருதுவான மெத்தையில் அவன் படுத்திருந்தான். 'யாரது?' என்று அவன் கேட்டான்.

'நான்தான் ரண்சோட்.'

மாமியார் மருமகளை எழுப்பினுள். 'உரலில் குத்தியவள் அப்படியே நட்ட நடு வழியிலேயே படுத்துத் தூங்கறயே—மோங்கி! வர்றவங்க போறவங்களை கொஞ்சம் கவனிச்சுக்க.'

'யார்? ஊர்வலத்திலேயிருந்து வந்துவிடப் போகிருர்கள்.' எழுந்து கண்களைக் கசக்கியபடியே பேசினுள் நாட்டுப் பெண்.

'உன் மாமாவின் மகன் ரண்சோட் வந்திருக்காரு—நம்பிக்கையில்லையின்னு பின் பக்கத்து அறையைப் போய் பாரு.'

மோங்கி காலுவின் அத்தையான யமுனுவின் மகள். ஆனல் மோங்கி எழுந்திருக்கத் தேவைப் படவில்லை. குரலிலிருந்தே ரண்சோட்தான் என்று அவள் புரிந்துகொண்டாள். தெரிந்து கொண்ட பிறகும் அவளுடைய முகத்தில் மகிழ்ச்சிக்குறியே காணப்படவில்லை. வரவேற்க அவள் எழுந்திருந்து செல்லவுமில்லை. ஒரு விதமான வெறுப்புத்தான் அவள் முகத்தில் வெளிப்பட்டது. 'தன் மாமனர் வீடு, வந்திருக்கிருர். இதிலே என்ன பெரிய ஆச்சரியம்?' என்று கூறியபடியே தண்ணீர் குடித்துவிட்டு மறுபடியும் உலக்கையைக் கையிலெடுத்துக் கொண்டாள்.

ஆனல் மனேகருக்கு ஒரே வியப்பு. அவன் கேட்டான்— 'யார்? ரண்சோட் வந்திருக்கிருரா? ஏது இப்படி இந்த வெயிலில்? இப்போதுதான் ஒரு மணி நேரத்திற்கு முன்பு....'

ரண்சோட் சவுக்கத்தால் முகத்தைத் துடைத்துக்கொண்டு கால் பக்கத்தில் உட்கார்ந்துகொண்டான். 'எனக்கும் உங்களுக்கும் அதிக தூரமில்லை. குதிரையை வேகமாகத்தான் ஓட்டினேன். ஆனல்— '

ஒரு கணத்துக்குள் மனேகரின் மூளையில் பல எண்ணங்கள் ஓடின— 'நாம் கோபித்துக் கொண்டதால் தங்கைக்கு ஏதாவது தோன்றிவிட்டதோ? லக்கினப் பத்திரிகை எழுதுவதை நிறுத்திவிட்டு வேறு இடத்தில்..'

'இந்த எரிக்கும் வெயிலில் வரக் காரணம் என்ன?'

'நீங்கள் எதற்கு வந்தீர்களோ, அதே காரணத்திற்காகத்தான் நானும் வந்தேன்.'

ரண்சோட் சிரித்தபடி கூறினன்.

மனேகர் யோசனையில் ஆழ்ந்து விட்டான்— 'நான் எந்த வேலைக்கும் வரவில்லையே? சும்மாத்தான்— '

உண்மையில் ரண்சோட் கொஞ்சம் புத்திசாலித்தனத்தில்

குறைந்தவன்தான். கூடவே இம்மாதிரி விஷயங்களில் முற்றிலும் அனுபவமில்லாதவன். எப்படிப் பேச்சைத் துவக்குவது என்றே புரியவில்லை அவனுக்கு. அவரை வேடிக்கையாகக் கேட்டான்— 'நீங்கள் ஏன் கோபித்துக்கொண்டு வந்துவிட்டீர்கள்? அப்படி யிருந்தும்....'

மனேகர் சற்றுக் கோபமடைந்தான். 'ஆமாம். அதற்கென்ன இப்போது? லக்கினப் பத்திரிகை எழுதுவது நின்றுவிட்டதா என்ன?'

'அதுவா! எழுதிப் பூஜையில் கூட வைத்தாகிவிட்டதே!' மனேகர் மௌனமாக இருப்பதைக் கண்டு அவன் மேலும் சொன்னான்— 'காலுவின் அம்மாவிற்கு மகிழ்ச்சி பிடிபடவில்லை.'

ரண்சோடின் குரல் உரலில் நாளியம் குத்திக்கொண்டிருந்த மோங்கியின் காது வரை கூட எட்டிவிட்டது. மாமியார் பின்புறத்துக் கதவருகே போய் உட்கார்ந்துகொண்டு விட்டாள்.

'ஏன் மகிழ்ச்சி இருக்காது?' மனேகர் கூறினன்.

'பின்னே ஏன் இருக்காது? லக்கினப் பத்திரிகையை பூஜையில் வைப்பதற்குள் எத்தனை பாட்டு, எத்தனை...'

'நீங்கள் ரொம்ப விசித்திரமான மனிதர் ஐயா— ஒரே மகன் அவனும்...'

'ஆனல் நாங்கள் எல்லோரும் வீட்டு வாசலிலேயே முட்டிக் கொள்ள வேண்டியதுதானு? என் அம்மா சொல்வாள்—உங்களைப் போன்றவர்களெல்லோரும் ஒன்ருய்ச் சேர்ந்து...'

'ஏன்? ஏதாவது புதிய மலர் மலர்ந்து விட்டதா?' மனேகரால் இன்னும் விஷயத்தைப் புரிந்து கொள்ள முடியவில்லை.

'நிச்சயமான தினத்திலிருந்து என்று வைத்துக்கொள்ளுங்களேன். பூலியின் மகன் சங்கர் மீசையைத் தடவிக்கொண்டு "அவனுடைய மாமாவைக் கூட வெளியே துரத்தியாகிவிட்டது" என்று சொன்னன்.'

'அப்படியா!' மனேகரின் குரல் சற்று கனத்திருந்ததைக் கண்டு மோங்கி, 'என்ன விஷயம்?' என்று அறியும் ஆவலுடன் உலக்கை போடுவதை நிறுத்திவிட்டாள். மாமியின் பின்னல் போய்ப் பதுங்கியபடி கேட்க ஆரம்பித்தாள்.

'உங்களிடம் என் அம்மா கூறச்சொன்னுள்—உங்கள் மருமகள் (ரண்சோடின் மனைவி) லக்கினப் பத்திரிகை முடிந்ததிலிருந்து தேம்பித் தேம்பி யழுதுகொண்டிருக்கிருளாம்.'

'ஏன்?'

'ஏனென்றால், பாவம் ராஜியின் வாழ்க்கையைப் பற்றி அவளுக்கு வருத்தம். வாழ்நாள் முழுதும் அவளைப் பார்த்து அழுது கொண்டிருக்க நேரிடும்.' ரண்சோடின் நாவில் எங்கிருந்து கலைமகள் வந்து உட்கார்ந்துகொண்டாளோ தெரியாது.

'எனக்கு எல்லாம் தெரியும் தம்பி. எனக்குப் படம் வரைந்து காட்டத் தேவையில்லை. இனி என்ன செய்வது? நீங்களே சொல்லுங்கள்.'

'எல்லாம் முடிந்துவிட்டது. பிள்ளையார் பூஜையும் இன்று நடந்துவிடும்' மனோகர் தன்னையே பார்த்துக்கொண்டிருப்பதைக் கவனித்து அவன் கூறினான்– 'அந்த அமர்க்களத்தைப் பார்த்தவுடனேயே எனக்குப் புரிந்துவிட்டது.'

மனோகர் வறண்ட சிரிப்புச் சிரித்துவிட்டுக் கூறினான்—'அப்படியானால் எல்லாம் முடிந்துவிட்டது என்று சொல்லுங்கள். சுவரிலே சாற்றி வைத்திருந்த உக்காவை எடுத்தான். 'கையை விட்டுப் பொருள் போய்விட்டது.'

'அதெப்படிப் போகும்? இனிமேல்தான் உண்மையான சுவாரஸ்யம் இருக்கிறது!' காலை உயர்த்தியபடி சிரித்துக்கொண்டே ரண்சோட் கூறினான்.

'அதெப்படி?' உக்காவைக் காலி செய்துவிட்டு மனோகர் கேட்டான்.

'பந்தல்கால் நட்ட பிறகும் திருமணம் நிறுத்தப்பட்டால் அதிலே தான் இருக்கிறது நம் பெருமை.'

மனோகருக்கு ரண்சோடின் வார்த்தைகள் குழந்தையின் பிதற்றல் போலிருந்தது. 'என்னையும் உங்களையும் உலகத்தில் கேட்போரே கிடையாது என்று நினைத்தீர்கள்?'

மனோகரின் மனைவியால் பேசாமலிருக்க முடியவில்லை— 'நிச்சயமான திருமணம் உலகில் எங்காவது நின்றுபோனதுண்டா?'

மாமிக்குப்பின் ஒளிந்திருந்து பேச்சைக் கேட்டுக்கொண்டிருந்த மருமகள் மகிழ்ந்துபோனாள்.

'எத்தனையோ நம் உறவினருக்குள் இந்தமாதிரி நடந்திருக்கிறது. எண்ணிச் சொல்லட்டுமா?' ரண்சோட் கூறினான்.

'ஆனால் நம் உறவினருக்குள்...'

'ஏன் இல்லாமல்? நமக்குள்ளும்தான் இப்படி நடக்கட்டுமே! வேடிக்கையாக இருக்கும் இல்லையா?'

மனோகருக்கு இதில் உண்மை இருப்பதாகத் தெரியவில்லை.

ஆகையால் அவன் உக்காவை நிரப்ப முற்பட்டான். 'நிச்சயிக்கப் பட்ட திருமணத்தை நிறுத்திஞல் ஆயிரம்பேர் ஆயிரம் விதமாக...'

'அவர்களுடைய முகத்திலேதான்...' இடுப்பிலிருந்த பணப் பையை ஒரு தட்டுத் தட்டிஞன் ரண்சோட்! — 'இந்த 'டண் டண்' ஒலியால் நிச்சயம் நிறுத்த முடியும்.'

மஞேகர் ரண்சோடைப் பார்த்துக்கொண்டே யிருந்தான். 'விஷயம் இவ்வளவு தூரத்திற்கு வந்துவிட்டதா?' என்று கேட்பது போலிருந்தது அவனுடைய பார்வை. அவனுடைய முகத்தின் சுருக்கங்களில் நம்பிக்கை, மகிழ்ச்சி, விநோதம் இவற்றின் ரேகைகள் தென்பட்டன.

ஆஞல் மோங்கியின் முகம் சுண்டிப்போய்விட்டது. குங்குமம் போல் சிவந்த அவளுடைய முகம் பருத்திபோல் வெளுத்து விட்டது. பேச்சைக் கேட்பதற்கென்று அவள் தன் இதயம் துடிப்பதைக் கூட நிறுத்திவிடுவாள் போலிருந்தது.

'உங்கள் அப்பாவைக் கேட்டீர்களா? அவர் என்ன? ...'

'அவரா! அவர் வீட்டிலிருக்கவில்லை.... அவரிடம் கேட்பதும்....?'

'பிறகு?'

'அவரைப்பற்றி உங்களுக்கு என்ன கவலை?... உம்.... கிழவர் இதை எதிர்த்து ஒரு வார்த்தை கூடச் சொன்ஞல்தானே?'

'அப்படியாஞல் அவருக்குப் பிடித்த சம்பந்தம் இது என்று சொல்லுங்கள்.'

'பிடிப்பதாவது. இருக்கவே இருக்காது. அவருக்குத்தான் காலு மகஞயிற்றே! அவர்களுக்கு எதிராக ஏதாவது செய்தால் வீட்டை விடுவதைவிட வேறு வழியில்லை என்பது அவருக்குத் தெரியும்.'

'அப்படியா?.... நீங்கள் இல்லாமல் திருமணமே நடத்திக் காண்பித்து விடுகிறேம் பார் – என்று கூறுகிருன் சங்கர் —''

'பார்த்துவிடலாம்— ''வீடு முழுவதும் நசித்துப்போஞலும் சரி, கழுத்தில் ஏறின மாங்கலியத்தை இறக்கிவிட்டுத்தான் மறு வேலை'' என்று என் அம்மா சொல்கிருள்.'

'செய்ய முடிந்தால் சரிதான்!' மஞேகர் சிந்தனையில் ஆழ்ந்தான். 'ஒருதடவை ஆத்திரத்தில் இருவரையும் பிரித்துவிட முயற்சித் தாலும், வேறு வழியின்றிப் பெண்ணை அவர்களுக்கே கொடுத்துத் தாஞக வேண்டும். இல்லாவிட்டால் உறவினருக்குள் பகை மூண்டு விடும். அவமானம் வேறு உண்டாகும்.' திடீரென்று மஞேகரின்

எண்ணமே ஏனோ மாறிவிட்டது. குரலிலும் மாற்றம். 'வேண்டாம் தம்பி ! விட்டுத் தொலேயுங்கள்.'

கரைவரை வந்த படகே முறிந்து நொருங்கிவிட்டாற் போலிருந்தது ரண்சோடிற்கு. திடீரென்று கேட்டான்—' ஏன் உங்களுக்கு நம்பிக்கையில்லேயா ?'

'நம்பிக்கையில்லேயென்ருல் இதோ இதை வைத்துக்கொள்ளுங்கள் — அவன் பையைத் திறந்தான். 'இதோ நூறு ரூபாய் இருக்கிறது !' இடது கையில் அணிந்திருந்த தங்கக் காப்பைக் கழற்றிக் கொடுத்தபடி கூறினன் — 'இதையும் உங்களிடம் வைத்துக்கொள்ளுங்கள் ! இப்போது சரிதானே ? நீங்கள் ....'

ரண்சோட் உட்கார்ந்துவிட்டான். 'சொல்லுங்கள்,' மனேகர் யோசித்துப் பேசினன் — 'அந்த விஷயம் சரிவர முடிந்துவிட்டது என்று வைத்துக்கொள்வோம். வேறு மணமகன் வேண்டுமே ? என்ன செய்வது ?'

'நானும் என் அம்மாவும் யோசித்து வைத்திருக்கிறேம்.'

'இது அதைவிடப் பத்துமடங்கு உயர்ந்த இடம்தான். கிடைத்தால் நல்லது— இல்லாவிட்டால்?' மனேகர் தனக்குள் பேசிக் கொள்வதுபோல் மெதுவாகப் பேசினன்.

'சரியாப்போச்சு, பதினைந்து மடங்கு உயர்ந்த இடமாச்சே?' என்று கூறி ரண்சோட் சிரித்தான். 'வீடு எங்கே யிருக்கிறது, சொல்லுங்கள் பார்க்கலாம்.'

'என் தம்பி நாநாதான்.'

'இரண்டாவது திருமணமா ?' மனேகருக்கு ஒரே வியப்பு. ரண்சோட் சிரித்தபடி தலேயசைத்தான்.

'என்ன பித்துப் பிடித்துவிட்டதா உங்களுக்கு ? சக்களத்தி உள்ள இந்தமாதிரி சம்பந்தம் வேண்டாம். வேறு ஏதாவது நல்லதாக இருந்தால் சொல்லுங்கள்.'

'இதென்ன சக்களத்தியைப் பற்றிப் பேசுகிறீர்கள் ? உங்களுக்குத் தெரியாதா ? திருமணமாகி மூன்று வருடங்களாகிவிட்டன. இன்னும் அவளே வீட்டிற்கு அழைத்து வரவில்லே. அது தெரியுமா ! முடம் வேறு. போதாததற்கு மகா ஆத்திரக்காரி !'

மனேகருக்கு இது பிடித்திருந்தது. பரமாவைப் போன்றவர்களின் வீடு— அதுவும் நாநா உண்மையில் அழகன். என்ன நேரிடுமோ என்று பயந்து மறுபடியும் தயங்கினன் அவன்— 'தொல்லேக்குமேல் தொல்லேயை ஏன் வரவழைத்துக் கொள்

கிறீர்கள் ! உற்ருர் உறவினர்கள் எல்லோரும் உங்களைக் கசக்கிப் பிழிந்துவிடுவார்களே.'

'நிலத்தையே விற்க நேர்ந்தாலும் சரி, காலுவிற்குப் பார்த்திருக்கும் பெண்ணை நாநாவிற்குத்தான் கொடுக்கவேண்டும் என்கிருள் என் அம்மா !'

'அது கிடக்கட்டும்— எத்தனை பணம் கொடுத்தாலும்—' ஒரு கணம் மௌனமாக இருந்துவிட்டுப் பிறகு தனக்குள் கூறிக் கொண்டான்— 'இது சரியாக நடக்கும் என்று எனக்குத் தோன்றவில்லை.'

'ஏன் நடக்காது ? எனக்கு ஒரு முறை உக்கா குடிக்கக் கொடுங்கள். இன்று இரவு கழிவதற்குள் எல்லாம் சரியாக நடந்துவிட்டது எனும் செய்தியை உங்களிடம் வந்து சொல்கிறேன்....'

'ஆனால் இதோ பாருங்கள் ஒரு விஷயம். சுற்றத்தாருக்குள் ஏதாவது சண்டை சச்சரவு வந்து பணம் ஈடுகட்ட நேர்ந்தால் அதற்கு நானே எங்கள் வீட்டுப் பெண்ணே பொறுப்பாளியல்ல. நீங்கள்தான் சமாளிக்கவேண்டும். ஆமாம். நாங்கள் அப்படிச் சொல்லவில்லை என்று பிறகு சொல்லக்கூடாது...'

'எழுதப் படிக்கத் தெரியாது, இல்லாவிட்டால் எழுதிக் கொடுத்து விடுவேன். உங்கள் வீட்டில்தானே எல்லோரும் கூடுவார்கள் ! அவர்களுடன் பேச்சு வார்த்தை நடத்தும்போது என் கழுத்துச் சங்கிலியை வைத்துக்கொள்ளுங்கள். பன்னிரண்டு தோலா எடையுள்ளது அது. சரிதானே ?'

மனேகர் இந்தப் பேச்சில் அதிக கவனம் செலுத்தவில்லை. உக்காவை நிரப்பி ரண்சோடின் கையில் கொடுத்துவிட்டு, யார் யாரைப் பார்க்கவேண்டும், யார் யாருக்கு எவ்வளவு லஞ்சம் கொடுக்கவேண்டும்— என்று விவரித்தான். பிறகு இந்த வாக்கியத்தை அவனுக்கு மனனமாகும்படி சொல்லிக்கொண்டேயிருந்தான்— 'நீங்களே சொல்லுங்கள், எனக்கென்ன வந்தது ? பாவம், கணவனை இழந்து தவிக்கும் அந்தப் பெண்ணுக்கு உதவி செய்யத்தான் இவ்வளவு பாடுபடுகிறேன்.'

'எனக்கு சொல்லத் தேவையில்லை-' என்று கூறியபடியே போகும் வழிக்கும் சேர்த்து நான்கைந்து முறை உக்காவை இழுத்துக்கொண்டான் ரண்சோட் !— 'நீங்கள் பார்த்துக் கொண்டே யிருங்கள். இங்கிருந்து நேராக பேத்தா மடேலின் வீட்டிற்குப் போவேன். நீங்கள் தூங்குவதற்குள் நான்கு கிராமங்

களில் சுற்றி வந்துவிடுவேன்...' என்று சொல்லிக்கொண்டே விட்டை விட்டுக் கிளம்பினான்.

குதிரை மேல் ஒரு பாய்ச்சல் பாய்ந்து ஏறிக்கொண்டான். 'டப் டப்–டப் டப்–டப்' என்று சத்தமிட்டுக்கொண்டு குதிரை கிளம்பியது.

ஒருபுறம் ரண்சோட் கிளம்பிய உடனேயே தன் கணவன் மனோகரிடம் சென்றாள் மனைவி. மறுபுறம் மோங்கி சுவரில் சாய்ந்துகொண்டு அழ ஆரம்பித்தாள்.

திடீரென்று ஏதோ உபாயம் தோன்றிவிட்டாற்போல் எழுந்தாள். தண்ணீர் நிரப்பி வைத்திருக்குமிடத்திலிருந்து தோண்டியையும், குடத்தையும் எடுத்துக்கொண்டு வீட்டைவிட்டுக் கிளம்பினாள்.

கிராமத்தின் எல்லைக்கு முன்னாலேயே நதி இருந்தது. பாத்திரங்களைத் தலையில் வைத்துக்கொண்டு தன் பிறந்தகத்தை நோக்கி விரைந்தாள். ஒன்றேகால் மணி நேரத்தில் சாதாரணமாகப் போய்ச் சேர்ந்துவிடலாம். ஆனால் இன்று ஒரு மணி நேரத்திற்குள் வீட்டை அடைந்துவிட்டாள்.

இதென்ன? தட்டியின் கீழ் பரமா மாமாவின் குதிரை இருந்தது. இந்தக் குதிரை மீது ஏறித்தான் ரண்சோட் வந்திருப்பான் என்று அவள் நினைத்தாள். அவன்தான் கொண்டு வந்து கட்டியிருக்க வேண்டும். ஆகையால் அந்தக் கள்ளன் இங்கு வந்து என்னென்ன சொல்லிக் கொண்டிருக்கிறான் என்று மறைந்திருந்து கேட்க விரும்பினாள். ஆனால் பரமா மாமாவே முற்றத்தில் உட்கார்ந்துகொண்டு உக்கா பிடித்துக்கொண்டிருந்தான். மோங்கி வெளியே தங்கிவிட்டாள். எத்தனையோ ஆண்டுகளுக்குப் பிறகு பரமா மாமாவை அங்கு பார்த்தாள். ஆயினும் 'வாருங்கள்' என்று அழைக்க அவள் விரும்பவில்லை.

'இதென்ன? குழந்தையில்லாமல்?....' தோண்டி–குடத்தை இறக்கியபடியே தாய் கேட்டாள்.

ஆனால் மோங்கி பேசுவதற்குப் பதிலாக அழ ஆரம்பித்தாள். ஒன்று வாலா மாமாவின் அநாதையாயிருக்கும் மகன் காலுவை நினைத்து வருத்தம், இரண்டாவதாக பரமா மாமாவைக் கண்டு என்ன பேசுவது, என்ன பேசாமலிருப்பது என்று புரியாமல் திகைப்பு.

பரமா மாமாவும் இப்போது காலுவுக்கு இதம் செய்பவராகி விட்டாரென்பதை அவள் எங்கே கண்டாள்!

தாயும், மாமாவும் அவளை மிகவும் முயன்று சமாதானப் படுத்தினர். பாவம் மாமாவோ மாமியார் வீட்டுச் சண்டை சச்சரவு பற்றிய கற்பனையிலேயே இருந்தான் — 'கிடக்கட்டும் அம்மா! எந்த வீட்டில்தான் சண்டையும் பூசலும் இல்லை?'

மோங்கி மௌனமாக இருக்க முயற்சித்தாள். ஆனால் அவளால் பேசாமலிருக்க முடியவில்லை — 'மாமா நான் என்னைப் பற்றிக் கவலைப்பட்டு அழவில்லை - வாலா மாமாவின் மகன் காலுவை நினைத்துத்தான் அழுகிறேன்.'

'ஏன் காலுவுக்கு என்ன ஆகிவிட்டது?' கிழவன் பரமா தவித்துவிட்டான்—' அவர்கள் வீட்டில் பிள்ளையார் பூஜை நடக்கப் போகிறது என்று செய்தி இப்போதுதானே வந்தது?'

'அது சரிதான். ஆனால் ....'

மோங்கி ஆரம்பத்திலிருந்து கடைசி வரை எல்லா விஷயத்தை யும் கூறி முடித்தாள்.

கேட்டதும் கிழவனும் மற்ற எல்லோரும் துக்கக் கடலில் அமிழ்ந்து விட்டனர். யமுனா அழ ஆரம்பித்துவிட்டாள். பரமா அழக்கூடக் கொடுத்து வைக்கவில்லை.

திக்பிரமை பிடித்தாற் போல் பரமா வெகு நேரம் உட்கார்ந் திருந்தான். பிறகு திடீரென்று எழுந்தான். 'நீ உன் மாமியார் வீட்டுக்குப் போய்விடு— இல்லாவிட்டால் அவர்கள் இருவரும்—'

தாயும் இதைக் கருதி உடனே அவளைப் புறப்படச் செய்தாள். குதிரையின் மீது சாமான் வைக்கச் சென்ற அண்ணனைத் தடுத்து நிறுத்தினாள் அவள்— 'நீங்கள் அங்கே போய் என்ன செய்யப் போகிறீர்கள்? பாக்கு வெட்டியில் அகப்பட்டுக்கொண்ட பாக் கைப்போல் இருக்கிறது உங்கள் நிலைமை —'

பரமாவின் உள்ளத்தில் பெரும் போராட்டம் நடந்துகொண் டிருந்தது. அவன் காலுவுக்குச் சாதகமாக நடந்துகொண்டால், வீடு–வாசல், சொத்து, சுதந்திரம் மட்டுமா, பிள்ளைகளைக் கூடத் துறக்க நேரிடும். எதிர் மாறாக நடந்துகொண்டால் ஏழேழு தலை முறையின் மானம் மரியாதையில் மண் விழுந்துவிடும்.

ஆயினும் குதிரையின் மேல் சாமானை ஏற்றினான். லகானைப் பிடித்துச் சரிசெய்தான், இரண்டு மூச்சுப் புகைபிடிப்பதற்காக உக்காவை எடுத்தான் ...

இருமுறைகூடப் புகைபிடிக்கவில்லை, அதற்குள் 'டப் டப்' என்று குதிரையின் ஓசை கேட்க ஆரம்பித்துவிட்டது. குதிரை சகோதரியினுடையது. ஆனால் அதில் குலத்துக் கொள்ளி உட்கார்ந்திருந்தது. தன் குலத்தைக் கெடுக்கவந்த கோடரி.... கிழவனின் கண்கள் மட்டுமல்ல, வாயிலிருந்தும் நெருப்பு ஜ்வாலை வீசஆரம்பித்தது.

ஆனால் மகனுடைய நிலைமை பரிதாபமாக வல்லவா இருந்தது. குதிரையை விட அதிகமாக அவனுக்கு மூச்சுத் திணறிற்று. இருவருக்குமிடையே பேதைப்பெண் யமுனா உயிருடனேயே சுட்டெறிக்கப் பட்டவள் போலாகிவிட்டாள். குதிரையைக் கட்டிக்கொண்டிருக்கும் ரண்சோட்டை மிகவும் கஷ்டப்பட்டு 'வாப்பா ரண்சோட்' என்று அழைத்தாள்.

ஆனால் ரண்சோடின் செவிகள் அதைக் கேட்கவில்லை. குதிரையை விட்டுவிட்டுக் கிழவனிடம் கூறினான் — 'உங்களுக்கும் எங்களுக்கும் நல்லது செய்ய விரும்பினால் இரண்டு நாட்களுக்கு இங்கேயே நீங்கள் இருக்கும்படி அம்மா சொல்லியனுப்பினாள் — இல்லாவிட்டால்—'

'நீயும் உன் அம்மாவும்—' கிழவன் சுய நினைவை மட்டுமிழக்கவில்லை, அறிவையும் இழந்துவிட்டான். கேட்கமுடியாத வசை மொழிகளைக் கூறிக்கொண்டே எழுந்திருந்தான். 'குதிரையைக் கட்டு— இல்லாவிட்டால் நீ....'

'சரி, வா அதுவரையில்!' என்று கூறியபடி காளையைப்போல் கத்திக்கொண்டு எழுந்தான் கிழவன்.

யமுனா புரிந்துகொண்டாள். பிறருடைய கிராமத்தில் — என் வீட்டுவாசலில் தந்தையும் மகனும் எங்காவது அடித்துக்கொள்ளப் போகிறார்களே என்ற பயத்தால் அவள் ஓடினாள். அண்ணனைப் பிடித்துக்கொண்டு, ரண்சோடிடம் கூறினாள் —'விவரம் தெரிந்தவன், விட்டு விடு—என் குதிரையை எடுத்துக்கொண்டு கிளம்பு, உம்.... அன்னியர் கிராமத்திலே என் மானத்தைப் போக்கி விடாதேயப்பா.'

நேரமாகி விட்டதாலோ, அல்லது கிழவனின் கோபத்தைக் கண்டு அஞ்சியோ எந்தக் குதிரைமீது ஏறி வந்தானோ அதே குதிரை மீது ரண்சோட் ஏறிக்கொண்டான். ஆனாலும் கிழவனை அவன் எச்சரிக்கத் தவறவில்லை.

'இப்போது எனக்கு நேரமாகிவிட்டது. ஆனால் வீட்டுக்குவந்து நியாயம் பேசினீர்களோ, அப்புறம் தெரியும்.'

'நாசமாய்ப் போகட்டும் உன் வீடு,' என்று கூறியபடியே யமுனா தன் அண்ணனை அழைத்துக்கொண்டு சென்றாள்—'வாங்க அண்ணே! நீங்கள் போகவேண்டாம். காலுவின் தலையெழுத்துப் படி நடக்கட்டும்.'

கிழவனும் பித்தனைப்போல் அவளால் இழுக்கப்பட்டு உள்ளே சென்றான். கட்டிலில் போய் உட்கார்ந்ததுமே வாய்விட்டு அலறி அழுதான்— 'அட தெய்வமே! என் பிள்ளைகள் இப்படி குலத்துக்குக் கொள்ளியாகி விட்டனவே! கடவுள் உன்னை நரகத் துக்கு அனுப்பட்டும். நீ உயிருடன் புழுத்துச் சாக வேண்டும்... உன் வம்சமே அழிந்து....'

ஆனால் அதே சமயத்தில் யமுனா கிழவனின் வாயைப் பொத்தினாள். 'இதென்ன அண்ணே நீங்கள் பேசுகிறீர்கள்! உங்கள் அறிவு எங்கே போய் விட்டது?'

# 12

## வஞ்சகரின் வஞ்சகம்

முற்றத்தில் தட்டியின் கீழ் கட்டப்பட்டிருந்த எருதுகளுக்கு வைக்கோல் போடப்பட்டிருந்தது. எருமைகளுக்கும் பசுமாடுகளுக்கும் சோளத்தட்டை போடப்பட்டது. பெண்கள் வீட்டைப் பெருக்குவதிலும், தண்ணீர் கொண்டுவருவதிலும் பொங்கல் தயார் செய்வதிலும் முனைந்திருந்தனர். ஆடவர் கூட்டம் உக்கா உறிஞ்சிக் கொண்டிருந்தது. ஏழெட்டு மாதத்துக் களைப்பைப் போக்கிக் கொள்பவர்போல் அவர்கள் உட்கார்ந்திருந்தனர்.

மாடுகள் மேயக் கிளம்பியதும் ஐந்தாறு கிராமத்துப் பஞ்சாயத்துதாரர்கள் வர ஆரம்பித்தனர். சிலர் குதிரை சவாரி செய்தபடி வந்துகொண்டிருந்தனர். ஐந்தாறு பேர் சேர்ந்து உக்கா பிடித்தபடி நடந்து வந்துகொண்டிருந்தனர்.

கிட்டத்தட்ட கிராமத்து மக்களனைவரும் சிந்தனையிலாழ்ந்தனர். 'இன்றுதான் விருந்து கிடையாதே. பின்பு இவர்களுக்கு என்ன வேலை?' சங்கர், யமுனையின் கணவன் பூல்ஜி ஆகியோருக்கு விஷயம் புரிந்துவிட்டது. காலுவின் தாய்க்கோ சித்தப்பிரமையே பிடித்துவிடும் போலிருந்தது.

இரண்டு மணி நேரத்திற்குள் கோதரின் வீட்டு வரந்தாவில் விரிக்கப்பட்டிருந்த பாயில் கூட்டம் நிரம்பி வழிந்தது. ரண்சோட் முக்கியமான கிராம அதிகாரிகளைத்தான் அழைத்திருந்தான். ஆனால் ஒவ்வொருவரும் ம்முடன் ஐந்தாறு தோழர்களின்றி எப்படி வருவர்?

இரண்டு கட்சிகள் தெளிவாகக் காணப்பட்டன. ஒன்று மனோகர்–ரண்சோட் கட்சி, மற்றொன்று சங்கரி-பூல்ஜி கட்சி. பலர் ஒரு கட்சியையும் சாராதவர். நல்ல எண்ணமற்ற போக்கிரிகள். ஏன் அழைக்கப்பட்டார்கள் என்றே புரியவில்லை. பேத்தா படேல் பார்ப்பதற்கு அறிவாளி போல் காணப்பட்டார். உள்ளே கள்ளம் நிறைந்திருந்தது. வெளிவேஷம் பூண்டிருந்தார் அவர். கிராமத்து நாவிதர்கள் உக்கா பிடித்தபடி உட்கார்ந்திருந்தனர். பஞ்சாயத்து பேச்சை ஆரம்பித்தது.

வழக்கு மிகவும் நியாயமானதாகக் காணப்பட வேண்டும் என்பதற்காக, ரண்சோடின் பணத்தால் கழுத்து வரை நிரம்பி வழிந்துகொண்டிருந்த பேத்தாபடேல் ஆரம்பித்தார் — 'எல்

லோரும் கேளுங்கள். பெண் வீட்டார் கூறுகிறார்கள்-ஐந்தாறு ஆண்டுகளுக்கு முன்பே பெண்ணின் திருமணம் நிச்சயிக்கப்பட்டு விட்டதாம். அதுவும் எல்லோருடைய விருப்பத்திற்கும் மாறாக. ஆனால் யாருடைய அதிகாரத்துக்குக் கட்டுப்பட்டோ திருமணம் நிச்சயமாகிவிட்டது.'

சங்கர் வெளிப்படையாக எதிர்த்தான் — 'யாரது இப்படிப் பேசுவது? கல்லா அண்ணனுக்கும் இதை முடித்து வைத்தவர் என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். அவர்களுக்கு விருப்ப மில்லையானால் சம்பந்தியின் வீட்டை ஏன் செப்பனிட்டுத் தருகிறார்? அவ்வப்போது கழனியிலும் உதவி செய்துகொண்டு வருகிறார்? — சம்பந்தி நன்கு இருக்கவேண்டும் என்பதற்காகத் தானே? மகளின் நலனைக் கருதித்தானே?'

வராந்தாவில் அமர்ந்திருந்தவர்களில் முக்கால் வாசிப்பேர் தலையசைத்தபடி கூறினர் — 'சரியான பேச்சுத்தான் தம்பி!'

'கல்லா உயிருடன் இருந்தால் கவலையே இருக்காது. ஆனால் அவருடைய சின்னஞ்சிறு குழந்தைகள் தான் இப்போது இருக்கின் றனர். இந்த நிலையில் யார் மகளைக் காப்பாற்றுவார்கள்?' மனோகர் மிகவும் இனிமையாகக் கேட்டார். 'இதைப் பற்றியும் யோசித்தாகவேண்டும்' வரந்தாவிலிருந்து ஒலி கிளம்பியது.

'அப்படியிருக்க இவர்கள் ஏன் லக்கினப் பத்திரிகையை அனுப்பினார்கள்? மணமகன் அப்படியே இருக்க வேண்டியது தானே?' காலுவின் அத்தையுடைய கணவன் பூல்ஜி கர்ஜித்தான். அவனுடன் ஐந்தாறு பேர் எழுந்து நின்றுவிட்டனர். — 'நீங்கள் எல்லோரும் என்ன எண்ணிக் கொண்டிருக்கிறீர்கள்? ஏழையை அவமானப்படுத்த திட்டமா வகுக்கிறீர்கள்?'

ரண்சோட் எழுந்து நின்றான். 'நீங்கள் எல்லோரும் சண்டை போட ஆரம்பித்துவிட்டீர்களே—ஒரு பெண்ணின் வாழ்வைக் கெடுக்கவா நீங்கள் நினைக்கிறீர்கள்?' ரண்சோடுடன் பத்துப்பேர் எழுந்தனர். அவர்களில் மனோகரும் அவனுடைய சீடர்களும் முக்கியமானவர்கள். ஆனால் மனோகரைப் பழிவாங்கியவன் அவனுடைய மகனேதான் -'என் தந்தையின் புத்தி தடுமாற்றம் கண்டுவிட்டது. நீங்கள் நியாயம் தெரிந்தவர்கள். நீங்களே நன்றாக யோசித்துப் பாருங்கள்!'

மகன் மணமகளின் சார்பில் பேச வந்திருக்கிறான் என்பது மனோகருக்குத் தெளிவாகப் புரிந்தது. அவனுடைய கண்கள்

சிவந்தன. உடனே மகன் பேரில் சீறி விழுந்தான் — 'முளைத்து மூன்று இலை விடவில்லை. இதென்ன நீ? பஞ்சாயத்துக்கு முன்னே இப்படிப் பேசுகிறாய்?'

ஆனால் அந்த இளைஞனுடன் இன்னும் பத்துப் பேர் சேர்ந்து நின்றுகொண்டனர்— 'அடே! நீ அப்பனாக இருந்தால் என்ன வந்துவிட்டது? பஞ்சாயத்துக்கு முன்பு வந்து நின்று பார். பிறகு புரியும்....'

'வேட்டியைக் கூடக் கட்டிக்கொள்ளத் தெரியாது, நீ தீர்ப்புக் கூற வந்துவிட்டாயா?' பாராபட்சமின்றி இருப்பவர் போல் காணப்பட்டவரும் ஆரம்பித்துவிட்டனர்.

விவகாரம் முற்ற ஆரம்பித்தது. சங்கருக்கும் ரணசோடுக்கும் கைகலப்புக்கூட நடந்துவிட்டது. மக்கள் கதிகலங்கிவிட்டனர். இரு பக்கத்தாரும் அரிசி பருப்புப் போல் கலந்திருந்தனர். ஆகையால் இங்குமங்குமாக ஏச்சும் பேச்சும் கேட்டது. ஓரிரு இடங்களிலிருந்து அடியோசை கூட கிளம்பியது.

வராந்தாவிற்கு வெளியே பெண்டிர் குழந்தைகளுடன் கிராமம் முழுதும் திரண்டு வந்திருந்தது. அடிதடி சண்டையைக் கண்ட பெண்டிர் அங்கிருந்து நழுவ ஆரம்பித்தனர். குழந்தைகள் அழ ஆரம்பித்தன.

இதுவரை சும்மா உட்கார்ந்திருந்த பேத்தா படேலின் தொப்பை சற்று அசைந்து கொடுத்தது. தன் பருத்த உடலைத் தூக்கிக் கொண்டு நிமிர்ந்து உட்கார்ந்தபடி கடுங்குரலுடன் பேசினார்—

'இதென்ன குறப்பாளையம் இது? எல்லோரையும் அவரவர் வீட்டுக்கு அனுப்பு. இவர்களே தங்களுக்குள் தீர்ப்பு செய்து கொள்வார்கள். நீங்கள் போகலாம்!'

பேத்தா படேல் எழுந்திருக்கவில்லை. ஆனால் அவரருகேயிருந்த நான்கைந்து முதியோர் எழுந்தனர். 'சண்டை போடுபவர்கள் எல்லோரும் கிளம்புங்கள். உம், வெளியே போங்கள்! நீங்க தடியால் தீர்ப்புக் கூறிக்கொள்ளுங்கள் — நாங்கள் போய் வருகிறோம்.'

வராந்தாவிலிருந்த எல்லோரும் எழுந்து நின்றனர். பேத்தா படேல் மட்டும் எழுந்திருக்கவில்லை. கிழவர்கள் எல்லோரும் தத்தம் தடிகளை எடுத்துக்கொண்டு தயாராகிவிட்டனர்.

அவர்கள் வெளிக் கிளம்புவதற்கு முன் இரண்டு கட்சிக்காரர்களும் சண்டை போடுவதை விட்டு விட்டு அவர்களைக் கெஞ்சிக்

கேட்க ஆரம்பித்தனர். 'பஞ்சாயத்தைக் கலக்கும் குற்றம் நாங்கள் செய்வதா? இந்தப் பஞ்சாயத்தின் பேரில் ஆணை. நீங்கள் திரும்பி வரவேண்டும். யார் இதை விட்டுப் போனாலும் அவர்களுக்குப் பிரம்மகத்தி செய்த பாவம்!'

இவர்கள் திரும்பி வந்ததும் பேத்தா படேலுக்கு வயிற்றை என்னமோ செய்தது. பக்கத்திலிருந்த தலைப்பாகையையும் சத்தியையும் எடுத்துக்கொண்டார் — 'நம் வார்த்தைக்கு மதிப்புக் கிடையாது. வீட்டிலே சாப்பிடச் சாப்பாடா இல்லை, என்ன நியாயம் வேண்டிக் கிடக்கிறது? என்ன தீர்ப்பு வேண்டிக் கிடக்கிறது?'

அவரை உட்கார வைப்பதற்குள் இரு கட்சிக்காரர்களுக்கும் போதும் போது மென்றாகிவிட்டது. 'நீங்கள் சொல்வதை நாங்கள் அப்படியே கேட்போம். தீர்ப்பளிப்பவர் திருநீலகண்டனுக்குச் சமம். நீங்கள் கூறுவதை இரண்டு கட்சிக்காரர்களும் ஒப்புக் கொள்கிறோம்!' என்றும் வாக்களிக்க நேர்ந்தது.

இந்தப் பேட்டையில் பேத்தா படேலுக்குத் தீர்ப்பளிப்பவரில் முதல் இடம் அளிக்கப்பட்டிருந்தது. கிராமத் தலைவர்களும் ஜமீன்தாரர்களும் அவருடைய கருத்தைக் கேட்டு வந்தனர். வியாபாரிகளும் கூட அவரை மதித்து வந்தனர். வயது நாற்பத்தைந்து தான். ஆயினும் உடலைப் பார்த்தால் அறுபது வயது என்று சொல்லலாம். தீர்ப்பளிக்கும்போது அவர் பதினேழு வயது இளைஞனைப் போல் காட்சியளிப்பார்.

எதிர் கட்சியைத் தோற்கடிக்க அவரிடம் விசித்திரமான தர்க்கங்கள் இருந்தன. சச்சரவு கொஞ்சம் சிக்கலானதாக இருந்தால், இன்னும் சிக்கலாக்கிவிட்டுப் பிறகு அதை எதிர்ப்பவர்களைப் பிரச்சனையைத் தீர்க்க அழைப்பார். பிறகு சட்டென்று அதற்குத் தீர்வு காண்பித்து விட்டு எல்லோர் வாயையும் மூடிவிடுவார்.

உண்மையில் பேத்தா படேலே ஒரு புரியாத புதிர்தான். அவர் யாருக்கு நலன் செய்வார், யாருக்குக் கெடுதல் செய்வார் என்று நிச்சயிப்பது கடினம். வெளிப்படையாக லஞ்சம் வாங்குவார். ஆனால் எவரை எதிர்க்கும் தெம்பு இதுவரை யாருக்கும் ஏற்பட்டதேயில்லை. உடன் பிறந்தவனுக்குக் கூட அவர் இதம் செய்பவரல்ல, அப்படியிருந்தும் எல்லாரும் அவரைத் தன்னுடன் சேர்ந்தவராகக் கருதினர்.

சிறு சச்சரவுகளில் அவர் தன் மண்டையை உடைத்துக்

கொள்ள மாட்டார். ஆனால் சற்றுச் சிக்கலான பிரச்சனை வந்ததோ போதும், ஒரு கல்லில் இரண்டு, மாங்காயல்ல இருபத்திரண்டு மாங்காய் அடித்து விடுவார். வருடாந்திர அபினி, துணி, சாப்பாடு எல்லாவற்றிற்கும் வழி செய்துவிடுவார்.

சங்கர், பூல்ஜி போன்றவர்களை, காலுவின் தரப்பில் இருப்பவர்களை, ஒரு மூலைக்கு அழைத்துச் சென்று பேத்தா படேல் கூறினார்— 'பெண்ணைப் பற்றிய பிடிவாதத்தை விட்டுவிடுங்கள். பெண்ணின் மாமா பந்தலுக்குப் பெண்ணை அழைத்து வரவே மாட்டான் போலிருக்கிறது. அப்படியிருக்க உங்கள் மணமகன் யாரை மணக்கப் போகிறான்? வீட்டுக்குப் பெரியவன் உயிருடனிருந்தால், அது வேறு விஷயம்.... அந்தப் பெண்ணோ, பாவம் கைம்பெண்ணாகி விட்டாள். அவள் சின்னஞ்சிறு குழந்தைகளை வளர்த்து ஆளாக்கியாக வேண்டும். ஏதாவது பணமுள்ள இடம் ஆதாரமாக இருந்தாலும் போகட்டும் எனலாம். வற்புறுத்தித் திருமணம் செய்விக்க நம்ம ராஜ்யமா நடக்கிறது?'

'ராஜ்யத்தில் குறைகூறிப் பார்ப்போம்,' பூல்ஜி கூறினார். 'ஆனால் அரசாங்கமும் சுற்றத்து மக்களிடம்தானே கேட்கும்! வீணாக எல்லோரையும் பகைத்துக்கொள்ள நேரிடும்!' பேத்தா சிரித்தார்— 'நீங்களே யோசித்துப் பாருங்கள். அரசாங்கத்துடனா விவாதிக்கப்போகிறீர்கள். பெண்ணைக் கொடுப்பது—வாங்குவது பற்றி....'

'பெண்ணை விட்டு விட்டு அவமானப் பட்டுக்கொண்டு போவதா என்ன? நிச்சயம் செய்த பிறகு மணமகனுக்கு இப்படி ஒரு நிலை உலகில் எங்காவது வந்ததுண்டா?' பூல்ஜி கோபித்துக் கொண்டார்.

'ஒரு தடவை இந்தப் பெண் விஷயத்தை முடித்து விடுவோம்' கனத்த ரோமங்கள் நிறைந்த புருவத்தை நெறித்துக்கொண்டு பேத்தா ஒரு சிரிப்புச் சிரித்தார். விஷயம் ரகசியமாக இருந்த போதிலும் வராந்தாவில் உட்கார்ந்திருந்தோரில் பாதிக் கூட்டம் இங்கு வந்து நின்றுவிட்டது.

மற்ற மக்களுக்கெதிரே மற்றும் சில பெரியவர்கள் பெரிய சிற்றுரை நடத்திக் கொண்டிருந்தனர். மக்கள் கருத்தை நிலைநாட்டும் முயற்சியில் அவர்கள் ஈடுபட்டிருந்தனர், 'நாம் நீதம்—அநீதம் என்று எதையோ செய்துகொண்டு போகிறோம். யாராவது அந்தப் பேதைக் கைம்பெண்ணைப்பற்றி நினைத்துப் பார்த்தீர்

களா? அப்படியிருந்தால் ஏழெட்டு வருடங்களுக்கு முன் நிச்சயித்திருந்த திருமணத்தை நிறுத்த யாருக்காவது மனம் வருமா?...'

சங்கர் பூல்ஜி இருவருடைய காதிலும் பேத்தாபடேல் ஏதோ ரகசியமாகக் கூறினர்—'பூல்ஜி! நீங்கள் ஒன்றுமே அறியாதவர். பெண்ணை ஊட்டி வளர்த்து விட்டார்களா என்ன அவர்கள்! எதற்கும் நன்ருக யோசித்துக் கூறுங்கள். இது நம் கௌரவத்தைப் பற்றிய பிரச்சனே.'

நம் விஷயம் இங்கு செல்லாது என்று சங்கரும் பூல்ஜியும் புரிந்து கொண்டுவிட்டனர். பேத்தாபடேலின் அபிப்பிராயம் கெட்டதா என்ன?

பூல்ஜி தன் கட்சிக்காரர்களை அழைத்துக்கொண்டு வீட்டிற்குப் பின்புறம் சென்ருர். அவருடன் சங்கர், காசம், பேசாத் மற்றும் நான்கைந்து பேர் இருந்தனர். மாவ்ஜீயின் மகனும் எங்கோ ஒளிந்துகொண்டான். பேசாத், காசம் இருவருக்கும் இந்தப் பஞ்சாயத்துத் தீர்ப்பு சற்றும் பிடிக்கவில்லை, ஆயினும் என்ன செய்வார்கள். தங்கள் சுற்றத்தாரில்லை அவர்கள். ஆயினும் இரண்டு மூன்று முறை கூறிப் பார்த்துவிட்டான் சங்கர்: 'இரவோடு இரவாகப் பெண்ணை எடுத்துக்கொண்டு போய் காலுவுடன் திருமணம் செய்துவைத்தால் என்ன? அப்போது இவர்கள் என்ன வேண்டுமானலும் செய்துகொள்ளட்டும்.'

சங்கருக்கும் இது பிடித்திருந்தது. இதெப்படி முடியும் என்று பேசாத் சந்தேகமடைந்தான். திருமணம் செய்துவிடலாம். ஆனல் சுற்றத்தார் சும்மாவிட்டால் தானே? சதுர்த்தி விரதம் அனுஷ்டிக்காத குடும்பத்தில் திருமணம் செய்துவைத்து என்ன பயன்? பெண் பெரியவளாகிவிட்டாள். அவளை அனுப்பிவிடலாம்! சுற்றத்தாரே அனுப்பிவைத்து விட்டார்களானல் பின்பு பிறருடைய சிபாரிசு ஏன் தேவைப்படப் போகிறது?

எல்லாவற்றையும் சிந்தித்துப் பார்த்த பிறகு பேத்தாபடேலின் வார்த்தை சரி என்று பட்டது. மானத்தை வாங்கியதற்காக இருநூற்று இருபது ரூபாய் அபராதம் விதிப்பது என்று நிச்சயிக்கப்பட்டது.

ஆனல் இருநூற்று இருபது ரூபாய்க்குப் பதிலாக நானூற்று இருபதுரூபாய் கேட்டால் கூட ரண்சோட் தருவதற்குத் தயாராக இருந்தது இவர்களுக்கு எங்கே தெரியும்! காலுவின் முறைப்

பெண் அவனை மணக்கக் கூடாது என்பதுதானே அவனது ஒரே குறிக்கோள். பிறகு பேத்தாபடேல் அவனிடம் கூறினான் — 'நாங்கள் சென்ற பிறகு உங்களுக்குள் எப்படியோ சமாளித்துக் கொள்ளுங்கள். முடிந்தால் அங்கேயே திருமணத்தை முடித்து விடுங்கள் .... எனக்கென்ன வந்தது?'

நாற்புறத்திலும் இருந்தவருடைய கருத்தைச் சேகரித்த பிறகு பேத்தாபடேல் தீர்ப்பளித்தார் — 'பெண்ணை அவளுடைய தாய் தந்தையர் விரும்பும் இடத்தில் மணம் செய்துகொடுக்கலாம். ஆனால் எப்போது? வாலாபடேலின் மகனுடைய வீட்டிலிருந்து லக்கினப் பத்திரிகையைத் திரும்பப் பெற்ற பிறகு!' அதே லக்கினப் பத்திரிகைக்குப் பதிலாக இருநூற்று இருபது ரூபாய் தரப்பட்டது.

ஆனால் இந்த ரூபாயை யார் வாங்கிக்கொள்வது? பூல்ஜி தீர்ப்பைக் கேட்டவுடனேயே கோபித்துக்கொண்டு குதிரைமீது போய் ஏறிக்கொண்டார். ஜாடைசெய்து சங்கரிடம் ஏதோ கூறி அவனைச் சமாதானப்படுத்தினார் பேத்தாபடேல் — 'உம்! கட்டிக் கொள்ளுங்கள். அதே மாடு, அதே தொழுவம்!' சங்கர் ரூபாயைப் பெற்றுக்கொண்டான், ஆனால் — 'பேத்தாபடேல், பார்த்துக் கொண்டே இருங்கள். உங்கள் பேரில் நம்பிக்கை கொண்டு ஒப்புக் கொள்கிறேன். நிச்சயமான திருமணத்தை நிறுத்திவிடக் கூடாது!' என்று கூறினான்.

யாரோ ஒரு கேள்வி கேட்டு வைத்தார்கள் — 'மணமகளை வேண், டாம் என்றாகி விட்டது. ஆனால் அவளை யாருக்குக் கொடுப்பது?'

'அவளுடைய சுற்றத்தார் எங்கு கொடுக்க விரும்புகிறார்களோ, நமக்கு அதைப்பற்றி என்ன? கிளம்புங்கள். சாப்பிடப் போக வேண்டும்!' என்று கூறியபடியே சங்கர் எழுந்தான். அவனுடன் கூட எல்லோரும் எழுந்தனர்.

சங்கர், பேசாத் முதலியவர்கள் கிளம்பிவிட்டனர். இங்கு சாப் பாடு நடந்துகொண்டிருந்தது. காலுவின் வீட்டில் ஒரே அமர்க் களம். சங்கர் கிழவியைச் சமாதானப் படுத்தினான். ஆயினும் தாயின் உள்ளம் சம்மதிக்கவில்லை. அழகும் சமர்த்துமான ராஜியை இழக்க அவளது மனம் ஒப்பவில்லை.

வயிறும் சட்டைப்பையும் நிரம்பியவுடன் குதிரை மேல் ஏறிய பேத்தா படேல் சங்கருக்கு அழைப்பு விடுவித்திருந்தார். இதைக் கண்ட கிழவியின் கண்ணீர் குறைந்துவிட்டது. மகனுக்கு அவளு

டன் மணம் நடக்க வழியில்லை என்றும் அவளுக்குத் தோன்றிற்று. அந்தராத்மா விம்மிக்கொண்டேயிருந்தது — 'அடடா! கெட்டவர்கள் தம் காரியத்தைச் சாதித்துவிட்டார்களே! அட கொலைகாரா!' பெருமூச்செறிந்தபடி இறைவனிடம் கேட்பதுபோல் பொருமிப் போனாள் — 'இவ்வளவு பெரிய பஞ்சாயத்தில் நேர்மையான மனிதன் ஒருவன் கூடக் கிடையாதா? நியாயத்தை எடுத்துச் சொல்பவரே இல்லையா?'

13

## பரமா படேலின் வருத்தம்

சுற்றத்தார் அனைவரும் சென்ற பிறகு கிராமம் முழுதுமே வெறிச்சென்றாகிவிட்டது. வாலாவின் வீட்டில் பாலில் புளி வீழ்ந்தாற்போலாகி விட்டது. ரண்சோடின் வீட்டில் ரகசியமாக ஏதோ சூழ்ச்சி நடந்துகொண்டிருந்தது. கோதரின் வீட்டில் அவனுடைய தாய்க்கே அழுவதா சிரிப்பதா என்று புரியவில்லை.

பெண்ணே குதிரை மீதேறி ஊர்வலம் வரவில்லை, காலு எப்படி வரப்போகிறான்? கிராமம் முழுதும் கவலையில் ஆழ்ந்துவிட்டது. 'காலு இப்படியே இருக்கவேண்டியதுதானா?' மற்றும் சிலர் கூறினர் — 'அது கிடக்கட்டும். ராஜியை மணக்க எந்தக் கிராமத்திலிருந்து மணமகன் வருவான்?'

ஆனால் இந்தப் பிரச்சனை அடுத்த நாள் காலையிலேயே தீர்ந்துவிட்டது. நாவிதன் வீடு வீடாகச் சென்று கூறிவந்தான் — 'பரமா ஐயா வீட்டு நாநா பிள்ளையார் பூஜை செய்யப் போகிறார். எல்லோரும் அவர்கள் வீட்டுக்கு இனிப்புத் தின்ன வாருங்கள்!'

கிழவன் பரமாவுக்குத் தோன்றியது போலவே இந்தக் கிராமத்து மக்கள் எல்லோருக்கும் செய்தி கேட்டதுமே 'இந்தப் பரமா படேல் வீட்டில் என்ன நடக்கப்போகிறது?' என்றுதான் கேட்கத் தோன்றிற்று.

பரமாபடேல் வீடு திரும்பினான். மிடுக்குடன் காலை குதிரை மீதிருந்து எடுத்தான். திருமணப் புடவை உடுத்தி மிகவும் பெருமையுடன் உலாவிக்கொண்டிருந்த மனைவி கூறினாள் — 'ஒரு வார்த்தைகூடப் பேசக்கூடாது. இல்லாவிட்டால் திருமணம் தடைப்பட்டுவிடும்!'

கிழவன் பரமா ஒருபடி மேலே போய்விட்டான். 'திருமணம் தடைப்படாது. உன் வாழ்வுக்கும் என் வாழ்வுக்கும் தான் தடை வரப்போகிறது.' என்று முணுமுணுத்தபடியே குதிரை மீதிருந்து சாமானைக் கீழே இறக்கி வைத்தான். குதிரைமீதிருந்து பூட்டப்பட்ட சேணத்தைத் தளர்த்திக்கொண்டேயிருந்தான். இதற்குள் வெளியே கிளம்பியபடியே ரண்சோட் கட்டளை பிறப்பித்தான்: 'அப்படியே இருக்கட்டும் நாநா. வெளியே கிளம்பவேண்டும் ஊர்வலம்!'

பரமாவின் தலை சுழன்றது — 'நாசமாய்ப் போனுய். எங்கேடா ஊர்வலம்?' அருகில் தாயும் கிராமத்துச் சில பெண்டிரும் இருக்க, நான்கைந்து ஆடவரும் குழந்தைகளும் கேட்டுக்கொண்டிருக்க சுமார் முப்பது வயது காளையால் எப்படி இந்த வசையைப் பொறுக்க முடியும்? மாலியைப் பொருத்தவரை கணவன் எப்போதோ இறந்துவிட்டான். ஆனுல் இப்போது பிள்ளைகளுக் குத் தந்தையும் கிடையாது என்ருகிவிட்டது. காலுவின் சிந்தப்பா தான் உயிருடன் இருக்கிருர் என்பது அவளுடைய கருத்து. ரண்சோட் முற்றத்துப் பக்கத்தில் இருந்த கூரையிலிருந்து ஒரு கம்பை உருவிக்கொண்டு பாய்ந்தான். இதற்குள் இரண்டு மூன்று பேர் இடையே வந்து தடுத்தனர். மாலி அப்போது கூட சொல்லிக்கொண்டு தானிருந்தாள் — 'மிருகத்தை ஒரு போடு போடு, தீர்ந்து ஒழியட்டும்.'

பரமாவின் இடுங்கிய கண்கள் மேலே வந்து நின்றன. கண் களிலிருந்து ரத்தம் கொட்டுவது போலிருந்தது. மாலியை ஒரு தள்ளுத் தள்ளலாமா என்று ஆத்திரம் வந்தது பரமாவிற்கு. பிள்ளையார் பூஜை செய்துகொண்டிருக்கும் அந்தணருடைய ஆச மனம் செய்யும் லோட்டாவை எடுத்து அவருடைய மண்டையில் போட்டால் என்ன, உடையட்டுமே என்று தோன்றிற்று அவ னுக்கு. ஆனுல் என்ன செய்வது? காலனைப்போல் முற்றத்தில் ரண்சோட் நின்றுகொண்டிருந்தான்.

வீண் அவமானம்! இந்த வயதில் கிழவனுக்கு இப்படியும் தோன்றுமா என்றல்லவா எல்லோரும் பேசுவார்கள். குதிரை மீது ஏறச் சென்ருன் : இதற்குள் மாலி வந்தாள்—

'இந்தக் குதிரை உன் பாட்டனுர் வாங்கி ...' இளைய மகன் நாதா வெகு நேரமாக வெறுப்புடன் உட்கார்ந்திருந்தான். தாயை அவன் கடிந்துகொண்டான்.

'போ! உன் அப்பனுடைய சொத்தை எடுத்துக்கொண்டு போ அவனுடைய வீட்டுக்கு !' ரண்சோடைப் பார்த்தபடியே அவன் சீறி விழுந்தான்.

'கிழத் தந்தையை அடிக்குமளவுக்கு உனக்குத் தெம்பு வந்து விட்டதா ?'

ஒரு கணம் நிச்சப்தம் நிலவியது. தந்தையின் சார்பில் இருந்து கொண்டு நாதா இப்படிப் பேசுவான் என்று யாரும் கனவில்

கூடக் கருதவில்லை. மாலி அவனைத் தன் பயந்த சுபாவமுள்ள மகன் என்றே குறிப்பிட்டு வந்தாள்.

உண்மையில் நாதாவின் இந்தப் போக்கு பரமாவிற்கே பிடிக்கவில்லை. நினைத்ததை விடப் பயங்கரமாக ஆகிவிட்டது குடும்பத்தின் எதிர்காலம். ஓரிரு கணங்கள் அவன் பித்துப் பிடித்தவன் போலாகி விட்டான்.

'அதுதானுகி விட்டதே! இன்னும் ஆக என்ன இருக்கிறது?' ரண்சோடும் நாதாவும் ஒருவரை யொருவர் திட்டிக்கொண்டிருந்தனர்.

பரமா மாலியைச் சுட்டிக் காட்டிப் பேசினான் — 'உன் பிள்ளைகளைப் பார்! சாஸ்திரம் படிக்கிறார்கள், கேள். குடும்பத்தில் பகையை நன்றாக மூட்டிவிட்டாய். எல்லாப் பாவமும் உன்னையே வந்து சூழ்ந்து கொள்ளாவிட்டால் ஏன் என்று என்னைக் கேள்!'

கூடவே ஒரே பாய்ச்சலில் குதிரை மீது ஏறிக் கொண்டான். குதிரையைத் தட்டி ஓட்டியபடியே கூறினான். 'உன்னைப் பெற்றார்களே அவர்களையும், நீ பெற்றாயே அவர்களையும் நினைத்து நன்றாக அழு!' குதிரையின் பின்னால் ஒலியிட்ட குளம்போசை கூட மாலியைக் கேலி செய்ததுபோலிருந்தது. இ...இ...இ.

கோபித்துக்கொண்டு செல்லும் பரமாவை அழைத்து வருவதா, அடிதடியில் இறங்கிய இந்த சகோதரர்களைச் சமாதானப் படுத்துவதா, மௌனமாகிவிட்ட மாலிக்குச் சமாதானம் சொல்வதா, அல்லது உள்ளே நடக்கும் பிள்ளையார் பூஜைக்காகப் பாட்டுப் பாடுவதா? மக்களுக்கு ஒன்றுமே புரியவில்லை.

காலுவின் வீட்டில் உட்கார்ந்திருந்த காசம், பேசாத் முதலியோர் மாலி சொல்வதுபோல் ஒருமனத்தவர் போல் இணைந்து காணப்பட்டனர்.

கிழவன் மாவ்ஜியின் பதினைந்து வயது ராமா உரக்கப் பேசியபடி பரமா படேலின் வீட்டில் எரியும் நெருப்புக்கு எண்ணெய் விட்டுக்கொண்டிருந்தான். 'இதோ கேளுங்களேன்! நாநாவிற்காக எல்லோரும் பாடுகின்றனர். மாலி பாடுகிறாள். அவளுடைய பிள்ளைகளும் சேர்ந்து பாடுகின்றனர், பார். ஆகா! என்ன பிரமாதம்!'

இது வேடிக்கைதானே! இரண்டு சகோதரர்களும் தடியை எடுத்துக்கொண்டனர். இடையே மாலி அவர்களைச் சமாதானப் படுத்திக்கொண்டிருந்தாள்.

இருவருக்கும் சண்டை பிரமாதமாக நடந்தது. ரண்சோட்-நாதா இவ்விருவரில் ஒருவனுக்குக் கைமுறிந்தது. மற்றவனுக்கு தலையில் காயம் பட்டது. மாலியின் வளையல்கள் நொருங்கின. இனி என்ன நடக்குமோ, கடவுளுக்குத்தான் வெளிச்சம். கிராமத்து மக்களுக்குப் பச்சாத்தாபமாக இருந்தது. பேசாத்-காசம்—இருவருமே இடையே வர நேர்ந்தது.

நாவிதனின் அழைப்புக்கு வராத மக்கள் இந்த வேடிக்கையைக் காண, அழைப்பின்றியே வந்து கூடிவிட்டனர். தமக்குள் கேலியாகப் பேசிக்கொள்ளவும் செய்தனர் — 'நாநா வீட்டில் பிள்ளையார் பூஜை என்று நினைத்தோம், ஆனால் இங்கு மூன்று பிள்ளைகளும் பூஜை நடத்துகிறார்களே !'

வேறொருவன் கூறினான்— 'கிழவியும் உட்கார்ந்து கொண்டாளா? அவளுக்குக் காயம் கொஞ்சமாகவா பட்டிருக்கிறது ?' வீடு முழுதும் மக்கள் பிள்ளையார் பூஜையில் உட்கார்ந்து விட்டனர்.'

'மஞ்சளா பூசிக்கொண்டிருக்கின்றனர். சண்டையால் ரத்தத்தையல்லவா பூசிக்கொண்டிருக்கின்றனர் ! வெறும் மஞ்சள் அவ்வளவு நிறக்காதே. அதனால்தானோ என்னமோ ?'

பரமாவின் வீட்டுச் சண்டையைப் பார்த்து காலுவின் தாய்க்குத் துளிக் கூட மகிழ்ச்சி கிடையாது, வருத்தம்தான் உண்டாயிற்று. பரமா கோபித்துக்கொண்டு போன போது அவள் பின்புறம் ஓடிச் சென்றாள். தெருக் கோடிவரை கேட்கும்படி கத்தினாள்; 'திரும்பி வாருங்கள் ! காலுவின் மீது ஆணை !'

அவளுடைய வார்த்தைகள் காதில் படுவதற்கு முன்னமேயே பரமாவின் குதிரை தெருவைத் தாண்டி ஓடிவிட்டது.

காலுவின் தாய்க்கு இதுமட்டும் காதில் விழுந்தது—'காலுவின் திருமணத்தை நிறுத்தி விட வேண்டாம் !' ரூபா மிகவும் மன நிறைவுடன் பரமாவைப் பார்த்துக்கொண்டே யிருந்தாள் ; 'என்னால்தானே இவன் வீட்டை விட்டுப் போக நேர்ந்தது ?'

கோடைவெயில் காய்ந்துகொண்டிருந்தது. வயல் வெளியிலிருந்து நெருப்புக் காற்று வீசிக் கொண்டிருந்தது. இங்குமங்குமிருந்த கால்நடைகள் ஆலமரம், மாமரம் முதலிய மரங்களின் நிழலில் போய்ப் படுத்துவிட்டன. பறவைகள் கூட இலைகளின் மறைவில் ஒளிந்து கொண்டன. நாற்புறமும் நிச்சப்தம் நிலவியது. இந்தப் பரந்த வெளியில் வேகமாகக் குதிரை மீதேறி

வெள்ளம்போல் விரைந்து கொண்டிருந்தவன் பரமாபடேல் ஒருவன்தான். பின்னல் குளம்புகள் புழுதிமேகத்தையே கிளம்பிக் கொண்டு பறந்தன...

யாருடைய பார்வையாவது அவன்மீது விழுந்தால், 'பாவம், யாரோ வருத்தத்தின் மிகுதியால் குதிரை சவாரி செய்து கொண்டிருக்கிறன்' என்றுதான் கூறுவர்.

## 14

## இறைவனின் திருவுள்ளப்படி

மாலை நேரம் நெருங்கியது. பூல்ஜியின் குதிரை மீது ஏறிக்கொண்டு சங்கர் வந்து சேர்ந்தான். வரும் வழியில் பரமாவையும் இழுத்துக் கொண்டு வந்தான்.

சங்கர் குதிரை மேலிருந்து ஒரு பாய்ச்சல் பாய்ந்து இறங்கிய படி கூறினன் — 'ரூபா சித்தி எங்கே? லக்கினப் பத்திரிகைக்குப் பூசை நடக்கப்போகிறது. கிளம்புங்கள்!'

பரமா தன் வீட்டிற்கு வாழ்த்துக் கூறினன் — 'இப்போது உன் அப்பாவையும் அம்மாவையும் நினைத்துக்கொண்டு அழு. மகனுக்குத் திருமணம் நிச்சயமாகிவிட்டது. ரணசோட் பஞ்சாயத்தை அழைத்து வந்து என்னவேண்டுமானாலும் செய்யட்டும்!'

இருவர் கூறியதும் உண்மைதான். இங்கிருந்து கிளம்பிய பஞ்சாயத்து நாநாவின் மாமனர் வீட்டிற்கு போயச் சேர்ந்தது. 'குற்றச்சாட்டு இதுதான். இந்த மனேகர் படேலுக்கு வேறு வேலை என்ன? யாருடைய திருமணத்தையாவது நிறுத்துவதும் யாருக்காவது நிச்சயம் செய்வதும்தான் வேலை. என் மருமகன் மறுமணம் செய்துகொள்ளும்படி என் மகள் என்ன பாவம் செய்து விட்டாள்? ஏழைகள் என்ருல் எங்களுக்கு மானம்-மரியாதை ஒன்றுமே கிடையாது என்று எண்ணமா?'

ஓரிரண்டு முதியோர்களைத் தவிர மற்றவர்களுக்கு ஆத்திர மாகத்தான் வந்தது. ஏன் வராது? எல்லோரும் ஏழைகள். இருந்தாலும் ஓரிரு தடவை என்ருல் பொருத்துக்கொள்ளலாம். ஆனல் இப்படியா? எல்லோரும் ஒரு குரலில் பேசினர்கள் — 'உங்களைப் போன்ற பெரிய மனிதர்கள் என்ன காரியம் செய்து விட்டனர் பாருங்கள் ... உங்கள் மகனுக்கு இரண்டு திருமணம், எங்களைப் போன்ற ஏழைகளின் திருமணத்துக்குத் தடை!'

பேத்தா படேலிடம் சிலர் கூறினர் — 'தீர்ப்புக் கூறுவதாக இருந்தால் சரியாக கூறுங்கள். இல்லாவிட்டால் இந்தத் தடவை உங்கள் மானம் கப்பலேறிவிடும்.'

நாநாவின் மாமனருக்கு இம்மாதிரி செய்யும்படி கூறியதும், அவருக்கு உதவியதும் பேத்தாபடேல்தான் என்பதை இவர்கள் எங்கே அறிந்திருந்தார்கள்?

பலருடைய பகையை மூட்டிவிட்டு, பாதி நாள் மண்டையைக் குழப்பிக்கொண்ட பிறகு, பேத்தாபடேல் தீர்ப்பளித்தான் — 'ஜகாநர்சியன் மகளுக்குத் திருமணம் நிச்சயமாகிப் பதினைந்து நாட்களுக்குள் மணமகன் இறந்துவிட்டான். காலுவுக்கு அந்தப் பெண்ணை நிச்சயம் செய்யலாம். காலுவுக்கு இப்போது நிச்சயிக்கப்பட்டிருக்கும் பெண் ராஜியை ஜகாநர்சியின் தம்பிக்குக் கொடுக்கலாம்!'

இதைக் கேட்டதும் எல்லோரும் மகிழ்வுற்றனர். சிலர் வாய் விட்டுக் கூறினர் — 'பேத்தா படேல்! பிரமாதம் போங்கள் உங்கள் தீர்ப்பு!'

'பரமாவின் நாநா பிள்ளையார் பூஜைக்கு உட்கார்ந்திருக்கிறானே, அவனுக்கா? காலுவைப் பற்றிக் கவலை தீர்ந்தது. பிறகு இந்த கௌரவமுள்ளவனின் விஷயம்?'

ஆனால் மனோகர் படேலின் இந்தக் கேள்விக்குப் பேத்தா படேல் தெளிவு படக் கூறினான் — 'மனோகர்!' என்று தள்ளி உட்கார்ந்திருந்த மனோகரை உரக்கக் குரல் கொடுத்துக் கூப்பிட்டான். பேத்தா பிறகு ஆரம்பித்தான் —

'உங்கள் நாநா திருமணத்திற்குத் தயாராக இருக்கிறான். அது சரி. அப்படியானால் நானும் ''எழுந்திருங்கள் யாருடைய வீட்டிலிருந்தாவது அரை சேர் மஞ்சள் எடுத்து வந்து பூசி என்னையும் மணமகனுக்கு'' என்று சொல்லலாமல்லவா? எங்கிருந்து பெண்ணை அழைத்து வருகிறார்கள் என்று நானும் பார்க்கிறேனே!'

எல்லோரும் விழுந்து விழுந்து சிரித்தனர். மனோகர் எண்ணெயில் விழுந்த ஈ போலிருந்தான்.

ராஜியை வேறு இடத்தில் மணக்கச் செய்ய எவ்வளவோ முயன்று பார்த்தான். ஆனால் அதில் பேத்தா போன்றவனுக்குந் தன் கைப் பணத்தைச் செலவழிக்க நேரிடுமே? இல்லாவிட்டால் சுற்றத்தாரே தாங்கள் கூறியதை வாபஸ் வாங்கிக்கொள்ள நேரிடுமே. இதனால் அந்த விஷயம் அப்படியே நின்றுவிட்டது. சுற்றத்தாரின் தீர்ப்பே மேலோங்கி விட்டது.

சங்கர் எல்லோர் முன்னிலையிலும் லக்கினப் பத்திரிகை எழுத வைத்தான். ராஜியின் லக்கினப் பத்திரிகை மனோகரைக்கொண்டு எழுதப்பட்டது. பேத்தா படேல் லக்கினப் பத்திரிகைகளைச் சமர்ப்பித்தபடி சங்கருடன் ஜகாவையும் எழுந்து நிற்கச் செய்தான். 'உன் தம்பியையும் மகளையும் பிள்ளையார் பூஜையில் போய் உட்காரச் சொல்!'

சங்கரும் பூல்ஜியின் குதிரை மீது ஏறிக்கொண்டான். வழியில் சந்தித்த பரமாவிற்கு எல்லா விஷயத்தையும் கூறி உடன் அழைத்து வந்தான்.

ஆனால் கிழவன் பரமாவின் வருத்தத்திற்கு எல்லையே இல்லை. வாழ்நாள் முழுவதும் சம்பாதித்த மானம் மரியாதை எல்லாவற்றையும் இந்த பெண்பிள்ளைகள் ஒரு நொடியில் பறக்கவிட்டு விட்டார்கள். பரமாவுக்குத் தன் முகத்தைக் கூடக் காண்பிக்கப் பிடிக்கவில்லை — 'என் மகன்தான் மஞ்சளும் கையுமாக நின்றுவிட்டான்!' ஆனால் என்ன செய்வது?

தற்கொலை செய்துகொள்வதா, அல்லது வீட்டிற்கே நெருப்பு வைத்துவிடலாமா? அன்றி கிழவன் கழுத்தையே முறித்து விடலாமா என்று மாலியால் ஒரு முடிவிற்கும் வர முடியவில்லை.

அந்தப் பக்கம் கட்டிலில் இருந்த ரண்சோட் வருத்தத்தை மறந்து கடவுளிடம் வேண்டிக் கொண்டான் — 'இறைவா! போதும் போதும்! என்னை அழைத்துக்கொண்டு விடு!'

ஒருபுறம் காலுவின் வீட்டில் உபவாசமிருந்த ரூபா விரதத்தை முடித்துக் கொண்டிருந்தாள். மறுபுறம் முற்றத்தில் பாட்டு முழங்கிக் கொண்டிருந்தது —

ஹரி கல்னும் சோகும் நே கல்னோ கோட்டோ
கேசரியாலால் ....

(மலர் மொட்டுகளும் கொத்துப் பூக்களும் சொல்லட்டும், என் காதலனே! உனக்கு அழகான குதிரை ஒன்று வாங்கித் தருவேன்!)

ராஜியின் வீட்டிற்குக் குதிரை மீதேறி மனோகர் வந்தான். வீட்டிலிருப்பவர்களுக்கே மகிழ்ச்சியில்லை, பிறகு கிராமத்தார் எப்படிப் பாட்டுப் பாடுவார்கள்?

இளைஞர் மட்டுமல்ல, முதியோரும் நேற்றைய குறையை மறக்க மனம் விட்டு பாடினர். வில் வித்தையில் வல்லவனை ஒருவன் ஒன்றன் பின் ஒன்றாக அம்பு விடுவதைப் போல் புதிய புதிய பாடல்களைப் பாட ஆரம்பித்தான் காசம் —

'அங்கரேஸ் ஆவ்யோ ரே ஜீதி ஜாத்நோ'

.......... .......... .......... ..........

(வெள்ளைக்காரன், புதிய விதமான தொப்பியுடன் வந்திருக்கிறான். அயல் நாட்டவன் அவன். அவனுடைய வண்டி நிறைய சிலக்கரி, அவனுடைய 'மேடம்' கொஞ்சிக் கொஞ்சிப் பேசுவாள். கொழுத்த சிப்பாயைத் தன்னுடன் அழைத்து வந்திருக்கிறான்.

அவனுடைய 'மேடம்' அதோ, அவளுடைய கன்னங்கள் சிவப்பாக இருக்கின்றன ...... வெள்ளைக்காரன் வந்திருக்கிறான்.)

மக்களுக்கு வெள்ளையன், வண்டி, 'மேடம்' எல்லாமே புதிது. எல்லோரும் கவனத்துடன் கேட்டனர், உற்சாகத்துடன் பாடினர். ஆனால் காசம்தான் எல்லோரையும் விட அதிக மகிழ்ச்சியில் இருந்தான். அவனுடைய ஆட்டமும் தனிப்பட்டதாகத்தானிருந்தது நான்கு நான்கு பேர்களாகச் சேர்த்துக் கொண்டு ஒருவர் தோள் மீது மற்றவர் கை போட்டுக்கொள்ளும்படி செய்து காசம் பாடவும் ஆடவும் ஆரம்பித்தான்.

'காடீஸடப் தயீ நே ஆவீரே ராமா ராட்டோர்'

......... ......... .........

...... ......

[ஷே ராமா ராட்டோர்! வண்டி வேகமாக வந்தது. வண்டி குன்றிற்கருகே நின்றுவிட்டது. வண்டி அசையவில்லை, செல்லவில்லை. கோடரி, மண்வெட்டி எல்லாம் வரவழைக்கும் வண்டி அது. வண்டி ரயில் தண்டவாளத்தை அமைக்கிறது....'குப் குப்' என்று ஓடுகிறது]

பெண்களுக்கும் குஷி பிறந்துவிட்டது. சங்கர், ராமா, நாதா இவர்களுடைய மனைவிகள் ஆடவருடன் சேர்ந்து பாடத் துவங்கினர். வண்டியைப் போல் அசைதல், முன்னும் பின்னும் குனிந்து ஆடுதல், 'குப் குப்!' எனும் சத்தம் — ஐந்து தடவை சேர்ந்து கை தட்டுதல் — இதைப் பாடுபவர்களுக்கு மட்டுமல்ல, பார்ப்பவர்களுக்கும் கூடக் குஷி பிறந்துவிட்டது. அதே பாடல் மறுபடியும் பாடப்பட்டது. இந்தத் தடவை பெண்களும் ஆடவரை போல, ஆனால் இன்னும் அழகாக, அசைந்து ஆடினர். கடைசிவரி பாடும் போதும் மிக அழகாக அசைந்தனர்.

இரவு நேரம். மக்கள் சாப்பிடச் சென்றனர், ஆனால் ஆசையுடன் திரும்பிவரும் எண்ணத்தோடுதான், இவ்விதம் இரவு முழுவதும் பாடல் ஒலித்த வண்ணம் இருந்தது. எதிர் வீட்டுப் பரமா படேலுக்கே அலுத்துவிட்டது என்றால் மாலி, ரணசோட். நாநா போன்றவரைப் பற்றிக் கேட்கவா வேண்டும்? இரவு வேளை, வேறு எங்கே செல்வது?

ஆனால் பகலில் மட்டும் குறைந்த அமர்க்களமா என்ன? வீட்டில் பாட்டு நின்றதும் பெண்களின் பாடல் ஆரம்பித்துவிட்டது. அது போதாதென்று இன்று காலுவின் வீட்டில் எல்லோருக்கும் விருந்து வேறு, கிராமப் பெண்கள் கோட்டையடுப்பு வெட்டுவதி

லும், வாணலியை அடுப்பில் ஏற்றுவதிலும் ஈடுபட்டிருந்தனர். வயது வந்தவர் நிறுவை அளவு இவைப் பற்றிக் கணக்குப் போட்டுக் கொண்டிருந்தனர். —'ஒரு மணங்கு மாவுக்கு இருபத் தாறு சேர் வெல்லம் என்றால் நூற்றுப்பத்து சேர் மாவில் எவ் வளவு வெல்லம் கலக்கவேண்டும்?'

பத்துப் பதினைந்து பேர் சிறு கற்களை வைத்துக் கொண்டு கணக்குப் போட்டனர். ஒரு சாரார் சொல்வதை மற்றவர் ஒப்புக் கொள்ளவில்லை, எப்படி ஒப்புக்கொள்வர்? இருவ ருடைய கணக்கும் ஒன்றாக இருந்தால்தானே மேற்கொண்டு வேலை செய்யலாம்? இவ்விதம் அவர்கள் கணக்குப் போடும் அமளியிலிருந்தனர், மறுபுறம் பாட்டுப் பாடும் பெண்டிர் சுய நினைவிழந்து காணப்பட்டனர். பின் பக்கம் சாப்பாடு தயாரிக்க உலைநீரைக் கொதிக்கவைத்துக் கொண்டிருந்த இளைஞரின் உலகமே விசித்திரமாக இருந்தது. முன்கட்டில் இருந்த பெண் களைக் கண்டு மகிழ்வுறுபவர் போல் அவர்கள் மகிழ்ச்சியால் சிரித்தும், கேலி—பரிகாசம் செய்தபடியும் இருந்தனர்.

இந்த அமளி—துமளியை மாலியால் சகித்துக்கொள்ள முடிய வில்லை. நல்ல வேளையாக அவள் தன் தந்தையின் வீட்டிற்கு, வேறு பேட்டைக்கே சென்று விட்டாள், இல்லாவிட்டால்—

ஆயினும் மயக்கம் வந்தது. ஏன் வராது, கண்களை மூடிக் கொண்டு விட்டாளே தவிர, காதுகள் திறந்துதானே இருந்தன?

மஞ்சளை எடுத்துக்கொண்டு வரும் வண்டியின் ஒலி கேட்டது. அக்கம்பக்கத்து ஆறேழு கிராமங்களிலிருந்து விருந்திற்கு வந் திருந்த பெண்டிர் உரத்த குரலில் பாடி, அந்த மாதத்தில் அது முதல் திருமண நிச்சயதார்த்தம் என்பதைத் திறந்த உள்ளத் துடன் கொண்டாடினர். உற்சாகம் கொண்ட பெண்டிர் பாடல் எனும் கயிற்றுச்சுருக்கை வீசித் தன் கழுத்தை அறுக்க முயற்சிப் பது போல் மாலிக்குத் தோன்றிற்று.

விருந்து ஆரம்பமாகிவிட்டது, இன்னும் பெண்களின் பாடல் கள் நின்றபாடில்லை.

பின்புறத்துப் பேட்டையில் மாலி தனக்குள் சண்டை போட்டுக் கொண்டாள்—'இந்தத் தரித்திரங்கள் பாட வந்திருக்கா. தின்ன வந்திருக்கா? தொண்டையைக் கடவுள் எதாலேதான் செய் திருக்காரோ?'

இரவு முழுதும் மாலி இந்தப் பக்கமும் அந்தப் பக்கமுமாக

புரண்டு படுத்தபடியிருந்தாள். காலுவின் வீட்டில் நாளை விசேஷமான இரவாயிற்றே. அதனால் வேறு அமர்க்களப்பட்டது. ஒரே உற்சாகம்- கால்களுக்கு இரட்டிப்பு தெம்பு வந்து விட்டாற் போலிருந்தது. காதுகளை கொப்பளித்து விடுமோ என்று கூட ஒரு கணம் மாலிக்குத் தோன்றிற்று.

ஆனால் நெஞ்சு குமறிக்கொண்டு வந்தது. மாலி அன்று அழுததைப் போலவே அழுதாள்–தலையை அடித்துக்கொண்டு, தலை மயிரைப் பிய்த்துக்கொண்டு அழுதாள்-'அப்பப்பா! என் மகன் மஞ்சளும் கையுமாக நின்றுவிட்டானே.'

பொழுது விடிந்தவுடனேயே மாலி நாநாவின் வழியாகத் தன் வீட்டிற்குக் 'கட்டளை' விடுத்தாள் -'அந்த காலுவின் வீட்டு ஊர்வலத்திற்கு யாராவது போனீர்களோ, அப்புறம் இந்த வீட்டில் எடுத்து அடி வைக்க விட மாட்டேன்!' கிழவனுக்கும் அதே வார்த்தைகள் தான்.

அப்படியிருந்தும் நாதாவின் மனைவி கேட்கவில்லை. நாநா கூறிய படி பெருமையுடன் வண்டியில் உட்கார்ந்துகொண்டு சென்றாள்.

மாலியால் இந்தச் செய்தியைத் தாங்கிகொள்ள முடியவில்லை. மனமும் உடலும் முறிந்துவிட்டன. 'நாசமாய் போன வீட்டிலே எதுதான் வாழப்போகிறது?' என்று கூறியபடி 'தொப்' பென்று கட்டிலில் போய் விழுந்தாள்.

ஒரு புறம் சங்கருடைய குதிரைகளைப் போன்ற எருதுகள் சதங்கை யொலியுடன் பரந்த வயல்வெளியில் புழுதிப்படலத்தைக் கிளப்பிக்கொண்டு பறந்தன. ஊர்வலத்துப் பெண்கள் மகிழ்ச்சியின் மிகுதியால் இனிய கீதத்தின் ஒலியை நதி போலப் பெருகச் செய்துகொண்டிருந்தனர்.

ஏக் ஜாலாவாரி சோபாரி நு ஜாட்சே

.................. .................. ..................

.................. .................. ..................

[அதோ ஒரு பாக்கு மரம்-! நம் காலு தம்பிக்குத் தங்கக் காப்பு கிடைக்கப் போகிறது. சம்பந்தி! உனக்குக் கிடைக்காவிட்டால் எங்களிடம் சொல் ..... அதோ ஒரு பாக்கு மரம்!]

மறுபக்கம் பரமாவின் வீட்டில் வசைமாரி பொழிந்துகொண்டிருந்தது.

ராஜியின் வீட்டில் கூடத் திருமண ஊர்வலம் வந்தது. அதிகாலையில் பூணூல் போட்ட ஒருவர் வாத்தியம் வாசிப்பவரிடம்

'உம் வாசி!' என்று கூறியபடி 'சப்தபதி' மந்திரங்களைச் சொல்ல ஆரம்பித்தார்–

'நித்ரா மஹி நஹி ஹதும் தன்பான் ஜ்யாரே......'

[தூக்கத்தில் உடலைப்பற்றி நினைவேது? அப்போது நம்மைக் காப்பவன் யார்?]

மங்கள வாத்திய இசைக்கிடையே சகோதரன் சகோதிரியின் வாயிலாக மணமகனின் கையையும் மணமகளின் கையையும் சேர்த்துவைத்தனர் புரோகிதர்! மாலை நேரத்தில் கரைத்து வைத்த ஆரத்தி நீர் எங்கும் தெளிக்கப்பட்டது. அதிகாலையில் சின்னஞ்சிறு பெண் ராஜி வண்டியில் உட்கார்ந்து கொண்டு கிளம்பிவிட்டாள்!

மாலை நேரத்தில் காலுவின் ஊர்வலம் மணப்பெண்ணுடன் கிராமத்தில் நுழைந்தது. ரூபா பேட்டையில் அமைதி நிலவி யிருக்கக் கண்டாள். ரண்சோட், மாலி, நாநா ஆகியோர் கிளம்பி விட்டனர். இந்த வீடு நாதாவுக்கும் பரமாவுக்கும் சேர்ந்து விட்டது என்றறிந்து அவள் அளவுகடந்த மகிழ்ச்சியடைந்தாள்.

யாரைக் கண்டாலும் சொல்ல ஆரம்பித்தாள் - 'என் காலுவின் மணப்பெண் நல்ல கால்களுடையவள். நான் மாமியார் வீட்டிற்கு வந்ததிலிருந்து இவ்வளவு மன நிம்மதி கிடைத்ததே இல்லை.'

இதைத் தவிர மகனுடைய திருமணத்திற்காக ஒரு காசு கூடக் கடன் வாங்கத் தேவையில்லை. அந்த இருநூற்று இருபது ரூபாயி லேயே எல்லாம் நடந்துவிட்டது. அதற்குக் காரணம் இந்தப் புது மணமகள்தானே?

மணப்பெண் அடி வைத்த நேரத்தில் எல்லாம் நன்றாக நடப்பதைக் கண்ட கிழவி அழகி ராஜியின் அழகான முகத்தை அம்மைவடுவால் குரூரமான முகத்தையுடைய பலீயுடன் ஒப்பிட்டு பார்ப்பதைக் கூட மறந்துவிட்டாள். மகிழ்ந்து போனாள்–' இருக் கட்டுமே. நம் போன்ற உழைப்பாளிகள் அழகை வைத்துக் கொண்டு என்ன செய்வது? அறிவு–என் காலுவுக்கு இருக்கு மளவு இருந்தால் போதும். சங்கர் சொல்வது சரிதான். காலுவை விட இரண்டு வயது பெரியவளாயிருந்தால் என்ன? மாமியார் வீட்டுக்கு இரண்டு வருடங்கள் முன்னதாகவே வந்து விட்டுப் போகிறாள்.

வேலை செய்யத் தகுந்த தெம்பும் இருக்கிறது. பெண் வந்த நேரம் நன்றாக இல்லாவிட்டால், வேறு எது இருந்துதான் என்ன

பயன்? ராஜியுடன் ஒப்பிட்டுப் பார்ப்பதை விட்டுவிட்டு, கிராமத்தில் முதலில் நிலவியிருந்த அமைதியின்மையையும், இப்போது நிலவியிருக்கும் அமைதியையும் பற்றி ஒப்பிட ஆரம்பித்தாள். 'எது எப்படியோ! ஏதோ உறவு இருக்கிறது நம்முடன். வைத்த அடி நல்லதாக இருக்கிறது. கடவுள் நல்லதைத்தான் செய்வார் என்று அவர் சொன்னது உண்மைதான்!' உடனே ரூபாவிற்குத் தன் கணவனின் நினைவு வந்துவிட்டது.

அவளுடைய கண்கள் நனைந்துவிட்டன-சுகமாக இருந்து நல்லதைக் காணக் கடவுள் அவரை உயிருடன் வைக்கவில்லை. அந்த நாக சர்ப்பம் நமக்கு நல்லது வரப் பார்த்துக்கொண்டிருக்குமா? ரூபா கடவுளையே மறுபடியும் சரணடைந்தாள் - 'அவள் என்ன கத்துக் கத்தினலும், ஆயிரம் கைகளுடன் என்னைக் காக்க இறைவன் இருக்கிருர்.'

## 15

## ராஜியும் காலுவும் 'டூ'

ரூபா புதிய மணப் பெண்ணுக்காகத் தன் மனத்தைத் தேற்றிக் கொண்டு விட்டாள். ஆயினும் அவளுடைய அந்தராத்மா ராஜியைப் பார்க்கும்போதெல்லாம் வருத்தபடைந்தது. ஏன் வருந்தாது? ராஜியை இறைவன் அவ்வளவு அழகாகப் படைத்திருந்தான். இளவேனிற் காலத்துக் கொடியைப் போல் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாகப் பூத்துக் குலுங்கினாள் ராஜி.

இதுமட்டுமல்ல. ராஜி இப்போது கூட காலுவின் தாயை 'மாமி' என்று கூப்பிட்டு வந்தாள். இப்போது அவளுக்குத் தெரிந்து விட்டது. தாயும் அவளைப் பல தடவை தடுத்தாள். ஆயினும் மறந்துபோய் அதே வார்த்தையை உபயோகித்துவிடுவாள்.

கிராமத்து மக்கள் கேட்கும்படி ஒரு நாள் தன் தாயிடம் அவள் கூறினாள் — 'அம்மா, அம்மா.... நம் எருமையின் நிறமும் மாமியின் போர்வையுடைய நிறமும் ...'

ஆனால் தாயின் துணுக்குற்ற சொல் காரணமாக அவளுடைய வார்த்தைகள் உதடுகளுக்குளேயே நின்றுவிட்டன. நான்கைந்து பெண்டிர் சிரித்தனர், அப்போது ரண்சோடின் மனைவி அவளைத் தடுத்துப் பேசினாள் — 'ஏண்டி! உனக்கு எத்தனை மாமிகள்?'

காலுவின் தாய் அதை அப்படியே விட்டுவிட்டாள். ராஜியின் தாய் அங்கேயே அவளைக் கடிந்துகொண்டாள் — 'போதுமே! எத்தனை தடவை உனக்குச் சொல்வது? இனிமேல் அப்படிச் சொன்னால் உன்னை இரண்டாகக் கிழித்துப் போட்டு விடுவேன்.'

ஆனால் வீடு சென்று தாய் அழுதாள். திருமணத்தை நிறுத்திய வர்களைச் சபித்தாள்— 'நாசமாய் போகட்டும்! ...... என் குழந்தையின்— '

காலுவின் தாய் வீட்டின் மூலையில் தான் வந்தழுதாள்; ஆனால் ஒவ்வொரு நாளும் வாலிபப் பருவத்தை நெருங்கிக்கொண்டிருந்த காலுவோ அழக் கூடக் கொடுத்து வைக்காதவன். யாரிடமாவது தன் வயிற்றெரிச்சலைக் கூறி அழலாம் என்றால் அதுவும் முடியாது. பெருமூச்செறிந்தபடி இவ்வளவுதான் கூறுவான் — 'நடந்தது நடந்துவிட்டது. இனி அதைப் பற்றி என்ன?'

ஆனால் காலு-ராஜியின் உலகம்—அந்தச் சின்னஞ்சிறு குழந்தைகள். இன்னும் அவர்கள் அதை மறக்கவில்லை, மறக்கவும் முடியவில்லை. நிலவொளியில் கண்ணாமூச்சி விளையாட்டில், தயிர்க்காரி விளையாட்டில், இந்தக் கடந்த காலத்து, மணமகனும் மணமகளும் சண்டை போட்டுக்கொள்வர்; அல்லது தப்பித் தவறி ஒருவரையொருவர் ஓடிப்பிடிக்கும் விளையாட்டில்— பிடித்து விட்டார்களோ, தீர்ந்தது. குழந்தைகளனைவரும் கத்த ஆரம்பித்துவிடுவர் — 'அடே! ராஜி தன் மணமகனைப் பிடித்துவிட்டாள்! ...'

காலு சமாளித்து விடுவான். ஆனால் ராஜி நாணத்தால் ஓடியே போய்விடுவாள். சிட்டுக்குருவி போல் பறந்துவிடுவாள். பயத்தால் வீட்டுக்குக் கூடப் போகமாட்டாள். ஒருவருமில்லாத இடத்தில் போய்ப் பதுங்கிக்கொள்வாள்.

ஆனால், நகர்ந்துகொண்டே செல்லும் காலமும், அந்தச் சமூகத்து மக்களும் இவ்விருவரையும் ஒருவரையொருவர் சந்திக்கும் வாய்ப்பைக் கூடப் பறித்துக்கொண்டனர். மலரும் மொட்டுப் போல் வளர்ந்துவரும் ராஜி விளையாடத்தான் கொடுத்து வைக்கவில்லையென்றால், தொலைவிலிருந்து பார்க்கக் கூட முடியவில்லை. தாய் தடுத்துவிட்டாள்—'நீ எவ்வளவு பெரியவளாகி விட்டாய் என்று உனக்குத் தெரியுமா? இனி விளையாடப் போனாயோ, தெரியும் ....'

பெரியவனாக ஆக காலுவும் சற்றுத் துடுக்குடன் நடந்துகொள்ள ஆரம்பித்தான் — 'என்னை அவமதித்தவர்களுடன் நான் ஏன் பேசவேண்டும்?'

இவ்விதம் குழந்தைப் பருவத்திற்கும் வாலிபப் பருவத்திற்குமிடையே இருவரும் பேசிக்கொள்ளாமலேயே நான்கைந்து ஆண்டுகள் கழிந்துவிட்டன. சிற்சில சமயங்களில் தண்ணீர் எடுக்கப் போகும்போது ஒருவரையொருவர் பார்க்க நேரிடும். ஆனால் இருவரும் பகைவர் போல் வேறு பக்கம் திரும்பிக்கொண்டு சென்றுவிடுவர். ஒரு சுமையைத் தலையில் தூக்கி வைத்துக் கொள்ள வேறு வழியின்றி ஒரு தடவை காலுவின் உதவியை ராஜி நாட நேர்ந்தது; அதுவும் பேசாமல், ஒருவரையொருவர் பார்த்துக் கொள்ளாமல்.

உண்மையில் காலுவும் ராஜியும் தன் உள்ளத்துடனே உரையாடுவதையே நிறுத்திக்கொண்டு விட்டனர். புற சமூகமோ இத்தனை ஆண்டுகளில் விஷயத்தை முற்றிலும் மறந்துவிட்ட

எப்போதாவது இதுபற்றிப் பேச்சு வந்தால், இது சகஜம் தானே; இதில் நீத மற்றது என்று சொல்ல என்ன இருக்கிறது என்று கூறிவிடுவர். திருமணம் நிச்சயத்தில் மாற்றம் ஏற்படுவது சகஜம்தான். பல இடங்களில் அப்படி நடந்தும் இருக்கிறது. திருமணம் நிச்சயமாகியிருந்து பிறகு நின்றுபோன பிறகும் பெரியவர்களான பிறகு எங்காவது சந்தித்துக்கொண்டால், பேசிக்கொள்வதும் உண்டு—'நம் திருமணம் தடைப்பட்டுவிட்டது. இல்லாவிட்டால் இப்போது கணவன் மனைவியாக இருப்போம்' இவ்விதம் கூறித் தாமும் சிரித்துக்கொள்வர், கேட்பவரையும் சிரிக்கச் செய்வர்.

காலுவும் ராஜியும் இதே வார்த்தைகள்தான் பேசிக்கொள்ள வேண்டும். ஆனால் இவ்வார்த்தைகளை முதலில் யார் பேசுவது? காலுவுக்கும் கோதருக்குமிடையே சிறுபிராயத்து நட்பு மறு படியும் வளர ஆரம்பித்தது. ஒருவர் மற்றவரின் வீட்டுக்குப் போகவர ஆரம்பித்தனர். அங்குள்ள கிழவிகளுடனும் பேச ஆரம்பித்தனர். அந்தக் கிழவிகள் வருத்தத்துடன் பழைய நிகழ்ச்சியைக் கிளற ஆரம்பிப்பார்கள். மிகுந்த விருப்பம் இருந்த போதிலும் காலுவும் ராஜியுடன் பேசமுடியவில்லை. ராஜியின் நிலையும் அப்படித்தான். இருவரும் தான் ஏன் முதலில் பேச வேண்டும், அங்கிருந்து முதலில் ஆரம்பமாகட்டுமே என்று நினைப்பர்.

ஒரு தடவை கிராமத்து ஆடவரும் பெண்டிரும் ஜாலாதேவதை யின் திருவிழாவில் கலந்துகொள்ளக் கிளம்பினர். இன்னும் அரும்பு மீசை கூடக் கிளம்பவில்லை, அதற்குள் காலுவும் கூட்டம் சேர்த்துக்கொண்டு கிளம்பிவிட்டான். இளைஞர்களின் தலைவன் என்றுக் கருதப்படும் நாநாவின் குழுவுடன் தானும் போய்ச் சேர வில்லை, கோதரையும் போகவிடவில்லை. சங்கரின் பதினைந்து வயதுச் சிறுவன் பகாவையும் நிறுத்திவிட்டான் — 'யார் வேண்டு மானலும் போகட்டும்; ஆனல் நாம் எல்லாருக்கும் கடைசியில் கிளம்பலாம், எல்லோருக்கும் முன்னல் போய்ச் சேர்ந்து விடலாம்!'

பகாவின் சகோதரி ருக்கி இதைத் தெரிந்து கொண்டுவிட்டாள். ஒருபுறம் ராஜிக்கும் தெரிந்துவிட்டது. ஆனல் விருப்பமிருந்தும் இவர்களுடன் செல்லத் துணிவு ஏற்படவில்லை. எது எப்படியிருந்

தாலும், சிறுவர்தானே! நிச்சப்தமான காட்டு வெளியைக் கடந்து செல்ல நேர்ந்தது.

ஆனால் அந்த அடர்ந்த கானகத்தில் நுழைந்ததுமே இந்தப் பெண்களுக்குத் தம் பாடலுடன் வேறு ஒரு பாடலின் ஒலி வந்து மோதியது தெரிந்தது—

'தீரோ ஒரீலா நே ஹாடே ரே தீரோரோ மேவாசி!'

[மேவாஸ் என்ற இடத்தில் வசிக்கும் தீரோ கடைக்குப் போனான். வளையல்களின் விலை கேட்டான். அவற்றைத் தானே அணிந்துகொண்டு பார்த்தான். கடைக்காரன் கேட்டான்-'தீரோ யாருக்காக வாங்கப்போகிறாய்?' அவன் பதில் சொன்னான்-'என் சின்னஞ்சிறு மணமகளுக்காக!' தீரோ கடைக்காரனுடைய கடையில் இருந்தான்.]

காலுவும் கோதரும் சேர்ந்த குழுவில் ஐந்தாறு பேர்தானிருந்தனர். ஆனால் இருபத்தைந்து பேரின் குரல் போல் ஒலித்தது. ராஜி, ருக்கி பார்த்துக்கொண்டே யிருந்தாள். காலு, கோதர், பகா-மூவரும் சேர்ந்த கூட்டம் வேகமாகச் சென்றுகொண்டிருந்தது. நடுத்தர உயரமும் பலமான உடல்வனப்பும் உள்ள காலு தலையில் துணியைத் தலைப்பாகைபோல் சுற்றிக்கொண்டிருந்தான். காதில் ஒரு பூவைச் செருகிக்கொண்டிருந்தான். கையில் வில்லும் அம்பும் இருந்தன. கோதரின் கையில் வாளிருந்தது. பகா இரும்புப் பூண் போட்ட தடி வைத்திருந்தான்.

இந்த இளைஞர்களின் துணிச்சலைக் கண்டோ, அல்லது எல்லாரையும் தாண்டிக்கொண்டு அவர்கள் செல்லும் வேகத்தைப் பார்த்தோ அல்லது நாநா-ராமாவின் பாட்டைவிட அவர்களுடைய பாட்டில் அதிக உற்சாகத்தைக் கண்டோ ருக்கியும் அவர்களுடன் சேர்ந்துகொண்டாள். ராஜி முதலிலேயே அதைத்தான் விரும்பினாள்-இந்த இரண்டு முக்கியமான பெண்கள் அவர்களுடன் செல்ல, யார்தான் பின்தங்கி நிற்பார்கள்?

சிறிது நேரத்தில் நாநா-ராமா போன்ற நான்கைந்து இளைஞர்கள் பின் தங்கிவிட்டனர். அருகே தோட்டத்தில் மலர்கள் பூத்துக் குலுங்கியிருந்தன. நாநாவின் நொண்டி மனைவி மட்டும்தான் மெள்ள நடந்து வந்து கொண்டிருந்தாள்.

'நாம் என்ன வளையல்களணிந்தவர்களா?' 'உம், நட சீக்கிரம்'—நாநாவிடம் ராமா கூறினான், நாநாவுக்கு எரிச்சல் வந்ததாலோ, அல்லது அது சிறுபிள்ளைத்தனம் என்று கருதியோ - ஆனால்

மனைவியின் மீது இரக்கம்கொண்டல்ல - சிரித்துக்கொண்டு கூறினன்-'போனால் போகட்டுமே. வழியில் குடித்து விட்டுக் குறவர்கள் கூத்தடிப்பார்கள். அப்புறம் தெரியும் வேடிக்கை!'

திருவிழாவையடைந்து பார்த்ததில் எல்லோரும் பத்திரமாக வந்திருந்தனர். மகிழ்வுடன் திரிந்துகொண்டிருந்தனர். காலுவின் தலைமையில் பல பொருள்களை விலை பேசிக்கொண்டிருந்தனர்.

கோதர், பகா முதலியோர் அம்பு விடுவதற்காக குச்சி வாங்கச் சென்றனர். பெண்களுக்கிடையே காலுவை மட்டும் பார்த்த நாநாவுக்கு வயிற்றை என்னமோ செய்தது. அவனுடைய கூட்டமும் அவர்களுடன் போய்ச் சேர்ந்து கொண்டது. காலு விடம் அந்தப் பெண்கள் கேட்க ஆரம்பித்தனர்–'காலு தம்பி! இந்தாருங்கள் ஒரு அணு. எனக்கு நல்ல வளையல்கள் வாங்கித் தாருங்களேன்!'

ஆனால் எத்தனை பேர்களுக்கென்று விலை பேசி வாங்குவான்? ராஜி, தன் காசு முழுவதையும் - அதாவது நான்கணுவையும்–தன் கையிலேயே வைத்திருந்தாள். காலுவும் பிடிவாதமாக இருந் தான் —'அவள் சொல்லட்டும்-அப்போதுதான் வாங்கிக் கொடுப் பேன்!'

ராஜி மட்டும் சாமானியமானவளா என்ன? ருக்கி ஒரு கடைக் கெதிரே வந்து ராஜியைக் கேட்டாள்! - 'அடீ! சட்டைக்குப் பித்தான் வாங்கவேண்டும் என்றாயே? வேண்டாமா?'

'உனக்கு வேண்டுமானால் வாங்கிக்கொள்ளேன்!' என்று கூறிச் சும்மா இருந்துவிட்டாள். வளையல் வாங்கும்போது சொல்லியும் வைத்தாள்-'நமக்கு வேறு யார் வாங்கித் தரப்போகிறார்கள்?' ஆனால் நேரடியாக காலுவிடம் ஒன்றும் கூறவில்லை.

கடைசியாகக் காலுதான் தழைந்து போக நேர்ந்தது. அவன் தானகவே இரண்டு முத்துமாலைகளும் இரண்டணுவிற்கு வளையல் களும் வாங்கினன். தலையில் சுற்றிக்கொள்ள ஒரு சிறு சவுக்கமும் வாங்கினன். ருக்கி, நாநாவின் மனைவி முதலியோர் அவனைப் பரிகசித்தனர்—நீங்கள் கூட அந்தத் தீரோ மாதிரியே செய்கிறீர் களே காலு! திருவிழாவிற்கு பலி அண்ணிதான் வந்திருக்கிறாளே. உங்களை விட அவள் பெரியவள் இல்லையா? ருக்கி மெள்ளக் கேட்டாள் - 'பின்பு உங்களுக்கு வாய்த்த சிறிய மணப்பெண் யார்?'

காலு என்ன பதில் சொல்வான்? அவன் பதிலளிக்காமலேயே

ராஜி விஷயத்தைப் புரிந்துகொண்டு விட்டாள். அதனால்தானே அவன் தானாகவே சில சாமான்கள் வாங்கினான் – 'நான்தான் வாங்கியிருக்கிறேனே' என்று சொல்லி மறுக்க நினைத்தாள் ராஜி.

ராஜி சவுக்கம் வாங்குவதைப் பார்த்து அவன் எல்லாவற்றையும் ருக்கியிடம் கொடுத்துவிட்டான் - 'இந்தா ருக்கி – இந்தச் சவுக்கத்தை கடைக்காரனிடம் திருப்பிக் கொடுத்துவிடு !'

பொல்லாத ருக்கி சிரித்தாள் -'நானா சொன்னேன்...' ஆனால் ராஜி நிலைமையைச் சீர்ப்படுத்தினாளோ அல்லது கெடுத்துவிட்டாளோ தெரியாது. ஆனால் பேச்சை மாற்றிவிட்டாள்-'உனக்குத் தெரியாதா ? இதெல்லாம் என் அண்ணன் மகளுக்காகத்தான் !'

உண்மையில் ராஜி பலீயைத் தேடிப் பிடித்து அவளிடம் எல்லா பொருள்களையும் கொடுத்துவிட்டாள் - 'பலீ, இந்தா உனக்காக அவர் எல்லாப் பொருள்களையும் வாங்கிக் கொடுத்திருக்கிறார்!'

ஏழை வீட்டுப் பெண் பலீ மட்டற்ற மகிழ்ச்சியடைந்தாள்.

காலுவுக்கு யாரோ பளீரென்று ஒரு அடி அடித்தாற் போலாகி விட்டது.

வீட்டிற்கென்னமோ சென்றுவிட்டானே தவிர, அந்தச் சிந்தனை அவனை விட்டபாடில்லை. ஒரு வழியும் தெரியவில்லை- 'உண்மையில் ராஜிக்கு நம் பேரில் இவ்வளவு கோபமா என்ன ? அல்லது ருக்கி முதலியவர்களுக்குத் தெரிந்துவிட்டதே என்று நினைத்தாளா ?' இந்தக் கேள்வியை ராஜியிடமே கேட்கவேண்டும் என்று விரும்பினான் காலு. திருவிழாவில் இருவரும் சேர்ந்து எத்தனை இடங்களுக்குச் சுற்றித் திரிதனர்! ராஜி முயன்றுதான் பார்த்தாள். ஆனால் குழந்தைப் பிராயத்திலிருந்து சற்றுப் பெரியவர்களானவரை இருவரும் ஒருவருடன் ஒருவர் பேசாமலே இருந்தனர். இங்கு கிராமத்தில் வந்து மட்டும் அது எங்கே மாறப் போகிறது ? மௌனம் முறிவதற்குப் பதிலாக இன்னும் அதிகமாகிவிட்டது.

# 16

## இளமைத் தேள்

இளமைப் பருவத்தில் பிரவேசித்தவுடனேயே ராஜியின் எழில் ஒளி வீசத் தொடங்கியது. சித்திரை-வைகாசி மாதங்களில் பூத்துக் குலுங்கும் வளப் பிரதேசத்தைப் போலிருந்தாள் அவள். கூரிய கண்களில் ஒருவித மயக்கம். நடையில் ஒரு தளுக்கு, பேச்சிலே ஒரு சிரிப்பு, நகைச்சுவை!

ஆனால் அந்தக் கேலியையும் பரிகாசப் பேச்சையும் கேட்கக் காலு கொடுத்துவைக்கவில்லை. பகா, ராமா, முதலியோருக்குக் கிடைத்திருக்கும் அந்த பாக்கியத்தை நினைத்து அவனுக்கு எரிச்சலாக வரும், அதுவும் தனக்கு தானேதான். தன்னைத் துன்புறுத்துவதற்காகத்தான் அவள் அவர்களிடம் இம்மாதிரி கேலியும் பரிகாசமும் செய்கிறாள் என்பது காலுவுக்கு பிறகு தெரியவந்தது. 'ராமா! எட்டிப்பழம் அழகாக இருக்கிறது என்பதற்காக அதைத் தின்றுவிட முடியுமா? அழகைப் பார்த்து மயங்கினால் அவ்வளவுதான!'

காலு இதன் பொருளைப் புரிந்துகொள்ள முயல்வான். ஒரு சொல்லிற்குப் பல பொருள்கள் தோன்றும். ஒன்றும் தெரியாமல் விழிப்பான். அவனுக்கு ராஜியின் பேரில் கோபம் கோபமாக வரும் - 'அவள் தனிமையில் என்னிடம் என்ன வேண்டுமானாலும் சொல்லட்டும். ஆனால் இப்படி என் காதில் படும்படி ஏன் பேச வேண்டும்?'

ஒரு நாள் ராஜி எல்லையை மீறி விட்டாள். வயல்வெளியிலிருந்து வீடு திரும்பிய காலு ஒரு நாள் பகல் நேரத்தில் தொலைவிலிருந்து வரப்பின் மீது ஏறும் ராஜியைப் பார்த்தான். அவள் நாநாவைக் கூப்பிடுவதைக் கேட்டான் - 'நாநா அண்ணே! கொஞ்சம் இந்தச் சுமையைத் தூக்கி வையேன்!'

நாநா தலைக்கு மேல் வளர்ந்திருந்த சோளப்பயிரைத் தாண்டிச் சென்றுகொண்டிருந்தான். இதைக் கண்ட காலுவுக்கு ஆத்திரம் பற்றிக்கொண்டு வந்தது. ராஜி காலுவைக் கண்ட பிறகும் அவனுடைய எதிரியை உதவிக்கு அழைத்துவிட்டாள்!

காலுவுக்குச் சந்தேகம் வந்துவிட்டது. 'ஏன், அவள் என்னைப் பார்க்கவில்லையோ? அவர்களுக்குள் 'ஏதாவது நடக்கிறதோ!' அவனும் சோளப் பயிர்களுக்கிடையே புகுந்தான். இருவரையும்

பார்க்கும்படி மெதுவாகப் போய் தரையில் படுத்துக்கொண்டான்.

நாநா வந்ததைக் கண்டதும் ராஜி சுமையைத் தூக்கக் குனிந்தாள். நாநா சிரித்துக்கொண்டே நின்றான். 'சுமையை ஏற்றுவதற்கு ஏதாவது கூலி உண்டா, அல்லது சும்மாத்தானா?'

நாநா அழகன், உயரம், சிவப்பு, மெல்லிய உடல், கையில் தங்கக் காப்பு. விரல்களில் மோதிரங்கள். காதுகளின் மேல் பக்கம் வளையங்கள் ... கீழே குண்டலங்கள். கூடவே — பாடுவதில் தலைசிறந்தவன், பேச்சிலோ பெரிய கெட்டிக்காரன் .

நாநாவின் வார்த்தைகள் முழுவதும் காலுவுக்குக் கேட்கவில்லை. ஆனால் அர்த்தத்தைப் புரிந்துகொண்டு விட்டான். நாடிகளனைத்தும் சுருங்கிவிட்டாற் போன்ற உணர்ச்சி உண்டாயிற்று அவனுக்கு. 'தூக்கிவைக்கா விட்டால் போயேன்!' துணுக்குற்றுக் கூறினாள் ராஜி.

'அடே! வேறு யார் வந்து தூக்கி வைப்பார்கள்! நான் உன்னை எப்போதிலிருந்து தேடிக்கொண்டிருக்கிறேன் தெரியுமா! நான் பித்தனாகிவிட்டேன் ராஜி!' கடைசி வாக்கியத்தைக் கூறியபடியே தன் கையை நீட்டினான் நாநா.

காலுவின் மூச்சு நின்றுவிட்டது. உடனே பளீரென்று ஒரு அடிச் சத்தம் காதில் விழுந்தது. மகிழ்ச்சி தாங்க முடியாமல் காலு 'சபாஷ்' என்று சொல்லிக்கொண்டான்.

ராஜியை நெருங்க முயன்ற நாநா எப்படியோ சமாளித்துக் கொண்டு நாய் வாலைக் குழைத்துக்கொண்டு ஓடுவதுபோல் சோளப் பயிர்களுக்கிடையே எங்கேயோ ஓடி மறைந்துவிட்டான்.

மகிழ்ச்சி மேலீட்டுடன் காலு சுமையைத் தூக்கி வைக்க வந்தான். ஆனால் அவனைப் பார்த்தும் கூட ராஜி இரண்டு மணங்குச் சுமையைத் தானாகவே தலையில் தூக்கி வைத்துக் கொண்டாள். 'பிரமாதம் ராஜி! சபாஷ்!' என்று காலுவின் இவ்வார்த்தைகள் அவனுடைய உதடுகளுக்குள்ளேயே தங்கி விட்டன.

இவ்வாறு மௌனம் இன்னும் முறிக்கப்படவில்லை.

ஆனால் ராஜியின் இந்த சுபாவத்தை கண்டறிந்த காலுவுக்கு இருமடங்கு வருத்தமுண்டாயிற்று. 'அடடே! ராஜியைப் போல் ஒரு மனைவியிருந்தால் வாழ்வே ஒளிமயமாகிவிடுமே... பார்த்தால் பசிதீரும்....'

தனக்குள்ளேயே தவித்துக் கொண்டிருந்தான். என்ன செய்வது, என்ன செய்யாமலிருப்பது? முடிவில் அதே பெருமூச்சு. ஆனால் இன்று கூட அவன் ராஜியின் எண்ணத்தைப் பரிசோதித்த வண்ணமிருந்தான்.

கிராமத்திற்குள் நுழைந்ததும் யாரோ அழும் குரல் கேட்டது. காலுவுக்குக் குரல் தெரிந்துவிட்டது. தன் தாய் தந்தையர் இறந்துவிட்டாற் போல் ராஜி உரத்த குரலில் அழுதுகொண்டிருந்தாள். வாய்விட்டு ஏதாகிலும் புலம்பிக்கொண்டு அழுதாலாவது விஷயத்தைப் புரிந்துகொண்டு விடலாம். ஆனால் அவள் குழந்தையைப் போல் அழுதாள்.

ஆயினும் காலு புரிந்துகொண்டு விட்டான். 'எதை நினைத்து என் மனம் விம்முகிறதோ, அதை நினைத்துதான் அவளும் அழுகிறாள்.'

காலு நினைத்தது சரியோ தப்போ, கடவுளுக்குத்தான் தெரியும், மற்ற எதுவும் ராஜிக்கே தெரியாதே! தாய் மன்றாடிக் கேட்டாள்; நீ தலையிலிருந்து சுமையை இறக்கியவுடனேயே அழ ஆரம்பிக்கிறாயே, ஏன்? யாராவது திட்டினார்களா? ஏதாவது கடித்து விட்டதா?'

ராஜியைக் கடித்தது என்னமோ உண்மைதான். ஆனால் அவளுடைய தாய் நினைத்தபடி பாம்போ, தேளோ அல்ல. கை கால்களில் காயமொன்றுமில்லை. ஆனால் அந்தராத்மாவில் ஆழமாகக் காயம் பட்டுவிட்டது. அதுவும் மண்ணோடு மண்ணாய்ப் போன அவளுடைய கடந்த காலத்தின் காயம்! கற்பனை இளமை பருவத்தைக் கிளறிவிட்டது-காதல் வேகம் ஒவ்வொரு நரம்பிலும் ஓட ஆரம்பித்தது.

சுமையை எடுத்துக்கொண்டு வந்து வீட்டு வாசலில் வைத்தவுடனேயே அதிலிருந்து ஒரு பறவை பறந்தோடியது-உள்ள வெளியிலிருந்து கற்பனைப் பறவையும் கூடத்தான்! நரம்புகளில் கலந்து விட்ட இந்த விஷத்துக்கு மாற்றுக் கிடையாது. அதை இறக்குபவர் யாரும் கிடையாது. அதற்குச் சிகிச்சையளிப்பவன் இவ்வாழ்வில் கிடைக்கப் போவதில்லை என்று ராஜி தெரிந்துகொண்டு விட்டாள்-நம்பிக்கையற்ற உள்ளத்தை வேதனை கடைந்தெடுத்தது. அந்தக் கூரிய கண்களிலிருந்து கண்ணீர் வழிந்தோடியது-முறிந்த நம்பிக்கைக்கு அழுவதை தவிர வேறு வழி?

கவலைப்படும் தாயிடம், கோபித்துக் கொண்டு கேட்கும் கோதரின் மனைவி கேசரிடம், கூடியிருந்த மக்களிடம் ராஜி என்ன

தான் கூறுவாள்? அதனால்தான் அழுகையே பதிலாக அளித்தாள் அவள்.

ஆனால் யாரால் அதைப் புரிந்துகொள்ள முடியும்? வெகு நேரமாகப் பார்த்துக்கொண்டிருந்த காலு ஒருவன்தான் புரிந்துகொண்டான். மனதிற்குள் அவன் முணுமுணுத்தான் – 'ஏன் இவர்கள் அவளை வதைக்கின்றனர்? பாம்பும் கடிக்கவில்லை, தேளும் கடிக்கவில்லை. இளமைதான் தன் கொடுக்கால் கொட்டிவிட்டது. வேறொன்றுமில்லை!'

அவன் அவளைச் சூழ்ந்திருந்த மக்களைக் கலைத்துவிட்டான். கோதரை அழைத்துக்கொண்டு கிளம்பினான் – வா கோதர்! சோளம் சுடலாம் வா!'

அவனுடைய உள்ளம் வருணிக்க முடியாத மகிழ்ச்சியால் கூத்தாடிற்று. உள்ளத்தில் ஒரு திருப்தி குடி கொண்டது. தரித்திரனுக்கு மதிப்பிட முடியாத ஐசுவரியம் கிடைத்தாற் போலிருந்தது.

## 17

## கடைத்தேறிவிட்டாள்

புரட்டாசி மாத ஆரம்பத்தின் மாலை வேளை. பகல் வறட்சியாக இருந்த போதிலும் அவ்வப்போது வானத்தில் மூட்டமிருந்தது. சோளக் கதிர்கள் நிறைந்த வயல் வெளியில் வெயிலும் நிழலும் மாறி மாறித் தென்பட்டன. மெள்ள வீசும் தென்றலில் சோளக் கதிர்கள் பெருமிதத்துடன் அசைந்து கொண்டிருந்தன. கிளி, காகம் இவற்றின் கூட்டங்கள் இந்தக் குளிர்ந்த நேரத்தில் கீழே இறங்கி வந்தன. ஆனால் அவற்றிற்கு எங்கும் மன நிம்மதியிருக்க வில்லை. அவை இறங்கியதுமே வயல் வரப்பிலிருந்து காவல் காரனின் குரல் கேட்டது—'ஏய்! நில்லு! கிளியே! நில்!'

துணிச்சலுடன் குதித்து வந்த அந்த பச்சைநிறப் பறவைகளைக் கவண்கல் வீச்சு படபடவென்று பறந்தோடச் செய்தது.

வீண் முயற்சி செய்து சலித்துப்போன பறவைகள் ஏதாவதொரு மரத்தில் போய் அண்டுவதற்காகப் பறந்தோடின. காலுவின் வயலுக்குப் பக்கத்திலுள்ள அந்த ஆலமரத்திற்கே சென்றன.

அங்கும் காலு அவைகளை விட்டால்தானே! காலுவும் கோதரும் அருகில் மூடியிருந்த அந்தப் பெரிய குடிசைக்குள் உட்காராமல் கிளிகளைப் பற்றிய கவலையில், சுட்ட நான்கைந்து சோளத்தை எடுத்துக்கொண்டு அருகேயுள்ள திறந்த மொட்டை மாடியில் வந்து உட்கார்ந்தனர். திறந்த உடம்புடன் உட்கார்ந்திருந்த காலு பேசிக்கொண்டிருந்தானே தவிர கண்கள் வயலைச் சுற்றித் திரிந்துகொண்டிருந்தன. மரத்தின் மீது அடிக்கடி கற்களை வீச வேண்டியிருந்தது.

கோதரால் கூறாமலிருக்க முடியவில்லை—'உன் வீட்டைக் காக்க உன்னாலேயே முடிந்துவிடுகிறதப்பா! நீ கவண் கல்லை உபயோகிப்பதில்லை. உன் கை எந்த உலோகத்தாலானதோ காலு!'

காலுவின் கை உண்மையில் எஃகு போன்றதுதான். 'நீ கவண்கல் வீசு, நான் கையாலேயே கல் வீசுகிறேன். யாருடைய கல் வெகுதூரம் செல்கிறது பார்க்கலாம்?' காலு பெருமையுடன் கூறினான்.

கோதருக்கும் ரோசம் வந்துவிட்டது. 'அவ்வளவு பெருமையடித்துக் கொள்ளாதே!'

'பார்க்கலாம் எழுந்திரு - இந்தா எடு கவண்கல்லை!' காலு குடிசையின் மேலிருந்தபடி கவண்கல் எறிந்தான். 'உம், எழுந்திரு - பார்க்கலாம்!'

காலு குடிசையின் பக்கமாக ஒதுங்கி நின்றான்-கோதர் மூலையில் கிடந்த கற்களிலிருந்து ஒன்றை யெடுத்துக்கொண்டு எழுந்து நின்றான். கையிலிருந்த ரப்பரை இழுத்தபடி கூறினான்– 'நன்றாக பார்த்துக்கொண்டே யிரு!'

கிளம்பிய கல்லையே நோக்கியபடி காலு கூறினான்– 'அதோ– அந்தத் தோட்டத்தில் போய் விழுந்திருக்கிறது பார்!' அந்த முள் செடிக்குப் பக்கத்தில்!'

கோதர் ஒப்புக்கொண்டான் – 'ஆம்! அங்கேதான் போய் விழுந்திருக்கிறது. காற்றினால்....'

'அதைக் கொடு இப்படி!' ஆனால் கோதரும் பெரிய கல்லைக் கொடுக்காமல் சிறு கல்லைக் கொடுத்தான்.

காலு கல்லை வாங்கிக்கொண்டு காலைத் தரையில் அழுத்தினான். 'உம்! பார்த்துக்கொண்டே யிரு!'

கட்டுறுதியான உடலுடன் காலு திரும்பினான். கைகள் கிட்டத் தட்ட முழங்காலுக்கும் கீழ் வரை நீண்டிருந்தன. உடல் வில் போல் வளைந்தது. பார்வை வயல் வெளிப்பக்கம் இருந்தது. நதிக்கரையிலுள்ள அந்த மரங்களைக் காலு குறிபார்க்கிறான் என்று கோதருக்குத் தோன்றியது.

காலு நினைத்த தொலைவில் போய்க் கல் விழவில்லை. ஆனால் கோதர் எறிந்த கவண்கல்லை விடத் தள்ளித்தான் போய் விழுந்தது. அதுவும் ஓரிரு அடி தள்ளியல்ல, இருபத்தைந்தடி தள்ளிப் போய் விழுந்தது.

கோதர் காலுவின் பரந்த மார்பகத்தையும், வலிவுற்ற தோள்களையும் பார்த்துக்கொண்டே யிருந்தான். மகிழ்ச்சியுடன் கூறினான்— 'அப்பா! என்ன பலம் உனக்கு!'

'ஏம்பா! கடவுள் மனிதனைப் படைத்து அவனுக்கு இந்தத் தெம்பு கொடுக்காவிட்டால்... ...'

'ஏன் இப்படி வருத்தமாக இருக்கிறாய் தனிமையில்! உன் காதலியையும் அழைத்துக்கொள்ளேன். பாவம் கிழவியால் ஒரு வேலையும் செய்யமுடியவில்லை என்று சொல்லிக்கொண்டிருந்தாள். சீக்கிரம் பெண்ணை வீட்டிற்கு அனுப்பும்படி மாமியார் மாமனாரிடம் சொல்லேன்! பரமா சித்தப்பாவை அனுப்பு!'

கோதரின் வார்த்தையைக் காலு புரிந்துகொண்டான். ஆனால் அதற்கும் அவனுக்கும் சம்பந்தமில்லை. வருத்தத்துடன் அவன் பதிலளித்தான்–

'வீட்டு வேலை செய்துகொண்டிருக்கும் பெண்ணை யார் மாமியார் வீட்டுக்கு அனுப்புவார்கள்? குழந்தைகளின் பிடுங்கலில்லாத பெண்ணும் கறவை எருமையும் யாருக்குத்தான் பிடிக்காது?' பிறகு அவன் கூறினான் — 'உன்னைப் போல் எல்லாமறிந்தவனே ஒன்றும் தெரியாதவனைப்போல் நடந்து கொண்டால்?'

கோதர் விடவில்லை—'ராஜியை இந்தத் தீபாவளிக்கு அழைத்துப் போகவேண்டும் என்று என் அம்மா சொன்னாள்—ஆனால் உன் மணமகள் எத்தனையாண்டுகளாக வீட்டிற்கு அழைத்து வரத் தகுந்தவளாகி விட்டாள்!'

'நம் ஜாதியில் இதுதானே தொல்லை. பெண் வேலை செய்து செய்து தேய்ந்த பிறகுதானே அறிவுக்கு எட்டுகிறது!'

உண்மையில் காலு கோதருக்குப் பதில் கூறவேண்டுமே என்று இதைச் சொல்லிக்கொண்டிருந்தானே தவிர அவனுக்கு மனைவியைப் பற்றிய கவலையோ வேலைசெய்ய வேண்டுமென்ற கவலையோ கிடையாது. ஆனால் ஒரே ஒரு கவலைதான் அவனுக்கு. 'ராஜி மாமியார் வீட்டுக்குப் போனால் தொல்லை தீரும்—இல்லாவிட்டால்—' அவன் கோதரிடம் கூறினான்—

'பார்த்தாயா? அந்த ஆசாமியின் தங்கை எப்படி ஏமாற்றி விட்டாள்? பெண் மறைவில் ரவிக்கை போட்டுக் கொள்ள ஆரம்பித்து விட்டாள் என்றாலே அவள் மாமியார் வீட்டுக்குப் போகும் பருவத்தை அடைந்துவிட்டாள் என அர்த்தம் என்று என் அப்பா சொல்வார்!' உடனே ஆலமரத்தின் மேல் உட்கார்ந்திருந்த கிளிகள் நினைவுக்கு வந்து விட்டன. அவன் எழுந்து நின்றான். 'ஏய் கிளியே! கிளியே! இதென்ன மரம் முழுவதும் உன் சாதியினர்தானா? போதும் பறந்து சென்று விடுங்கள்!'

'ஓகோ! மேகம் இருண்டு விட்டது.' பறந்து சென்ற கிளிகளைப் பார்த்து கோதர் கூறினான்.

மறையப் போகும் ஆதவன் தங்கத் தட்டைப் போல் ஒளி வீசினான். புள்ளினங்களும் வயல்களில் இறங்கிவிடுவதை விட்டு விட்டன. கிளிகள் இங்குமங்குமாகப் பிரிந்து தமக்குள் ஏதோ பேசிக்கொண்டே வயல்வெளியை விட்டுப் பறக்க ஆரம்பித்தன.

ஆகாயமெனும் கோபுரத்தில் சிதறிக் கிடந்த மேக மண்டலங்களும் கலைந்துப் போய் மறைய ஆரம்பித்தன. ஆதவன் மறைவதைக் கண்டு சிரித்தன. குந்துமணி நிறப் போர்வை போர்த்துப் பிறகு கண்ணயர்ந்துவிட்டன.

காலுவும் கோதரும் கூட வயல் வரப்பைவிட்டு இறங்கினர். வழிமுழுவதும் இருவரும் மௌனமாகவே நடந்தார்கள். அப்படியே உரையாடினாலும், பயிர்த்தொழிலையும் அடுத்த நாள் வேலையைப் பற்றியும்தான்.

காலு இன்னும் சிந்தித்துக் கொண்டிருந்தான். கோதரிடம் கூற நினைத்தான் — 'தீபாவளி கிடக்கட்டும், ராஜியை உடனடியாக மாமியார் வீட்டிற்கு அனுப்ப ஏற்பாடு செய்துவிடேன்!' ஆனால் எப்படிச் சொல்வான்? அப்படிச் செய்யும் வழக்கம் கிடையாதே! அப்படியே யாராவது செய்துவிட்டால், 'இதில் ஏதோ ஏமாற்றம் இருக்கிறது!' என்று மக்கள் சந்தேகிக்க ஆரம்பித்துவிடுவர். அதனால் அதிகம் அது பற்றிப் பேச முடியவில்லை. கோதர் இருக்கட்டும், அவனுடைய தாயும், மனைவியும் கேட்பார்களே — 'ஏன் அப்படிச் சொல்லிக் கொடுக்கிறாய்? ராஜி உனக்கு ஏதாவது தீங்கிழைத்தாளா என்ன?'

இதற்குக் காலுவிடம் கூறத் தக்க பதில் கிடையாது. காலுவினால் கெட்டவழியில் செல்லவும் இயலாது, ஆயினும் அவன் நினைத்தான் — 'புல் செதுக்கி வர வயல் வெளிக்குச் செல்லும்போது நாநா அவளைப் பின் தொடர்ந்து வஞ்சம் தீர்க்க நினைத்தால். அந்த ஜன நடமாட்டமில்லாத வயல் வெளியில் அவளை யார் காப்பாற்றுவார்கள்?—பெண்ணிடம் அப்படி என்ன பலம் இருக்கப் போகிறது?'

ஆனால் சமயம் பார்த்து மறைமுகமாக ராஜிக்கு அறிவுறுத்தினான் — 'அழகும் அந்தஸ்தும் இருப்பவர்கள் குடித்தனம் செய்வது பெரிதல்ல. ஏழையாக இருந்த போதிலும் கௌரவமாக வாழ்வதில்தான் பெருமை இருக்கிறது!'

தீபாவளிக்கு முன் மாமியார் வீட்டிற்கு அனுப்பிவிடலாம் என்றால் அப்போதும் 'மாமா வீடு எவ்வளவு தூரம்! கூப்பிடு தூரத்தில்தானே இருக்கிறது!' என்று கோதர் குறிப்பிட்டான். அது மட்டுமல்ல. இடையே ஒரு மாதம்தானே இருக்கிறது. ஆனால் இம்மாதிரி நேரங்களில் மக்களின் சுபாவத்தைக் காலு நன்

கறிவான் — ' தீபாவளிக்கென்று சொல்வார்கள், ஆனால் தசரா வுக்குத்தான் அனுப்புவார்கள்!'

அதனால் தான் அவன் புலம்பிக் கொண்டிருக்கும் தாயிடம் கூறி னான் — 'நீ என்னதான் முயற்சி செய்தாலும், ராஜியை மாமியார் வீட்டிற்கு அனுப்பாமல் அவர்கள் உன் மருமகளை அனுப்ப மாட் டார்கள்!'

தாய்க்கும் இது உண்மைதானென்று பட்டது. அதனால்தான் மாட்டை ஓட்டிக்கொண்டு வரும்பொழுதோ அல்லது தண்ணீர் கொண்டுவரும் பொழுதோ வழியில் சந்திக்கும் ராஜியின் தாயி டம் அவள் தன் துக்கத்தைச் சொல்லி அழுதுகொண்டிருந்தாள்.

'இனி என்னால் வேலை செய்ய முடியாது. உங்கள் சம்பந்தி யம்மாள் ஒப்புக்கொள்ள மாட்டேன் என்கிறாள். பாவம், அவள் தான் என்ன செய்வாள்? பயிர்த் தொழில் வேலையைச் செய்து தானே யாகவேண்டும்? பலியைத் தவிர வேறு யார் செய்ய இருக்கிறார்கள். என்னால் முடியவேயில்லை. சாவதற்கு முன்பு மருமகளின் கைச்சாப்பாட்டைச் சாப்பிட நான் கொடுத்து வைத்திருந்தால்தானே? —'

காலுவின் தாய் உண்மையில் உழைத்து உழைத்து ஓடாகி விட்டாள். சாகக் கூட நேரமில்லாததால் உயிருடனிருக்கிறாளோ என்று கூறும்படி யிருந்தது அவளது நிலை!

ராஜியின் தாய் இரக்கச்சித்தம் படைத்தவள். உண்மையில் ரூபாவிடம் அந்தப் பழைய உறவுதான் அதிகப் பிடிப்புடன் இயங் கிற்று. காலுவின் வீட்டில் அவள் அந்த உறவை நினைத்தபடியே தான் அன்புடனும் ஆதரவுடனும் நடந்துகொண்டாள்.

ஆகையால் கோதரின் தாய் தீபாவளிக்குப் பிறகு வரும் முதல் முகூர்த்தத்திலேயே செய்தி யனுப்பிவிட்டாள் — 'இன்று நல்ல நாளாக இருக்கிறது, உடனே விருந்துக்கு வரவும்!' காலுவைத் தன்னுடன் அழைத்துச் சென்று ராஜிக்கென்று பத்துப் பன்னி ரெண்டு ஜோடி துணிகளும் வாங்கி வந்தாள்.

அழைப்புக்கேற்ப பத்துப் பதினைந்து பேர் வந்து சேர்ந்தனர். ஆனால் ராஜியின் வீட்டினர் திருமண நிச்சயதார்த்த வைபவத் திற்குக் கொடுத்து வைக்காதது போல்: இந்த வைபவத்தையும் அனுபவிக்கக் கொடுத்து வைக்கவில்லை. விருந்தினரின் சாப்பாட் டிற்கு ஏற்பாடு செய்தபின்பு, பரிமாறும்போது காலு வீட்டிற் குப் போய் உட்கார்ந்து கொண்டான்.

கோதரே காலுவைக் கூப்பிடச் சென்றான். ஆனால் காலு சுருக்கமாகக் கூறினான் — 'கோதர்! உனக்கு எல்லாம் தெரியும்! நான் வரமாட்டேன்!' கோதர் அவனை எப்படி வற்புறுத்துவான்! 'அவன் வரமாட்டான்' என்று மகன் கூறக் கேட்ட பின்பும் தாய் எப்படி அவனை அழைக்க வருவாள்?

'அவன் வராவிட்டால் என்ன குறைந்துவிடப் போகிறது? விருந்தினரைக் கூப்பிட்டுப் பறிமாறுங்கள்!' என்று கூறி நாநா பெரிய விஷயத்தை மகத்துவமற்றதாகச் செய்துவிட்டான்.

விருந்தினர் பந்தியில் உட்கார்ந்தனர். உணவு பரிமாறப்பட்டது. மறுபுறம் துடைப்பம், முறம், உலக்கை, உக்கா, பிச்சை ஓடு முதலியவை வைக்கப்பட்டிருந்தன. 'அது கிடக்கட்டும், — நீங்கள் சாப்பிட ஆரம்பிக்கலாம். ஏன் தாமதம்!' என்று சொல்லப் பட்டது.

கிட்டத்தட்ட கிராமம் முழுதும் திரண்டு வந்திருந்தது. சாப்பிடத் தயங்கிய விருந்தினர் பரிகாசத்துக்குள்ளாயினர். ஒரே சிரிப்பும் கேலியும் ஒலித்தன.

ஆனால் கோதரின் மனைவியைத் தவிர வீட்டிலுள்ள ஒருவரிடமும் மகிழ்ச்சி என்ற பேச்சே கிடையாது. ராஜி பாவம் அழுது கொண்டிருந்தாள்.

மறுநாள் மாலை வீட்டை விட்டுக் கிளம்பிய ராஜிக்குக் காலு தென்படவேயில்லை.

மாமியார் வீட்டுக்குச் சென்றுகொண்டிருந்த ராஜி அந்த அழுகைக் கிடையிலேயே மக்கள் கூட்டத்தில் காலுவைத் தேடிக் கொண்டிருந்தாள். அவனைக் காணத் துடித்துக் கொண்டிருந்தாள்.

காலுவோ கிராமத்திலிருந்து ஒரு மைல் தள்ளிக் கழனியில் போய் உட்கார்ந்திருந்தான்.

'எப்படிப் பார்ப்பான் ராஜியை?' ராஜிக்கு இது தெரியும். அவன் அழுதுகொண்டிருப்பான் என்பதும் தெரியும். அந்தக் கற்பனை எப்படிப் பொய்யாக முடியும். மனம் அதற்குச் சாட்சியாயிற்றே. எப்படிப் பொய்யாக இருக்கமுடியும்!

அதனால் இருவருடைய உள்ளங்களும் மற்றவருடைய இதயத்தில் இருந்துகொண்டு சொல்லிக்கொண்டன — 'என்னதான் அழுதாலும் என்ன பயன்? நடந்தது நடந்துவிட்டது! இனி என்ன செய்வது?'

இது தவரு என்ன? இதுவரை மிகவும் மட்டமான நிலேயில் இருந்த அவள் இப்போது மாமியார் வீட்டிற்கு வந்துவிட்டாள். கடைத்தேறிவிட்டாள் அல்லவா?

வரப்பின் மேல் நின்றிருந்த காலு அந்தத் தெருப்பக்கம் சென்று கொண்டிருந்த ராஜியைப் பார்க்க முடியாததால் ஆல மரத்தின் மேல் ஏறிக்கொண்டான். விம்மும் உள்ளத்துடன் கண்களில் நீர் மல்க மாமியாரின் வீட்டை நெருங்கிக்கொண் டிருந்த ராஜியைப் பற்றி காலு கூறியதில் ஏதும் தவறில்லே— 'இதுவரை இருவருடைய மனம் மட்டுந்தான் முறிந்திருந்தது. இன்று உடலும் முறிந்துவிடும். நாளேக்கோ, பதைபதைக்கும் நெஞ்சமும் முறிந்துவிடும்!'

சூனியமாகக் கிடந்த இதயத்தைக் காற்ருல் நிரப்ப முயல்வது போல் ஒரு பெரிய மூச்சை உள்ளிழுத்தான் காலு — தனக்குள் அவன் பொருமிப் போனுன்— 'என்னேப்பற்றிக் கவலேயில்லே. ஆனுல் உன் நிலே உன் வாழ்க்கை முழுதுமே மரணத்திற்குப் பதி லாகப் போய்ச் சிக்கிக்கொண்டு விட்டதே!'

ராஜி மறைந்தவுடனேயே காலுவின் தளும்பிய கண்களிலிருந்து கண்ணீர்த் துளிகள் உதிர்ந்தன — 'டப்டப்' பென்று ஆலமரத்து இலேகளிலிருந்து மழைத் துளிகள் சொட்டுவதுபோல் சொட்டின.

## 18

## களைப்பிற்குப் பின் இளைப்பாற

ஏழெட்டு தினங்களுக்குள் மாமியார் வீட்டில் ராஜியைப் புகழ ஆரம்பித்தார்கள் — 'எவ்வளவு சமர்த்தான பெண்! ஒரு ஆடம்பரம் கிடையாது. வெளிப்பகட்டுக் கிடையாது. அவளுண்டு, அவள் வேலையுண்டு!'

பலீயை மாமியார் வீட்டிற்கு அழைத்துச் செல்வது பற்றிப் பரமா சித்தப்பா வந்து கேட்டபோது ராஜீ தன் ஓரகத்தியிடம் இவ்விதம் தன் கருத்தைத் தெரிவித்தாள். 'ஏதோ ஓரிரு துணி மணிகளைக் கொடுத்து தங்கச்சி பலீயை மாமியார் வீட்டுக்கு அனுப்பிவிடுங்களேன், இரண்டு பேர் வந்து அழைத்துக் கொண்டு போகட்டும்.' துணிமணிகளைப் பற்றிய பேச்சு எழுந்ததும் 'என் துணிகளிலிருந்து எடுத்துக் கொடுத்து விடுங்களேன்' என்று கூறி அந்தப் பிரச்னையையும் தீர்த்து வைத்தாள். இதைக் கேட்டு மகிழ்வுற்ற ஓரகத்திகளின் கண்களிலிருந்து கண்ணீர் ததும்பிற்று: கணவனுக்கெதிரிலேயே அவளைப் புகழ ஆரம்பித்தனர்— 'எவ்வளவு அறிவுபடைத்தவள்! இப்படிப்பட்ட மருமகள் உலகில் தேடினால் கூடக் கிடைக்கமாட்டாள். நம் வீட்டில் தினை ரொட்டி தின்னவேண்டியிருக்கிறது. ஆனாலும் ஒரு நாளாவது அவள் முகம் சுளித்து நாம் பார்த்ததுண்டா? பாலும் நெய்யுமாகச் சாப்பிடும் பெண்கள் எவ்வளவு குற்றம் குறைகள் சொல்வார்கள்?...'

ஆனால் கிராமத்து மக்கள் ராஜி மாமியார் வீட்டிற்கு வருவதற்கு முன்பு கூறியதையேதான் இப்போதும் சொல்லிக் கொண்டிருந்தனர். 'இதெல்லாம் வெளிப்படையாகக் காண்பித்துக் கொள்வதாக்கம் – அவள் வீட்டில் நிலைத்துக் குடித்தனம் நடத்தும்போது பார்த்துக் கொள்ளலாம்.'

மக்களின் எண்ணமும் தவறு என்று சொல்லிவிட முடியாது. வீட்டில் இரண்டு எருதுகள், இரண்டு மாடுகள் — அவ்வளவுதானிருந்தன. அதைத் தவிர மாப்பிள்ளையோ இளைஞனாக இருந்தபோதிலும் ஒன்றுக்கும் உதவாதவன் என்று கிராம மக்கள் கூறுவதற்குத் தகுந்தபடிதான் இருந்தான். 'வாத்தியாருக்கு அடிக்கவும் வராது, பாடம் கற்பிக்கவும் தெரியாது' என்பது போலிருந்தது அவனுடைய கதை!

ஆனால் கிராம மக்களின் ஆரூடத்தைப் பொய்யாக்க ஆரம்பித்து விட்டாள் ராஜி! அவன் எட்டு நாட்கள் குடித்தனம் நடத்தினால் அதிகம் என்று அவர்கள் சொல்லிக் கொண்டிருந்தார்கள். ஆனால் ஒரு மாதமாகியும் அவள் பிறந்தகத்தைப் பற்றிய பேச்சையே எடுக்கவில்லை. பேசாமலிருப்பவர்களை நம்பக்கூடாது என்னும் வழக்கையும் தவறு என்று நிரூபித்துவிட்டாள் ராஜி. இளைஞர்கள் தங்களுக்குள் பந்தயம் கட்டிக்கொண்டு கூறத் தொடங்கினர்— 'ராஜியைக் கொஞ்சம் தூண்டிவிட்டால் போதும். பிறகு சமாளிக்க முடியாது. அவள் தன் தாயால் பாலூட்டி வளர்க்கப்பட்டவளாக்கம்!'

பந்தயம் கட்டியவர்கள் கூட முடிவில் இதை ஒப்புக்கொள்ளத்தான் நேர்ந்தது—உண்மைதான். 'ராஜி அண்ணியைப் போன்ற அறிவுள்ள பெண்களை இந்தக் கிராமம் முழுவதிலும் எங்குமே காணவில்லை. அப்பப்பா ரொம்பவும் புத்திசாலி.....'

இது உண்மைதான். இளமையின் மிடுக்கு, கேலி, பரிகாசம், போக்கிரித்தனம், தளுக்குமினுக்கு— எல்லாவற்றையும் மாமியார் வீட்டுக்கு வரும்போதே அந்தப் பத்து மைல் தொலைவிலுள்ள வழியிலேயே ராஜி விட்டு விட்டாள். சிலவற்றைக் கண்ணீர் வழியாகவும், மற்றும் சிலவற்றைப் பெருமூச்சுக்களின் வழியாகவும், ஏதோ ரகசியமான இடத்தில் வைத்து மூடிவிட்டாள். இது போதாதென்று காலுவின் அந்த வார்த்தைகள் மூடிக்கு மேல் பளுவான ஒரு கல்லை வைத்தாற் போல் செய்துவிட்டன— 'அழகும் அந்தஸ்தும் இருப்பவர்கள் குடித்தனம் செய்வது பெரிதல்ல. ஏழையாக இருந்தபோதிலும் கௌரவமாக வாழ்வதில் தான் பெருமையிருக்கிறது. முட்டாள் கணவனை, புத்திசாலி என்று நினைத்துக்கொண்டு அவனுடன் வாழ்வதில்தான் பெருமையிருக்கிறது.'

இதைத்தவிர காலுவின் பேரிலிருந்த மனக்கசப்பும் குறைந்துவிட்டது— 'பாவம் அந்த நல்ல மனிதனின் பேரில் என்ன குற்றம்? குற்றம் அந்த மாமாவுடையது, அல்லது அந்த அம்மாவின் ....'

அதுமட்டுமா? காலு எங்காவது சுகமாக இருந்தால் போதும் என்று விரும்பினாள் ராஜி. முடிந்தால் அதற்காக உதவவும் அவள் தயாராக இருந்தாள். அதனால் காலுவின் தாய் நோய்வாய்ப் பட்டிருப்பதாகக் கூறி பலீயை மாமியார் வீட்டிற்கு அனுப்பும்படி தன் நாத்தியிடமும் மைத்துனரிடமும் கேட்டுக் கொண்டாள். இதுமட்டுமா? தன் உடன்பிறந்த சகோதரியை மாமியார்

வீட்டிற்கு அனுப்புவது போல் தன்னிடமிருந்த ரவிக்கைகளில் நல்லவையாகப் பார்த்து மூன்று எடுத்து அவளுக்குக் கொடுத்தாள். மூன்று பாவாடைகள் கொடுத்தாள். நன்றாக உழைக்கும் புடவைகளில் இரண்டைக் கொடுத்தாள். அவற்றில் ஒன்று திருமணப் புடவை.

மணமகளை அழைத்துக்கொண்டு போகும் நாள் வந்தது. காலு, சோதர், பரமா சித்தப்பா, சங்கர், காசம் எல்லோரும் முற்றத்திலிருந்த கட்டில்களில் உட்கார்ந்துகொண்டனர். பாவம் ராஜியின் மகிழ்ச்சியோ எங்கோ மறைந்தோடிவிட்டது. மாப்பிள்ளையிடம் பலவிதமான வேடிக்கைப் பேச்சுகளும் பரிகாசமும் செய்யத் தயாராக வைத்திருந்த கோட்டையே சரிந்து விழுந்து விட்டது. பலீயே அவளுக்குப் பகையாளிபோல் தோன்றினாள்.

பாடுவதிலும் சரி, வந்திருந்தவர்களின் சாமான்களை விளையாட்டிற்காக ஒளித்து வைப்பதிலும் சரி, ராஜி பங்கு கொள்ளவில்லை. சாப்பிட உட்கார்ந்திருந்த காலுவுக்காகத் தலைப்பாகை எடுத்து வந்த பெண்களின் பேரில் சீறி விழுந்தாள் — 'போதும் தொட்டிலை ஆட்டி, குழந்தையை அழவும் வைக்க வேண்டாம். போய் மரியாதையாய் வைத்துவிட்டு வாருங்கள்.'

முற்றத்தில் சாப்பிட உட்கார்ந்திருந்த காசம் குதூகலமாகப் பேசிக் கொண்டிருந்தான். அதைக் கேட்கக் கூட ராஜி வெளியே வரவில்லை. வெளியே கல கலவென்று கேட்டுக்கொண்டிருந்த சிரிப்பொலி அவளை இன்னும் சிடு சிடுக்கச் செய்தது — 'எப்போது நிறுத்தப் போகிறீர்கள்?' இன்னும் எத்தனையோ வேடிக்கைகள் இருந்தன. மத்தை எடுத்துக் கடையும் வேடிக்கை ஒன்றிருந்தது. சங்கோசத்தை விட்டு மத்தைக் கையிலெடுத்தவுடன், உணர்ச்சிவசப்பட்ட காசம் ஈரடிச் செய்யுளைப் பாடினான்—

'ரடீ ஹஸாடே ஹஸீ ரடாவே ஏ வே வாண் பாவாயோ;

...... ............

(அழுதுகொண்டு சிரிக்க வைத்தலும், சிரித்துக்கொண்டு அழ வைப்பதும், ஏ சம்பந்தியம்மா! இது வாழ்க்கையின் வேலை... வாழ்வின் கடையலும் இப்படித்தான்! இந்தாருங்கள் மத்து, எடுத்துக்கொள்ளுங்கள்!)

சங்கர் கேள்வி யொன்றைக் கேட்டு வைத்தான் — 'என்ன சொன்னாய் காசம்? சம்பந்தியைப்பற்றி! மறுபடியும் சொல்!'

காசம் மறுபடியும் பாடினான். மக்கள் இரட்டிப்பு உற்சாகத்துடன் சிரித்தனர்.

காலு கவலையில் ஆழ்ந்தான். வாழ்வைக் கடைவதும் இப்படித் தானிருக்கிறது!

ஆனால் ராஜி வாழ்க்கையின் பயங்கரக் கடையலை நினைத்து அழுது கொண்டிருந்தாள். அன்றிரவு முழுதும் அவளுக்குத் தூக்கம் வரவில்லை, பகலிலும் அதே நிலைதான். வழியனுப்பும் நேரம் வந்தது. ராஜிக்கு வெளியே வந்து தலைக்காட்டத் துணிவில்லை. மக்கள் அவளைக் கேட்பதுபோலிருந்தது— 'ராஜி! பலீ மாமியார் வீட்டிற்குப் போகிறாள். உன் முகம் ஏன் இப்படி வாடிக் கிடக்கிறது? முகத்தைப் பார் கொஞ்சம் — மறுபடியும் அதே நிலையா? ஓகோ!— அந்தப் பழைய உறவு நினைவுக்கு வந்து விட்டதா?...'

பலீயை அனுப்பும் கணம் வந்துவிட்டது. நம் தலையெழுத்து என்று நினைத்துக்கொண்டு, நினைவு, கற்பனை எல்லாவற்றையும் நீரின் மேல் படிந்த பாசியை ஒதுக்குவது போல், மறுபுறம் ஒதுக்கித் தள்ளிவிட்டு ராஜி எழுந்தாள். தெளிந்த நீர் போல் கபடமற்றுப் புன்சிரிப்பு சிரித்தபடி பலீயை அழைத்துக்கொண்டு வெளியே வந்தாள்— 'பலீ! கிளம்பம்மா! கிராமத்திற்குப் போய் நன்றாக இரு!'

பலீக்கு நல்லுபதேசங்கள் கூறி அனுப்ப வேண்டும் என்று ராஜி விரும்பினாள்—' அவனுக்கு (காலுவுக்கு)க் குளிக்க வெந்நீர் போட்டுத்தா. நீயே வேட்டியை எடுத்துக் கையில் கொடு. சாப்பிட நல்ல காய்கறிவகைகளைச் சமைத்துப் போடு. கல்லி லிருந்து இறக்கிய உடனே ரொட்டியைக் காலுவுக்குக் கொடு. அவன் எது சொன்னாலும் சிரித்த முகத்துடன் அதன்படி நட. பேசும்போது மனம் விட்டுச் சிரித்தபடி பேசு. நீங்களிருவரும் சமமான வயதுடையவர்கள். கிழவியை தெய்வவடிவுள்ளவள் என்றே சொல்லவேண்டும். யாரும் ஏதாவது குற்றங்குறையை எடுத்துக் காட்டிப் பேசுவது அவளுக்குச் சிறிதும் பிடிக்காது. நீங்களிருவரும் வீட்டிலிருக்கும்போது, அவள் கழனிக்குக் கிளம்பி விடுவாள். நீங்கள் வயல் வெளிக்குப் போகும்போது அவள் வீட்டுக்குள் படுத்துக் கிடப்பாள். பாவம், உடம்பு சரியில்லை யென்று கேள்விப்பட்டேன். அப்படியானால் கட்டிலைவிட்டு எழுந் திருக்கவே மாட்டாள். அப்படியே எழுந்திருந்தாலும் எதையும் கவனிக்கமாட்டாள். நீங்களிருவரும்—'

இதெல்லாம் ராஜியின் எண்ணத்தில் சுழன்றதே தவிர—

'சவுக்கியமாக இருவரும் சேர்ந்து இருங்கள்!' என்று மட்டும் தான் பெருமூச்செறிந்தபடி அவளால் கூற முடிந்தது. வழியனுப்பும்போது பலீயிடமும் இவ்வளவுதான் சொன்னாள் — 'என்னைவிட வயதில் பெரியவள் நீ. உனக்கு நான் என்ன புத்திமதி கூறப்போகிறேன்?'

ஆனால் காலுவின் வருத்தமான, உணர்ச்சியற்ற உருவத்தைப் பார்த்து ராஜிக்குத் தோன்றியது— 'பாவம் பலீ ஒன்றுமறியாத பெண்! சொல்வதைச் செய்வாள். இவளுடைய அண்ணன்தான் பொல்லாத கோபக்காரர்!'

விடைபெற்றுச் செல்லும் காலுவைக் கண்கள் சந்தித்தன. அதனாலோ அல்லது சலிப்படைந்த அவனைப் பார்த்ததாலோ, அவளுக்குத் தன் பேரிலேயே ஆத்திரம் பொங்கிக்கொண்டு வந்தது — 'எப்படியோ இருவரும் சேர்ந்து மண்டையை உடைத்துக் கொள்ளட்டுமே! உனக்கோ அங்கு வேலை கிடையாது. அவர்களைப் பார்த்தாலும் அவர்களைப் பற்றிக் கேட்டாலும்தான் உனக்கினி என்ன? நீதான் அவர்களுடைய வீட்டைப் பாதுகாக்கக் கங்கணம் கட்டிக்கொண்டிருக்கிறாயா?'

கிராமத்து நான்கைந்து பெண்களுடன் வாசலில் நின்றபடி அழுதுகொண்டே செல்லும் பலீயை ராஜி கடைக்கண்ணால் பார்த்தாள். மனதிற்குள் முணுமுணுத்தாள்— 'பார்! உலகத்துக்காக அழுகிறாள்! அந்த அழகனைப் பார்த்து மனதிற்குள்...'

ஓரகத்தியைப் பின் தொடர்ந்து உள்ளே சென்றுகொண்டிருந்த ராஜி ஒரு நீண்ட மூச்செறிந்தாள். ஒருவருக்கும் தெரியாமல் கண்ணின் ஓரத்தைத் துடைத்துக் கொண்டாள். மனதையும் தேற்றிக் கொண்டாள்— 'போன ஜன்மத்தின் கர்மபலன் இது! அவளா உன் திருமணத்தை நிறுத்த வந்தாள்?.... பாவம் அவள் என்ன செய்வாள்? மகளும் பசுவும் எங்கு போகச் சொன்னாலும் போயாக வேண்டும்!'

ஆனால் காலு நினைத்தது இவ்விதம்: 'நான் பொட்டிடப் போனேன் ராஜிக்கு! ஆனால் மறைந்திருந்து தன் சின்னஞ்சிறு முகத்தை இடையே நீட்டிவிட்டாள் பலீ! என் வாழ்வில் அந்த மென்மையான ராஜியிருக்கவேண்டிய இடத்தில் இந்த மரக்கட்டை வந்து சேர்ந்தது,

காலுவுக்கு பலீயைக் கண்டால் சிறிதும் பிடிக்கவில்லை. நோயுற்ற தாயுடைய கண்டிப்பின் பேரில்தான் மணப்பெண்ணை

அவன் அழைத்து வந்தான். மனதிற்குள் மிகவும் வருந்ினன் — 'ராஜி போனவுடனேயே இது நடக்கும் என்று தெரிந்திருந்தால் நானே கோதரிடம் சொல்லி அதை நிறுத்தியிருப்பேன் ! விலங்கை விட்டுத் தொழுவில் மாட்டிக்கொண்ட கதையாகிவிட்டது !'

வீட்டிற்குள் நுழைந்த உடனேயே கோபத்துடன் காலு தன் தாயைக் கடிந்துகொண்டான் — 'அடிக்கடி என்னைத் தொந்தரவு செய்தாய் ! இந்தா இப்போது மகிழ்வுடன் மருமகள் செய்த ரொட்டியைச் சாப்பிடு !'

கட்டிலில் படுத்திருந்த தாய் கவலையுற்ருள் — 'ஏன் ? என்ன தம்பி நடந்துவிட்டது ?'

பதில் சொல்வதற்கு பதிலாகச் சட்டையையும் தலைப்பாகையையும் கழற்றி மாவரைக்கும் இயந்திரத்தின் மேல் வீசி எறிந்து விட்டு வெளியே வந்தான் காலு. உடல் நிலை எப்படி இருக்கிறது என்று கூட அம்மாவிடம் கேட்கவில்லை. காய்ச்சல் குறைந்திருக்கிறதா, இல்லை அதிகமாகிக் கொண்டிருக்கிறதா ? ஒன்றுமே கேட்கவில்லை காலு.

தாய் ஒன்றும் புரியாமல் திகைத்தாள். அப்போது கோதர் மணமகளின் பையுடன் உள்ளே நுழைந்தான். கிழவன் பரமாவும் சங்கரும் வந்தார்கள். கடைசியாக மருமகளும் உள்ளே நுழைந்தாள்.

கிழவியின் மனம் நிம்மதியடைந்தது — 'மகளே ! வாம்மா ! அருகில் வா ! உன்னைத் தடவிப் பார்க்கிறேன் வா !'

நல்லவற்றைத் தன்னுடன் எடுத்துவந்துள்ள நல்ல மருமகளின் தலையைத் தன் கையால் கிழவி தடவிக் கொடுத்தாள். தான் இறப்பதற்கு முன்பு அன்பு செலுத்துவதைப் போல் அருகில் அவளை அமர்த்திக்கொண்டாள் — 'மகளே ! என் தலையைக் கொஞ்சம் பிடி. தலைவலி மண்டையைப் பிளக்கிறது !' கிழவி சொலலிவிட்டாளே தவிர உடனே கவலைப்படவும் செய்தாள் — 'ஒருவேளை மறுத்துவிட்டால்...முதலிலேயே தடங்கல் வந்தால்....'

ஆனல் பலீ மறுக்கவில்லை, முதலிலேயே தடங்கல் வரவுமில்லை. சிறிது நேரத்தில் — 'போதும் அம்மா !' என்று கிழவி கூறினள். வீட்டு வேலைகளில் அவளை ஈடுபடச் செய்தால் — 'அப்புறம் ஒரு குடம் தண்ணீர் கொண்டுவா !'

இதற்குள் நாதாவின் மனைவி வந்து சேர்ந்தாள். இரண்டு குடங்களைக் காலிசெய்து பலீயையும் உடனழைத்துச் சென்ருள்.

பாவம், மருமகள் வேலை செய்வதையும், மகன் குடித்தனம் செய்வதையும் பார்க்கவென்றுதானே என்னமோ கிழவி நான் கைந்து நாட்கள் இருந்தாள். வீட்டு வேலைகளில் பலீயின் ஈடு பாட்டைக் கண்ட கிழவி மனமகிழ்ந்தாள். ஆனால் மகனின் இதய மற்ற போக்கைப் பார்த்து மிகவும் வருத்தமுற்றாள். அன்பினால் மனிதனை வென்றுவிடலாம். அன்புதான் ஒருவரையொருவர் புரிந்துகொள்ளும் சாதனம் ... இரண்டே தினங்களில் கிழவியின் மனம் நிம்மதியுற்றது.

மூன்றாம் நாள் மாலை நேரத்தில் கிழவி கோதரின் வாயிலாகக் கிராமத்தில் திரிந்துகொண்டிருந்த காலுவை வரவழைத்தாள். அருகில் உட்கார வைத்துக்கொண்டு சில நல்லுரைகள் கூறினாள்: 'நான் இன்னும் ஒரு இரவைக் கழித்தால் அதிகம். நீ எது செய்வாயோ, உன் இஷ்டம். ஆனால் இறக்கும்போது என் மன அமைதியைக் கெடுத்துவிடாதே. மருமகள் பலீ உனக்கு அவ்வள வாகப் பிடிக்கவில்லை என்பது எனக்குத் தெரியும் ... ஆனால்—' பெருமூச்செறிந்த கிழவி கண்களிலிருந்து வழிந்த நீரை ஒருவரு மறியாமல் துடைத்துக்கொண்டு கூறினாள் — உன் வாழ்வின் வருத்தத்திற்கு என்னைப் பொறுப்பாளியாக்கி விடாதே — நான் செத்தபிறகாவது நான் சொன்னபடி நடப்பாயா? உனக்கு அறிவுரை சொல்ல நான் திரும்பி வரவா போகிறேன்?...'

காலு தன் உறுதியான முடிவை மாற்றிக்கொள்ள வேண்டி வந்தது. பிடிக்காத விஷயத்தைப் பிடித்ததாகச் செய்ய நேர்ந்தது. நாதாவின் மனைவி பின்புறம் போட்டிருந்த கட்டிலில் தன் மனைவி யுடன் போய் உறங்கவேண்டி வந்தது. ஆனால் காலுவுக்கு முள் படுக்கையில் படுத்துறங்குவது போல்தானிருந்தது.

ஆனால் கிழவி நினைத்தது வேறு — 'மகன் அறிவாளி. நான் சொன்னபடி கேட்டுவிட்டானே!' மூன்றாம் நாள் உயிரை விட்டு விட்டாள் கிழவி — நிறைவேறாத தன் ஆசையைப் பூர்த்தி செய்து கொண்டுதான். தன் மற்றொரு ஆசையைப் பூர்த்தி செய்வதாக மகனிடம் வாக்குறுதி வாங்கிக்கொண்டாள் — 'என் கண்ணே! கடவுள் நம் மானத்தைக் காப்பாற்றினார். நீயும் நம் கௌரவத்தை நழுவவிடக் கூடாது. இதோ பார்!' கிழவியின் கண்ணெதிரே இன்னொரு மருமகள் — சக்களத்தி உருவில் வந்து நின்றாள் — வாழ்வையே மறக்க வைக்கும் ஐந்தாண்டுக் காலம் வந்து நின்றது. —'நல்ல வேளையில் எங்களிருவரில் ஒருவர் முதலிலேயே போய்ச்

சேர்ந்தோம். 'இல்லாவிட்டால்....' கிழவி ஒரு பெருமூச்சு விட்டாள். 'மகனே! நாங்கள் பட்ட துன்பங்களே உனக்கு ஒரு பாடமாக இருக்கவேண்டும்—கிழவனும் கிழவியும் பிரிந்திருந்த காலத்தில் ஒரு நாளாவது உரத்த குரலில் பேசியதுண்டா என்று கிராம மக்களிடம் கேள்!' பிறகு அந்த ஐந்தாண்டுகளை மறுபடியும் அவள் நினைத்துப் பார்த்தாள்—

'காலு! இதோ பார்! உன் அப்பாவின் வார்த்தைகளை நெஞ்சை விட்டு அகற்றக்கூடாது. ஐந்தாண்டுகளாக நாம் அனுபவித்த கஷ்டங்களை நினைத்து அவர் சொன்னார்—ஏழுவம்சம் நிர்மூலமாக ஆகிவிட்டாலும் சரி — ஒருத்தி உயிருடனிருக்கையில் மற்றொருத்தியை வீட்டிற்குக் கொண்டுவந்து விடாதே .... கலியுகத்துத் தண்ணீர் தொண்டையின் கீழ் இறங்க வேண்டுமானால், சுகமாக வாழ விரும்பினால்....'

காலு சரி என்று ஒப்புக்கொண்டான். கிழவியின் தலை சுற்ற ஆரம்பித்தது. 'இதென்ன அம்மா? உனக்கு யார் இப்படி எல்லாம் சொன்னவர்கள்?' காலுவுக்கு ஒரே வியப்பாக இருந்தது.

'என் அந்தராத்மா சொல்கிறது மகனே! ஆனால் ஒன்று நினைவிருக்கட்டும் மகனே. பசுவை ஓட்டி வந்தவன் பரந்தாமன் கண்ணே! பாவம். ஏழை வீட்டுப் பெண். அவள் இங்கு வந்து கண் கலங்கக் கூடாது!'

பரமா சித்தப்பாவினாலும் சும்மா இருக்கமுடியவில்லை — 'ஏன் கண்கலங்க விடவேண்டும்? நீ சும்மா இரு. உன் குலத்துப் பேர் சொல்லவேண்டுமே என்று கழுத்தில் பாறங்கல்லைக் கட்டி வைத்தாய்! இப்படிக் கெட்ட வார்த்தை...'

ஆனால் கிழவி தன் போக்கில் பேசிக்கொண்டே போனாள் — 'கெட்டவளாக இருந்தால்தான் கவலையே கிடையாதே! ஆனாலும்' —பலவீனமான கையை நீட்டி, 'வாக்குக்கொடு' என்றாள் கிழவி.

'அட தெய்வமே! இந்தக் கிழவியின் மனத்தில் இப்படி ஒரு சந்தேகமா?' காலுவுக்கு மட்டுமல்ல, அருகே உட்கார்ந்திருந்த இருபது — இருபத்தைந்து பேர்களுக்கும் சிரிப்பு வந்தது.

'தம்பி! வாக்குக் கொடுத்துவிடு, கிழவி மன அமைதியுடனிருக்கட்டும்!' கிழவன் கூறினான்.

வாக்குக் கொடுத்தபடியே காலு கவலையில் ஆழ்ந்தான் — கிழவிக்கு எதிர்காலத்தைப் பற்றிய சிந்தனையா, அல்லது அந்தப்

பிராமணன் கூறிய சோதிடத்தின் நினைவா! ராஜி ஏதாவது அமர்க்களம் செய்துவிட்டாளோ? அப்படியே செய்திருந்தாலும் அது எப்படி முடியும்? ஏழேழு வம்சங்களின் பெயரை நாசமாக்க எனக்கென்ன பைத்தியமா பிடித்திருக்கிறது?' உடனே கிழவியின் கைமேலடித்தான் காலு — 'இந்தா என் முன்னோர்களின் மீது ஆணை. நான் மறுமணம் செய்துகொள்ளவே மாட்டேன்!'

இந்த நற்செய்தியைக் கூறக் கிழவனிடம் செல்ல நினைத்தாளோ என்னமோ, கிழவி ஐந்து கணங்கள் ஆனந்தக் கண்ணீர் உதிர்த்தபடி மகனை ஆசீர்வதித்தாள். ஆறுவது கணம் மலங்க விழித்தாள்—

சங்கர், கிழவன் பரமா மற்றும் காசம் மூவரும் சேர்ந்து பேசினர் — 'என்ன பார்த்துக் கொண்டிருக்கிறாய்? கீழே இறக்கி விடு!'

கீழே இறக்க இறக்க எழுபத்தைந்து எழுபத்தாறு ஆண்டுகள் வாழ்ந்த அந்த வாழ்வின் எல்லா ஆட்டமும் ஓய்ந்துவிட்டது.

மூன்றும் நாள் மலர்கள் கொண்டுவரப்பட்டன. கருட புராணம் படிப்பதற்காகப் புரோகிதரும் வந்துவிட்டார். நான்காம், ஐந்தாம் நாள் மக்கள் துக்கம் விசாரித்து விட்டுச் சென்றனர். பிறகு கிராமத்தில் மாவு இடிக்கும் வேலை ஆரம்பித்தது. பத்தாம் நாள் தீட்டுப் போயிற்று. பதினொன்றும் நாள் சிராத்தம் செய்யப்பட்டது. குழந்தைகள் எல்லோருக்கும் விருந்தளிக்கப்பட்டது, பன்னிரண்டாம் நாளை மிகவும் நன்றாக நடத்தி வைத்தான் காலு. ஏழெட்டு கிராமங்களிலுள்ள உற்றார் உறவினர் யாவருக்கும் நெய்யும் பொங்கலும் விருந்திட்டான். பதின்மூன்றும் நாளைய விருந்தில் பங்குபெற்றுத் திரும்பிய மக்கள் காலுவை மனதாரப் புகழ்ந்தனர் — 'எது எப்படியோ, ஆனால் மகன் தாயைக் கரை சேர்த்துவிட்டான். கடன் வாங்கியாகிலும் சரி, ஐந்து மணங்கு நெய் செலவு செய்திருக்கிறானே, இது சாமானியமான விஷயமல்ல ...' கிழவர்கள் கிளிப்பிள்ளைபோல் அதே வாக்கியத்தைச் சொல்லிக் கொண்டிருந்தனர் — 'மகன் பிறந்தால் அப்படிப் பிறக்க வேண்டும்.'

இப்போது காலு இந்தச் சம்பவத்தை வெற்றிகரமாக முடிக்கச் செய்ய வந்திருந்த சேட்டுடன் உட்கார்ந்துகொண்டு கணக்குப் பார்க்க ஆரம்பித்தான். சேட் பழைய கடனைப் புதுப்பித்தான். கொஞ்சம் பணம் குறைத்துக்கொண்டு பஞ்சாயத்து மக்களை மகிழ்வுறச் செய்தான். 'மிச்சம்' என்று கூறியபடியே 'பதினேழும்

இருபதும் கூட ஏழும்; இந்தா கட்டைவிரலின் அடையாளத்தை இங்குவை!' என்று சொல்லி முடித்தான்.

'ஓகோ! சேட்! என் தலையில்கூட இத்தனை முடி கிடையாதே சேட்!' என்று கூறியபடி காலு கட்டைவிரலுக்கு மசியைப் பூசினான். 'இத்தனையையும் நான் எந்தப் பிறவியில் கொடுத்துத் தீர்ப்பேன்?' என்று உரக்கக் கூறினான்.

'எந்தப் பிறவியிலா? இதே பிறவியில்தான்! தையற்காரன் உயிருள்ளவரை தைத்துத்தாகை வேண்டும்!' சேட் கணக்கு நோட்டை மூடியபடி கூறினான்.

'அதுசரிதான்!' கிராம மக்களும் ஆமோதித்தனர். கணக்கைச் சரிபார்ப்பதற்காக சேட்டிற்கென்று தயார் செய்யப்பட்ட லட்டை அவர்களும் தின்னத் தயாராயினர்.

பதினான்காம் நாள் காலை சேட்டும் குதிரை மீதேறிச் சென்று விட்டான்.

பதின்மூன்று தினங்களுக்குப் பிறகுதான் இனி தாய் நம்மிட மிருக்கப் போவதில்லை, திரும்பி வராமல் சென்றுவிட்டாள் என் பதைக் காலு உணர்ந்தான். ஒரு வேண்டாத ஆசாமி திரும்பிச் செல்லாதபடி வந்து சேர்ந்துவிட்டாள் என்பதையும் உணர்ந் தான்.

காலுவிற்கு எங்கும் வெறிச்சென்றிருந்தது. தனிமை வதைத் தது, கண்களில் நீர் நிரம்பியது.

பலீக்காக அவன் தன் மனதை எப்படியெல்லாமோ தேற்றிக் கொண்டான். ஆனால் மனம் அதற்கெல்லாம் சமாதானமடைந்து விட்டால், பின்பு வருத்தம் என்பது ஏன் உண்டாகிறது?

வீட்டு வேலைகளையும், நெய் பால் தயிர் எல்லாப் பொறுப்பை யும் காலு பலீயிடம் அளித்துவிட்டான். 'கடைக்காரனின் நிறுத் தல் அளவும், அவளுடைய வயிற்றின் அளவும் அவள் பார்த்துக் கொள்ளட்டும்,' என்றிருந்துவிட்டான் காலு.

ஆடு மாடுகளின் வேலையைக் கூட பலீயிடம் ஒப்படைத்து விட்டான் அவன். தன் உடலையும் கொடுத்துவிட்டான், ஆனால்— பலீக்கு, ஒரு பெண்ணிற்கு வேண்டியது மனம், உள்ளத்தை அவன் தரவில்லை, தரமுடியவில்லை. அவனுக்குத் தெரிந்தது, பலீயிடம் இரக்கம் கொண்டான். தாயின் வார்த்தைகள் நினைவுக்கு வந்தன — ஆயினும்! அந்த உள்ளம் யாருக்கோ உரித் தாகி விட்டதோ! யாரோ அடகு வைப்பது போல் அந்த

உள்ளத்தை அவளிடம் விட்டு வைத்திருந்தார்களே! அதை வேறு எவருக்கும் கொடுக்க உரிமை அவனுக்குக் கிடையாது. அப்படிச் செய்யும் நிலையில் அவன் இருந்தால்தானே!

இங்கு நடைபிணம் போல் சூனியமான மனத்துடன் வீட்டை வந்துகொண்டிருந்தாள் பலீ. பெண்ணின் சுபாவமான சிடுசிடுப்பும் அவளுக்கு வந்தது. ஆனால் காலு அப்படியேதான் இருந்தான். அதே 'முனிவிரதம்' தான்!

பலீ பிறந்தகம் போவதாகப் பயமுறுத்தினாள். அவன் என்ன சொல்ல நினைத்தானோ அதற்கு மாறாகக் கூறிவிட்டான் — 'பலீ! நான் இடையே வருகிறேனா பார்!'

பலீயால் சும்மா இருக்க முடியவில்லை... வீட்டை விட்டுக் கிளம்பும்போது அவனிடம் வாக்கு வாங்கிக் கொண்டாள் — அவனே அழைத்துச்செல்ல வந்தால்தான் பலீ இந்த வீட்டை மறு படியும் மிதிப்பாள்!

காலுவுக்கு மகிழ்ச்சியுண்டாயிற்று. கிடந்த சடலத்தை அப்புறப் படுத்திய நிம்மதி அவனுக்கு. அப்படியொன்றும் வேலை கிடை யாது. ஒரு மாதத்தில் கோதுமை அறுவடை செய்யவேண்டும். அவனிடம் இரக்கப்படுவோருக்குச் சுடச்சுட பதில் கொடுத்தான் அவன் — 'நான் தனி ஆளே ஆயிரம் பேருக்கும் மேல்!'

இதை நிரூபித்தும் காண்பித்துவிட்டான் காலு. இளவேனிற் காலம் முடியும் நாட்கள். அதிகாலையில் அவன் எழுந்துவிடுவான். அண்டை வீட்டு ராமாவும் நாதாவும் எழுந்திருப்பதற்குள் எருமையைக் கறந்துவிட்டு அதற்குத் தீனியும் வைத்துவிடுவான். கால்நடைகளை அவிழ்த்துவிட்டு இரண்டு முறம் நிறைய சாணத்தை எடுத்து வெளியே கொட்டிவிட்டு வருவான். அதற்குள் அடுப்பில் வெந்நீர் காய்ந்துவிடும். இரண்டு குடம் தண்ணீர் கொண்டுவந்து கொட்டிவிட்டுக் குளித்துவிடுவான். மற்றவர்கள் மாட்டை அவிழ்த்து வெளியே விடுவதற்குள் பாலில் கொஞ்சம் மாவைப் போட்டுக் கொதிக்கவைத்து ஒரு கரண்டி நெய் ஊற்றி நான் கைந்து உருண்டைகள் விழுங்கிவிடுவான்.

எல்லோரும் பல்தேய்த்துக் கொண்டிருக்கும்போது —'ராமா! என் மாடுகளையும் ஓட்டிக்கொண்டு போயேன்!' எனக் கூவிய வண்ணம் கையில் அரிவாளுடன் காலு கழனிக்குப் புறப்படுவான்.

கழனியை யடைந்தவுடனேயே முதலில் சட்டையைக் கழற்று

வான். தலைப்பாகையை ஆலமரக் கிளையில் மாட்டுவான். கச்சையைக் கட்டிக்கொண்டு தயாராகி விடுவான்.

மற்றவர்கள் வருவதற்குள் நூற்றிருபது சதுர அடி வரையுள்ள பயிரை அறுவடைசெய்து தரையில் குவித்துவிடுவான் காலு. ராமா வியந்துவிடுவான் 'அடே! உனக்கு ஏதாவது குட்டிச் சாத்தானுடன் நட்புண்டோ?'

காலு சிரித்தான் — 'நானே குட்டிச்சாத்தானைப் போலிருக்கிறேன். பாரேன்! தெரியவில்லையா?'

அவன் கூறியதில் தவறென்றும் கிடையாது. காலுவின் கருத்த உடல் வியர்வையால் நனைந்துவிட்டது. பரந்த மார்பும், நரம்புகள் புடைத்துள்ள தோள்களும் எஃகுப் போலிருந்தன. தலையின் நீண்ட கேசங்கள் இங்குமங்குமாகப் பறந்துகொண்டிருந்தன. கண்கள் சிவந்திருந்தன.

'உண்மைதான்! இருட்டில் உன்னை யாராவது பார்த்தால் நடுங்கிவிடுவார்கள் காலு!' ராமா கூறினான். போகிற போக்கில் நல்லுரை கூறிச்சென்றான்—'ஆனால் ரொம்பவும் அதிகம் உழைப்பதும் சரியில்லை. மற்றவர்களை உதவிக்கு அழைத்துக் கொள்வது தானே! ஏன் இப்படித் தயங்குகிறாய்? இப்போது ஒன்றுமில்லை. நான்காம் மாதத்தில் உன் உடல் நிலை கெட்டுவிடும்!'

ஆனால் இம்மாதிரி உபதேசம் கிராமம் முழுவதும் தான் கொடுத்து வந்தது. கோதரின் அம்மாவிற்கு மட்டும் ஆத்திரம் பற்றிக்கொண்டு வந்தது. கிழவன் பரமாவோ கோதரின் மீது எறிந்து விழுந்தான் — சுத்த உதவாக்கரையாக இருக்கிறாயே! உன் மனைவியிடம் என்ன குறையைக் கண்டுவிட்டாய்? சொல் பார்க்கலாம்! பிள்ளை குட்டியில்லாமல் தனி ஆளாக நின்றுவிடுவதாக எண்ணமா?'

ஆனால் காலு வாய் திறக்கவேயில்லை. திறந்தால்தானே யாருக்காவது ஏதாவது தெரியவரும்!

கிழவனுக்கு மிகப் பெரிய கவலை ஒன்றிருந்தது—'நானோ சாகப் போகிறவன். ஆனால் அங்குள்ள அண்ணனும் ரூபா அண்ணியும் என்னிடம் மகனைப்பற்றிக் கேட்டால் நான் என்ன பதில் சொல்வேன்?' கிழவனுக்கு இது நன்றாகத் தெரியும். அதனால்தான் ஆடி மாதம் பிறந்தவுடன் காலுவைக் கேட்காமலேயே பலீயை அழைத்துவரச் சென்றுவிட்டான். அதுவும் குதிரையை ரண்சோட் எடுத்துச் சென்றதால் நடந்து சென்றான்.

ஆனால் பெண் வீட்டாரும் நான்கு மடங்கு தயக்கத்தைத் தெரிவித்தனர் — 'மாப்பிள்ளையே வந்தால்தான் அனுப்புவோம். வயிற்றில் சுமந்த பெண்ணுக்கு வீட்டில் இடமில்லையா என்ன?' ராஜியும் பிறந்தகத்திலிருந்தாள். இல்லாவிட்டால் எப்படியாவது கிழவனின் எண்ணம் நிறைவேறியிருக்கும்.

கடைசியில் காலு தோல்வியை ஒப்புக்கொள்ள நேர்ந்தது— பின்பு என்ன? ஒரு ஆளால் முடியாது பயிர்த் தொழில் என்று கிராம மக்கள் சொல்வது உண்மைதான். தனி மனிதனால் எங்கெங்கு செல்ல முடியும்? வீட்டு வேலை, ஏர் உழுதல், இவற்றிலும் பெரிய வேலை மாடுகளை மேய்த்தல். ஒவ்வொரு நாளும் யார் கொண்டு செல்வார்கள்? விடியற்காலையில் மாடுகளை மேய்த்துக்கொண்டு திரும்பியாக வேண்டும்; அதற்குத் தீனி வைத்தல், சாப்பாடு தயார் செய்து சாப்பிட்டுவிட்டு எல்லோருடனும் ஏர் உழுதல் ... பகல் நேரம் கழிந்ததும் மாடுகளை வீடு கொண்டு சேர்த்தல், ஏரிலிருந்து கழற்றப்பட்ட களைத்த எருதுகளுக்குத் தீனி வைத்தல்; இரவு வீடு திரும்பி அடுப்பு மூட்டுதல், கல்லுரல் மேல் உட்கார்ந்துகொண்டு கையையும் காலையும் பிடித்துக் கொள்ளுதல் ...

எப்படியோ தீபாவளிவரை கழிந்துவிட்டது. அறுவடைக்குப் பிறகு கணக்குப் போட்டுப் பார்பபதில் பாதிக்குப் பாதி நஷ்டம் என்று தெரிந்தது. எல்லா வேலைகளும் இன்னும் முடிந்தபாடில்லை. விதை என்னமோ விதைத்துவிட்டான். ஆனால் வயல் முழுவதும் அறுவடைசெய்து முடிப்பதற்குள் போதும்போதும் என்றாகிவிடும்.

சோதரும் அவனுடைய தாயும் அவனை விட்டபாடில்லை — 'உனக்காக நாங்கள் எவ்வளவோ கஷ்டத்திற்கிடையே ராஜியை—மாமியார் வீட்டிற்கு அனுப்பினோம். இந்தத் தீபாவளிக்காவது நீ பலியை அழைத்து வந்தால்தான் நாங்கள் ராஜியை இங்கு அழைத்து வருவோம். இல்லாவிட்டால் தீபாவளிக்கும் அவள் தன் பிறந்தகத்திலேயே இருக்கட்டும்!' காலு மௌனமாக இருப்பதைக் கண்ட கிழவி கண்களைக் கசக்கிக் கொண்டு கேட்டாள் — 'எல்லோரும் வெளியூரில் இருக்கும் உறவினர்களை அழைக்கிறார்கள். நீ — தீபாவளி நாளன்று இப்படித் தன்னந் தனியாக இருக்கப் போகிறாயா? ...'

பரமா கூறினான் — 'அழைத்துவர விருப்பமில்லா விட்டால், தள்ளிவைத்துவிடு, காஷாயத்தைக் கட்டிக்கொண்டு சாதுக்க

ளோடு போய் இரு. பாவம், அவர்களும்தான் எத்தனை நாள் மடியில் நெருப்பைக் கட்டிக்கொண்டிருப்பார்கள்! வாலாவுக்கு நல்ல பெயர் வாங்கிக் கொடுத்துவிட்டாய் போ!'

அறுவடை செய்து, களத்து மேட்டில் புல் கட்டுக்களைக் கொண்டு சேர்த்துப் பயிரைப் போரடித்து ஒரு மணி தானியம் விடாமல் பிரித்தெடுத்து ஒன்றுசேர்த்து இராப்பகலாக உழைத்து ஓடாகி விட்டான் காலு. ஆகையால் மனைவியை அழைத்துவர வேண்டும் எனும் எண்ணம் உதடுவரை வந்து நின்றுவிட்டது. ஆனால் இன்னும் காலு எதிர்பார்த்தது ஒன்றுதான் — 'ஏன் ராஜீ என்னிடம் ஒன்றுமே சொல்லவில்லை? இவ்வளவு கஷ்டப்படு கிறேன். எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டே யிருக்கிறாளே! ஆனால் ஆதரவாக ஒரு வார்த்தை சொல்லவேண்டுமே ...ஆமாம்! நம்மைப் பற்றிய கவலை அவளுக்கு ஏன் இருக்கப் போகிறது? எனக்கும் அவளுக்கும் இனி என்ன உறவு? ...'

இரவு வெகு நேரங்கழித்துக் கட்டிலில் படுக்கச் சென்ற காலு வுக்குச் சித்தப்பாவின் வார்த்தைகள் நினைவிற்கு வந்தன. அவன் தனக்குள் முணுமுணுத்துக் கொண்டான் — 'போனால் போகட்டும் சாதுவானால் ஆகிறேன். எல்லாக் கவலைகளும் ஒழிந்துவிடும். கோடி கவலைகளுக்கு ஒரே ஒரு வழி. அந்தப் பபூதேச்வரரின் கோயிலில் இருக்கும் சாதுவைப் போல் பிட்சை யெடுத்துச் சாப்பிடுகிறேன். பிறகு கடவுளைத் தியானம் செய்தபடி உட் கார்ந்து விடுகிறேன். ஒரு கவலையுமிருக்காது.' காலுவிற் கெதிரே அந்தப் பாழடைந்த பபூதேச்வரரின் கோயில் வந்து நின்றது. வெளியே அந்தத் திண்ணையின் மத்தியில் நெருப்பு எரிந்து கொண்டிருக்கிறது. ஒருபுறம் இடுக்கி சாம்பலில் அழுந் திக் கிடக்கிறது. காலு கோவணம் உடுத்தி உடல் முழுதும் நீறு பூசித் தியானத்தில் அமர்ந்திருக்கிறான். கண்களில் கஞ்சா வின் போதை. உள்ளத்தில் எதையும் லட்சியம் செய்யாத நிலை — காலு அந்த சாதுவின் உருவிலேயே பேசுகிறான் — 'இனி என்ன? பலீயாவது ராஜீயாவது?'

துறவு பூணுபவன் போலவே காலு கடன், வீடு, வாசல், மாடு-மனை- வயல் இவற்றிற்கு ஏற்பாடு செய்ய ஆரம்பித்தான்.

ஆனால் கடைசியில் அவனுக்கே தன்னை நினைத்துச் சிரிப்பு வந்தது — 'மனம் எங்கெல்லாம் ஓடுகிறது? பித்துத்தான் பிடித் திருக்கிறது! வாலா படேலின் மகன் சாதுவாகி விட்டால்

உலகமே தலைகீழாகி விடுமா என்ன? காந்திஜி கூறியது மறந்து விட்டதா எனக்கு? மனித வாழ்க்கை என்பது வாள் வித்தையைப் போன்றது. இதில் திறமை படைத்தவன் தான் உண்மையில் வாழ்பவன், மற்ற எல்லோரும் உயிருடனிருந்தும் செத்தவர்கள் தான்!'

'நான் எதற்கும் தயார்தான், ஆனால் மற்றவர்களும் அப்படியிருந்தால்தானே?' காலு கவலையுற்றான்—இரண்டு கணங்களுக்குள் மறுபடியும் முணுமுணுத்தான்—'அப்படியானால் மறுமணம் செய்துகொள்ளட்டுமா? ராஜியை அழைத்து வந்து விடட்டுமா?'

உடனே தாய்க்குத் தான் அளித்த வாக்கு நினைவிற்கு வந்தது. மறுபடியும் குழப்பமுற்றான்-'என்ன செய்வேன். சாகக் கிடந்த தாய்க்கு வாக்களித்து விட்டேனே. இல்லாவிட்டால் என் வீரத்தையும் காண்பித்து விடுவேன்! சுற்றத்தார் என்னைத் தங்கள் குலத்திலிருந்து விலக்கிவிட்டாலும் பரவாயில்லை. மகிழ்ச்சியோடு வாழ்க்கையைக் கழிப்பேனே. அது போதுமே!'.... மனக்குரங்கு ராஜியின் நினைவில் ஆழ்ந்துவிட்டது.

இந்த நினைவைப்பற்றிக் கேட்கவா வேண்டும்! ராஜி தன்னருகில் இருப்பது போன்ற பிரமை! கற்பனை ஓடிக்கொண்டிருக்கிறது—தண்ணீர்க் குடத்துடன் அழகிய நடைபோட்டு நடந்து வருகிறாள் ராஜி. அவன் தானே போய் அன்புடன் குடத்தை இறக்கி வைக்கிறான்...அவள் சிரித்துக்கொண்டே யிருக்கிறாள்... அவனுக்குப் பிடித்த உணவைப் பரிமாறுகிறாள்... கழனிக்கு வருகிறாள், கை வேலையைப் பிடுங்கித் தான் செய்கிறாள். அறுவடை செய்தபடியே யார் முதலில் போகிறார்கள், பார்க்கலாமா?—என்று பந்தயம் கட்டுகிறார்கள். களைத்து ராஜி காலுவின் மடியில் போய்ப் படுக்கிறாள். சில சமயங்களில் அந்தப் பரந்த ஆலமரத்தடியில் ராஜியின் மடியில் காலு தலை வைத்துக்கொண்டு படுத்துக் கொள்கிறான். ராஜி அவன் தலையிலிருந்து பேன் எடுக்கிறாள், நீண்ட கேசத்தின் சிக்கலைச் சீர்ப்படுத்துகிறாள்.

காலு எண்ணற்ற பெருமூச்செறிந்தான். திரும்பிப் படுத்தபடியே அரற்றினான்—'ராஜி ... ராஜி! மகிழ்ச்சியாக இருக்கவென்று இறைவன் வாழ்க்கையைக் கொடுத்திருந்தால், அளித்த பொருளை ஏன் பிடுங்கிக்கொள்ள வேண்டும்? அட தெய்வமே! தாய்க்கு வாக்குக் கொடுத்துவிட்டு இப்படியெல்லாம் நினைப்பது

கூடப் பாவம்! இரண்டு பேரை மணந்தவனின் நிலையை நீயே யோசித்துப் பார் — என்றல்லவா அம்மா சொன்னாள்!'

ஐப்பசி மாதத்துக் கிருஷ்ணபட்சத்து நள்ளிரவில் காலுவின் மனம் கிராமத்தில் அண்டை அயலார் வீடுகளில் உள்ள இரண்டு பெண்டாட்டிகளைப் பற்றி எண்ண ஆரம்பித்தது. கதவருகே காதை வைத்துக் கேட்டுக்கொண்டிருந்தான். சில வீட்டில் மனைவி தன் சக்களத்தி, கணவன் இருவருடைய கௌரவத்துக்கும் இழுக்குவராமல் நடந்துகொண்டிருந்தாள். இன்னும் சில இடங்களில் தாறுமாறாகப் பேசிக்கொண்டு மானத்தைக் குலைத்துக் கொண்டிருந்தனர். சில இடத்தில் கணவன் இருக்கும் இடம் தெரியாமல் மறைந்து விடுவான், மற்றும் சில இடங்களில் இருவருக்குமிடையே கண்ணனைப் போல் கணவன் வீற்றிருப்பான்.

காலு நடுங்கிப்போனான் — 'போதும் போதும், ஒருத்தியுடன் வாழ்வது ஒரு யானையைக் கட்டித் தீனி போடுவது போல்தான் — பெண் இருந்தால் தனித்திருக்கட்டும், இல்லாவிட்டால் அப்பனுடன் போகட்டும்!' என்று கிராம மக்கள் கூறும் பழமொழி பொய்யல்ல. போதும் போதும், ராஜி குடித்தனம் பண்ண விட்டால் எங்கோ போகட்டும் — தெய்வமே! உன் பேரில் ஆணை. எனக்கு இரண்டு பெண்டாட்டிகள் வேண்டாம். நாளைக்கு நாசமாய்ப் போகும் வாழ்க்கை இன்றே போகட்டும். ஆனால் அம்மாவிற்களித்த வாக்கைக் காப்பாற்ற வேண்டும். தான் அளித்த வாக்கைக் காப்பாற்ற முடியாதவன் ஒரு மனிதனா என்ன?'

புதிய புதிய வாழ்க்கைபற்றிக் கற்பனை புனைந்த வண்ணம், அதனைத் தகர்த்தெறிந்த வண்ணம், காலு இரவு கழிந்ததைக் கூடக் கவனிக்கவில்லை .... இதற்குள் காசம் வீட்டுச் சேவல் கூவிற்று ... 'கொக்கரக்கோ கோ!...'

'அட தெய்வமே! சேவல் கூவிவிட்டதே' காலு சுய நினைவிற்கு வந்தான். வாழ்வின் பழைய புராணத்தை மூட ஆரம்பித்தான் —, வேண்டாம் காலு, காதல் எனும் பேச்சேவேண்டாம். ராஜியைப் பற்றிக் கனவும் காணவேண்டாம். இதெல்லாம் வீண் முயற்சி தான். இல்லாவிட்டால் — தலையிலெழுதியபடி எது பிராப்தமோ அதிலேயே திருப்தியடைந்துவிடு, இறக்கும்போது தாய் ஒப்படைத்துச் சென்ற பலீயே போதும்; பிடித்ததோ, இல்லையோ அவள்தான் சரி, ஏன் பிடிக்காமல்? எல்லோருடைய வாழ்விலும்

ராஜிகள் இருக்கிறார்களா என்ன? ... அப்படியிருந்தும் அவர்கள் நன்றாக இல்லையா என்ன?

காலுவிற்காகத் தானோ என்னவோ சேவல் கூவிக்கொண்டே இருந்தது. அத்துடன் கூட எதிர்வீட்டு நாதாவின் மனைவி மாவரைக்க ஆரம்பித்துவிட்டாள், ராமாவின் வீட்டிலிருந்து 'சர்ர்-சர்ர்' என்று தயிர் கடையும் ஓசை வந்தது.

இன்னும் படுக்கையை விட்டு எழுந்திருக்கக் காலுவிற்கு மனம் வரவில்லை. ஒரு கை மாவுதான் அரைக்க வேண்டும்—சலிப்படைந்த மனதைத் தேற்றிக் கொண்டான் அவன். இன்று இரண்டு ரொட்டிகளுக்கு வேண்டிய மாவு அரைத்தால் போதும். தானே மாவரைப்பவள், வருவாள் — கட்டிலை விட்டெழுந்து முணுமுணுத்தான் — 'களைப்புக்குப் பிறகு ஓய்வெடுத்துக் கொண்டேயாகவேண்டும்!'

ஆனால் அடுத்த கணமே யாரோ மறுத்தனர் — 'களைப்பினாலோ, அல்லது உன் விருப்பத்தினாலோ, அதுதான் உண்மையான இளைப்பாறுதல்! நீ' ராஜி ராஜி என்று ஜபம் செய்கிறாய். அவள் மாமியார் வீட்டிற்குப் போய் இரண்டு நாட்களாகிவிட்டன. இல்லாவிட்டால் மூன்று வருடங்களாக இங்குதானே இருந்தாள்? 'கொண்டு வா நான் அரைத்துக் கொடுக்கிறேன்' என்று ஒரு நாளாவது சொன்னதுண்டா? ஆனால் இவள் (பலீ) வந்துவிட்டால் இயந்திரத்தோடு ஒன்றிவிடுவாள் .... பிறகு விருப்பப்படி இளைப்பாறிக்கொள்.'

கூப்பிடும் தூரத்தில் காணப்படும் அந்த ஓய்வு நேரத்தின் நம்பிக்கையில் மாவரைக்க ஆரம்பித்தான். இத்தனை நாட்கள் அவதிப்பட்டதைக் குறித்து மனதிற்குள் வருத்தமுற்றான்.— 'நன்றாக ஓய்வெடுத்துக் கொள்ளக் கொடுத்து வைத்திருந்தும், உழைத்துச் சலித்துக் களைத்துப் போவானேன்? வீண் வருத்தம். அவள்தான் சரி, அவள்தான் வந்து என்னை இந்த மாவரைக்கும் இயந்திரத்திலிருந்து விடுவிப்பாள். வேறு ஒருவரும் வரமாட்டார்கள்!'

## 19

### பலீஞ்சடுகுடு...

காலு திருமணம் செய்துகொண்டு வந்தபோது அவனுக்கு மக்களின் அன்பும் ஆதரவும் அவ்வளவாகக் கிடைக்கவில்லை. பதினைந்து வீடுகளிலிருந்து பெண்கள் ஊர்வலத்திற்கு வந்திருந்தனர். சில ஆடவரும் பங்கு பெற்றனர். அதுவும் மிகக் குறைவுதான். முதல் காரணம் திடீரென்று திருமணம் நிச்சயிக்கப்பட்டு விட்டது; இன்னொரு காரணம் மணமகன் ஏழை. ஆதலால் ஒருவருக்கும் அதில் நாட்டமிருக்கவில்லை. காலுவுக்கே அது ஏதோ பரிகாரம் நடத்துவது போல்தான் தோன்றிற்று.

சென்ற வருடம் மணமகளை அழைத்துச் செல்ல வந்தான். ஆனால் மாமனார் வீட்டவர் செலவு செய்யும் நிலையில் இல்லை. ஐந்தே பேரை அழைத்து வந்திருந்தான். கிராமப் பெண்களும் உற்சாகமாகப் பங்கு கொண்டால்தானே மனத்தில் ஒரு நாட்டமிருக்கும்? அந்த நேரத்தில் கூட காலுவின் மாமனார் வீட்டிலிருந்து கேலிப் பாட்டுக்களோ, வேடிக்கைப் பேச்சுக்களோ கேட்க அவன் கொடுத்து வைக்கவில்லை.

இந்த நேரத்தில் கூட மாமியார் ஒரு மாதிரி தான் வரவேற்பளித்தாள். தாழ்வாரம் கிடையாது. ஆதலால் முற்றத்தில் கட்டில் போட்டாள். பரமாவுடன் வந்திருந்ததால் கம்பளி போடப்பட்டது. காலு தனிமையாக வந்திருந்தால் வயிற்றெரிச்சலுடன் தான் திரும்பியிருக்க வேண்டும். வருவதற்கு முன்னமேயே காலு மனநிம்மதி குலைந்து காணப்பட்டான். எப்போது ஆதவன் மறைவான், எப்போது பொழுது விடியும் என்றிருந்தது அவனுக்கு. வீட்டிற்குச் சென்றே ரொட்டியைச் சாப்பிட்டுக் கொள்ளலாம் என்பது அவனுடைய விருப்பம்.

களத்து மேட்டிலிருந்து காலுவின் மாமனார் வந்தார். உக்கா நிரப்பிக் கொடுத்துவிட்டுத் திரும்பிவிட்டார். ஆனால் காலுவிற்கு உக்கா பிடிக்கவும் விருப்பமில்லை. ஒரு மணி நேரத்தை வேறு யார் வீட்டிலாவது கழித்துத் திரும்பினால் என்ன? ஆனால் என் செய்வது? எல்லோருடைய வீடுகளும் மூடியிருந்தன. குழந்தைகள், முதியோர், மாடுகளைத் தவிர கிராமம் முழுவதும் நிச்சப்தம்

நிலவியிருந்தது. ராஜி, பலி இருவரும் எங்கு சென்றிருந்தார்களோ தெரியவில்லை?

மாலை நேரமாகிவிட்டது. கொடிகளில் மஞ்சள்நிறப் பூக்கள் நிறைந்திருந்தன. நிச்சப்தமான கிராமத்திற்குப் புத்துணர்ச்சி பிறந்தது... கலகலப்பு அதிகரித்தது. சில வீட்டில் 'கர்ர்' என்ற ஒலியுடன் கதவுகள் திறந்தன. சிலர் முற்றத்திலிருந்து கத்தினர். — 'இதென்ன? எருமைக்கடாவை இன்னும் இங்கு கட்டி வைத்திருக்கிறாய். கறவை எருமை வந்துவிடுமே!' மற்றும் சிலர் தெருக் கோடியிலிருந்தே குரல் கொடுத்தனர் — 'அம்மா, வந்து இந்தச் சுமையை இறக்கி விடேன்!' தலையில் இரண்டு மணங்குச் சுமை, இடுப்பில் ஒன்றரை வயதுக் குழந்தை! உரக்கக் குரல் கொடுக்காமல் என்ன செய்வாள்? மக்களைத் தொடர்ந்து கறவைப் பசுக்கள் வந்துகொண்டிருந்தன. எருமைகளுக்குக் கூடத் தெருக் கோடியைக் கண்டதும் கட்டப்பட்டிருந்த எருமைக் கடாக்களின் நினைவு வந்துவிட்டதோ என்னமோ; கூடவே ஏர்கலப்பைகளும் வந்து சேர்ந்தன.

ஒருபுறம் எருமைகளும் மாடுகளும் கத்த ஆரம்பித்தன. மறுபுறம் பசித்திருக்கும் கன்றுக்குட்டிகள் கத்தின. வேலை செய்து களைத்துப் போன மக்கள் மாடுகளை அடித்துத் திட்ட ஆரம்பித்தனர். அபினியின் போதையில் மூர்ச்சையுற்றுக் கிடந்த குழந்தைகள் பசியால் ஒரே குரலில் அழ ஆரம்பித்தன. பகல் முழுதும் நிலவியிருந்த அமைதியை இந்த ஓரிரு மணி நேரத்துக் கூக்குரல் பழி தீர்த்துக்கொண்டது!

காலுவின் இளைய மாமனார், ராஜியின் கணவன் ஏருடன் வந்து சேர்ந்தான். பின்னால் பலீயும் ராஜியும் புல் கட்டுடன் வந்து சேர்ந்தனர். பலீ காலுவைக் கண்டதும் முகத்தைத் திருப்பிக் கொண்டாள். பரமா சித்தப்பாவைக் கண்டதும் முகத்திரையை இழுத்துவிட்டுக் கொண்டாள். ராஜி மகிழ்ச்சி ததும்பும் முகத்துடன் வரவேற்றாள் —'வாருங்கள் — இருவரும் — வாருங்கள்!'

'உம்' என்று இருவரும் கூறினர். உள்ளே நுழைந்ததுமே குடத்தை எடுத்துக்கொண்டு ராஜியும், பலீயும் வெளியே கிளம்பினர். நேராகப் போய்க்கொண்டிருக்கும் இவ்விரு பெண்களையும் காலு பார்த்தபடி இருந்தான். ஒப்பிட்டும் பார்த்தான்.

ராஜி புதிதாக மாமியார் வீட்டிற்கு வந்த மணப்பெண். ஆதலால் அவள் புதிய உடைகளிலிருந்தாள். பலீக்கு அது பிறந்தகம்.

ஆதலால் பழைய புடவைதான் அணிந்திருந்தாள். தேக்குமரக் கொம்பு போலிருந்த ராஜியின் நடையில் ஒரு லாவண்யமும் நெளிவும் இருந்தன. பருத்த பலீ மெள்ள மெள்ள நடைபோட்டு நடந்து சென்றாள்.

அவர்கள் தெரு திரும்பியதும் இந்தக் காட்சி மறைந்துவிட்டது. வீடு திரும்பும்போது அதே தெருமுனையிலிருந்து பார்வையால் அழைத்துவரக் காத்திருப்பவன் போல் காலுவின் பார்வை அதே முனையில் ஒன்றியிருந்தது.

அவனுடைய சிந்தனை ஒப்பிட்டுப் பார்ப்பதில் ஈடுபட்டிருந்தது. ஒருத்திக்குச் சிறிய கன்னங்கள், கரகரத்த குரல். மற்றொருத்தியின் குரலில் குயிலின் இனிமை... முகம் சற்று நீளம், கூரிய கண்கள், பலாச மலரின் இதழ் போன்ற மூக்கு!...

ஒரு மணி நேரத்தில் இருவரும் தண்ணீர்க் குடத்துடன் வந்து கொண்டிருந்தனர். காலு தன் பார்வையை அந்தப் பக்கம் பதித்து வைத்தான். ஒப்பிட்டுப் பார்த்தல் தொடர்ந்து நடந்தது. ஆனால் இருவருடைய முகமும் நாணம் மரியாதை காரணமாக மூடப்பட்டிருந்தது. பலீ, பரமா சித்தப்பாவின் காரணமாக முகத்திரை யிட்டிருந்தாள்—ராஜி அங்கிருந்த பெரியோர்கள் காரணமாக முகத்தை மூடிக்கொண்டிருந்தாள். காலு இப்போது உடலைக் கவனித்தான். உடையையும் மீறிக்கொண்டு இளமையின் வனப்பு ராஜியிடம் வழிந்தோடியது. ஆனால் பலீயின் இளமை பற்றி காலுவிற்குத் தெரியவே தெரியாது. ஆழமாக நீர் ஓடிக்கொண்டிருந்தாலும் மேலாகப் பார்த்தால் அதன் ஆழம் புரியாதே. அதே போலத்தான்!

காலு ஒருவருமறியாமல் ஒரு பெருமூச்செறிந்தான். மனதிற்குள் முணு முணுத்தான்—'ஏன் வேறுபாடிருக்காது? ராஜி என்னைவிட இரண்டு மூன்று வயது சிறியவள். பலீ என்னை விட இரண்டு மூன்று, ராஜியைவிட நான்கைந்து ஆண்டுகள் பெரியவள்.'

காலுவின் இளைய மாமனார், ராஜியின் கணவன் உக்காவுடன் கட்டிலில் உட்கார்ந்தான். காலு மறுபடியும் ராஜியையும் அவளுடைய கணவனையும் ஒப்பிட்டுப் பார்த்தான்.

மெல்லிய உடல், திறந்த உடல் இருமல் வேறு, பரமா சித்தப்பா சொன்னதும் சரிதான்—'நீங்கள் ஒப்புக்கொண்டாலும் ஒப்புக்கொள்ளாவிட்டாலும் ஒன்று நிச்சயம். உங்கள் உடல்

நிலையில் ஏதோ கோளாறு இருக்கிறது. எங்காவது காண்பித்தீர்களா?'

காலுவிற்கு இப்போது ஒப்பிட்டுப் பார்த்து என்ன ஆக வேண்டும்? அவன் மனதிற்குள் எரிந்தான் — 'இதைவிடச் சக்களத்தியுடன் வாழ்ந்தால் கூட ராஜிக்கு நூறு மடங்கு மகிழ்ச்சியாக இருக்கலாம்!'

மறுபடியும் ராஜி வெளியே சென்றாள். கீழே தழைந்திருந்த முந்தாணியில் எதையோ மறைத்து வைத்திருந்தாள். நெய்க்கிண்ணம்தான் அது. யாரிடமோ நெய் வாங்கிவரப் போகிறாள் என்று காலு புரிந்துகொண்டு விட்டான். அவனுக்கு வயிற்றெறிச்சலாக இருந்தது. தினமும் இரண்டு வேளைகளும் நெய் சாப்பிடும் இவள் இந்த விருந்தினருக்காக எங்கிருந்தோ நெய் வாங்கி வரப் போகிறாள். பாவம் வீட்டினருக்கும் மருமகளுக்கும் நெய் சாப்பிடக் கொடுத்து வைத்திருக்க வேண்டாமா என்ன? ... ராஜியின் கணவனைப் பார்த்தபடியே தனக்குள் சொல்லிக் கொண்டான் — 'இந்தப் பிறவியிலேயே நெய்யைக் கண்டிருக்க மாட்டான் போலிருக்கிறது. எங்காவது விருந்தில் சாப்பிட்டிருந்தால் தான் உண்டு. போதாததற்கு உழவனின் கூலிதான் ஊதியம். உடல் கரைந்து போகாமல் என்ன செய்யும்?'

வீட்டிற்கு நெய்யைக் கொண்டு வந்து சேர்த்துவிட்டு ராஜி எங்கோ மறுபடியும் கிளம்பினாள். 'வீட்டில் கோதுமைக்குக் கூட வழி கிடையாதோ என்னமோ' என்று நினைத்தான் காலு.

ஆனால் இந்தத் தடவை அவன் நினைத்தது தவறாகிவிட்டது. ராஜி நான்கைந்து பெண்களுடன் வெறும் கையோடு திரும்பி வந்ததைப் பார்த்ததும்தான் வீட்டில் இயந்திரத்தில் மாவரைக்கும் ஓசை கேட்டது. காலுவின் நினைவிற்கு வந்தது! ஓகோ, சர்க்கரைப் பொங்கலுக்காகத்தான் இந்த ஏற்பாடுஎன்று அவன் நினைத்தான்.

இந்தப் பெண்களை ராஜி ஏன் அழைத்து வந்தாள் என்று காலுவிற்குப் புரியவில்லை. சிறிது நேரங் கழித்து இன்னும் நான்கைந்து பெண்டிர் வந்தனர். அவர்கள் ஒருவரை ஒருவர் பிடித்துத் தள்ளிக் கொண்டும், மோதிக் கொண்டும் கதவின் இடுக்கு வழியாகப் பார்த்துக்கொண்டும் இருந்ததிலிருந்து இவர்கள் பரிகாசப்பாடல்கள் பாடத்தான் வந்திருக்கின்றனர் என்று காலு புரிந்துகொண்டு விட்டான், பாடலும் கேட்டது —

'காலு ! தாரே தே கடீ ஒ ...'

[காலு ! இந்தக் குண்டலங்கள் உனக்கேது ?]

காலுவின் உள்ளம் தாமரைபோன்று மலர்ந்தது. ஏன் மலராது? சரத்காலத்து தசமி இரவின் வெண்ணிலவு ஒளி வீசியது. மேக மண்டலங்களின் வாயிலாகவும், தனித்துப் பிரகாசிக்கும் ஒளியுடனும் நிலவு வெளிச்சத்தைப் பரப்பியது. காற்றும் நிலவைப் போலத்தான்—வேகமாக அடித்துப் பிறகு 'சர்ர்' என்று தணிந்து வீசத் தொடங்கியது.

ஆனால் இவை எல்லாவற்றையும் விடக் காலுவிற்கு அதிக மகிழ் வூட்டியது ராஜியின் நினைவுதான். கிராமப் பெண்கள்தான் பாடினர் என்றாலும் பாட்டை ஆரம்பித்தவள் ராஜிதானே ?

காலுவினால் கேலி செய்யாமலிருக்க முடியவில்லை. 'இதோ பார் ! என் காதுகளில் குண்டலங்கள் எங்கேயிருக்கின்றன?'

வாயிற்படியில் வட்டமாக நின்றுகொண்டிருந்த பெண்களி லிருந்து ஒருத்தியின் குரல் கேட்டது — 'சட்டை என்று சொல் — என் பாட்டை முழுதும் கேட்கக்கூட விடமாட்டீர்களா நீங்கள்?' இரண்டாவது முறை பாடும்போது அந்த வரியைத் திருத்தி யமைத்துப் பாடப்பட்டது —

'காலு தாரே தே கேடியம் ....'

[காலு ! உனக்கு இந்தச் சட்டை ஏது ? உன் தாய் தையற்கார னிடம் சென்றிருந்தாளா ? இரவு முழுதும் அவனிடம் போய்த் தைத்து வந்திருக்கிறாள் ! அப்பாடா ! எப்படிப்பட்ட சட்டை இது ?]

உண்மையில் காலுவின் கவனம் பாட்டிலிருந்து வேறு பக்கம் சென்றுவிட்டது— 'இந்தக் கேலிகளும், வசைகளும் ராஜி அன்பி னால் பொழிகிறாளா, அன்றிப் பொறாமையினாலா?'

புரிந்துகொள்ள முடியாதபடி காலு அவ்வளவு முட்டாளல்ல. பாட்டில் எத்தனை வசைகளிருந்தாலும் அவை வேடிக்கைக்காகத் தான்கூறப்படுகின்றன என்பதை அவன் அறிவான். இப்படிப்பட்ட வசைகளை வாங்கிக்கொள்ள வேண்டுமென்றே சிலர் அவர் களுடைய முன்னிலையில் வந்து நிற்பார்கள். அவர்களைத் தடுப்பது, தூண்டிவிடுவது எல்லாமே அந்தப் பெண்ணின் கவனத்தைக் கவரத்தான், வசைகளை இசையில் பாடச் செய்பவர்கள் தங்களைப் பற்றிப் பெருமையாக எண்ணிக்கொள்வர்.

'ஆனால் இப்போது அன்பை எழச்செய்வது எது?' காலுவைப் போலவே இந்த எண்ணம் ராஜிக்கும் தோன்றியிருக்க

வேண்டும். இதென்ன விபரீதம்! ராஜி வருத்தமடைவதற்குப் பதிலாக வரும்போதும் போகும்போதும் பெண்களுக்குப் புதிய புதிய பாடல்களை நினைவுபடுத்திக் கொண்டிருந்தாள்.

'மாரா வாடா நே பச் வாடே ரே ...'

(என் வீட்டுப் பின்புறத்தில் பெண் ஒட்டகம் ஒன்று ஊஞ்சலாடுகிறது!)

'காலு! வா! குளிக்கவா!' கிழவன் பரமா ஒப்புக்குச் சொல்லி வைத்தான்.

'அப்படிக் கூடச் செய்துவிடுவதா என்ன? எழுந்திருங்கள். போங்கள்!' காலு கூறினான்.

கிழவன் செல்வதைக் கண்டு காண வந்திருந்த கிராமவாசிகளும் கிளம்பினர். ராஜியும் நாணத்தால் தயங்குவதை விட்டாள். காலுவின் சங்கோசமும் தீர்ந்தது.

'இப்படித் திட்டுவதால் உங்களுக்கு என்ன லாபம்?' காலு ஆரம்பித்தான். பெண்களிலிருந்து ஒரு குரல் கேட்டது. ராஜியும் அவர்களுடன் இருந்தாள். ஆனால் அது ராஜியின் குரலல்ல— 'ஆயிரம் ரூபாய்க்கும் மேல் மதிப்பிடக் கூடிய எங்கள் பலீயை அழைத்துக்கொண்டு போகிறீர்களே, உங்களைத் திட்டாமல் என்ன செய்வது?'

'அதற்குப் பதிலாக லட்சத்திற்கும் மேல் மதிப்புள்ள ராஜியை விடவேண்டி வந்ததே!' காலுவின் நாவரை வந்தது. ஆனால் அப்படிக் கூறுவது சரியல்ல. அதனால் ஒரு பயனுமில்லை. ஆனால் இவ்வளவுதான் அவனால் பேச முடிந்தது — 'திட்ட ஆரம்பிப்பதற்குப் பதிலாக வேறு ஏதாவது பேசுங்களேன். சொல்ல விரும்புவதை நேரடியாகச் சொல்லி விடுவதுதானே?'

ராஜி அந்தப் பெண்களிடம்—'உம். அந்தப் பாட்டைப் பாடுங்களேன்!' என்று கூற அவர்களும் ஆரம்பித்துவிட்டனர்—

'ஸமஜீநே ஸாநே ஸமஜாவும் ... (அறிவுள்ளவனை இங்கிதத்தால் அறிவுறுத்துவேன், கழுதையை உதையால்...)'

'இப்போது திருப்திதானே?' என்று கூறியபடி உள்ளே சென்றுவிட்டாள் ராஜி. வேட்டியை மடித்து எடுத்துக் கொண்டிருந்த காலுவைக் குளிக்க எழுந்திருக்கச் சொன்னான் பரமா—'எழுந்திரு, பாத்திரத்தில் தண்ணீர் தயாராக இருக்கிறது.'

காலு எதிர்பார்த்திருந்தான். ஆனால் வீட்டின் பின்புறம் சென்று பார்த்தான். அங்கு ராஜி இல்லை. கல்லின் மேல் வைத்திருந்த

ஈர வேட்டியை உடுத்திக் கொண்டபடியே அவன் ஏதாவது உபாயம் உண்டா என்று யோசித்தான். வெந்நீர்ப் பானைக்கருகி லேயே குளிர்ந்த நீர்க் குடமும் வைக்கப்பட்டிருந்தது. ஆனல் அதுவும் அவனுக்குத் தெரியவில்லை .... கேட்க ஆரம்பித்தான் — 'கொஞ்சம் குளிர்ந்த தண்ணீர் வேண்டும்!'

அட தெய்வமே! ராஜி வருவாள் என நம்பியிருந்தான். ஆனல் அங்கு பலீ வந்தாள். எப்படி வேண்டாம் என்று சொல்வது? 'குளிர்ந்த நீர் இருக்கிறது, வேண்டாம்' என்றல் பலீ — 'ஏன் இப்படிப் பொய் சொல்கிறீர்கள்?' என்று கேட்பாள்.

கொஞ்சம் தண்ணீர் விழுந்தவுடனேயே போதும் போதும் என்று சொல்லிவிட்டான். ஆனல் குடத்தை பலீ மெதுவாகக் கவிழ்த்தால் தானே?

ராஜி கதவிற்கருகிலிருந்து கேட்டாள் — 'தண்ணீர் விட்டாயா?'

காலுவின் வெந்நீர் மட்டுமல்ல. அவனே சில்லென்றுகிவிட்டான். ராஜி பாடவைத்தது அவன் கூறியதற்குப் பதிலளிக்கும் பொருட்டா அல்லது சும்மாவா? 'தண்ணீரைப் பற்றி ஏன் கேட் கிருள்? உண்மையில் என் நம்பிக்கையும் வெள்ளத்தோடு வெள்ள மாக மூழ்கடிக்கத்தானே? .... அல்லது இது சம்பந்தமில்லாத காரியமா?'

அப்படியிருந்தால் சித்தியும் அவளுடைய மகளும் ஏன் இப்படிக் கதவருகே ரகசியமாகப் பேசிக்கொள்ள வேண்டும்? தன் இருபது வயதில் காலு இவ்விதம் சமாளித்ததே கிடையாது. அவன் கேட்டான் — 'நான் சிரிக்க வரட்டுமா? உதவிக்கு வரட்டுமா?'

'உங்களுக்குச் சிரிக்க வந்தால், பிறகு எங்களுக்கு வேறென்ன வேண்டும்?' ராஜி குயிலாகக் கூவினுள்.

இதிலும் ஒரு பெரிய ரகசியம் இருப்பதுபோல் காலுவிற்குத் தோன்றிற்று. ஆனலும் அப்படிக் கருத அவன் தன்னையே அனுமதிக்கவில்லை — 'இருக்காது. இருக்காது. இதில் இவ்வளவு சாமர்த்தியம் இருக்காது.' இதற்கு மாருகவும் தோன்றிற்று — 'நீ என்ன கண்டாய்? மாமியார் வீட்டிற்கு வந்ததுமே இவள் இவ்வளவு மாறிவிட்டாளே. இன்னும் பத்துப் பன்னிரண்டு ஆண்டுகள் ஆனல் எப்படி மாறிவிடுவாளோ? திருமணமானதி லிருந்து அவளுடன் நீ எங்கே பேசினுய்? அவள் கெட்டிக்காரியாக வில்லை என்று உனக்கெப்படித் தெரியும்?

காலுவிற்குத் தைத்தது — சரி, இந்தத் தடவை கேட்டுவிட வேண்டியதுதான். 'நீ மூன்று முறை பேசினுய்-மூன்று தடவையும் அதில் ஏதோ தந்திரமிருப்பது போல் எனக்குத் தோன்றியது. உண்மையில் நீ சொல்ல விரும்புவதுதான் என்ன? சொல்லி விடேன்!'

கூடவே, 'நாகா ராஜியை அழைத்து வருகிருன்' என்பது பற்றியும் கேட்கவேண்டும். இருவருக்குமிடையே யிருக்கும் மௌனத்தை முறிக்கவேண்டும். ஆனால் வாய்ப்புக் கிடைக்கவேண்டுமே?

சாப்பிட்டவுடன் மாமனுருக்கு உதவக் களத்து மேட்டிற்குச் சென்றுன். வைக்கோலை இறக்கியாக வேண்டும். நள்ளிரவில் வீடு திரும்பினுன். அப்போது மயானம் போல் எங்கு பார்த்தாலும் ஒரே நிச்சப்தம் நிலவியது. முற்றத்தில் போடப்பட்டிருந்த கட்டில், கட்டிலிலிருந்த அந்த வெள்ளைக் கம்பளி எல்லாம் பனிக்கட்டியைப் போல் சில்லென்றிருந்தன. குமிட்டியே கிழவன் பரமாவுடன் தூங்க ஆரம்பித்துவிட்டது.

சேவல் கூவிற்று. அதுவரை காலுவிற்குத் தூக்கம் வரவில்லை. திடீர் திடீரென்று அவன் விழித்துக்கொண்டான். 'கர்ர்' என்று கதவு திறக்கப்படும் ஓசை கேட்டது.

ஒருமுறை அவனை யாரோ பிடித்து உலுக்குவது போலிருந்தது அவனுக்கு. நான்காம் முறையாக விழித்தெழுந்தான். அப்போது உண்மையில் யாரோ துப்பட்டியைப் பிடித்திழுப்பது போல் தோன்றிற்று. திரும்பிப் பார்த்தால் அந்தப் பல்லில்லாத கிழவன் பரமா சித்தப்பாதான்!

'அடே பயலே எழுந்திரப்பா! எவ்வளவு நேரமாகிவிட்டது பார்.' காலுவின் முகத்திலிருந்து தீபத்தின் சுடர் போல் ஒளி வீசியது. பேசாமல் எழுந்து உட்கார்ந்துகொண்டான்.

ராஜி பல்தேய்க்கக் குச்சி கொண்டு வந்து கொடுத்தாள். அப்போதுதான் நாடித் துடிப்பு இயங்க ஆரம்பித்தது. சிந்தனை செயல்பட ஆரம்பித்தது.

கிழவன் பரமா இல்லாவிட்டாலும் மாப்பிள்ளைக்கு வரவேற்பு பிரமாதமாகத் தானிருக்கும். அபினிச்சாறு கூடக் கிடைக்கும். ஆனால் இத்தனை மக்கள் கூடமாட்டார்கள் என்பது உண்மைதான்.

அபினி இப்போதுதான் குத்தகைக்கு விடப்பட்டிருந்தது. ஆனால் அவ்வளவாகக் காவலும் கண்டிப்பும் கிடையாது. சர்க்காரின் ஆள் நட்வர் சிங் பட்டாளத் தலைவன். அவனே அபினி விற்கும்

தொழிலை நடத்திவந்தான். காலுவின் மாமனருக்கு இரண்டு தோலா அபினி அவன் கடனாகக் கொடுத்திருந்தான். கிராமத்து வயதுவந்த ஒருவன் அதைக் கிண்ணத்தில் போட்டுக் கரைக்க ஆரம்பித்தான். நாற்புறங்களில் நான்கு கட்டில்கள் போடப்பட்டிருந்தன. நடுவில் ஒரு தீ மூட்டப்பட்டிருந்தது. இந்தப் பதினைந்து இருபது மக்களிடையே ஏழெட்டு உக்காக்களும் புகைவிட்டுக் கொண்டிருந்தன. இருபது — இருபத்தைந்து சிறுவர்கள் பாதி மனதுடன் விளையாடிக் கொண்டிருந்தனர். பாதிமனம் வேறு ஏதோ ஆசையில் ஈடுபட்டிருந்தது. அபினியில் அவர்களுக்கு நாட்டம் இருக்கவில்லை. அதற்கப்புறம் அளிக்கப்படும் தின்பண்டத்தில்தான் அவர்களின் ஆசையெல்லாம்.

காலுவிற்கு இங்கு மனநிம்மதி கிடைக்கவில்லை .... அவன் வீட்டிற்குள் சென்றான். வீட்டைப் பெருக்கிக்கொண்டிருந்த ராஜியிடம் கூறினன் — 'பொரி ஏதாவது இருந்தால் இப்படி எடுத்து வாருங்கள்.'

'உங்களுக்கு ஏன் அவசரம்? எங்களுக்கு எப்படிச் செய்தால் கௌரவம் என்று தோன்றுகிறதோ அப்படிச் செய்வோம். விருந்தாளி என்ற முறையில் நீங்கள் வெளியே போய் உட்கார்ந்து கொள்ளுங்களேன்!'

'நீங்கள் விருந்தாளியில்லை என்றால் நான் மட்டும் எப்படி விருந்தாளியாவேன்! உங்களுக்கும் இது மாமியார் வீடு, எனக்கும் மாமியார் வீடு.'

'சொன்னபடி நடந்து கொள்வோம். இங்கேயே இருங்கள்.' ராஜி காலுவை எச்சரிப்பவள்போல் விறகு அடுக்கி வைத்திருக்கும் மூலையைப் பெருக்கிக்கொண்டே ஓரகத்தியிடம் சொன்னாள் — 'என்ன அக்கா! பலீக்கு இந்த இடத்தை ஒழித்துக் கொடுக்கலாமா?'

அவன் எப்படி இங்கே இருப்பான்? மாமியார் யோசித்துப் பேசினாள்—'திருமணமாகிப் பத்து வருடங்களாகிவிட்டன. எத்தனை தடவைகள் வந்திருக்கிறான் என்று இவனிடம் கேள்.'

'இப்படி விருந்தோம்பல் செய்தால் வர எப்படித் தோன்றும்?' என்று கேட்க நினைத்தான் காலு. ஆனால் அவன் சொன்னது வேறு—'நீங்கள் எப்பொழுது கூப்பிட்டு நான் வராமலிருந்தேன்?'

'இதில் கூப்பிட என்ன இருக்கிறது?' 'ஏன் இல்லை? உங்களுக்கு எப்போது வேலை அதிகம் என்று எனக்கு எப்படித் தெரியும்?'

மாமியாருக்கும் வியப்பாக இருந்தது— 'மருமகன் இவ்வளவு உணர்ச்சி வசப்பட்டவனாக எப்படி ஆனான்?' 'என் வீட்டுப் பெண்ணையும் அழைத்துப் போக ஒற்றைக் காலால் நிற்கிறாய்? —முதலில் வேலைகளில் எனக்கு உதவி செய்வதாகச் சொன்னாய். இல்லையா?' என்றும் கேட்டு வைத்தாள்.

மாமியும் மருமகனும் எங்காவது சண்டையிட்டுக் கொள்ளப் போகிறார்களே என்று ராஜிக்கு ஒரே பயம். காலுவிடம் கூறினாள் —'சோளக் கதிர் வைத்திருக்கிறேன். எழுந்திருந்து....' பிறகு அவனுக்காகத்தானே நாம் அதைக் கொண்டுவந்தோம் என்பது நினைவிற்கு வந்தது. கட்டிலில் உட்கார்ந்தபடியே அதைத் தின்ன வேண்டும். அது பொரிப்பதற்கல்ல. உடனே அவள் பேச்சை மாற்றிவிட்டாள்— 'பொரித்துத் தருகிறேன், தின்னுங்கள்.'

காலு இன்று மாமியாருடன் சண்டை போட விரும்பவில்லை. அவளுடன் சமாதானமாகத்தான் போக நினைத்தான். ஆதலால் ராஜியின் பேச்சைக் கேட்காதவன் போல் மாமியாருக்குப் பதிலுரைத்தான்— 'உலக வழக்குப்படி அனுப்பித்தானே யாக வேண்டும்?'

பலீ கதவிற்கெதிரே பானையை வைத்துக்கொண்டு நின்று கொண்டிருந்தாள். முற்றத்திலிருந்த ஆடவர்களில் ஒருவரும் அவளைக் கவனித்திருக்க மாட்டார்கள். கவனித்திருந்தால் அதை இறக்கிவைக்க யாரையும் அழைக்கவேண்டி யிருக்காது. பலீ உள்ளே யிருப்போரைக் கூப்பிட்டாள் 'இதை யாராவது இறக்க வருகிறீர்களா?'

காலு அருகில்தானிருந்தான். வைக்கோலிற் கருகேயுள்ள திண்ணை மீது காலை வைத்துக்கொண்டு நின்று கொண்டிருந்தான். அந்தப் பக்கம் ராஜி கூடையை நிரப்பிக் கொண்டிருந்தாள்— 'கொஞ்சம் இறக்கி விடுங்களேன்.'

காலுவிற்கு வந்தது தொல்லை. தன் வீட்டில் கூட அவன் பலீயின் தலையிலிருந்து பானையை இறக்கி வைத்தது கிடையாது. அதற்குத் தேவையும் இருக்கவில்லை. தண்ணீர் எடுத்து வரும் பெண்கள் தாமாகவே ஏற்றி இறக்கி கொள்வது வழக்கம். பலீ மூன்று குடம் எடுத்துச் செல்வாள். இரண்டு தலைக்கு மேலும், ஒன்று இடுப்பிலும் இருக்கும்.

குடத்தை இறக்குவதைத் தவிர காலுவிற்கு வேறு வழி கிடையாது. மாமியாருக்கும் சொல்லக் கிடைத்துவிட்டது. ஆனால் ராஜியைக் கூப்பிட்டுத் தான்—

'கையைத் துடைத்துக்கொண்டு நீதான் இறக்கிவையேன். வீட்டுக்கு எசமானன் அவன். தன் வீட்டிலேயே இறக்கிவைக்க மாட்டான் — இங்கேயா செய்வான்?'

காலு ஒன்றுமே பேசவில்லை. பானையை இறக்கிக் கதவருகிலேயே வைத்துவிட்டு நேரே வெளியே சென்றான்.

மாமியார் தன் ஆத்திரம் முழுவதையும் காண்பிக்க நினைத்தாள். 'மருமகனே வந்தால்தான் அனுப்புவேன்' என்று சொன்னவளாயிற்றே! அப்படியிருந்தும் பலியை அனுப்ப அவள் விரும்பவில்லை— 'சின்னஞ்சிறு குழந்தைகள் மூன்றையும் நான் பார்த்துக் கொள்வேனா, வீட்டுவேலையைப் பார்ப்பேனா, வெளியே அறுவடை வேலை செய்வேனா?'

ராஜி ஓரகத்தியிடம் எவ்வளவோ கூறிப்பார்த்தாள். அப்படியிருந்தும் இதே காரணத்தைக் கூறி மறுத்துவிட்டாள். ராஜிக்கு ஒரே கவலை. அவள் இனி நிரந்தரமாகத் தன் மாமியார் வீட்டிலேயே இருக்க முடிவுசெய்து விட்டாள். பிறந்தகத்தில் அண்ணியுடன் அவளுக்கு ஒத்து வராததுதான் முதல் காரணம். அவளால் மாமிக்கும் மருமகளுக்கும் சண்டை நடக்கும். அண்ணிக்கெதிரே அண்ணனின் சொல்லே செல்லாத போது, மாமீ எம்மாத்திரம்? கூடவே 'ராஜி நாநாவின் வீட்டிற்குச் செல்லப் போகிறாள்' என்று யாரோ சொல்லிவைத்தார்கள். அவ்வளவுதான். அண்ணன், அண்ணி, அம்மா இவர்களுக்குள் சண்டை மூண்டது. 'தாய்வீட்டுப் பஞ்சணையை விட மாமியார் வீட்டுமுள் படுக்கை எவ்வளவோ சிறந்தது', என்று ராஜி சொல்லாமலேயே புரிந்துகொண்டு விட்டாள். ஆயினும் 'நான் இங்குதானே இருக்கிறேன்' என்று கூறாமல் ராஜி, 'உங்களுக்கு வேலை இருக்கும் போது என்னைக் கூப்பிடுங்கள், ஆனால் இப்போது என்னை அனுப்பிவிடுங்கள்!' என்று சொன்னாள்.

அப்படியும் ஓரகத்தி ஒப்புக்கொள்ளவில்லை. மகளே வேண்டாம் என்று சொல்லவில்லையே என அவள் நினைத்தாள். ஒரு சாக்குப் போக்கும் சொல்லவில்லை - காலில் கொலுசுக்குப் பதில் காப்பு வேண்டும். அப்போதுதான் போவேன்! கையில் வளையல்கள் குறைவாக இருந்தன! அது பற்றி ஒன்றும் கேட்கவில்லை.

தாய் புரிந்து கொண்டுவிட்டாள் — 'இங்கு மகளுக்குத் தினையில் சுடப்பட்ட ரொட்டிதான் கிடைக்கிறது. மாமியார் வீட்டிலோ சோள ரொட்டி கிடைக்கிறது. இங்கு பாலின் பெயரில் பச்சைத் தண்ணீர் கூட கிடைப்பதில்லை. அங்கு கறவை எருமைகளிருக் கின்றன. தன்னைத்தான் தேற்றிக்கொண்டாள். 'மகள் அன்புடன் இல்லாவிட்டாலும் சரி, எப்படியோ நன்றாக இருந்தால் சரி. மருமகனின் உதவி நமக்கிருக்கிறது.'

ஆனால் பிரியும்போது தாய்க்கு நினைவு வந்தது. மருமகனை அழைத்து ஏசினாள் — 'ஏழைவீட்டுப் பெண்தானே எப்படி வைத்துக்கொண்டால் என்ன என்று நீ நினைப்பாய் .. அது நடக்காது — ஆமாம்.'

'நான்மட்டும் ஏழையில்லையா என்ன?' காலு கூறினான்.

'ஆனாலும் பரமா போன்ற சித்தப்பா உனக்கிருக்கிறார். ஆனால் நாங்களோ ....'

இடையே கிழவன் பேசினான் — 'எல்லார் வீட்டிலும் மண்ணால் செய்த அடுப்புதானம்மா இருக்கிறது. ஒரு குலைக் காயில் பெரி தென்ன, சிறிதென்ன? அப்படி ஒன்றும் கவனிக்காமல் இருந்து விட மாட்டான். வீட்டில் பெரியவர்கள் இல்லையா என்ன?'

'இல்லை, நான் கேள்விப்பட்டேன்' — மாமி கூறினாள் — 'இனி என் காதிற்கு ஏதாவது எட்டினால், மறுபடியும் மகளை அனுப் பவே மாட்டேன். பிறகு செய்ய வேண்டியதைச் செய்துகொள் ளுங்கள். நான் பணத்தை மதிப்பது கிடையாது. குணத்தைத்தான் மதிப்பது வழக்கம்.'

'இதுபற்றி நீங்கள் கவலைப்பட வேண்டாம்.' என்று கூறிய படியே கிழவன் பரமா எழுந்தான். பூஞ்ஜியிடம் வாங்கி வந்த குதிரைமீது அவனைக் கையைப் பிடித்து ஏற்றிவிட்டான் காலு. 'நீ மெள்ள வா! நான் பேத்தா படேல் வீட்டில் இருக்கிறேன்' என்று கூறியபடியே குதிரையைத் தட்டிவிட்டான்.

முதலில் வந்த காலுவிற்கும், இப்போதைய காலுவிற்கும் மலைக்கும் மடுவிற்கும் உள்ள வேற்றுமை; நேற்று இங்கு வந்த வுடனேயே முள்மேலிருந்தாற் போலிருந்தது. வீட்டிற்குப் போகத் துடித்தான் — ஆனால் இப்போது அன்புக்குகந்தவர்களை விட்டுப் பிரிவது போலிருந்தது அவனுக்கு. 'இந்த வீட்டுடன் உறவே இல்லாமலிருந்தால் நன்றாக இருந்திருக்கும்! என்று முதலில் நினைத்த அவன், வீடு திரும்பும்போது 'இந்த வீட்டின் சுக

துக்கங்களும் நம்மைச் சேர்ந்தவைதான்' எனும் எண்ணத்துடன் கிளம்பினுன். மாமனரிடமும் கூறினுன் — 'இந்தத் தீபாவளி வரா விட்டால், இரண்டு நாட்கள் இருந்து கழனி வேலைகளையெல்லாம் கவனித்திருப்பேன். இனி ஏதாவது கஷ்டமான வேலையிருந்தால் கூப்பிட்டனுப்புங்கள், வருகிறேன்.' அங்கிருந்து கிளம்பிய காலு பலீயுடன் பேசிக்கொண்டிருந்த ராஜியிடம் கேட்டான் —'கோதரிடம் ஏதாவது சொல்ல வேண்டுமா?'

ராஜியும் கூடவே சென்ருள். 'நான் நன்ருக இருக்கிறேன். தீபாவளியின்போது அழைக்க வர வேண்டாம். இங்கேயே இருக்கிறேன் என்று சொல்லிவிடுங்கள்.'

'அழைக்க வர வேண்டாம்' என்ற வார்த்தையைக் கேட்டு காலு வியப்படைந்தான். 'உண்மையில் இவள் குடித்தனம் நடத்த விரும்புகிருளா? இல்லை... இங்கு இப்படிச் சொல்லிவிட்டு நேராக நாநாவின் வீட்டிற்குச் செல்லப் போகிருளா? அண்ணனின் வீட்டிலிருந்து போனுல்! உறவினர் கோதருக்கு வேண்டுமானுல் தண்டனையளிக்கக்கூடும்... இப்படியும் இருக்கலாமோ?'

முதலில் ராஜி நாநாவின் வீட்டிற்குத்தான் போகட்டும், எந்தக் கொள்ளைக்காரனின் வீட்டிற்குத்தான் போகட்டும், நமக்கென்ன? என்றிருந்தான் காலு. ஆனுல் இப்போது தன் இளைய மாமனரைப் பற்றிய கவலை உண்டாயிற்று. மாமியார் — மாமனரின் வருத்தத்தைப் பற்றி அக்கறை பிறந்தது —'நாநா என்னைத்தான் அவமானப்படுத்தினுன் என்ருல் என் மாமியார் வீட்டையும் அவமானப்படுத்தி விட்டுத்தான் சும்மா இருப்பாள் போலிருக்கிறது' என நினைத்தான் அவன். தன் வீடுதான் ஒரே சூனியமாக இருந்தது என்ருல், மாமியார் வீடும் அப்படியே ஆகி விடும் போலிருக்கிறதே.'

ராஜியை எச்சரிக்க நினைத்தான் காலு — 'அப்போது நான் சிறியவனுக இருந்தேன். ஆனுல் இனி ஏதாவது நேர்ந்தால் பேத்தா படேலின் பல்லை உடைத்துவிடுவேன்!'

ராஜியின் அழகு வளர்பிறையைப்போல் அதிகரித்துக்கொண்டே வந்ததைக் காலு உணர்ந்தான்.

கிராமத்து எல்லையைத் தாண்டித் தெருக்கோடியை அடைந்த காலுவை ராஜி தடுத்து நிறுத்தினுள்–'கொஞ்சம் நில்லுங்களேன்!'

பலீ சற்றுத் தள்ளி இருந்திருந்தால் ராஜி காலுவிடம் நாநாவை பற்றிய விஷயத்தைக் கேட்டிருப்பாள். ஆனுல் என்ன செய்வது? ராஜியின் நிழலைப்போல் பலீயும் அவளுடனேயே இருந்தாள்.

'இதோ பாருங்கள்!' ராஜி கூப்பிட்டாள், 'உங்களுக்குத் தெரியாததல்ல. நான் உங்களுக் கெதிரில் ஒன்றுமறியாத குழந்தை மாதிரி. ஆனாலும் சொல்ல வேண்டியிருக்கிறது. நாம் மாடுவாங்கி வந்தால், நம்முடன் இருக்கும் மாடுகளோடு சேர்ந்து இருக்க அதற்குக் கற்றுக் கொடுக்கிறோம். வீட்டு மாடுகளுடன் இணைந்து வாழும்படி அதையும் கட்டிவைக்கிறோம். நாம் மனிதர்கள். வீட்டுமாடுகளே வெளியிலிருந்து வந்த மாட்டைத் அடித்துத் துரத்த ஆரம்பித்தால்?'

'நீ என்னை மாடு என்று சொல்கிறாய்?' சிரித்துக்கொண்டே காலு கூறினான்.

'நீ' என்று அழைத்ததும் அந்தப் பழைய உறவைக் காலுவின் கண்களில் கண்டாள் ராஜி. ஆனால் அடுத்த கணமே அதைக் கவனிக்காதவள் போலிருந்து விட்டாள். சிரித்துக்கொண்டே கூறினாள்— 'மாடு என்று சொல்லவில்லை. ஆனால் நாங்கள் பிறந்த வீட்டை விட்டுவிட்டு வந்துவிடுகிறோமே, எங்கள் மனம் எப்படியிருக்கும் என்று ஆண்களான உங்களுக்கு எங்கே தெரியப் போகிறது? அப்படியிருந்தும் நீங்கள் அவமதித்தால்?'

அரிவாளின் நுனியால் தரையை ஊன்றிக்கொண்டு காலு பத்தடி தொலைவில் அரளி இலையைக் கிள்ளிக் கொண்டிருந்த பலியைச் சுட்டிக் காண்பித்தபடி சொன்னான் — 'கேட்டுப் பார் அவளை. நான் எப்போதாவது அவமதித்ததுண்டா என்று —'

'எனக்கு எல்லாம் தெரியும். சாதுமாதிரி துறவு பூண்டு திரிவது அவமதிப்பதைவிடக் கொடியவேலை'— என்று கூறியபடியே ராஜி சிரித்தாள் – 'சரி போய் வாருங்கள் — நேரமாகிவிட்டது. இன்னும் பத்து மைல் நடந்தாக வேண்டும்!'

சிந்தனையிலாழ்ந்த காலு மேலே நடந்தான். ராஜி பலியின் பக்கம் பார்த்தாள் — 'நான் என்ன உங்களுக்குச் சொல்ல இருக்கிறது. ஒன்றுமட்டும் சொல்வேன். அந்தச் சிடுசிடுப்பை விட்டு விடவேண்டும். நீங்கள் ஒரு பாவமும் செய்யாதவர்கள். நீங்கள் என்னைவிடப் பெரியவர்கள். நான் என்ன சொல்வது? ஒன்று மட்டும் தெரிந்து கொள்ளுங்கள். ஒரு மனைவி தன் கணவனை வென்றுவிட்டால் போதும், உலகமே அவள் கைவசம் .... தெய்வமே அவள் வசம். போய்வாருங்கள், அது இல்லாவிட்டால் வேற்றுமை அதிகரித்துவிடும்.'

பலி கண்ணீர் நிறைந்த கண்களுடன் பிரிந்தாள்.

காலு முன்பின் நினைவின்றி சிந்தனையில் ஆழ்ந்து சென்று கொண்டிருந்தான். சிந்தனை ராஜியைப் பற்றியதுதான், ஆனால் பலவிதமான எண்ணங்கள்! ஒரு நொடியில் பெரியவள் போல் பேச்சு, மறுகணம் எழில்மிகு இளமையை இழந்து வாடும் பெண் போன்ற தோற்றம். ஒரு கணம் வாயாடும் பெண் போல் பேசினால், மறுகணம் தேவியே வடிவானவள் போன்ற அவளை திரே காலு ஒன்றுமறியாத குழந்தை போல் காணப்பட்டான்.

கோதுமையும் சோளமும் சாப்பிடுபவள், நெய்யாலும் பாலாலும் கை கழுவும்படி செழிப்பாக வாழ்ந்தவள், அழகன் ஒருவன் வீட்டை ஒளிமயமாக்கப் பிறந்தவள், அழகிகளிலும் சிறந்த அழகி ராஜி இங்கு தினை மாவினால் செய்யப்பட்ட ரொட்டியை வேறு வழியின்றியோ வருத்தத்துடனோ தின்பவள் போலத் தெரியவில்லையே! நேற்றிலிருந்து ராஜி பேசிய பேச்சு, அவளுடைய நடையுடை பாவனைகள், வேலைகள் எல்லாவற்றையும் காலு நினைவு படுத்திக்கொண்டு பார்த்தான். வருத்தத்தின் ஒரு சிறு சாயல் கூடத் தென்படவில்லை அவனுக்கு. ஆனால் காலுவினால் இதையும் சகிக்க முடியவில்லை. ராஜி வருந்துவதும் அவனுக்குப் பிடிக்கவில்லை, இவ்விதம் மகிழ்ச்சியுடன் இருப்பதும் அவனுக்கு விருப்பமில்லை ...

ராஜியைப் பற்றிய சிந்தனையிலேயே பத்து மைல் தூரத்தையும் காலு கடந்துவிட்டான். கிராமத்து எல்லை வந்ததும் காலு சுய நினைவிற்கு வந்தான். உள்ளே நடக்கும் எரிமலைப் போராட்டமும், எண்ணத்தின் கடைசலும் நினைவிற்கு வந்தது! அவன் சலிப்புடன் முணு முணுத்தான்—'இதைவிடப் பேசாமலிருந்ததே மேல்! அவள் பேசியதிலிருந்து தானே என்னைக் கவலை தின்ன ஆரம்பிக்கிறது? பேசாமலிருந்த வரை அவள் மாமியார் வீட்டிலிருந்தாலென்ன, எக்கேடு கெட்டாலென்ன என்றிருந்தேனே?' சிரிக்க முயன்ற அவன் உள்ளத்தில் புதைந்து கிடக்கும் நெருப்பை அகற்றுபவன் போல் கையை ஆட்டிக்கொண்டு பேசினான்—'ராம் ராம். சிரித்தால் போதும்! மீள வழி கிடையாது. 'பலீஞ் சடு குடு' விளையாட்டில் நடப்பது போலத்தான் இருக்கிறது காலு, உன் நிலையும்!'

# 20

## காலு – நாநாவின் பூசல்

தீபாவளிக்காகச் சட்டை தைப்பதற்குப் பதிலாக ஐந்து பித்தான்கள் வைக்கப்பட்ட மூடிய கழுத்துள்ள கோட் தைத்துக்கொண்டு வந்தான் காலு. யாராவது கேலி செய்தால், இருவரும் சேர்ந்து எதிர்க்கலாமே என்று கோதருக்கும் ஒரு கோட் தைத்துக் கொண்டு வந்தான்.

அப்படியேதான் நடந்தது. கிழவன் பரமா வானப் பிரஸ்த நிலையில் இருந்தான். கிராமத் தலைவனின் பொறுப்பை ரண் சோட் ஏற்றுக் கொண்டான். அவனுடைய வீட்டிலேயே தீபாவளி யன்று எல்லோரும் கூடினார்கள். ஒவ்வொருவரும் காலு, கோதர் இருவருடைய கோட்டையும் பார்த்தார்கள். பலர் அதைப் பாராட்டினர். தாமும் அப்படித் தைத்துக் கொள்ளக் கூடத் தயாராயினர். ஆனால் சிலருக்கு அது பிடிக்கவில்லை. ரண் சோடின் தம்பி நாநாவோ, அதுபற்றிப் பேசவே ஆரம்பித்து விட்டான் — 'இதென்ன, தையற்காரனைப் போல் சட்டை? நாம் போட்டுக் கொள்ளலாமா? உறவினர் அழைத்தால் இதைப் போட்டுக் கொண்டு போகாதே!'

கோதரின் அருகில் காலு உட்கார்ந்திருந்தால், 'சரிதான் போடா, நீயே வந்து உறவினரிடமும் சொல்லிக்கொள்!'- என்று பதிலளித்திருப்பான். ஆனால் அப்போது அவன் அங்கிருக்கவில்லை. சிறுவர்களுக்குத் தின்பண்டம் கொடுத்துக் கொண்டிருந்தான்.

'சரிதான்' — என்று சொல்லிவிட்டுக் கோதர் பாட்டுப்பாட ஆரம்பித்தான். நாநா பாட்டிலும் பங்கு கொள்ளவில்லை, மந்திரியின் அதிகார தோரணையிலும் இறங்கவில்லை. யாரையோ எதிர் பார்ப்பவன் போல் அமைதி யிழந்து காணப்பட்டான்.

கோதரைத் தன் கட்சியில் சேர்த்துக்கொள்ள மிகவும் விரும்பினான் நாநா. எவ்வளவோ முயற்சித்தும் பார்த்தான். ஆடி மாதம் அவனுடன் சேர்ந்து உழுதான், மாட்டை மேய்த்தான், களை எடுத்தும் உதவிப் பார்த்தான்.

அப்படியெல்லாம் செய்து கோதரைத் தன் கட்சியில் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்பது தான் அவனுடைய எண்ணம்,

அவனுடைய மனைவியைத் தன் கட்சியில் முதலிலேயே சேர்த்துக் கொண்டு விட்டான்.

ஆனால் கோதர் ஒன்றுமே அறியாதவனைப் போலிருந்தான். சமயம் பார்த்து உதவுவதற்குத் தயாராக இருப்பான். அருகே காலு ஏர் உழுதுகொண்டிருக்கையில் போய்ப் புகை பிடித்து விட்டும் வந்துவிடுவான்.

கோதர் காலுவை விடமாட்டான் என்று நாநா புரிந்து கொண்டு விட்டான். ராஜியும் தன் அண்ணியின் பேச்சைக் கேட்கமாட்டாள். இடையே மத்தியஸ்தத்திற்கு ஆள் வைத்தாகி லும் ராஜியைத் தன் வசப்படுத்த விரும்பினான்.

மத்தியஸ்தர்களின் நிச்சயப்படி தீபாவளியன்று ஆரம்பிக்க நினைத்தார்கள். ஆனால் ராஜி தன் பிறந்தகமே வரவில்லை என்று நாநாவிற்குத் தெரியவந்தது. அதற்கப்புறமல்லவா புத்தாடை அணிவிக்க முடியும்! ஆயினும் இரண்டு ரூபாய் செலவு செய்து மத்யஸ்தர்களை ராஜியின் வீட்டிற்கு அனுப்பினான்... நாநாவிற்குத் தீபாவளி வீண்போலத் தோன்றியது.

நாநாவிற்குப் பணத்தை விடத் தன் அழகில் பெருமை அதிகம். உண்மையில் அவன் காலுவை விட அதிக அழகன். உயர்ந்து மெலிந்த உடல், சிவந்த நிறம். காலு நடுத்தர உயரத்தவன், கட்டுறுதியுள்ள உடல் பெற்றவன். கருப்பு நிறத்தவன்தான். இதைத்தவிர ஈரடிச் செய்யுள் பாடுவதில் மிகவும் கைதேர்ந்தவன் நாநா. ஏர் உழும்போது அழகாக ஈரடிச் செய்யுள் பாடுவதில் அவனுக்கு நாட்டம் அதிகம். காலு ஈரடிச் செய்யுள் பாடவே மாட்டான். மிகவும் உற்சாகத்துடன் இருக்கும்போது தான் அவன் பாடுவான். எல்லோருக்கும் ஏதாவது விநியோகம் செய்தல், சண்டைசச்சரவுக்குத் தீர்ப்பளித்தல், ஆடுமாடுகளின் விலை மதிப்பிடுதல், மாட்டின் உடல் நிலையைப் பரிசோதித்தல் போன்ற வேலைகளில் அதிக நேரத்தைக் காலு செலவிடுவான். காயத்திற்கு மருந்து போடக்கூட அவனுக்குத் தெரியும்.

தன் அழகில் பெருமை கொண்ட நாநா தன் பேரில்தான் ராஜி உள்ளத்தைப் பறி கொடுப்பாள், காலுவை லட்சியம் செய்ய மாட்டாள் என்ற நம்பிக்கையுடன் இருந்தான். அந்த அறை வாங்கிய பிறகுகூட ராஜியிடம் ஓரிருமுறை பரிகாசமாக அவன் பேசிப் பார்த்தான். ராஜி கேட்டுக்கொண்டு அதற்குப் பதிலளிக் காமல் அவனை அலட்சியம் செய்துவிட்டாள்.

ராஜியின் இந்த மௌனத்திற்கு நாநா பாதி சம்பந்தம் என்று பொருள் கொண்டு விட்டான். அவனுக்குச் சரியான தரகர்கள் கிடைத்தனர். அந்தத் தரகர்களையும் குறை சொல்வதற்கில்லை. பரமா படேலின் மகன் நாநாவின் சார்பில் சென்றால் ராஜி மறுக்க மாட்டாள் என்று அவர்கள் நம்பியிருந்தனர். ஒரு புறம் நன்மை செய்வோம் என்ற பெயர் கிடைக்கும். வாயைத் திறந்தால் இருபது—இருபத்தைந்து ரூபாய் வரும்படியும் நிச்சயமாக உண்டு.

ஆனால் அந்த மத்தியஸ்தர்களுக்கு வரும்படியும் தொண்டாற்றும் வாய்ப்பும் அவ்வளவு எளிதில் கிடைக்கவில்லை. ராஜி மறுத்தது மட்டுமல்ல, வந்தவர்களை நன்றாகத் திட்டியும் அனுப்பினாள். உறவினரிடம் சொல்வேன் என்னும் பயமுறுத்தலை வாள் போல் அவர்களிடம் வீசினாள் — 'என்னை இம்மாதிரி ஏமாற்ற வந்திருக்கிறீர்கள், பார்த்துக்கொண்டே இருங்கள் — என் உறவினர் எல்லோருக்கும் இந்த விஷயத்தைச் சொல்லிவிடுகிறேன்.'

ஏனடா சிக்கிக் கொண்டோம் என்றாகிவிட்டது மத்தியஸ்தர்களுக்கு. 'வீணாக எனக்கு ஆசை காண்பித்து என்னைப் பற்றி ஊரெல்லாம் பேசும்படி வைத்தீர்களா?' என்று நாநா வேறு கோபித்துக் கொண்டால்? 'நீயே போய் சமாளித்துவிட்டு வா' என்று சொல்லி ஒரு ஆளை அனுப்பி வைத்தார்கள்.

உண்மை இதுதான் - ராஜி தீபாவளிக்கு வருவதாகத் தானிருந்தாள். ஆனால் காலு பலியை அழைத்துப் போக வந்ததிலிருந்து நிச்சயம் மாறிவிட்டது.

நாநா இதை உண்மை என்று நம்பிவிட்டான் — 'உண்மைதான். காலு தான் அவளுடைய வீட்டிற்குச் சென்றிருந்தபோது அவளிடம் கோள் சொல்லிக் கொடுத்திருக்கிறான்.' நாநாவிற்குச் சினம் மூண்டு வந்தது. தின்பண்டம் கொடுக்க வந்த காலுவிடம் அவனால் கேட்காமல் இருக்க முடியவில்லை, 'உன் வாயில் என்ன வார்த்தையடா வந்தது, காலு.'

காலு ஒருகணம் அச்சமடைந்தான். எல்லோருக்கும் கொடுக்க வேண்டிய பொட்டலம் அப்படியே இருந்தது — 'என்னப்பா நடந்தது?'

'நடந்தது நன்மைக்குத்தான். ஆனால் ...' நாநாவின் வார்த்தைகளைவிட அவனுடைய தலையாட்டிலும், நெருப்புப்பொறி பறக்கும் கண்களும், மற்ற அங்கங்களும் அவனுடைய ஆத்திரத்தை வெளிப்படுத்தின — 'இதோ பார்! நீ திடீரென்று சாகாவிட்டால் என் பெயர் என்ன என்று கேள்!'

காலு எப்படித்தான் கோபத்தை அடக்கிக் கொள்வான்? இரண்டு விதத்திலும் மன அமைதி குலைந்தது — ஒன்று, காதால் கேட்கமுடியாத வசைகள், இரண்டு காரணம் என்ன என்றே சொல்லாமல் திட்டுதல் — காலு மீசையைத் தடவிக்கொண்டு திடீரென்று நாநாவின் மணிக்கட்டைப் பிடித்தான் — 'இதெல்லாம் என்ன? அதை முதலில் சொல்லடா நாயே!'

நாநாவிற்குப் பாதி உயிர் போய்விட்டது. கையை விடுவித்துக் கொண்டு காலுவின் கழுத்தில் பாய்ந்தான். தின்பண்டங்கள் நிறைந்த தட்டு காலுவின் கையிலிருந்து நழுவி உட்கார்ந்திருந்த மக்களின்மேல் பட்டு, கல்தூணில் போய் மோதிக்கொண்டது. டண் டண் டண் ....'

அபினி சாப்பிட்டவர் அப்படியே பிரமித்து நின்றுவிட்டனர். தட்டின் ஓசை ஈரடிச் செய்யுள் பாடிக்கொண்டிருந்தவர்களையும் மௌனமாக்கி விட்டது. ஒரு கணம் ஒருவரையொருவர் கேட்டுக் கொண்டனர் — 'இதென்ன ஓசை? யார் யார் சண்டையிட்டுக் கொள்கின்றனர்? காலுவும் நாநாவுமா? ஏதாவது குற்றம் குறை நடந்துவிட்டதா?'

காலுவுக்கு உண்மையில் இந்த வீட்டின் பேரில் பல நாட்களாக, பல ஆண்டுகளாகக் கோபம். அந்த ஆத்திரத்தைத் தீர்த்துக் கொள்ள ஓரிருவாய்ப்புக் கிடைத்தது. அதுவும் ரண்சோட், மாலி இருவர் பேரில்தான். ஆனால் இன்று ஏழேழு பிறவிகளிலும் அவனுக்குப் பகையாக இருந்தவனே எதிரே வந்து நின்றான்.

காலு கழுத்திலிருந்து கையை விடுவித்துக்கொண்டு கூறினான். 'நானும் எத்தனையோ நாட்களாகப் பார்த்துக் கொண்டிருக்கிறேன். அந்தக் கிழவனுக்காகத் தயங்கினேன். இன்று நீயே வந்து—' நாநாவைப் பிடித்துக் கீழே தள்ளிவிட்டான் காலு. நல்ல வேளை மற்றவர்கள் அவனைப் பிடித்துக்கொண்டார்கள். இல்லாவிட்டால் ராமா சொன்னது போல் பூசணிக்காய் மாதிரி உடைத்திருப்பான்!

தாழ்வாரத்திலிருந்த ஐம்பது பேர்களும் எழுந்து நின்றனர். ஒரு சிலர் காலுவைப் பிடித்துக்கொண்டனர். மற்றும் சிலர் ரண்சோடைத் தடுத்தனர். என்ன இருந்தாலும் நாநா சொந்த சகோதரனல்லவா?

பெரும்பாலான மக்களுக்குச் சண்டை முற்றினால் நன்றாக இருக்குமே என்றிருந்தது. சிலர் தமக்குள் சொல்லிக் கொண்

டனர் — 'காலுவின் அப்பாவை அவன் படுத்திய பாட்டிற்கு வட்டியும் முதலுமாகக் கொடு!' கதவருகிலிருந்து திட்டிக் கொண்டிருக்கும் அந்தப் பல்லில்லாத கிழவி மாலி, ரண்சோடின் மனைவி, அவர்களைத் தடுக்க முயலும் கிழவன் பரமா, இவர்கள் எல்லோருமே மகனின் பக்கம் சேர்ந்துகொண்டால் கூடக் காலு தழைந்து போகமாட்டான் என்பது எல்லோருக்கும் தெரியும். வேறு வழியில்லை, இருந்தபோதிலும் காலு வருத்தப்பட பேசாத், காசம், கோதர், சங்கர், பகா இவர்களெல்லோரும் பார்த்துக் கொண்டு சும்மா இருந்துவிடுவார்களா என்ன?

காலு நாநாவைத் தள்ளினான், பிறகு கையால் குத்தவந்த ரண் சோடையும் எச்சரித்தான். 'உன் மானத்தைக் காத்துக் கொள்ள வேண்டுமானால் தள்ளிப் போய்விடு! இல்லாவிட்டால் அவனை இழுத்து வாருங்கள், வேகம் அதிகரித்து விட்டது!' என்று கூறி நாநாவை விடுவிக்க முயற்சித்த மக்களிடம் காலு சொன்னான் — 'விடுங்கள். இன்று அவனுடைய ஆசை முழுவதையும் தீர்த்துவிடுகிறேன்!' காலு தன்னைப் பிடித்தவர்களையும் திட்டினான் — 'என்னை விடுங்கள். உங்கள் அப்பனையும் திட்டத் துணிந்தவன் இவன்!' மதம் கொண்ட எருமை போல் ஒரு துள்ளுத் துள்ளித் தன்னைப் பிடித்துக்கொண்டிருந்த மக்களிடமிருந்து விடுவித்துக் கொண்டான். மறுபடியும் தன்னைப் பிடிப்பதற்குள் நாநாவின் முகத்தில் ஓங்கி ஒரு அறை அறைந்தான் — 'இந்தா' பிறகு அங்கிருந்து கதவருகே வந்து கத்தினாள் கிழவி: 'ஒரு பல் கூட இல்லாமல் உதிர்த்துவிடட்டுமா?'

ராமா வந்து பேச ஆரம்பித்தான் — 'உனக்கு முன்னமேயே கடவுள் அந்தக் கிழவியின் பற்களை உதிர்த்துவிட்டானப்பா!' அருகிலிருந்தவர்கள் சிரித்தனர். ராமாவிடம் கோபமும் கொண்டனர். நாநாவின் மூக்கிலும் வாயிலும் ரத்தம் கசிவதைக் கண்ட மக்கள், ஒரு சார்பிலும் சேராதிருந்த போதிலும் நாநாவிற்காக வருந்தினர். 'காலு அநியாயம் செய்துவிட்டாயப்பா!' பேசாத், கோதர் முதலியவர்கள் ஓடிவந்து காலுவைப் பிடித்துக் கொண்டனர். வசை பொழிந்துகொண்டிருந்த நாநாவை வீட்டிற்கு அனுப்ப ஏற்பாடு செய்தனர்.

வண்டி ஓட்டும் சவுக்கைக் கையில் எடுத்துக்கொண்டு சீறிய ரண்சோடையும் மக்கள் பிடித்துக்கொண்டனர். நாநாவையும்

சமாதானப்படுத்தி ஒரு பக்கம் அழைத்துச் சென்றனர். காலுவை எல்லோரும் வீட்டிற்குள் இழுத்துச் சென்றனர்.

ரண்சோட் புகார் செய்யக் கிளம்பினான். சங்கர், பேசாத்தின் சித்தப்பா முதலியவர்கள் இடையே வந்தனர்— 'யார் குற்றவாளி என்று பிறகு பார்த்துக் கொள்ளலாம் — ஆனால் ஏன் சண்டையிட வேண்டும்?' என்று சங்கர் கேட்டான்.

'என் அப்பாவிற்குத்தான் தெரியும்' ரண்சோட் கூறினான்.

'இதே பார், புகார் செய்த பிறகு நாநா குற்றவாளியாக இருந்தால்?'

'குற்றவாளி என்பதற்காக இப்படியா அடிக்க வேண்டும் படேல்?' கோபத்துடன் ரண்சோட் கேட்டான். 'இப்படித்தான் தீர்ப்பளிப்பதா?' ரண்சோட் கிளம்பினான்.

'நீங்கள் தூங்கப் போங்கள் .... போலீஸ்காரன் வந்து காலுவை நாலடி வைக்கப் போகிறான். ஒன்றேகால் சேர் நெய் தின்று விட்டுப் போவான். அப்போது தெரியும்,' என்று ராமா சொல்ல விரும்பினான். நான்கடி தாங்குவது கடினம் என்பது ராமாவிற்குத் தெரியும்— 'சகோதரன் தன் சகோதரனைப் பற்றிப் புகார் செய்யாவிட்டால், பின்பு யார்தான் செய்வார்கள்?' ஆயினும் ரண்சோட் திரும்பவில்லை. கடைசியில் காசம் குறுக்கிட்டுப் பேசினான்— 'இதோ பார், இந்த மாதிரி புகார் செய்து அவமானத்தைக் கொண்டு வரப் போகிறாயா? இதனால் பகை அதிகரிக்கும், அண்ணன் தம்பி இருவரும் கொலைக்கும் துணிந்து விடுவார்கள். இதற்கு முடிவே இருக்காது. போனால் போகட்டும். விட்டு விடு. நீங்கள் உதார மனப்பான்மையுடன் விட்டுக் கொடுக்க வேண்டியவர்கள். காலுவைப்பற்றி நாங்கள் ஒன்றும் சொல்ல மாட்டோம். பார்க்கப் போனால் தவறு செய்தவன் நாநா தான்—நான் அங்கு உட்கார்ந்திருந்தேனே. காரணமே இல்லாமல் காலுவை நாநா திட்ட ஆரம்பித்துவிட்டான். ஆனால் இத்தனை நாட்கள் கிழவன் நல்லவனாக இருந்தான், எல்லாவற்றையும் பொறுத்துக் கொண்டிருந்தான். ஆனால், இனிமேல் யாரும் பொறுக்க மாட்டார்கள்!' காசம் கண்களில் நெருப்புப் பொறி பறக்கக் கூறினான்— 'அந்தப் பிராம்மணன் சொன்னது எனக்கு நினைவிருக்கிறது. பகைமூண்டால் ஒவ்வொருவராக உங்கள் எல்லோரையும் கொலை செய்துவிடுவான். ஆமாம்!'

ரண்சோட் நிலைமையைப் புரிந்துகொண்டான் — 'நீங்கள்

நியாயத்தைக் கூறிச் சரிப்படுத்துங்கள். இல்லாவிட்டால் இரண்டு நாட்களுக்குப் பிறகு புகார் செய்யத்தான் போகிறேன். ஒரு தடவை அந்தக் காலுவின் தோலை உரித்துவிட்டு மறுவேலை. பிறகு நடப்பது நடக்கட்டும்!'

வழக்கப்படி ராமா சொல்ல வாயெடுத்தான் —பிறகு நடப்பதற்கென்ன இருக்கிறது? காலுவிற்கு மருந்து போட்டுக் காயத்தைச் சரிப்படுத்தி விடலாம். பிறகு அவன் வந்து கை கால்களையே முறித்துப் போட்டுவிடுவான் ....

கிராமம் முழுதும் இந்தச் சண்டையைப் பற்றிய பேச்சுதான். சிறுவர் கூடப் பட்டாசு வெடிப்பதை விட்டுவிட்டு — 'காலு சித்தப்பா இப்படிக் குதித்தார் — நாநா சித்தப்பா இப்படித்தான் விழுந்தார்' என்று பேசிக்கொள்ள ஆரம்பித்தனர்.

அன்று வழக்கம் போல் எங்குமே மக்கள் கூடவில்லை. காலுவின் வீட்டிற்கு வந்திருந்த எல்லோருக்கும் இனிப்புப் பண்டம் அளிக்கப் பட்டது. ராமாவும் கேட்டான் — 'காலு! எனக்கு இனிப்புப் பண்டம் தரவேயில்லை. இந்தா நீயே அதைத் தயார் செய்!'

'சரி. மாட்டேன் என்று சொன்னால்தானே?' காலு பதிலளித்தான்.

'ஆனால் எனக்குப் பதிலாக நாட்டுப் பாடல் யார் பாடுவார்கள்?'

'அந்த வேலையை நான் செய்கிறேன்.' காலு ராமாவின் இடத்தில் உட்கார்ந்துகொண்டான். கோதர், பேசாத் இருவரும் பாடிய வரிகளையே சங்கர், பகா இருவருடனும் சேர்ந்து காலு பாட ஆரம்பித்தான் —

'ஹீட்யா ராணு நீ ....'

(கிளியே! ராணுவின் நாதஸ்வரம் ஒலிக்கிறது. முரசு முழங்குகிறது!)

பகா வரியைப் பாடி முடித்துவிட்டுக் காலுவிடம் கூறினான் — 'இது உங்களுக்கும் நாநாவிற்கும் தான் பொருந்தும், காலு சித்தப்பா!'

'ஏன்?'

'ஏன்? ஏனென்றால் —' இதற்குள் இரண்டாவது கட்டிலில் உட்கார்ந்து பாடிக்கொண்டிருக்கும் கோதரின் நினைவு வந்தது. கையை ஒரு வீச்சு வீசிக்கொண்டே சொன்னான் — 'புரியவில்லையா? நீங்களும், நாநா சித்தப்பாவும் சண்டை போட்டதற்குக் காரணம் ஒரு பெண்தானே?'

பகா கூறிய பிறகுதான் காலுவிற்கே தோன்றிற்று. பகாவின் ஆராய்ச்சியறிவு பற்றி அவன் மகிழ்வுற்றான். பாவம், காதலிக்காக ஒரு புறம் ராணா, மறுபுறம் காலுவைப் போன்ற போஜா கூர்ஜரன் ....

அடுத்த வரிகளைப் பாடிய காலுவின் குரலில் மாற்றம் தெரிந்தது. உணர்ச்சியும் உடன் கலந்துவிட்டது —

'ராணா பஹோஞ்ச்யோ ...'

(ராணா கிராமத்தின் எல்லைவரை வந்துவிட்டான்.... அந்த கூஜரன் வரப்பைக் கடந்து சென்றான்.) காலுவிற்கு இன்று காரணமில்லாமல் விசித்திரமான மன வேதனை உண்டாயிற்று. இதுவரை இல்லாத சூனிய நிலை அவனை வந்து இன்றுதான் சூழ்ந்து கொண்டாற்போல் அவனுக்குத் தோன்றிற்று. ஒரே தனிமை ... வறட்சி ... சூனியமான நிலைமை ...

நள்ளிரவு கடந்துவிட்டது. கட்டிலில் படுத்தாலும் தூக்கம் வரவில்லை. ஒருகணம் கண்கள் மூடினாலும் மறுகணம் காதலி வேலு— ராஜி, நாநா — ராணா — தான் — போஜா கூர்ஜர் ... மனச்சலிப்புடன் காலு உக்கா பிடித்தான். முணுமுணுத்தான் – 'ராணாவும் போஜாவும் சண்டைபோட ஆரம்பித்துவிட்டோம் !'

இரவில் கண் விழித்ததாலோ, அல்லது புகையிலையின் மயக்கத்தாலோ தூக்கம் வந்தது. ஆனால் கனவும் கூடவே வந்தது — ஆனால் ராஜியின் காரணமாகத்தான் ...

அதிகாலையில் மனைவி எழுப்பினாள். அப்போது அவனுடைய கண்கள் எதையோ தேடிக்கொண்டிருந்தன. எதையோ மறந்தவன் போல், நினைவுபடுத்திக் கொண்டு சிரித்தான். பக்கத்தில் சுருண்டு கிடந்த துப்பட்டியை இழுத்துவிட்டுக் கீழே இறங்கினான். மனதிற்குள் முணுமுணுத்தான் — 'நள்ளிரவிற்குப் பிறகு கண்ட கனவு பலித்தால் வாழ்நாள் முழுதும் நாநாவுடன் சண்டைதான் போடவேண்டி வரும் ...' காலுவின் உள்ளம் நடனமாடத் துவங்கியது ... ஒரே ஆனந்தக் களிப்பு !

# 21

## கனவுடன் ஒன்றிய காலு

காலு எழுந்தான். சூரியோதயம் ஆகிவிட்டது. கிராமத்துக் கோடியிலுள்ள எல்லா தனவந்தர்களின் வீடுகளிலிருந்தும் சேவல்கள் கூவிக்கொண்டிருந்தன. காசம் வீட்டுச் சேவல் வேப்பமரத்தின் மீது ஏறிக்கொண்டு புத்தாண்டு வாழ்த்துக் கூறிக்கொண்டிருந்தது. அதற்கு வணக்கம் செலுத்திக் கொண்டிருந்தது. 'கொக்கரக் கோ ... கோ ...'

புத்தாண்டில் எங்கு பார்த்தாலும் ஒரே அமர்க்களம். பெண்டிர் குப்பை கூளங்களை உடைந்த பானையில் சேகரித்து கிராமத்திற்கு வெளியே சென்று போட்டுவிட்டு வந்தனர் — அவற்றுடன் தங்கள் சிடுசிடுப்பையும் அகற்றிவிட்டு வந்தனர். பதினைந்து நாட்களுக்கொருமுறை குளிக்கும் கிழவன் ஜகா கூட இன்று தண்ணீர் கேட்டு வாங்கிக் குளித்தான். குழந்தைகளையும் ஒரே ஒருமுறைதான் அதட்ட வேண்டி வந்தது. குளித்தவுடனேயே சிறுவர் சிறுமியர் புத்தாடைகள் அணிந்து பட்டாசு விட்டபடியே தங்கள் விளையாட்டை ஆரம்பித்தனர் — 'காலு சித்தப்பா ... அப்புறம் சித்தி? '

காலுவை ராமாவின் குழந்தைகள் கூப்பிட வந்தன. ஆனால் காலு பேசினால்தானே! அவன் இன்னும் குளிக்கவே இல்லை. குளிக்காமல் குழந்தைகளுடன் பேசினால் அவர்கள் — 'போங்கள், கிராமத்துக் கழுதைகளை மேய்த்து வாருங்கள்' என்று கேலி செய்வார்கள்.

அந்தப் பொல்லாத குழந்தைகள் குளித்தவர்களைக் கூடக் கழுதை மேய்க்க அனுப்புவார்கள்தான்! காலு பல் துலக்க உட்கார்ந்தான். கிராமத்து நாவிதன் சிவா அங்கு வந்து சேர்ந்தான் — 'அண்ணி! அண்ணி! எழுந்திருங்கள்! காலு அண்ணே, கிளம்புங்கள்!'

'சிவா! நீ வேண்டுமானால் போ! நீ வந்ததே போதும். நான் குளித்து விட்டதற்குச் சமம்.'

'இதென்ன இப்படிச் சொல்லிவிட்டீர்கள்! உங்களைப் போன்றவர்கள்' — சிரித்தபடி சிவா பேச்சை மாற்றினான் — 'முதுகில் ரத்தம் கட்டிக்கொண்டதோ?'

'ஏன்?' அப்போதுதான் காலுவின் நினைவிற்கு வந்தது —

'ஆமாமப்பா, ஏனடா இப்படி உடம்பு வலிக்கிறதே என்று நான் யோசித்துக் கொண்டிருந்தேன்.'

'ஏன் வலிக்காது?' சிவா இடையே பேச ஆரம்பித்தான் — 'நீங்கள் நாநா மீது பாய்ந்தீர்கள், பின்னுல் நின்றுகொண்டிருந்த ரண்சோட் உங்கள் முதுகில் எத்தனை குத்துகள் விட்டான்?'

'அப்படியா?'

'அப்படியாவது? உங்களால்தான் பொறுத்துக் கொள்ள முடியும். என்னைப் போலிருந்தால் அத்தனை அடிகளைப் பொறுக்க முடியாமல் படுத்த படுக்கையாகியிருப்பேன்!'

சிவா வேண்டாம் என்று சொன்னபோதிலும் பலீயை அழைத்து அவனுக்கு லட்டு கொடுத்தான் காலு.

லட்டைத் தின்றபடியே அதே விஷயத்தைப் பற்றிப் பேசினுன் சிவா. பல் துவக்கியபடியே காலு 'உம்' 'உம்' என்று ஆமோதித்தான்.

இதற்குள் பலீ தண்ணீர் நிரப்பிவிட்டாள். காலு துணியைக் கழற்றினுன். இதற்குள் வெந்நீரைக் குளிக்குமளவு சூடாகத் தயார் செய்தான் சிவா— 'உம் இனி குளிக்கலாம்! வாருங்கள்!' சிவா காலுவிற்குத் தண்ணீர் விட்டதுடன் அவனுடைய உடம்பைப் பிடித்தும் விட்டான்— 'அடேடே! இங்கே ரத்தம் கட்டிக்கொண்டிருக்கிறது.. இதோ ... இங்கெல்லாம் கூட!'

'சரி போதும் போ! உனக்கு நேரமாகிவிடும்!'

'இன்னும் பாதி கிராமம் இருக்கிறதே!'— சிவா காலுவிற்கு வெந்நீர் விட்டபடியே கூறினுன். காலு குளித்துவிட்டு உடை அணிய வந்தான்— 'சரி இனி நான் கிளம்புகிறேன்' என்று கூறி சிவா அங்கிருந்து நகர்ந்தான்.

'அடே! இந்தா கொஞ்சம் புகை பிடித்துவிட்டுப் போ!' காலு சொல்வதற்குள் முற்றத்தைத் தாண்டிச் சென்றுவிட்டான் சிவா.

'சுருட்டுக் கொடுத்தால் போதுமா? எட்டு முழ வேட்டி வேண்டும் .... அப்புறம் உங்கள் விருப்பம்.' பரமா சித்தப்பாவின் வீட்டையடைந்து கிழவனைக் கூப்பிட்டான்— 'கங்கு அண்ணி, தண்ணீர் எங்கே, எடுங்கள்! நாதா எங்கே காணும்?'

மேகமண்டலங்களின் படகில் ஏறிக்கொண்டு மலர்களைப் பறித்துக் கொண்டு குங்கும நீரைக் கரைத்துத் தெளித்த வண்ணம் உஷாதேவி வந்தாள்.

பெண்கள் மாடுகளை வெளியே அவிழ்த்துவிட்டனர். இரவில்

கரைத்து வைக்கப்பட்டிருந்த செம்மண்ணை மாடுகளின் கொம்பு களில் ஆடவர் பூசினர். காலுவைப் போன்றவர் மாடுகளின் உடலில் வட்டமாகச் சித்திரம் வரைந்திருந்தனர்.

செம்மண்ணைவிட காலுவின் உள்ளத்தில் ஆழப் போய்க் கரைந்துவிட்டது இரவில் அவன் கண்ட கனவு. அப்படியொன்றும் குறிப்பிடத்தக்க விஷயம் அதில் இல்லை. பலீக்குக் குழந்தை பிறக்கவில்லை. ராமா, பகா முதலியவர் ராஜிக்கு அவளுடைய ஆடைகளை அணிவிக்கின்றனர். ராஜி கைம்பெண்ணாகி விடுகிறாள்.

காலுவின் உள்ளம் கனவை அசரீரியைப் போல் உண்மை யென்று கருதியது. ஆனால் மறுபுறம் — 'இது கனவுதானே' என்று கூறி மறக்கவும் முயற்சித்தான்.

அந்தக் கிழப் பசுவின் உடலில் ஒரு அடையாளம் வரைந்து கொண்டே நினைத்தான் காலு — 'இந்தப் பசு [1] தோரணத்தைத் தாண்டி வந்தால் கனவு உண்மை என்று அர்த்தம். இல்லாவிட்டால் இல்லை.'

பசு தோரணத்தைத் தாண்டுவது கனவைப் போல்தான். நிச்சயமாகக் கூற முடியாது. அதற்குத் திமிரும் சுபாவம் உண்டு. கிழப்பசு வேறு. காலு அதை அதிகக் கவர்ச்சியாக்கக் கழுத்தில் மணியும் கட்டியிருந்தான்.

'சரி! மாலையில் எல்லாம் தெரிந்துவிடும்! முதல் கன்று போட்ட அந்த மாட்டின் கழுத்தில் கட்டுவதுதானே?' என்றாள் பலீ.

'கிழமாடு தோரணத்தைத் தாண்டினால்தான் எல்லாம் சரி யாகும் என்று அர்த்தம்!' பலீக்கும் தன் மனத்திற்கும் சேர்ந்தாற் போல பதிலளித்தான் காலு.

ராமா சிரித்தான் — 'காலு, இதென்ன கிழமாட்டின் கழுத்திற்கு மணியா?' அவனுக்கும் காலு அதே பதிலைத்தான் சொன்னான் — 'உண்மை — பொய் இதனைப் பரிசோதிக்க இதுதான் சரி.'

'சரி சரி, பொய்யை உண்மையாக்க முடியுமா? மணியோ சதங்கையோ எதையோ கட்டு. போ!'

---

[1] புத்தாண்டு தினத்தில் கிராமத்து முக்கியமான வாயிலில் தோரணம் கட்டப்படும். கை தட்டிக்கொண்டு மாடுகளை மக்கள் அவிழ்த்து விடுவர். சுபாவமாக நடந்துவரும் மாடுகளில் எந்த மாடு முதலில் தோரணம் கட்டிய வாசலைத் தாண்டுகிறதோ, அது தோரணம் தாண்டிய மாடு என்றழைக்கப் படுகிறது.

'ஆனால் அது தோரணத்தைத் தாண்டிவிட்டால் உண்மையாகுமா, பொய்யாகுமா?'

பாவம்! ராமாவிற்குக் காலுவின் வார்த்தை புரிந்தால்தானே!

'உம் போ! மாட்டை 'விளையாட'[1] அவிழ்த்து விட்டதுமே தெரிந்துவிடுமே!'

ஆனால் ராமா மட்டுமல்ல, மாடுகள் கிளம்பியவுடன் கிராமம் முழுவதுமே காலுவைப் பார்த்துச் சிரித்தது.

காலுவிற்கும் கவலையுண்டாயிற்று — கனவு பொய்யாகி விடுமோ?'

நல்லவேளை கோதர் இருக்கவில்லை. ராஜியை அழைத்துவர அவனை அவனுடைய தாய் அனுப்பியிருந்தாள். இல்லாவிட்டால், காலுவை அவன் உற்சாகமிழக்கச் செய்திருப்பான்.

'சரி... உண்மையாகுமானால் பசு தோரணத்தைத் தாண்டி விடும்!' காலு தனக்குள் சொல்லிக்கொண்டான்.

நானூறு—ஐநூறு மக்கள் கிராமத்து விசாலமான மைதானத்தில் ஒன்று கூடினர். மாடுகளை 'விளையாட' அவிழ்த்து விடவென்று ஆடவர், பெண்டிர், குழந்தைகள் எல்லோரும் வந்து மேடை மீது நின்றுகொண்டனர். கோபாலன் கிழக்குப்பக்கத்து மேடையில் சிறு தடியுடன் நின்றுகொண்டு தன் ஆநிரைச் செல்வங்களைப் பார்த்துக் கொண்டிருப்பதாக மக்களின் நம்பிக்கை.

பொங்கலிலிருந்து கருப்புப் பருப்பைப் பொறுக்குவது போல் எருமைகளை இளைஞர்கள் அப்புறப்படுத்தி விட்டனர். மைதானம் முழுதும் வெள்ளைக் கொக்கின் சிறகுபோல் பளபளத்தது.

தீபாவளி உற்சவத்திலிருந்து மாடுகளின் கண்கள் சிவந்து கிடந்தன. இப்போது செம்மண் பூச்சு வேறு. பாவம், களைத்துப் போய் விழித்தன அவைகள்.

உடல் முழுதும் ஒரே வலி. ஆயினும் காலு விடவில்லை. ஒரு இளைஞனிடம் தட்டை வாங்கிக்கொண்டான்.

'கொடு இப்படி!'

---

[1] புத்தாண்டு நாளில் ஆநிரைகளை கிராமத்திற்கு வெளியே உள்ள ஒரு மைதானத்திற்குக் கொண்டு வருவார்கள். தட்டுகளைத் தட்டி அவைகளை ஓடவிடுவார்கள். பிறகு மைதானத்தில் இரண்டு — மூன்று தடவைகள் அவற்றை ஓடச்செய்வார்கள். இதை 'விளையாடச் செய்தல்' என்பர். உண்மையில் மாலையில் தோரணத்தைத் தாண்டுவதற்கு இதை ஒத்திகை என்று சொல்லலாம்.

தன் பெருமையைக் காண்பித்துக் கொள்ளத்தான் காலு முன்னே வந்திருக்கிறான் என்பது எல்லோருக்கும் தெரியும்.

கோபாலிடம் காலு கூறினான்— 'சித்தப்பா, எது எப்படியோ எனக்குத் தெரியாது. என் மாடு இன்று மாலை தோரணத்தை முதல் முதலில் தாண்டிப் போகவேண்டும். என்னிடமிருந்து ஒரு வேட்டி வாங்கிக்கொண்டு செல்லுங்கள் !'

கோபாலுக்கு வேட்டி கொடுக்க பிராம்மணர் ஏற்கெனவே ஏற்பாடு செய்துவிட்டனர். யாருடைய மாடு தோரணத்தைத் தாண்டி வருமோ, அவர் தன் வேட்டியை இவ்விதம் தானமாகக் கொடுத்தாக வேண்டும். கோபால் சொன்னான் — 'இன்றைய வேட்டிக்கு ஏற்பாடாகிவிட்டது காலு. ஆனாலும் வேட்டிக்கு வேட்டி எவ்வளவோ வேற்றுமையுண்டு !'

'நம்ம வேட்டி சாமானியமானதா என்ன? நீரைக் கூடக் கையால் பிடித்துவிடலாம்'

கோபால் மகிழ்ச்சியடைந்தான் — 'அப்படியானால் உன் மாடு முதலில் வந்துவிட்டது என்றே வைத்துக்கொள்.'

பிறகு காலுவை ஜாக்கிரதையாக இருக்கும்படி கூறிவிட்டு கோபால் அவனை முன்னே அனுப்பினான். பிறகு சொன்னான் — 'இதோ பார் பத்திரம், காலு! எல்லோரும் ஜாக்கிரதை! ஓடும் ஓட்டத்தில் யாராவது விழுந்துவிடப் போகிறார்கள். மாடுகளின் குளம்புகள்...'

'எந்த வருடமாவது யாராவது விழுந்தார்களா என்ன? .... நீங்கள் கவலைப்படாதீர்கள்.'

காலுவுடன் சங்கர், பகா, பேசாத்தின் தம்பி முதலியவர்களும் சேர்ந்துகொண்டனர். மூவரும் குச்சிகளால் தட்டுகளை அடித்துத் தட்டினர். மெள்ளப் பாட்டுப் பாடியபடியே மாடுகளைக் கூப்பிட்டனர் 'ஹி—யோ—ஹி—யோ !'

கோபாலைப் பார்த்து நின்றுகொண்டிருந்த பசுக்கள் தட்டின் ஒலியைக் கேட்டன— 'ஹி—யோ' என்னும் சத்தத்தைக் கவனித்தன. அவைகளுக்கு ஒரே பரபரப்பு. பிடித்தன ஓட்டம். மாட்டிடையர்களுக்கும் அவற்றிற்கும் உள்ள தூரம் குறைந்து கொண்டே வந்தது — நாலடி ... மூன்றடி ... இரண்டடி ...

பகாவின் காலடிகள் நிலத்தில் பதிந்தனவோ என்னமோ, அவை மைதானத்துக் கோடியை வந்தடைந்தன. அவன் மேடை மீது ஏறிக்கொண்டான். ஆனால் பசுக்கள் கிராமத்தைப் பார்த்த

வண்ணமிருந்தன. அப்போதுதான் மற்ற இளைஞர்கள் தடிகளுடன் வந்துசேர்ந்தனர். நின்றுகொண்டிருந்த பசுக்கள் திரும்பிப் பார்த்தன. ஒலி கேட்டது— 'ஹியோ .... ஹி—யோ' பசுக்கள் மான்களைப் போல் காதுகளை நிமிர்த்திக்கொண்டு கேட்டன.

'ஜன் ஜன் ...' தட்டின் ஒலியும் 'ஹியோ' எனும் ஒலியும் சேர்ந்தாற் போல் கேட்டன. இருபது ஆண்டுகளாகப் பழகிய கோபால் மேடைமீதேறிக் கூப்பிட்டான் — 'ஹி ... யோ..., ஹி ... யோ,... ஹி ...யோ.'

ராமா காலுவிடம் சொன்னான் — 'நீ தட்டை எடுத்துக்கொண்டு முன்னே சென்றாயே அப்போது உன் மாடும் முன்னால் இருந்தது. இந்தத் தடவையும் அப்படியே செய்தால் உனக்கு வெற்றி நிச்சயம்!'

'அப்படியா! சரி பார்க்கலாம்' காலு மற்றவர்களிடம் ராமா கூறியதைச் சொன்னான். மாலைவரை, தோரணத்தை மாடு தாண்டும்வரை தன் மனதைத் தேற்றிக்கொண்டான்—'தோரணமாவது கீரணமாவது?' பிறகு எல்லோரிடமும் கூறினான் — 'இந்தத் தடவை என் மாடு தாண்டிவிட்டால் சரிதானே? ஒப்புக்கொள்வீர்களல்லவா?'

ஒவ்வொருவரும் ஆமோதித்தனர் — 'ஆமாம்! இந்த முனையிலிருந்து அந்த முனையை அடைந்துவிட்டால் போதும். உன் பசு தோரணத்தைத் தாண்டிவிட்டது என்று அர்த்தம் —' என்று ராமா எல்லோருடைய சார்பிலும் கூறினான்.

இது நிச்சயமாவதற்குள் மிரண்ட பசு பாதி மந்தையைத் தாண்டிச் சென்றுவிட்டது. மேடை மேலிருந்து கோபால் உரக்க கூப்பிட ஆரம்பித்தான் — 'ஹி.... யோ .... ஹி... யோ ... கௌரி!'

தன் பெயரைக் கேட்டவுடனேயே நிலத்தையே அது பெயர்த்துவிடும் போலிருந்தது. மற்ற பசுக்களும் சும்மாயிருக்கவில்லை.

குதிரைப் பந்தயத்தில் பார்வை ஏழெட்டுக் குதிரைகளின் பேரில் மாறி மாறி விழுகிறது. ஆனால் கிராம மக்களின் பார்வை முழுதும் முதுகில் சித்திரம் தீட்டப்பட்ட கௌரியின் பேரில்தானிருந்தது. காலு மூச்சு விடக் கூட மறந்துவிட்டான். உயிரே போய்விடும் போன்ற ஓர் உணர்ச்சி — 'கனவு நனவாகத்தான் போகிறது— ராஜி இதே பிறவில் எனக்குக் கிடைத்துவிடுவாள்.... அப்படித்தான் தோன்றுகிறது! ஆனால் அட துரதிருஷ்டமே! கௌரி முதலில் வந்தடையவில்லை ....'

ரமாவும் மற்ற பலரும் அதை வெகுவாகப் புகழ்ந்தனர் — 'பாவம் கௌரியைப் பாராட்டத்தான் வேண்டும். இத்தனை பசுக்களையும் தாண்டி முன்னால் வந்து நிற்பது விளையாட்டா என்ன ?'

ஆனால் இரண்டாம் தடவை பின் தங்கிய கௌரி முன்னே வந்து விட்டது. ராமா ஒப்புக்கொள்ள நேர்ந்தது — 'கிழ மாட்டுக்கு மணி கட்டினானே காலு, உண்மையில் அவன் முட்டாளல்ல.' மக்களும் தம் தவற்றை ஒப்புக்கொண்டனர் — 'நாங்கள் சிரித்தோம். ஆனால் கௌரியினால் களைகட்டி விட்டதே !'

காலு இந்த மக்களின் வார்த்தையை உண்மையென்று நினைத்துக் கனவும் நனவாகும் எனக் கருதினான் ... மகிழ்ந்து போனான். மனதிற்குள் சொல்லிக்கொண்டான் — 'நல்ல பித்தன் நீ ! எப்படியெல்லாம் மனதை மகிழ்விக்கிறாய் ?'

கடைசியாக 'ஹியோ ... ஹியோ' என்றபடியே எதிரேயிருந்த மேட்டிலிருந்து மறைந்துவிட்டான். அவனைப் பின் தொடர்ந்த பசுக்களும் மறைந்துவிட்டன. அரைமணி நேரம் வரை அந்த வனப் பிரதேசத்தில் கொக்குகள் தம் சிறகைப் பட பட வென்று விரித்துக்கொண்டிருந்தன.

## 22

## சூழ்ச்சியிலும் சூழ்ச்சி

மக்கள் கிராமத்திற்குத் திரும்பினர். எல்லோருக்கும் பின்னல் புத்தாடைகளில் இளமையின் வனப்பை மிளிரச் செய்துகொண்டு நான்குபேர், ஐந்துபேர் சேர்ந்துகொண்டு வரிசையாகப் பாடிக் கொண்டே வந்தனர் —

மாதா ஆஜ்நா பட்கேலா ....

[ அம்மா ! இன்று வெளியே போய்விட்டு எப்போது திரும்புவாய் ? மாலையில் என்னை எதிர்பார் — நான் ஆடிக்கொண்டே வருவேன் ... ]

பெண்களுக்கும் சற்று முன்னல் சென்றுகொண்டிருந்த ஆடவர் தன்னை மறந்து களிப்புடனிருந்தனர்.

போஜ்நா டோர் ...

[ போஜாவின் மாடுகள் வந்துசேர்ந்துவிட்டன. ]

எல்லோருக்கும் முன்னே குழந்தைகளிருந்தனர். பூப்போட்ட தங்கள் சட்டைகளை ஒப்பிட்டுப் பார்த்துக்கொண்டு புழுதியைக் கிளப்பிக் கொண்டு பட்டாசு வெடித்தனர் — சண்டையிட்டுக் கொண்டனர்.

ஆனல் காலு இளைஞர்களுடனும் சேரவில்லை. குழந்தைகளுடனுமிருக்கவில்லை. தனிமையாக நடந்து சென்றுகொண்டிருந்தான். இந்தப் பாடல்கள் அவனுடைய சட்டைக்குள் புகுந்துகொண்டு முள் குத்துவதுபோல் குத்தின.

அவனும் ராஜியும் மாடுமேய்த்தது நினைவிற்கு வந்தது. இப்படித்தானே பாடிக்கொண்டு இருவரும் மாடுமேய்த்தனர் ?

தாரீ தாணீ நே ...

[ உன் பொரியையும் என் கடலையும் கலந்து தின்னலாம். வா வேலு ! ]

பொரி கடலை விஷயம் உண்மைதான். நதிக்கரையின் ஆலமரம், அங்கு கூடும் கூட்டம், பொரி பொரிக்கப்படுதல், பங்கிடுதல், ஆலம் விழுதைப் பிடித்துக்கொண்டு ஊஞ்சலாடுதல், பாட்டுப் பாடுதல் ... குழந்தைப் பருவத்து எல்லாக் காட்சிகளும் கண் எதிரே நின்றன.

சுய நினைவிற்கு வந்ததும் அவனுக்குத் தன் பேரிலேயே கோபம்

வந்தது — 'இந்த இரண்டு நாட்களாக எனக்கு என்ன வந்து விட்டது? சிரிக்க முயற்சித்தபடி முணுமுணுத்தான் — தூக்கத்தில் கனவுகள் தோன்றலாம், ஆனால் விழித்துக்கொண்டிருக்கும் போது கூடவா?'

வீட்டிற்குப் போய்ப் படுக்க விரும்பிய போதிலும் காலு சங்கரின் வீட்டிற்குச் சென்றான். கிராமப் பஞ்சாயத்து நடந்து கொண்டிருந்தது. அதனால் அவன் அங்கு செல்ல நேர்ந்தது. காலு–ராமா இருவரும் சேர்ந்து போக விரும்பினர். ஆனால் இந்தப் பாடல் விட்டால்தானே! பின்னால் துரத்திக்கொண்டே வந்தன. எதையாவது கண்டு பயப்படுபவன் நடுங்கி நடுங்கி முடிவில் தோல்வியை ஒப்புக்கொள்வது போல் காலுவும் பாட்டுப் பாட ஆரம்பித்துவிட்டான் —

தாரீ ஓட்ணி நே மாரா ...

[உன் போர்வையும், என் தலைப்பாகையும் இருக்கின்றன. வேலு! கிளம்பு, இன்று மாடுகளை மேய்த்து வருவோம்!]

காலுவிற்கு ஒரே மகிழ்ச்சி, கடந்த வாழ்க்கையின் மகிழ்ச்சியை மறுபடியும் ரசிக்க முயன்றான் அவன். அதற்குள் சங்கர் கூப்பிட்டு விட்டான் .... 'காலு நீ இந்தமாதிரி பாடிக் கொண்டிருந்தால் முடியாது. கிளம்பு. எல்லாம் தயார். தின்பண்டம் செய்தாகி விட்டதா?'

காலு எழுந்திருக்க நேர்ந்தது. வீட்டிற்கு போய் பகாவின் மனைவியைக் கிளப்பினான் — 'சம்ரதன், கிளம்பு! முதலில் இரண்டு விறகுக் கட்டைகளைக் கொண்டு வா. நெய் கொஞ்சம், வெல்லம்கூட வேண்டும் ... மாவு அரைத்தியா இல்லை, இரவு முழுவதும் இப்படியேதானா?' இவ்விதம் பகாவின் மனைவியோடு வேடிக்கை செய்துகொண்டே தின்பண்டம் தயார் செய்து விட்டான்.

கோபித்துக் கொண்டிருக்கும் ரண்சோட் அவனுடைய சகோதரர்கள் இவர்களெல்லோரையும் சமாதானப்படுத்தி அழைத்து வர ஏற்பாடு பஞ்சாயத்தில் நடந்துகொண்டிருந்தது. கிழவன் பரமா நேற்று மாலையிலிருந்து படுக்கையை விட்டு எழுந்திருக்கவே யில்லை. இல்லாவிட்டால் பேசாத் சொல்வது போல்— 'கிழவனாக இருந்தால் ஒருமுறை கூப்பிட்டால் வந்திருப்பானே. ஆனால் இவர்கள் இந்தக் காலத்துப் பிள்ளைகளாயிற்றே! தான் பிடித்த முயலுக்கு மூன்றே கால்கள் என்பவர்கள். கிழக் கழுதை

காகிற வயதாகிவிட்டது ரண்சோடிற்கு — ஆனல் அறிவுமட்டு மில்லை.'

'காலுவை அனுப்புங்கள். அவர்களை அழைத்துவரலாம்!'— ஒரு கிழவன் இவ்விதம் உபாயம் கூறினன். நான்கைந்துபேர் அதை ஆமோதித்தனர் —'ஆமாம், அப்போது வருவார்களில்லையா?'

'ஆமாம்' — நான்கைந்துபேர் இதையும் ஆமோதித்தனர். மறைவில் உட்கார்ந்திருந்த ராமா சமயம் பார்த்து ஆரம்பித்தான் — 'சரி அப்படியே செய்யுங்களேன். ரண்சோடின் வாலிலேயே காலுவைக் கட்டிவிடுங்கள்!'

'அப்படியில்லை தம்பி! இந்த நல்ல நாளில் ரண்சோட் மறுக்கமாட்டான். உண்மையில் நீங்கள் எல்லோரும் வண்டியில் உட்கார்ந்து விட்டீர்கள் — அதனால்தான் கிராமத் தலைவர் ரண்சோடின் வீட்டார்கள் வரவில்லை!' என்று அந்தக் கிழவன் கூறினன்.

'அதுதான் உண்மை ....'

காசம் சிரித்தான் — 'நீங்கள் பேசுவது வேடிக்கையாக இருக்கிறது. புகார் செய்பவர் இங்கு வந்தால்தானே தீர்ப்புக் கூற முடியும்?' மற்றவர்கள் சொன்னர்கள் — 'அவ்வளவு அன்பு உங்களுக்கிருந்தால் போய் அவர்களை அழைத்து வாருங்கள் பிறகு பாருங்கள், தீர்ப்பு நடக்கிறதா இல்லையா என்று.'

உணர்ச்சி வசப்பட்ட நான்கைந்து பேர்களுடன் கிழவன் எழுந்து நின்றன். ரண்சோடைக் கையைப் பிடித்து எல்லோரும் சேர்ந்து இழுத்து வந்தனர். அந்தக் கிழவன் சங்கரின் வீட்டுத் தாழ்வாரத்தை அடைந்ததுமே கூறினன் — 'இதோ அழைத்து வந்து விட்டோம். இனி தீர்ப்பு நடக்கட்டும். எப்படிக் கூறுகிறீர்கள் என்று பார்க்கலாம்.'

ராமா சமயம் பார்த்துக்கொண்டிருந்தான் — 'உம் கிளம்பு!' மறைவில் உட்கார்ந்தவன் எழுந்து வராந்தாவில் போய் உட்கார்ந்தான் — அந்த பேமாவைக் கூப்பிடுங்கள்?'

'பேமாவிற்கு இங்கென்ன வேலை?' ரண்சோட் பேசினன்.

'குழந்தாய்! இவனுக்கு நீதான் சொல்லவேண்டும். சொல்லு — என்ன வேலை?' ராமா துணுக்குற்றன்.

ராமா செய்யும் எந்த வேலையும் — அவன் பேசும் பேச்சுக் கூட விளையாட்டுக்காகத்தான் என்று கருதப்பட்டு வந்தது. அதனல் தான் பட்சபாதமின்றி யிருந்த பலருக்கும், காசமுக்கும் கூடப்

பேசவேண்டி வந்தது. 'உனக்குப் புரியவில்லையா? பேமாவிற்கு இங்கென்ன வேலை?'

'அதுதான் ரகசியம் காசம் சித்தப்பா!' ராமா எழுந்து நின்றான் 'நான் எழுதித் தருகிறேன். ரண்சோட் பேமாவைக் கூப்பிட மாட்டான்!'

'இதோ பார்! எனக்கு ஒருவித தீர்ப்பும் வேண்டாம் — நீங்கள் செய்யவேண்டியதைச் செய்துகொள்ளுங்கள். போதுமா?'

'இதோ பாருங்கள்' நீங்கள் கிராமத்து மக்களை இந்தச் சிக்கலில் மாட்டிவைக்காதீர்கள். இல்லாவிட்டால் நான் எல்லா விஷயத்தையும் அவர்களுக்குச் சொல்ல நேரிடும்.'

'அப்படியென்ன பெரிய விஷயம்? சொல்லிக்கொள்ளேன்.' நான்கைந்து பேர் கூறினர். கிராமத்துக் கோடியிலிருக்கும் பேமா எல்லோருக்கும் ஓர் புதிராக இருந்தான்—'இதென்ன குழப்பம்?'

கிராமத் தலைவனின் கட்சியைச் சேர்ந்தவர்களுக்கு ஒரே ஆவலாக இருந்தது. ரண்சோட்டின் கருத்தைக் கேட்டறிந்து கொண்டனர் — 'பேமாவைக் கூப்பிடலாமா? பார்க்கலாமே!'

இடையில் ரண்சோட் கூறினான் — 'என்னைச் சாகவிடுங்களேன். எனக்கு ஒரு தீர்ப்பும் வேண்டாமே! நாநாவின் மூக்கு உடைந்ததென்னமோ உடைந்தாயிற்று. வழியில் போகிறவன் அப்படிச் செய்யவில்லையே! அண்ணன் — தம்பிக்குள் தானே சண்டை பூசல்? இது எங்கும் நடக்கத்தான் செய்கிறது?'

காசம் மகிழ்வுற்றான். 'அப்படியானால் இந்தப் பரந்த மனப்பான்மையுடன் இருங்கள்!'

வந்திருந்த முக்கால்வாசிப் பேர்களுக்கு ஒரே வியப்பு, சங்கருக்குத் தோன்றிற்று — ஒரு மணி நேரத்திற்கு முன்பு ரண்சோட் எல்லோருடைய முன்னிலையிலும் புகார் செய்துகொண்டிருந்தான். நாநாவை வீட்டிலிருந்து வெளியே இழுத்து வந்து மூக்கில் பட்ட காயத்தைக் காண்பித்தான். பல்லை ஆட்டிக் காண்பித்தான். பிறகு — 'சங்கர் அண்ணே கிராமம் முழுதும்தான் நியாயப்படி நடக்கவில்லை. நீ கூட அவர்களுடன் சேர்ந்துகொண்டாயா?' என்கிறான். இப்போது 'அண்ணன் — தம்பி தானே என்றான். இப்போது நான் இவனை எப்படிப் புரிந்துகொள்வது? காலுவுக்கு ஏதாவது தண்டனை கொடுத்து இவனை மகிழ்விக்கலாம் என்றல்லவா நான் நினைத்தேன்? ஆனால் இவனோ.......'

காலுவும் இதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்தான். பேமாவை அழைத்துவர அவனும் நினைக்கவில்லை. காரணம் அவன் வந்தால் ராஜியின் பெயரும் வரும் ... பிறகு பெரிய அவமானம். நாநாவிற்கு இதில் அவமானமாகத்தானே இருக்கும்! ஆனால் இத்தகைய அவமானத்தை இவர்கள் பொருட்படுத்த மாட்டார்கள் என்று காலு நம்பியிருந்தான். மானமோ அவமானமோ எல்லாம் காலுவிற்குத்தான் !.... இப்படி நினைத்துக் கொண்டிருந்த காலுவிற்கு, 'அண்ணன் தம்பியின் சண்டை தானே' என்று ரண்சோட் கூறியதும் ஏதோ சூழ்ச்சிதான் இருப்பதாகத் தோன்றிற்று. இந்த சூழ்ச்சியைப் பற்றித் தெரிந்து கொள்ளும் முயற்சியில் இனிப்புப் பண்டம்கூட கல்லைப்போல் கெட்டியாகி விட்டது. ஆனால் சூழ்ச்சி புரியவேயில்லை.

கடைசியில் கிராமம் முழுதும் தோரண உற்சவத்திற்குச் சென்றது. அப்போதுதான் சூழ்ச்சியின் ரகசியம் புரிந்தது. பங்குனி மாதத்தில் பூத்துக்குலுங்கும் வனப்பிரதேசத்தில் பலாச மலர்கள் மட்டும் தனித்துக் காட்சியளிப்பது போல், கிராமத்துப் பெண்களுக்கிடையே ராஜி தென்பட்டாள். காலுவிற்கு ஒரே கவலை — 'இருக்கட்டும் இன்று இரவு புத்தாடையணிவிக்கப் போகிறான? அதனால் தான் ரண்சோட் தீர்ப்புக் கூறும்படி பிடிவாதம் செய்யவில்லை ... கிழவியும் அதற்காகத்தான் ராஜியை அழைத்துவர ஆள் அனுப்பியிருந்தாள். இல்லாவிட்டால் அவ்வளவு தொலைவில் இருக்கும் பெண் புத்தாண்டிற்குக் கூட வீட்டிற்கு வரமாட்டாள். என் வீட்டிலிருந்தா இவள் போனாள்...' அருகிலிருந்த கோதர் அவனுக்கு இன்று பகைவனைப் போல் காட்சியளித்தான்.

காலு அமைதியிழந்து காணப்பட்டான். 'ஹியோ — ஹியோ' எனும் சத்தத்துடன் மாடுகளுக்கு முன்னால் ஓடிவரும் கோபால், ஆடிக்கொண்டு ஓடிவரும் மாடுகள், இவை ஒன்றுமே அவனுக்குத் தென்படவில்லை. அந்தப் பக்கம் பார்வையிருந்தால் தானே தெரியும்? 'ராஜியை எப்போது சந்திப்பேன், எங்கு சந்திப்பேன் சந்திக்கட்டுமா வேண்டாமா ... பார்த்தால் சொல்லட்டுமா வேண்டாமா?' என்று இம்மாதிரி கேள்விகளிலேயே அவன் ஈடுபட்டுவிட்டான். அரிசியைப் போட்டுச் செல்வத்திற்குப் பூஜை செய்தான். அதுவும் எல்லோரையும் பின்பற்றினானே தவிர கருத்துடன் செய்யவில்லை.

காலுவின் பசு வந்து சேர்ந்துவிட்டது என்று தீர்ப்புக் கூறுபவர் அறிவித்துவிட்டனர். ராமா, பகா முதலியவர் அந்தப் பசுவை வணங்கினர். 'நல்ல சகுனம் தம்பி, வரும் வருடம் நல்ல அதிர்ஷ்டம் வரும்' என்று காசம் கூறினன். ஆனல் காலு அவற்றையெல்லாம் கேட்டவன்போல் பாசாங்கு செய்தான்.

காலம் எனும் எண்ணற்ற பானைகளுடன் நிலம் இன்று ஒரு பானையைக் கூடச் சேர்த்தது. மறையும் ஆதவனை நிலமகள் பறக்கும் புழுதியின் உருவில் பூஜிப்பதுபோலிருந்தது. இன்று பிரிந்து செல்ல அவள் விடை கொடுத்தனுப்பினள்.

ஆநிரைச் செல்வங்களுக்குப் பின்னே வரும் கிராம மக்கள் — குறிப்பாகப் பெண்டிர், பாட ஆரம்பித்தனர். பாட்டை ஆரம்பித்த ராஜியின் குரல் தனியாகக் குயிலைப் போல் ஒலித்தது. கவனிக்காமலிருந்த காலுவின் கவனத்தைக் கூட ராஜியின் இந்தப் பாடல் ஒருமுகப்படுத்தி விட்டது —

'தன் தோ தோட்தே ..'

[நாட்கள் பறந்தோடிச் செல்கின்றன. ஆனல் வாழ்க்கையை இன்னும் ரசித்து அனுபவித்தபாடில்லை.]

புதிய பாடல். ஆதலால் ராஜி முதலில் பாடப் பிறகு மற்றவர் பாடினர். காலுவுக்கு இன்றைய ராஜி வேறுவிதமாகவே காட்சியளித்தாள். அதனல்தான் அவன் பெருமூச்செறிந்தான்.... உனக்கு எத்தனை விதமான சுபாவங்களோ?' மகிழ்ச்சியில் அவள் குதித்தாள். பொங்கும் மகிழ்ச்சி அவள் பாடிய பாட்டின் ஒவ்வொரு சொல்லிலும் எதிரொலித்தது.

'ஸ வாரோ ஸமஞே ...'

[கனவில்தான் விடிகிறது, வாழ்வில் ஒருவித சுகமும் அனுபவிக்கவில்லை ]

ராஜி தனக்கெதிரே அவளுடைய குறையைச் சொல்லிக் கொள்ளத்தான் இப்படிப் பாடுகிருள் என்று காலுவிற்குத் தோன்றிற்று —

வர்ஷோம்ப் யாஜ்மா ....

[ஆண்டுகள் பல கழிந்துவிட்டன. ஆனல் இன்னும் வாழ்வில் சுகமே அனுபவிக்கவில்லை.]

இந்த வரியைக் கேட்டதும் — நெஞ்சு வெடித்துவிடும் போலிருந்தது. ஆனல் எலுமிச்சம் பழத்தின் சுளை போன்ற அந்தக் கண்களிலிருந்து கண்ணீர் வந்தது. 'என் நிலையும் அதுவேதான்

ராஜி!' இரண்டாவது தடவை பாடும்போது காலுவின் உள்ளமும் சேர்ந்து பாட ஆரம்பித்தது — அழ ஆரம்பித்தது.

வர்ஷோம் ப்யாஜ்மா .......

[ஆண்டுகள் கடந்துவிட்டன. வாழ்வில் சுகம் அனுபவிக்கவில்லை. உள்ளம் ஏங்குகிறது. அடடா! — வாழ்வில் ஒரு சுகமும் அனுபவிக்கவில்லை.]

'இதுதான் நானும் நீயும் கொடுத்துவைத்தது!' காலுவிற் கருகேயே கோதர், பகா முதலியவர் பாடிக்கொண்டு வந்தனர். ஆனால் காலுவின் காதிற்கு ஒரு சொல்லாவது எட்டினால்தானே? பாட்டு முடிந்துவிட்டது என்று நினைத்து அவன் விரைந்தான். தெருவின் கோடி வந்துவிட்டது. ஆனால் காலு வீடு போய்ச் சேர நேராகச் செல்ல வேண்டும், போகிறபோக்கில் ராஜியைச் சந்தித்தாக வேண்டும். சிறிது சந்தேகத்தை அந்தப் பாடல் இன்னும் அதிகப்படுத்தி விட்டது... 'எது எப்படியோ தெரியாது, ஆனால் இன்று ராஜி ரொம்பவும் மகிழ்ச்சியாக இருக்கிறாள்!' போதாததற்குப் பாட்டிலும் ராஜி அதைக் காண்பித்துவிட்டாள்....'

'ஸஹியர ஏவும் நாம் ......'

[தோழி! அப்படிச் செய்யாதே! வாழ்வில் சுகத்தை அனுபவித்தாகவேண்டும்!]

இரண்டாவது வரி காலுவை திடுக்கிடச் செய்துவிட்டது —

ஜாக்கியாம் த்யாம் தீ ......

[கண் விழிக்கும்போதுதான் காலை. வாழ்க்கையை அனுபவி!]

'ஆமாம் ராஜி என்னையும் உலகத்தாரையும் கண்டு 'சரி' என்று கூறிவிட்டு என்ன செய்வதாக முடிவு பண்ணியிருக்கிறாளோ, அதைத்தான் இப்போது சொல்லிக் கொண்டிருக்கிறாள். முட்டாளே! காலு, கேள். அவள் ஏதோ கூறுகிறாள்.

'கூட்சே லோட் லபார் ......'

[கருமான் இரும்பைக் காய்ச்சி அடித்துக்கொண்டு தானிருப்பான்— வாழ்க்கையை அனுபவி!]

'இதன் அர்த்தம் புரிந்ததா? கவலையும், சிக்கல்களும் இருக்கத்தான் செய்யும். எல்லாம் எப்படியோ போகட்டும். ஆனால் அந்த அழகன் நாநாவிடம் அவள் செல்வாள், வாழ்க்கையின் சுகத்தை அனுபவிக்க.... இல்லையா? இன்னும் என்ன கேட்கவேண்டும்? தினமும் இரண்டு தடவை ......'

இதற்குப் பிறகு ராஜி அந்தப் பல்லவிக்குப் பதிலாக வேறு வார்த்தைகள் இருந்தன. காலு தானே தன்னைத் தேற்றிக் கொண்டான் — 'நீ முழுவதையும் கேளேன்!'

இரண்டாவது தடவை ராஜி பாடிய அந்த வரியை அவன் கவனத்துடன் கேட்டான் —

'தன்மா பப்பே வார் ...'

[தினமும் இரண்டு முறை — காலையும் மாலையும் இளமை வேண்டிக் கேட்கிறது — வாழ்க்கையில் சுகம் அனுபவி !]

வேறு தினமாக இருந்தால் காலு இந்த வரியைக் கேட்டு மகிழ்வுறுவான். 'உண்மைதான். ஆதவன் தினமும் இரண்டு தடவை உதிக்கும்போதும் மறையும்போதும் நம்மை எச்சரிக்கிறன். அட அசடே! ஜாக்கிரதை! இளமை அழைக்கிறது உம்! என்று கூடச் சொல்வான்.'

ஆனால் அவன் இன்று இன்னும் அதிகமாக முணுமுணுத்தான். அதுவும் ராஜியிடம் —

'இப்போதுதான் உனக்கு புத்திவந்ததாக்கம்! கண்விழித்தால் காலை நேரம்!' காலுவிற்கு நம்பிக்கையுண்டாயிற்று. 'எல்லோருக்கும் புரிந்ததோ இல்லையோ, அவள்தான் இன்று வெளிப்படையாகச் சொல்லிவிட்டாளே. இந்தப் பாட்டு பாடுவதில் ஏதோ ஒரு ரகசியம் இருக்கிறது ..'

அப்போதுதான் ராமா — கோதர் இருவரும் அவனைத் தடுத்து நிறுத்தினர் — 'அடே காலு! எங்கே போகிறாய்? கிராமத்திற்கா?'

இந்தக் கேள்வி மக்களின் கவனத்தையும் ஈர்த்தது — 'அடே! நீ நல்ல மனிதனுயிற்றே. வீடுவரை வந்து கூட உள்ளே வராமல், நீங்களிருவரும் (ரண்சோட் — காலு) பேசிக்கொள்ளாமல் கிராமத்திற்குப் போய்விடுவீர்களா என்ன?'

இதன் பிறகு காசம், சங்கர் இருவரும் அவனைத் திட்ட ஆரம்பித்தனர் — 'ஓகோ கிராமத்தில் ஒருவரும் சண்டையே போட்டுக்கொண்டதில்லையா என்ன? நீங்கள் இருவரும் ஒரு குலைக்காய்கள். அதிலும் புத்தாண்டு நாள் — அண்ணன் – தம்பி சந்திக்காமல் போய்விடுவதா என்ன, காலு!'

காலு அவர்களுடன் செல்ல நேர்ந்தது — 'ஒரு குலைக்காய்கள்' 'அண்ணன் – தம்பி' என்ற வார்த்தைகள் உள்ளத்தில் தீ வைத்தாற் போலிருந்தன. காசம், சங்கர், ரண்சோட் இவர்களின் இனிமை அந்தப் பிரமையையும் ஆர்வத்தையுமே முறித்துவிட்டது....... ஆனால் என்ன செய்வது? முன்னோர்களின் பழக்க வழக்கம் அவனைக் கட்டுப்படுத்தி விட்டது.

23

## உனக்கென்ன ?

தெருமுனையிலுள்ள வட்டமான மேடை மீது உட்கார்ந்து கொண்டு தன் முன்னோர்களைப் பற்றி ஓர் கண்ணோட்டம் விட்டான் ரண்சோட். இரண்டு வீட்டவர்கள் வராததன் காரணம் எல்லோருக்கும் தெரியும். சில தினங்களுக்கு முன்பு அவர்களுக்கிடையே சண்டை நடந்தது. ஒருவன் ராமாவுடனும், மற்றொருவன் கண்ணிழந்த கிழவன் ஜகாவுடனும் சண்டை போட்டனர். காரணம் ஒன்றேதான். பசுக்கள் பயிரைப் பாழடித்து விட்டன.

கிராமத் தலைவன் ஆட்களை அனுப்பி அவர்களைக் கிராமத்திலிருந்து அழைத்து வந்தான். இதற்கிடையே காலு, ரண்சோட் இருவருக்குமிடையே சமரசம் நடக்கத் துவங்கியது. 'ரண்சோடைப் பார்த்துப் பேசத் தயார். ஆனால் நாநாவைப் பார்க்க மாட்டேன் !' என்று பாதி சமரசத்திற்கு ஒப்புக்கொண்டான் காலு. ஆனால் சங்கர், காசம் முதலியவர்கள் நாநாவைச் சந்திக்கும் பிடிவாதத்துடன் கிராமத் தலைவனின் வண்டியில் ஏறி உட்கார்ந்து கொண்டனர். 'இவர்களுக்கு பிரமை பிடித்துவிட்டது' என்று காலு புரிந்துகொண்டு விட்டான். ஆயிரத்தில் ஒரு வார்த்தை அவன் சொன்னான் — 'என்னால் மகிழ்ச்சியுடன் சந்திக்க முடியாது. நீங்களே சொல்லுங்கள். மனமின்றி எவ்வாறு சந்திப்பது ?'

அவர்கள் கூறினார்கள் — 'மனதுடனோ மனமில்லாமலோ, நீ முதலில் கண்டு பேசிவிடு !' ஆனால் காலு ஒப்புக்கொள்ளவில்லை. தழுவிக் கொண்டால் உள்ளம் ஒன்றிவிடுமா என்ன ? அவன் மறுத்துவிட்டான். 'ஏன் வீணாக மண்டையை உடைத்துக்கொள்கிறீர்கள் ? நீங்கள் என்ன செய்தாலும் சரி, நாநாவை நான் சந்திக்க மாட்டேன் !'

'என்ன காரணம் ?' காசம் கேட்டான்.

காலு என்ன பதில் சொல்வான் ? 'நாநாவுடன் சமாதானம் செய்துவைத்து விட்டு நீங்கள் ராஜிக்குப் புத்தாடை அணிவிப்பீர்கள்' ... என்று பதில் சொல்லத் தோன்றிற்று. ஆனால் இதனுடன் 'ராஜிக்குப் புத்தாடை அணிவித்தால் உனக்கென்ன ?' என்று கேள்வி பிறக்கும். இதற்குப் பதில் காலுவால் கூற முடியாது. 'சொல்லப் போனால் நிரம்ப இருக்கிறது, இல்லையென்றால் ஒன்றுமில்லை' என்று சொன்னால் மக்கள் காலுவைப் பைத்தியக்காரன் என்றுதான் நினைப்பார்கள் ஆயிரத்தில் ஒரு வார்த்தை

முடிவில் கூறினன் காலு — 'நீங்கள் இனி ஏதாவது சொன்னல் இப்போதே இங்கிருந்து சென்றுவிடுவேன்.'

காலுவின் பிடிவாதத்தைப் பார்த்து மக்கள் அவனை விட்டுச் சென்றுவிட்டனர். நான்கு பேரை அவன் இரண்டே வார்த்தையில் அடக்கிவிட்டான். எல்லோரும் எழுந்துவிட்டனர். எறும்புகள் மறுபடியும் கடிக்க ஆரம்பித்தாற்போல் தோன்றிற்று. அணைந்துகொள்வதுடன் 'ராம் ராம்' என்ற ஒலியுடன் வண்டுகள் ரீங்காரம் செய்வது போலிருந்தது.

ஆனல் காலுவின் உள்ளம் படபடத்தது. காசமிடம் கூட 'சலாம்' என்று சொல்வதற்குப் பதிலாக — 'ராம் ராம்' என்று கூறினன்.

தேவிக்கும், அனுமனுக்கும் பூஜை முடிந்தது. காலு அங்கிருந்து கிளம்பினன். கிராமத்தை நோக்கிச் சென்றுகொண்டிருந்த மக்கள் பாட ஆரம்பித்தனர் —

ஜீயோ, ஜாகோ தோ......

[உயிருடனிருக்கும் போதே அந்த அமரனைவனுக்காக எல்லோரும் ஒன்று கூடுங்கள்.]

ஆனல் இந்த வரி முடிவதற்குள் இரண்டு வயல்களைத் தாண்டிச் சென்றுவிட்டான் காலு. அவர்கள் எல்லோரும் வருவதற்குள் ராஜியைப் பார்க்கவேண்டும் என்ற ஒரே எண்ணம்தான்.

மனதிற்குள்ளிருந்து எத்தனையோ விதமான எண்ணங்கள் எழுந்தன. ராஜியை வீட்டிற்கு அழைத்துவருவது உண்மைதான இல்லை, நான்தான் கற்பனை செய்துகொண்டிருக்கிறேன. அவனிடம் ஒருவிதமான அத்தாட்சியும் இல்லை. அவனிடம் ஒருவரும் பேச வரவில்லை. ஆயினும் காலுவின் உள்ளம் அழைத்துப் பேசிக்கொண்டிருந்தது — 'நான் சொல்வது தப்பிதமாகாது. எழுதி வேண்டுமானலும் தருகிறேன். ரண்சோடின் விட்டார் தான் கிழவியைத் தன் கட்சியில் சேர்த்துக்கொண்டு அவளை அழைத்துவரக் கோதரை அனுப்பியிருக்கிருர்கள். இன்றிரவு ராஜியையும் தன் வசத்திற்குக் கொண்டுவந்து விடுவார்கள். கோதரிடம் யாரும் கேட்கக்கூட மாட்டார்கள். அவனுக்கு அவ்வளவு அறிவிருந்தால் பின் என்ன வேண்டும்?'

காலு நீண்ட மூச்செறிந்தான்.... ராஜி ஒப்புக்கொண்டு விடுவாள் ஒருவேளை. யார் கண்டார்கள்?.... கணவனலும் சுகம் கிடையாது. நல்ல சாப்பாடும் கிடையாது. இவ்விதம் எத்தனை தினங்கள்தான் கழிப்பாள்? ஒரு குழந்தை — மனம் குரங்கைப்போல் தன் வழியே தாவிக்கொண்டிருந்தது — 'உன்னைப் பற்றி ஏன் பேசமாட்டேன்

என்கிறாய்? இருவருக்கும் ஒரே சமயத்தில் தான் திருமணம் நடந்தது. உனக்கே ஒன்றுமில்லை — பின்பு அவளுக்கு எங்கிருந்திருக்கும்? நாநாவின் மனைவி மாமியார் வீட்டிற்கு வந்து ஐந்தாண்டுகள் ஆகிவிட்டன. இன்னொரு மணம் செய்து கொண்டாலும் அவனை ஒருவரும் தவறு என்று சொல்ல மாட்டார்கள் —' காலுவின் தலைசுழன்றது — 'போதும் போதும் ஐந்தல்ல பத்தாண்டுகள் வரை வீட்டில் குழந்தையில்லை என்றாலும் நான் மறுமணம் செய்துகொள்ள மாட்டேனப்பா, நாநா வேண்டு மானால் தாராளமாய்ச் செய்து கொள்ளட்டும்!' கூடவே இப் படியும் பேசினான்— 'ஆனால் ராஜியைச் செய்துகொள்ளக் கூடாது. ராஜி வேறு எங்கு வேண்டுமானாலும் போகட்டும், எத்தனையோ பேர் இருக்கின்றனர். ஆனால் நாநாவுடன் மட்டும் சேர்ந்துவிடக் கூடாது. என்னை அவமதித்து, என் வாழ்வு முழுதையும் பாழாக் கியவன் அவன். அப்படிப்பட்டவன் ராஜியுடன் உறவு வைத்துக் கொண்டால் நான் உயிர் வாழ்வது கூடக் கடினமாகிவிடும்.'

ராஜி இப்போதே சென்றுவிட்டாற் போல் துடித்தான் காலு. கிராமத்திற்குள் நுழைந்ததுமே அவன் நிச்சயம் செய்துகொண் டான். — 'ராமா – கீமா, யாரை அனுப்பினாலும் பயனிருக்காது. நானே போய்ப் பார்த்துவிட்டு வருகிறேன்.'

ஆயினும் பலீ கேட்டாள்— 'ஏன்?'

'வேலையிருக்கிறது. ஒரு தடவை நீ போ, பிறகு காரணம் சொல் கிறேன். கிழவிக்குத் தெரியாமல் சொல். ஒரு நிமிடம் வந்து போகச் சொல். கோதரின் மனைவிக்கு இது பற்றித் துளிக்கூடத் தெரியக்கூடாது.'

பலீ சென்ற பிறகு உக்கா பிடித்தவண்ணம் காலுவின் நெஞ்சம் படபடவென்று அடித்துக்கொண்டது — 'வருவாளா மாட்டாளா! வந்துவிட்டால்!'

'அப்படியே வந்தாலும் நானை கொடுக்கும் உடையை அவள் அணிய நான் அநுமதிக்க மாட்டேன் ...' கடைசியில் பேசாத்தின் உதவியை நாடுவேன். ஒட்டகத்தின் மீது ஏற்றி அழைத்து வந்து விடுவேன் ......

அழைத்து வந்துவிடுவாயா? அப்புறம்! காலுவின் உள்ளத்தி னின்றும் யாரோ கேட்டதை உணர்ந்தான் — 'அப்புறம் என்ன? அவளை அவளுடைய மாமியார் வீட்டில் கொண்டு விட்டுவிட்டு வருவேன்.'

'ராஜி ஒப்புக்கொள்ளா விட்டால்? — ஒட்டகத்தின் மீதிருந்து இறங்காவிட்டால்?'

வாசலருகேயுள்ள சிறு திண்ணையில் உட்கார்ந்து உக்கா பிடித்தபடியே காலு ஒரு நீண்ட மூச்சு விட்டான் — 'ஒட்டகத்திலிருந்து அவள் கீழே இறங்காதபடியிருக்க அவ்வளவு பாக்கியம் இங்கே யாருக்கு இருக்கிறது?' நடப்பது நடக்கட்டும் — ஆனால் ஒட்டகத்தை — காலுவின் கண்கள் அந்தக் காரிருளில் வேப்ப மரத்து இலைகளையும் கடந்து எங்கோ பார்த்துக்கொண்டிருந்தன. தான் முன்னால் செல்கிறான், ராஜி பின்னே வருகிறாள் .... ஒட்டகம் சென்றுகொண்டிருக்கிறது. புதர்களைத் தாண்டி, நதி–கால்வாய்களைக் கடந்து, வழியில் இருபுறங்களிலும் காணப்படும் கிராமங்களையும் விட்டு விட்டுச் சென்றுகொண்டிருக்கிறான் ...

எதிரே வந்துகொண்டிருந்தாள் பலீ. அவளைக் கண்ட பிறகு தான் காலு சுய நினைவிற்கு வந்தான் — 'நீ என்னென்ன கற்பனை செய்கிறாய் பார்!' முணுமுணுத்தபடி அவன் சிரித்தான். இங்கே வரவே அவள் சம்மதிக்கமாட்டாள் — வீட்டிற்கு அவளை ஒட்டகத்தின் மேல் ஏற்றி அழைத்துச் செல்வதைப் பிறகு பார்த்துக் கொள்ளலாம்! 'என்ன சொன்னாள்?' என்று பிறகு கேட்டான்.

பலி மூஞ்சியை உர் என்று வைத்துக்கொண்டிருந்தாள். 'வருகிறாள்' என்று கூறிவிட்டு நேராக வீடு சென்றுவிட்டாள்.

'சற்று நிதானமாக எல்லா விஷயத்தையும் சொல்லேன். எங்கே சந்தித்தாய்?'

'வீட்டிலே, வேறெங்கே — காட்டிலா சந்திப்பேன் —' இதற்கு இவ்வளவு சிடுசிடுப்பு ஏன்? காலுவிற்கும் கோபம் வந்துவிட்டது. உடனே கேட்கவேண்டும் என்று தோன்றிற்று — 'வேறு யாராவது ஏதாவது சொன்னார்களா?'

'இதில் யார் என்ன சொல்ல இருக்கிறது?' காலுவின் பார்வை தொலைவிலிருந்தே யாரோ வருவதைக் கவனித்தது. இருட்டில் கூட அந்த அழகிய நடையைக் கண்டு அவன் புரிந்துகொண்டு விட்டான் — 'சரி! போ' என்று பலீயைப் போகச் சொன்னான்.

'வாருங்கள்!' காலு மரியாதையுடன் அழைத்தான். 'உம்' என்று கூறிவிட்டு ராஜி வீட்டிற்குள் செல்ல ஆரம்பித்தாள். காலு தடுத்து நிறுத்தினான் — 'இங்கேயே உட்காருவதுதானே? நான் கொஞ்சம் பேசவேண்டும்!'

'இவ்வளவு நேரத்திற்குள் நீங்கள் சாப்பிட்டிருக்கலாமல்லவா? இன்னும் எவ்வளவு நேரம் நான் விளக்கை எரியவைத்துக்

கொண்டிருப்பேன்?' பலீயின் குரலில் சற்றுக் கோபம் தொனித்தது. ஏன் இருக்காது? காலு உபதேசம் செய்யும் சாக்கில் ராஜியைத் தன்னவளாகச் செய்து கொண்டுவிடப் போகிறானே என்ற பயம் அவளுக்கு. ஆனால் தன் இளைய மாமியாரை வீட்டில் வைத்துக் கொள்ளலாமா? அது வேறு விஷயம். ராஜியுடன் காலு பேசுவதே பலீக்குப் பிடிக்காது— அது பிறந்த வீட்டைப் பற்றிய பேச்சாக இருந்தாலும் சரி—

'நான் வருகிறேன், நீ சாப்பிடு!' காலுவிற்கும் பலீ அங்கு இருப்பது பிடிக்கவில்லை.

வீட்டிற்குள் நுழைந்த ராஜி திரும்பினாள். திண்ணைக்கருகே யிருந்த தூணில் சாய்ந்துகொண்டு உட்கார்ந்தாள் — சற்றும் அச்சமோ, தயக்கமோ கிடையாது. சுற்றும் முற்றும் ஒரு பார்வையை வீசிப் பரிசோதித்தாள். பல்லைத் தன் விரலால் கீறியபடியே பேசினாள்—'உம் சொல்லுங்கள். வீட்டில் ஒருவரிடம் சொல்லிவிட்டு வரவில்லை.'

காலு ஒருகணம் ஒரே கலக்கமாகக் கலங்கினான். பிறகு நேரடியாகக் கேட்டான் — 'என்னென்னமோ நடக்கிறதே அதெல்லாம் உண்மைதானா.'

'எதெல்லாம்?' எல்லாம் தெரிந்திருந்தும் அவள் ஒன்றுமறியாதவளைப்போல் பாசாங்கு செய்கிறாள் என்று சிரிக்கும் அவளுடைய கண்களே கூறிவிட்டன. காலுவிற்கு ராஜியின் சிரிப்புப் பிடிக்கவில்லை.

'கிராமத்தில் நான் போய்ச் சொன்னேனா என்ன?' 'நீ போகவில்லை. ஆனால்' — காலு சிரிக்க முயன்றான். 'அப்படியானால் அது உண்மைதான் என்கிறாயாக்கும்?'

'உண்மையாக இருந்தால்? ...'

இந்த வார்த்தைகள் காலுவைப் பிரமிக்கச் செய்தன. சிரிக்கும் ராஜி அவனுக்குப் பிசாசைப் போல் காட்சியளித்தாள். 'எழுந்து வெளியே போ!' என்று சொல்லிவிடலாம் போலிருந்தது. ஆனால் மறுபடியும் ஒரு கேள்வி கேட்க விரும்பினான் அவன் — 'அது உண்மைதானா?'

ராஜி மறுபடியும் சிரித்தாள். ஆனால் இந்தத் தடவை சிரித்த சிரிப்பில் ஒரு வறட்சி தென்பட்டது. 'எல்லோரும் பேசிக் கொள்கிறார்கள். அவ்வளவுதான்!'

'அதெல்லாம் உண்மைதானா?' காலு மறுபடியும் கேட்டான்.

ராஜி சுருக்கமாகப் பதிலளித்தாள் — 'இல்லை!' 'ஆனாலும் நீ ஒன்றும் சொல்லாமல் கேட்டுக் கொண்டிருக்கிறாயே?'

ராஜி தன் கையிலிருந்த மூன்று வளைகளின் பக்கம் கங்கணத்தை ஒதுக்கிவிட்டுக் கொண்டிருந்தாள்.

காலு கேட்டான் — 'உன் நிலையில் வேறு யாராவது இருந்தால் கிராமம் முழுவதையும் ஒரு கலக்கிக் கலக்கியிருப்பார்கள் ... யாரைப் பற்றியாவது தப்பும் தவறுமாகப் பேசுவது விளையாட்டா என்ன?'

'ஆனால் என் எதிரில் யாராவது பேசினால்தானே ... நான் பிறகு யாருடன் சண்டைக்குப் போவது?'

ராஜியின் கடைசி வார்த்தைகளில் வருத்தம் இருந்தது — ஏதோ ரகசியமும் இருந்தது.

'உன்னிடம் யாரும் எதுவும் கேட்கவே இல்லையா?'

ராஜியின் பார்வை இடது கையிலிருந்த வளைகளின் பேரிலேயே இருந்தது. தலையை அசைத்து 'இல்லை' என்றாள் அவள்.

'உன் அம்மா கூடக் கேட்கவில்லையா?' விளக்கின் ஒளி சற்று அருகில் இருந்திருந்தால், காலு ராஜியின் கண்களில் நீரைப் பார்த்திருப்பான். குரலைக் கவனித்தாலும் தெரிந்து கொண்டிருக்கலாம் — 'இதெல்லாம் கேட்கக் காரணம் என்ன?'

'காரணம் ..' அமைதியிழந்த காலு திண்ணையில் சற்று பின்புறமாகத் தள்ளி உட்கார்ந்திருந்தான் — தனக்குள் சொல்லிக் கொண்டான் — 'என்னமோ கேட்டு வைத்தேன் — சும்மாத்தான். — உறவு இருப்பதால்தானே?'

'எது எப்படியானால் என்ன, யார் கேட்பவர்கள்?' என்று காலுவை ராஜி கேட்டிருந்தால் உண்மையில் அவன் வாய் புதைத்துப் போயிருப்பான். தன்மானத்தைத் தவிர வேறு யாரிடமும் எதுவும் அவள் கேட்கவில்லை, பின் யார் கேட்பவர்கள்?

'ஆமாம்! இளைய மாமியாரல்லவா நான்! ஏன் அக்கறை இருக்காது?' ராஜியின் குரலில் வருத்தம் இருந்தது, கசப்பு இருந்தது, குத்தலாகப் பேசுவது தெரிந்தது.

காலு என்ன பதில் சொல்வான்? அவனுடைய உள்ளம் கூறிற்று — 'ராஜி மறந்துவிடு! எத்தனையோ நாட்கள் ஒன்றாக விளையாடியிருக்கிறோம் .... விளையாட்டில் எனக்கு நீ தண்ணீர் கொண்டு வந்து தருவாய், உணவு சமைப்பாய்! ... சாதம் பரிமாறுவாய், வெளியே வந்த அழுகையை உள்ளே திருப்பி அனுப்புவது போல ஒரு பெருமூச்செறிந்தான் காலு. ஆனால்

சிந்தனை மட்டும் இயங்கிக் கொண்டுதானிருந்தது — 'இருவருக்கும் எல்லாம் தெரியும். ஆனால் நானும் நீயும் கொடுத்துவைத்தது அவ்வளவுதான். பொய்யை மெய்யென்றும், மெய்யை பொய்யென்றும் நினைத்துக் கொள்ளவேண்டும். இது மறு பிறப்பு என்று எண்ணிக் கொள்வோம். மற்றதை மறந்து விடு — போனது போகட்டும்!' காலு பெருமூச்செறிந்தான். 'அப்படிக் கெடுப்பவர்கள் நாசமாய்ப் போகட்டும், புழுத்துச் சாகட்டும்!' எலுமிச்சம் பழத்தின் சுளை போன்ற அந்தக் கண்களினின்றும் கண்ணீர் கர கரவென்று வந்தது.

யாரைச் சாபமிடுகிறாய், எதைப் பற்றிப் பேசுகிறாய் என்று கூட ராஜி கேட்கவில்லை. தன் வாழ்வைக் கெடுப்பவர்களை மனதிற்குள் சாபமிடுவது போல் அவளும் பெருமூச்செறிந்தாள்.

'அப்படிப்பட்டவனை வாழ்விக்க நீ நினைத்திருக்கிறாய், இல்லையா ராஜி?' கண்களின் ஓரத்தைத் துடைத்துக்கொண்டு காலு கேட்டான்,

வீட்டிற்குள் பாத்திரங்களை 'தொப் – தொப்' என்று போட்டு அட்டகாசம் செய்துகொண்டிருக்கும் பலீயைப் பற்றி ஒருவருக்கும் நினைவேயில்லை. ராஜி இன்னும் வளைகளை ஒதுக்கிக்கொண்டிருந்தாள். கண்களிலிருந்து 'டப் டப்' என்று விழும் நீர்த் துளிகளைக் கூட அவள் கவனிக்கவில்லை.

'சொல்லேன்? ...உன் வாயிலிருந்து பதிலைக் கேட்ட பிறகுதான் என் மனம் நிம்மதி யடையும், ராஜி!'

ராஜி மௌனமாக இருந்ததைக்கண்டு காலு மேலும் கூறினான்— 'கணவனிடம் உனக்குச் சுகம் கிடைக்கவில்லை, உண்பதிலும் சுகம் கிடைக்கவில்லை என்று எனக்குத் தெரியும்... நம் சாதியில் கணவனைவிட்டுப் போவதில் தவறொன்றும் கிடையாது. பேதாபடேலைப் போன்றவரின் மகளே அப்படிச் செய்திருக்கிறாளே — ஆனால் என் வயிற்றெரிச்சலைக் கொட்டிக்கொண்ட அந்த நாநாவின் ...'

'நான் நாநாவின் வீட்டிற்குப் போகிறேன் என்று உங்களிடம் யார் சொன்னார்கள்?' ராஜியின் கண்களில் கோபம் பளிச்சிட்டது.

'நீ சொல்லவில்லை, ஆனால் மக்கள் சொல்கிறார்களே? உன்னிடமிருந்து வாக்குறுதிவாங்கிக்கொள்ளத்தான் இங்கு கூப்பிட்டேன்.'

மௌனமாக இருந்த ராஜியைக் கேட்டான் — 'சொல், உன் எண்ணம் என்ன?'

'நீங்கள் என்னைக் கட்டிப்போட விரும்புகிறீர்களா?'

'இதில் கட்ட என்ன இருக்கிறது ராஜி? நாநாவிற்கு நாலு காசுகள் இருக்கின்றன என்று நீ நினைக்கலாம் — ஆனால் அவனுடைய மனைவி கோடி, கிழவி மாலி இருவரும் நாகப்பாம்பை விடக் கொடியவர்கள் என்பதை மட்டும் மறந்துவிடாதே. உன் கழுத்திலிருந்து .... சக்களத்திகளின் புடவைகள் கூட சண்டையிட்டுக் கொள்ளும் என்று சொல்லுவார்கள் — தெரியுமா? —'

கடைசி வாக்கியத்தைக் கேட்டவுடனேயே, ஏனோ தெரியவில்லை, ராஜி எழுந்துவிட்டாள். 'சண்டையிட்டுக் கொள்ளட்டும்!' என்று கூறி, பின்புறம் திரும்பிக்கொண்டாள்.

காலுவின் காதில் யாரோ வெடிகுண்டை போட்டாற் போலிருந்தது. 'இவளுக்கு என்ன வந்துவிட்டது? எழுந்துவிட்டாளே!'— என்று முணுமுணுத்தபடியே அவனும் எழுந்தான். 'ராஜி இரு என்னிடம் ஒரு வார்த்தை சொல்லிவிட்டுப் போ!' என்று கூறியபடியே அவனும் முற்றத்திற்கு வந்தான். நின்ற ராஜியிடம் போய், மறுபடியும் பேசினான் — 'உன் மனதில் உள்ளதை உள்ளபடி சொல்லிவிடு. நானும் தெரிந்துகொள்கிறேனே?'

'என்ன தெரிந்து கொள்ளவேண்டும்?' ராஜிக்கு இன்னும் கோபம் இருந்தது.

'எது எப்படியோ போகட்டும் .... ஆனால் நீ நாநா வீட்டிற்குப் போவதை என்னால் சகிக்கமுடியாது ... ஆமாம் ... இந்த உலகமே தலைகீழாகப் போனாலும் சரி ...'

'என்ன செய்வீர்கள்?' காலுவின் உறுதியைக் கண்டு ராஜி சற்று அகமகிழ்ந்தாள்.

'இப்போதே சொல்ல முடியாது.' காலு சற்றுக் கடுமையாகப் பதிலளித்தான்.

'என்னைக் கொன்றுவிடுவீர்களா?'

'ஆமாம்' என்று காலு சொல்வதை அவள் கேட்கத் துடிக்கிறாள் என்பதை அவளுடைய கடைக் கண் பார்வை சொல்லிவிட்டது.

'ஆமாம்! கொன்றாலும் கொல்வேன்!' என்று கூறியபடியே ராஜியின் அந்தப் பழக்கமான பார்வையுள்ள கண்களைப் பார்த்துக் கொண்டேயிருந்தான். இரண்டு கணங்கள் மௌனமாக இருந்துவிட்டுப் பிறகு கூறினான் — 'வேறு ஒன்றும் முடியாவிட்டால் சாது மகாத்மாக்களுடன் போய்ச் சேர்ந்துகொள்வேன். ஆனால் நீ நாநாவின் வீட்டிற்குத் தண்ணீர் கொண்டு போவதை மட்டும் என்னால் பார்த்துக் கொண்டிருக்க முடியாது ... பிறகு உன் இஷ்டம்!' காலு முகத்தைத் திருப்பிக்கொண்டான் —

'இங்கே சாம்பலுக்குக் குறைவே கிடையாது. சொன்னால், இப்போதே பூசிக்கொள்ள யார் வீட்டு அடுப்பிலிருந்தாவது சாம்பல் கொண்டுவந்து தருகிறேன்!'

ராஜியின் கேலிப் பேச்சு காலுவை எல்லை மீறி அமைதி யிழக்கச் செய்துவிட்டது. அழுதால் மட்டும் தீரக்கூடியதாக இல்லை அவனது வருத்தம்.

'இப்போது என்னிடம் ஒன்றும் பேசாதே ... உனக்குத் தோன்றுவதைத் செய். இப்போது நான் சொல்வதற்கு ஒன்றுமே யில்லை!' காலு நேரே வீட்டைப் பார்க்க நடந்தான்.

அக்கம் பக்கத்தோர் காதில் படும்படி ராஜி உரக்கக் கூறினாள்—'நிம்மதியாகத் தூங்கலாம். ராஜி அவ்வளவு பைத்தியமல்ல!—இரண்டு வாழ்க்கை போதாதென்று மூன்றாவதையும் —' வாக்கியத்தை அரைகுறையாக விட்டுவிட்டு முறிந்த உள்ளத்துடன், கண்களில் நீர் ததும்பச் சொன்னாள் ராஜி.

பிரிந்த இருவரும் தத்தம் உள்ளத்திடம் ஒரே கேள்வியைக் கேட்டுக் கொண்டிருந்தனர் — காலு கேட்டான் — கணவன் தான் விட்டுவிடட்டும், அல்லது மாலி — கோடி இருவரிடமும் அவள் சிக்கிக் கொள்ளட்டும், அதனால் எனக்கென்ன? பிறரை மணந்த கணத்திலிருந்து அவள் எனக்குச் சொந்தமில்லை யல்லவா? என்னுடன் அவளுக்கு மணம் செய்விக்க நிச்சயம் கூடச் செய்யப் பட்டது; என்பதை உலகோர் மறந்துவிட்டனர். நினைவில் வைத்திருந்தாலும் அது அந்த நேரத்தோடு தீர்ந்துவிட்டது. அவள் உனக்குப் பணிந்து நடக்க உன் மனைவியா என்ன? ஒன்றாய் அமர்ந்து ஒரு வேலை செய்வோம் எனும் உறவுகூட இல்லையே! அப்படியிருக்க அவள் நாநாவின் வீட்டிற்குத்தான் போகட்டும், வேறு எந்தக் கள்வன் வீட்டிற்குத்தான் போகட்டும், நமக்கென்ன?

ராஜியும் தனக்குள் சொல்லிக்கொண்டாள் — அவன் கொன்று விட்டால், உலகமே நசிந்துவிடுமா என்ன? அவன் சாதுக்களுடன்தான் போகட்டுமே உனக்கென்ன? உலகில் இருந்து கொண்டு உன் வாழ்வைத் தன்னியமாக்க அவன் வரவில்லை — பின்னே உனக்கென்ன?

அப்படியிருந்தும் இரண்டு இதயங்களும் 'எண்ணிப் பார்த்தால் எத்தனையோ, எண்ணுவிட்டால் ஒன்றுமில்லை!' — என்று கூறிக் கொண்டே எத்தனையோ விஷயங்களை "எண்ணிக்" கொண் டிருந்தன.

## 24

## விஷக்கொட்டு

வீடு போய்ச் சேர்ந்ததும் ராஜி இன்னும் அதிகமாக அழ ஆரம்பித்தாள். முகத்தை மூடிக்கொண்டு அழுதுகொண்டிருந்தாள்.

'உனக்கென்ன வந்துவிட்டது ... சொல்லேன். யாராவது ஏதாவது சொன்னார்களா? — அட தெய்வமே! இந்தப் பெண் ஏன் இப்படி அழுகிறாள்?'

'யாராவது ஏதாவது சொல்லியிருப்பார்கள். மகளுக்கு இதம் நினைப்பவர்கள் கிராமத்தில் மிகக் குறைவு.' கோதரின் மனைவி கேசர் கூறினாள்.

'இதென்ன நீ சொல்கிறாய்? இதம் செய்பவர்களா?'

'ஏன்? மாப்பிள்ளையில்லையா?'

'யாருடைய மாப்பிள்ளை?'

'யாருடைய மாப்பிள்ளை, உங்கள் மாப்பிள்ளைதான். தாய் — மகள் இருவருக்கும் வேண்டியவன் அவன்தானே? வேறு யார்?'

கிழவிக்குக் கோபம் பீறிட்டெழுந்தது, 'ஜாக்கிரதையாகப் பேசு. இல்லாவிட்டால் .... அம்மா — பெண் இருவருக்கும் ஒரு மாப்பிள்ளையா? இப்படி உன் அப்பனுடைய வம்சத்தில் எங்காவது கண்டதுண்டா?'

'என் அப்பனுடைய வம்சத்தில் இல்லை, உங்கள் வம்சத்தில் தான் நடக்கிறதே. மகளுக்குக் கணவனாக வாய்க்க வேண்டியவனை அவளுக்கு மருமகப் பிள்ளையாக்கினீர்கள். இப்போது எல்லோருமாகச் சேர்ந்து மண்டையை உடைத்துக் கொள்ளுங்கள். பலீ வந்து ஜாடையாக அழைக்க வந்திருந்தாள். உடனே மருமகப் பிள்ளையைப் பார்க்கப் போயிருப்பாள் — அவன் ஏதாவது வாய்க்கு வந்தபடி பேசியிருப்பான். அதனால்தானே ...'

'அதனால்தான் தாய்க்கும் மகளுக்கும் ஒரே மாப்பிள்ளை என்று சொல்கிறாயா! அட தெய்வமே! வீட்டிற்கு வந்த மருமகளைத் தவிர வேறு யார் என்னை இடித்துக் காட்டப் போகிறார்கள்?'

கோதர் வருவதைக் கண்டோ என்னமோ — 'மகனிடம் துணிச்சலில்லாததால்தானே இதெல்லாம் மருமகளிடம் கேட்டுக் கொள்ள வேண்டியிருக்கிறது?' என்று கூறியபடியே கிழவி அழ ஆரம்பித்தாள்.

இம்மாதிரி சலிப்படையச் செய்யும் நிகழ்ச்சி கோதருக்குப் புதிதல்ல. அவன் அதற்குப் பழகப்பட்டவன் தான். இன்று பண்டிகை நாளில் அவனுல் சொல்லாமலிருக்க முடியவில்லை — 'இதென்ன அமர்க்களம்?'

'நீங்களும் சேர்ந்துகொள்ளுங்கள், இதோ, ஒரு புடவை தரட்டுமா?' என்று கூறிய கேசர் தனக்குத் தானே சொல்லிக் கொண்டாள்—'எந்த ஜாதியைச் சேர்ந்தவர்களோ, சனியன்கள்!'

'இன்று நீ பேசாமலிருக்க வேண்டும் ... ஆமாம்!' கோதர் உறுமினுன்.

ஆனுல் கேசர் கணவனை லட்சியம் செய்யவில்லை. 'சரிதான் உள்ளே வாருங்கள்!' தண்ணீரைச் சமையலறைக்குள் எடுத்துச் சென்றபடியே கேசர் சொன்னுள்.

புத்தாண்டிற்காக அக்கம் பக்கத்திலிருந்து கோதரின் வீட்டிற்கு மக்கள் திரள் திரளாக வந்து கொண்டிருந்தனர். கோதரின் கோபமும் அதிகரித்துக்கொண்டே வந்தது. கத்தலும் இரைச்சலும் கூட அதிகமாகிக் கொண்டிருந்தது — 'பேசாதே ... ஆமாம் சொல்லிவிட்டேன்!'

கேசரால் சும்மா இருக்க முடியவில்லை. சமயலறையை விட்டு வெளியே வந்தாள் — 'உங்கள் அம்மாவிற்கும் தங்கைக்கும் கொஞ்சமாவது அறிவிருந்தால், இன்று பண்டிகை நாளில் இப்படி இவள் முகத்தை மூடிக்கொண்டு அழுவாளா என்ன? இந்த சனியன்களுக்கென்ன, நல்ல நாளில் அபசகுனம் மாதிரி எதாவது செய்தால் என் வீட்டிற்குத்தானே ஆகாது.'

'உன் வீடா? உன் அப்பனிடமிருந்து வாங்கி வந்தாயா என்ன?'

'நீங்கள் உங்கள் தங்கைக்கு மணம் செய்து கொடுத்தாற் போலத்தான், எனக்கும் செய்து கொடுத்திருக்கிறுர்.'

'இவ்வளவு பேச்சு வைத்துக்கொள்ளாதே. ஆமாம். விறகுக் கட்டையை எடுக்க நேரிடும். தெரிந்ததா?' கோதர் கதவருகே உள்ள அடுப்பைக் காண்பித்தபடி கூறினுன்.

'விறகுக் கட்டை வீட்டிலும் அடுப்பிலும் வேண்டியது இருக்கிறது. எடுத்துக் கொள்ளுங்கள்.' எல்லை மீறி வந்த கோபத்தில் கோதரின் எதிரிலேயே அடுப்பிற்குப் பக்கத்தில் போய் நின்று கொண்டாள் கேசர் — 'உம் அடியுங்கள் — யாருக்கு வலிக்கிறது என்று பார்க்கலாம்!' பிறகு மறுகணமே வேறுவிதமாகப்

பேசினுள் — 'உங்களுக்கு வெட்கமில்லை, ஆனுல் எனக்கு வெட்கமாக இருக்கிறது.'

'நீ பெரிய அச்சமுள்ளவள்தான், எனக்குத் தெரியும். கிடக்கட்டும், இன்று நான் வாயைத் திறக்கமாட்டேன்.'

தினசரி உபயோகிக்கும் வார்த்தைகளையே அன்றும் உபயோகித்து என்றும் போல் சச்சரவிற்கு ஒரு முற்றுப் புள்ளி வைத்தான் கோதர். பிறகு தாய் .... மகள் இருவர் பக்கமும் திரும்பினுன். கிழவியை ஒரு உலுக்கு உலுக்கிக் கூறினுன் — 'தாங்க முடியாத வருத்தம் இடிபோல் உன் மேல் விழுந்திருக்கிறது என்று எனக்குத் தெரியும். ஆனுல் இன்று புத்தாண்டு தினம் என்பதை மட்டும் நினைவில் வைத்துக்கொள். அழத்தான் எத்தனையோ தினங்கள் கிடக்கின்றனவே.'

'உன்னை மாதிரி மகனைப் பெற்றிருக்கிறேனே! அழுகைக்கு என்ன குறைச்சல்?' கிழவி மகனிடம் கையை நீட்டியபடி கத்தினுள் — 'எங்கேயாவது மூழ்கிச் சாவேன். ஆணவமில்லாத பிள்ளை — உன்னைப் பெற்றதற்கு ஒரு பாருங்கல்லைப் பெற்றிருந்தால், துணி துவைக்கவாவது உதவியிருக்கும்!'

விம்மிக் கொண்டிருந்த ராஜி மௌனமாகிவிட்டாள். எழுந்து வெளியே சென்றுவிட்டாள். ஆனுல் கிழவியும் மகனும் விவாதித்துக் கொண்டிருந்தனர். இடையிடையே கேசரும் தூபம் போட்டுக் கொண்டிருந்தாள்.

அப்போது சங்கர், காசம் முதலியவர்கள் தாழ்வாரத்தில் வந்தமர்ந்தனர். கோதர் உக்கா நிரப்புவதில் ஈடுபட்டுவிட்டான். கிழவி, ராஜியை அழைத்துக்கொண்டு வாசற்பக்கம் போய் உட்கார்ந்துகொண்டாள். கேசர் வாசலில் சூத்ரதாரிணியின் வேலையை நடத்தினுள்.

முதலில் அவள் கிழவிக்கு எச்சரிக்கை விடுத்தாள். 'இதோ பாருங்கள், நான் மறுபடியும் சொல்கிறேன். உங்கள் மகளுடைய வீட்டிற்கு இங்கிருந்து எல்லாவற்றையும் எடுத்துச் சென்று விட்டு நிரப்புவது முடியாத காரியம். மகளுடைய வீடோ ஒரே சூனியமாக இருக்கிறது. மகள் சுகமாக வாழ்வதைக் காண விரும்பினுல், நான் சொல்வது போல் செய்யுங்கள். ராஜியின் வாழ்க்கை நாநாவிடம் தானிருக்கிறது. அவரே அவளுக்குப் பொட்டிடட்டும். உறவினர்கள் அதற்குப் பதிலாக என்ன அபராதம் விதித்தாலும் சரி — அதைத் தீர்க்கத்தான் தயாராகி விட்டோமே! லட்சுமி

தேவியே பொட்டிட வந்தால் — அப்போது போய் முகத்தைக் கழுவிக்கொள்வதா?'

'பொட்டிட வந்திருக்கிருள் அண்ணி — ஆனுல் என்ன பொட்டிட தெரியுமா?' ராஜி சுறுசுறுப்பாகப் பேசினுள். பின், வேறு வழி?

'என்ன பொட்டிட? குங்குமப் பொட்டிடத்தான்!'

'கரிப்பொட்டிடத்தான் — அதுவும் தோசைக் கல்லில் ஏறியிருக்கும் கரியைக் குழைத்து இடத்தான்!' ராஜி கசப்புடனும், அலட்சியத்துடனும் கூறினுள்.

'தயங்கினுல் போச்சு, ஆமாம்! உன் அண்ணி உன் நலனைத் தான் கருதுவாள். அம்மா உன்னைச் சோளத்திலிருந்து தினை மாவைத் தின்ன வைத்துவிட்டாள். நான் தினையிலிருந்து கோதுமை மாவிடம் உன்னை அனுப்புகிறேன். நான் சொல்வதைக் கேள் ராஜி!'

'அது வாஸ்தவம்தான்!' தாய் ஆமோதித்தாள். ராஜி இவர்களுக்கு எவ்விதம் புரியவைப்பாள்?... ஆயினும் சொன்னுள் — 'சக்களத்தியின் தொல்லை வேறிருக்குமோ?'

'சக்களத்தி ரொம்பவும் தொல்லை செய்தால் நாநா அவளைப் பிறந்தகத்திற்கு அனுப்பிவிடுவான்?'

'நன்ருகச் சொன்னுய்! இந்த எட்டு வருடங்களில் ஒருநாள் கூடப் பிறந்தகம் போகாதவள் அவள். மாடா என்ன, வண்டியில் உந்தித் தள்ளி அனுப்புவதற்கு?'

'போகாவிட்டால்தான் உனக்கென்னம்மா வந்தது? ஒரு மூலையில் விழுந்து கிடப்பாள், பின்புறத்து அறையில் அந்த நொண்டிப் பெண்ணை ...'

ராஜி சற்றே சிரித்தாள்.

அண்ணிக்கு நம்பிக்கை பிறந்தது — 'வந்திருப்பவர்களுக்கு நான் சாப்பாடு தயார் செய்கிறேன். அதற்குள் தாயும் மகளும் யோசித்துப் பாருங்கள்!'

ராஜி பிரமித்துவிட்டாள். சாப்பாடு தயார் செய்வது என்ருல் பொங்கல் செய்வது என்று அர்த்தம். தயார் செய்து எல்லோருக்கும் பரிமாறுவது என்ருல் நாநாவின் வீட்டிற்கு அவள் போவதை நிச்சயப்படுத்துவது என்று அர்த்தம். இவளை அனுப்புவதிலேயே கண்ணும் கருத்துமாக இவர்களெல்லோரும் இருக்கின்றனர். அவளுக்கு ஆத்திரம் வந்தது — 'என்ன செய்கிருய் நீ?' என்று கேட்டாள் ராஜி!

'விருந்தினருக்குச் சாப்பாடு!' மென்மையாகச் சிரித்தபடி கேசர் பதிலளித்தாள்.

'அண்ணியே நிச்சயித்துவிடுவாள் போலிருக்கிறதே. அவளுடைய பிடிவாதத்திற்கெதிரே அம்மா — அண்ணன் ஒருவருடைய பேச்சும் செல்லாது. நம்மைக் கட்டிப் பிடித்துக்கொண்டு தள்ளி விட்டுத்தான் மறுவேலை பார்ப்பாள் போலிருக்கிறதே!' என்று ராஜி நினைத்தாள். துணுக்குற்றுப் பேசினாள் அவள் — 'சமையல் செய்பவளே! போ போ! என்னை விற்றுவிட நீ ஒற்றைக் காலால் நிற்கிறாய், இல்லையா?'

'வீட்டுப் பெண்ணை விற்க என் அறிவு மழுங்கிவிட்டதா என்ன? அப்படியே செய்தாலும் உன் அண்ணனுடைய வீட்டிற்கு அதனால் ஏதாவது லாபம் ...'

'அப்படியானால் ஒன்று செய் அண்ணி, அந்தக் காசம் வீட்டிற்கே என்னை அனுப்பிவிடு. வாழ்க்கையின் தொல்லை, முழுதிற்கும் விமோசனம் பிறந்துவிடும்' என்று கூறியபடி ராஜி புருவங்களை நெறித்தாள் 'உம்!'

ராஜியின் சொற்களைவிட அவளுடைய கண்களில் நிரம்பியிருந்த ஏளனம் கோதரை நடுங்கச் செய்தது. அவன் மிகவும் முயற்சி செய்து சிரித்தபடி கூறினான் —'இதென்னம்மா ராஜி நீ இப்படிப் பேசுகிறாய்?'

'எல்லோரும் கேட்டுக் கொள்ளுங்கள்! என் அண்ணன் வீடே நசித்துப் போனாலும் சரி, என் அம்மாவைப் பசியால் துடிக்க வைத்துச் சாக அடிப்பதற்குப் பதிலாக அவளை இன்றே கொன்று விட்டாலும் சரி. நான் உங்கள் பேச்சைக் கேட்கப் போவதில்லை!'

'இதென்னம்மா தங்கச்சி இப்படிச் சொல்கிறாய்? உன்னை நம்பி நான் வாக்குக் கொடுத்துவிட்டேனே!'

'எனக்கென்ன?' என்று கூறியபடி ராஜி எழுந்து நின்றாள், தாயிடம் பேசும் சாக்கில் அண்ணியையும் எச்சரித்தாள் — 'அம்மா, இதோ பார்! என்னிடம் ஏதாவது பேசினாயோ, ஆமாம். வேறு ஒன்றும் செய்யமாட்டேன் — உன் கழுத்தை ....'

'சரி தங்கச்சி! இப்போது நீ எங்கே போகிறாய்?'

'வீட்டிற்குள்!'

'அடடா! நான் அந்தப் பெரிய மனிதர்களுக்கெல்லாம் என்ன பதில் சொல்வேன்?'

'நானே பதில் சொல்கிறேன்!' என்று கூறியபடி ராஜி கிளம்பி

ளுள். மெல்லிய குரலில் அவளைக் கூப்பிட்டுக்கொண்டேயிருந்தாள் அண்ணி — 'ராஜி தங்கச்சி, ராஜி! இதைக் கேளம்மா! திரும்பிவாயேன்!...'

ராஜி வாயிற்படியில் நின்றபடியே சங்கரிடம் கேட்டாள் — 'சங்கர் சித்தப்பா, ஏன் இங்கே வந்திருக்கிறீர்கள்?'

திடிரென்று கேள்வியை செவியுற்ற சங்கர் பிரமித்துவிட்டார். 'நாங்கள் எல்லோரும்' .......

ராஜியின் இந்தக் கேள்வியைக் காட்டிலும் அவளுடைய கொடி போன்ற உடலின் மிடுக்கு சங்கரை நடுங்கச் செய்துவிட்டது.— 'ஒன்றுமில்லை புத்தாண்டல்லவா, சும்மாத்தான்.'

ஆனால் காசம் ஒன்றுமறியாத குழந்தையாயிற்றே — 'நீ தெரிந்துகொண்டே ஏன் எங்களைக் கேட்கின்றாய்? உன் நலனுக்காகத்தான் நாங்கள் —'

'உங்களைப் பற்றி எனக்குத் தெரியாது .... ராஜி குறுக்கிட்டாள். 'சங்கர் சித்தப்பா ஒரு தடவை நல்லவராக இருந்தார். இன்று அவரும்' — ராஜி பெருமூச்செறிந்தாள். ராஜி பிறகு நேரடியாகக் கேள்வி கேட்டாள் — 'உண்மையைச் சொல்லிவிடுங்கள், சங்கர் சித்தப்பா, அன்று நடந்த சச்சரவைத் தீர்த்து வைக்கத்தானே வந்திருக்கிறீர்கள்?' ஒரு கணம் மௌனமாக இருந்துவிட்டுப் பிறகு அவள் சொன்னாள் — 'உங்களுக்கெதிரே நான் ஒன்றுமறியாத குழந்தை. ஆனால் கணத்திற்கு கணம் கிளைக்குக் கிளை தாவுவது பெரியவர்களுக்கு அழகல்ல ... நம் தலைவர் ரண்சோடுடன் பகை ...'

'எனக்குப் பகைமை கிடையாதே தங்கச்சி, ஆனால் நீயும் நன்றாக இருப்பாய், நாநாவும் சுகமாக இருப்பானே என்றுதான் நான் நினைத்தேன்!'

'சுகமாக இருக்கச் செய்யுங்களேன். நம் சாதியில் ராஜியைத் தவிர வேறு பெண்களே இல்லையா என்ன? இப்போது பேதா படேலின் பெண் தன் கணவனை விட்டுவிட்டுத் திருமணச் சடங்கைக் குற்றமே சொல்லாமல் நடந்துகொள்ள வில்லையா? நானும் அவளைக் குற்றம் சொல்ல மாட்டேன். நம் குலத்தை அழிக்க ....' திடீரென்று சுய நினைவிற்கு வந்த ராஜி கடைசி வார்த்தையை மாற்றிவிட்டாள் — 'என் வாழ்வை அழித்தவன் வீட்டிலேயே' — பிறகு தனக்குள் சொல்லிக் கொண்டாள் — 'அந்த கடுந் துயரத்தை என் உயிருள்ளளவும் மறக்கமாட்டேன்.'

சங்கருக்கு ஒன்றும் பதில் சொல்லத் தோன்றவில்லை. ஆதலால் தாறுமாறாகப் பேசத் துவங்கினான் —

'ஆனால் உன்னைப் பொருத்தவரையில் — உன் திருமணம் நடந்த அன்றே பஞ்சாயத்துத் தீர்ப்பளித்து விட்டதே — குடித்தனம் சரியாக நடத்தினால் சரி .. இல்லாவிட்டால் வேறு மணமகனையும் வீட்டையும் பார்த்து உன்னை ....'

ராஜி குறுக்கிட்டாள் : 'நான் போகுமிடத்தில் கூலி வேலைதான் செய்து பிழைக்க நேரிடும் சங்கர் சித்தப்பா ! வயிறு கோதுமை யாலும் நிரம்பும், தினையினாலும் நிரம்பிவிடும் .... என்னைப்பற்றி நீங்கள் கவலைப்படத் தேவையில்லை. புத்தாண்டு தினம் என்று என் அம்மாவைப் பார்க்க வந்தீர்களானால், வந்துவிட்டுப் போய் விடுங்கள்.' கடைசி வார்த்தையைப் பேசிக்கொண்டே ராஜி முதுகைத் திருப்பிக்கொண்டாள்.

காசம் கூறினான் — 'ஆனால், தங்கச்சி, கேளம்மா ! இது நாநாவை இரண்டு தடவை மூக்கறுத்த மாதிரியாகும். நாங்களும் தான் என்ன சொல்வது ? — '

'சொல்லுங்கள் !' ராஜி வெளியே பார்த்தபடி கூறினாள் — 'எட்டு வருடங்களுக்கு முன்னாலேயே மாங்கலியத்தை மாற்ற வில்லை, இப்போது தேய்ந்த கழுத்திலிருந்து தானாக இறங்கி விடும். மூக்கை தீபாவளி நாளன்றே யாரோ நறுக்கியாகி விட்டது என்று நான் கூறியதாகத் தெரிவியுங்கள், போங்கள் !'

உள்ளே திரும்பிப் பார்த்துத் தன் அண்ணியிடமும் தெரிவித் தாள் — 'இன்று இரவு நீ என்னை இங்கு இருக்கவிட்டால் சரி, இல்லாவிட்டால் கிராமத்தில் எவர் வீட்டிலாவது போய்த் தங்கிக் கொள்கிறேன் !'

'சரி, இங்கேயே படுத்துக்கொள்ளேன் தங்கச்சி ! வாழ்நாள் முழுவதும்தான் இரேன். என் அப்பனுடைய சொத்தையா தின்றுவிடப் போகிறாய்?' என்று ஒரு விறைப்புடன் சொல்லிக் கொண்டே அண்ணி சமையலறையில் போய் உட்கார்ந்து கொண்டாள்.

துக்கம் தொண்டையை யடைக்க ராஜி தாயிடமும் சொல்லி விட்டாள் — 'ஒருத்திக்கு இரண்டு வித வாழ்வை ஏற்படுத்திவிட் டாய் ! இப்போது மூன்றாவது வேறு — ' தொடர்ந்து அவளால் பேச முடியவில்லை.

பாவம், தாயும்தான் என்ன பேசுவாள் ? அழுதுகொண்டே, ஆனால் ஆத்திரத்தில் ராஜி பேசிய வார்த்தைகளை சங்கர், காசம்

இருவரும் கூடக் கேட்டனர். அவர்களும் எழுந்து சென்றுவிட்டார்கள்.

சங்கர் நாநாவிற்குச் செய்தியைத் தெரிவிக்கக்கூடச் செல்லவில்லை. நேராக வீட்டை அடைந்தான். காசம் கூட விரும்பவில்லை. ஆனால் யாராவது செய்தியைத் தெரிவித்தாக வேண்டுமே! இல்லாவிட்டால் நாநா 'இதோ வந்துவிட்டார்கள், இதோ வந்துவிட்டார்கள்' என்று இரவு முழுவதும் எதிர்பார்த்துக் கொண்டேயிருப்பான்.

ஆனால் நாநாவின் கவலையை விட அவனுக்குத் தன்னைப் பற்றித்தான் கவலை அதிகமாக இருந்தது. — பச்சாத்தாபப் பட்டுக் கொண்டிருந்தான். 'அந்தப் பெண்ணிடம் செருப்படி வாங்கத்தான் நாம் தகுந்தவர்கள். அன்று நாம் காலுவின் கட்சியில் இருந்தோம், இன்று நாநாவின் கட்சியில் — கிராமத் தலைவனும் கிழவியும் சற்று கெஞ்சிக் கேட்டுக்கொண்ட மாத்திரத்தில் முன் பின் யோசனையே போய்விட்டது. கிளைக்குக் கிளை தாவுவது பெரியவர்களுக்கு அழகல்ல என்று அந்தப் பெண் சொன்னாளே!'

காசம் பிராயச்சித்தம் செய்துகொண்டு, எதிர்பார்த்திருந்த நாநா, ரண்சோட், கிழவி எல்லோருக்கும் விஷயத்தைத் தெரிவித்தபடி கூறினான் — 'ஒன்றுமில்லை அண்ணே! நீங்கள் இந்தப் பெண்ணை அடையக் கொடுத்து வைக்கவில்லை. இவளுடைய எடையளவு பணம் கொடுக்கத் தயாராக இருந்தாலும் சரி!'

'ஐயோ! காசம் தம்பி! இதென்ன இப்படிச் சொல்லி விட்டாய்! கிராமம் முழுவதும் செய்தி பரவிவிட்டதே. அந்தப் பிசாசு இரண்டாவது தடவையும் என் மூக்கை ....'

கிழவியின் அவச் சொல் காசமிற்குப் பிடிக்கவில்லை. அவன் சிரித்தபடி கூறினான் — 'ஆனால் அந்தப் பிசாசு என்ன சொல்கிறது தெரியுமா உங்களுக்கு? .... தீபாவளி தினத்திலேயே யாரோ மூக்கை நறுக்கி விட்டார்களே! நாநாவிற்கு மூக்கு இருந்தால் தானே என்கிறாள்.'

'கேட்டாயா? உன் மனதிற்கு மகிழ்ச்சிதானே!' என்று கூறியபடியே ரண்சோட் எழுந்து சென்றுவிட்டான். நாநாவும் கிழவியும் நெருப்பை மிதித்துவிட்டாற்போல் ஆத்திரத்துடன் குதித்தார்கள். முக்கியமாக காலுவின் பேரில் ...

ஆனால் காசம் இதைக் கண்டு சிந்தித்த வண்ணமிருந்தான்.... இடையிடையே உம் உம் என்று சொல்லி அவர்களுடைய எரிச்சலை அதிகப்படுத்தினான். ஆனால் அதே சமயத்தில் —

'இந்தா என் வயிற்றில் நீ பிறந்தால் சபதம் செய்! — அந்தக் காலுவைப் பழிக்குப் பழி வாங்காமல் இருக்கக் கூடாது!'

ஆத்திரத்தில் மிருகமாக மாறின நாநா சபதம் செய்தான் — 'அந்தக் காலுவைப் பழிக்குப் பழி வாங்காவிட்டால் உன் வயிற்றில் நான் பிறக்கவில்லை, பாறுங்கல் பிறந்தது என்று வைத்துக் கொள், போ!'

கலங்கிய கண்களுடன் பார்த்து கொண்டிருந்த காசம் அலட்சியம் செய்தபடி எழுந்து நின்றான்.

'சீ! நீசப் பயல்!' என்று கூறியபடி எழுந்து வெளியே வந்தான். 'இப்படிப்பட்ட சின்னப் பயல்களின் வீட்டிற்குத் தேவியைப் போன்ற பெண் எப்படிப் பொருந்துவாள்?'

தன் காதிலிருந்து வெடிகுண்டு இளம்பிறைப் போல் தவித்த காசம் வழி முழுவதும் முணுமுணுத்துக் கொண்டிருந்தான் — 'அடடா! இந்த மாதிரி மனிதர்களுடன் அந்தப் பேதைப் பெண் வந்து வாழ்ந்தால், அவ்வளவுதான். அவள் சொல்லியது போலத் தான் முடியும்! மூன்றும் வாழ்வும் அழிந்துதான் போகும்... அப்பப்பா! தேள் கொடுக்கில் விஷம் போல் கொட்டுவதும், சின்னத் தனமாக நடந்துகொள்வதும் தான் மனிதர்களின் லட்சணமா என்ன?'

## 25

## துக்கம் எங்கே?

கடும் பிடிவாதத்தில் நாநா எட்டே தினங்களில் இரண்டாவது மணம் செய்துகொண்டான். மக்களின் அவதூறுகளைப் போக்கி விட்டான்.

காலுவிற்கு ஒரே மகிழ்ச்சி. அதற்குப் பல காரணங்கள்! முன்பு ராஜியின் நினைவால் ஆத்திரம் பொங்கிக்கொண்டு வந்தது. இப்போது அதற்கு ஒரு முற்றுப் புள்ளி வைத்தாற் போலாகி விட்டது. யாராவது அவளை அழைத்துக்கொண்டு சென்று விடுவார்களோ என்ற பயமும் நீங்கிவிட்டது. இரண்டாவதாக அவனுடைய ஆசை நிறைவேறிவிட்டது. மூன்ருவதாக, இரண்டு மனைவிகளிடையே மாட்டிக்கொண்டு அவதிப்படும் நாநா, காலுவின் கருத்துப்படி, பதினைந்து தினங்களில் வழிக்கு வந்துவிடுவான். நாநாவுடன் இருந்தால் கிழவியின் நிலை இங்குமில்லை அங்குமில்லை என்ருகிவிடும்.

இதையெல்லாம் நினைத்த காலுவிற்கு வருத்தமும் உண்டாயிற்று. பாவம், கிழவிக்குச் சாகப் போகிற காலத்தில் சங்கடங்களை அனுபவிக்க நேரிடும். நாதா முன்பே தனியாகப் போய் விட்டாள். ரண்சோடும் தன் குழந்தை குட்டிகளுடன் மெள்ள நழுவிவிட்டான். நாநாவின் மனைவி கோடி, கிழவி இவ்விருவருக்குமிடையே உள்ள உறவு பகைதான். புதிதாக வந்திருப்பவளோ, சுகம் அனுபவிக்க வந்திருக்கிருளே தவிர கிழவியின் ஆத்திரத்திற்கு இலக்காகவில்லை.

முடிவில் காலு நினைத்தான். — 'இவளுக்கும் இது வேண்டியதுதான். தானுகவே தான் பாருங்கல்லைக் கழுத்தில் கட்டிக் கொண்டான்!' இவ்விதம் மனதைத் தேற்றிக்கொண்டான். இதையும் விடப் பெரிய விஷயம், ராஜி பற்றிய அவனது நிச்சிந்தையான நிலைதான். இதனுல் அவனுடைய உள்ளத்திலிருந்து எத்தனையோ மணங்கு சுமை இறங்கிவிட்டாற் போலிருந்தது அவனுக்கு. இப்போது ஒரே ஒரு விருப்பம்தான் எஞ்சியிருந்தது. எப்படியாவது ராஜிக்கு உதவி செய்து அவளை மகிழ்வுறச் செய்வதுதான் அந்த ஆசை,

தன் மாமனுரின் வீடு, அதாவது ராஜியின் வீடு அருகிலிருந்-

தால், எப்படியாவது இரண்டு கைகளால் இரண்டு வீடுகளின் பொறுப்பையும் ஏற்று நடத்துவான். பத்து மைல் தொலைவி லிருந்த போதிலும் அதே ஈடுபாடுதான். அதனால்தான், உழுதல், களத்து மேட்டில் தானியத்தைக் குவித்தல் போன்ற வேலைகளைப் பரபரப்புடன் செய்து முடிக்க விரும்பினான் அவன்! ஒரு நாள் தன் மனைவியிடம் கூறினான் — 'இந்த நான்கு தினங்களில் இரண்டு வயல்களையும் ஒரு தடவை உழுதாகவேண்டும், பிறகு மாமனாரின் வீட்டிற்கு போகவேண்டும். நீ எருதுகளுக்கு இன்னும் ஒரு சுமை அதிகப்படியாகப் புல் எடுத்து வாயேன்!' காலு பாலில் மாவைப் போட்டுக் கொதிக்கவைத்தபடியே கூறினான். நெய்யை உருக்கிக் கொண்டிருந்த பலீ ஆத்திரப்பட்டாள் — 'இதென்ன இவர் இப்படிப் பேசுகிறார்! வீட்டில் நாம் இருபத்து நான்குமணி நேரமும் செக்கு மாடாக உழைக்கிறோம்!'

'நம் வீடு எப்படி யிருக்கிறது பார்! கிராமம் முழுவதும் ஒருவருடைய வீடாவது இவ்வளவு நல்ல நிலையில் இருக்கிறதா? நீ பார்த்தாயா?' அடுப்பிலிருந்து பாத்திரத்தை எடுத்தபடியே 'எடு கிண்ணத்தை!' என்றான்.

கிண்ணத்தை எடுத்தபடியே பலீ கூறினாள் — 'வீட்டில் எத்தனை வேலைகள் கிடக்கின்றன; வியாபாரியின் குதிரை வீட்டுக்குள் கனைக்குமாம்...'

'ஆமாம்! கனைக்கும் ... எள்ளின் பசுங்கதிர்கள் ஆடி அசைந்து கொண்டிருக்கின்றன. அதன் அறுவடை முடிந்த பிறகுதான் வீட்டில் நல்ல சாப்பாடு கிடைக்கும்— நெய்யை எடு... குடலில் இதாவது போய்க் கொஞ்சம் நனைக்கட்டும்!' காலு சிரித்தான்.

'கடைக்காரன் ஐந்து சேர் பிடிக்கும் ஜாடியை வைத்துவிட்டுப் போய் விட்டானே. அதேன்? எருமை சும்மாக் கறந்துவிடுமா என்ன?' பலீ கோபத்துடன் பேசினாள்.

'கறக்காமல் என்ன? கறக்காவிட்டால் சிவப்புத் தலைப்பாகைக் காரர்கள் அழுவார்கள். எருமையை அவனுடைய அப்பன் வாங்கித் தரவில்லை!'

'ஏன் இல்லை? உங்கள் அப்பாதான் புதைத்து வைத்திருந்த பணப் புதையலை எடுத்துத் தந்தாரோ?'

காலுவிற்குக் கொஞ்சம் ரோசம் வந்தது. ஆனால் என்ன செய்வான்? வீண் கலகத்திற்கு ஏன் இடமளிக்கவேண்டும்?' கோபத்திற்குப் பதிலாக சிரிப்புத்தான் அவனுக்கு வந்தது — 'தீனி

போட்டால் தான் எருமை கறக்கும் என்பது சேட்டிற்கும் தெரியும்!'

'உடனே அவர்கள் தீனி போட்டு விடுவார்களாக்கும்!'

'அடி பைத்தியக்காரி! நாமும் எருமையைப் போலத்தான்! தெரியுமா? நம் ஜாதியில் யாருக்காவது திருமணம் நிச்சயமாக விருந்தால் பெண் வீட்டார் முதலில் மாப்பிள்ளை வீட்டுத் தொழுவத்தில் எத்தனை மாடு கன்றுகள் இருக்கின்றன என்று பார்ப்பார்கள், நமக்கு அவைதான் சொத்து. கடைக்காரனுடைய சொத்து நாம் எல்லோரும். சாமான் வாங்குபவர்களிடம் அவனுக்கும் பெண் கிடைக்கிறுள் தெரியுமா? 'எடுப்பது வெண்ணை, குடிப்பது நீர் மோர்! விதைப்பது கோதுமை, கிடைப்பது திணை!' என்றிருக்கிறது நம் அதிருஷ்டம் என்பார் என் அப்பா!'

பேசிக்கொண்டே காலு சாப்பிட்டுவிட்டான். பலீ அவனுடைய பேச்சைக் கேட்டுக்கொண்டு சும்மா இருக்கவில்லை. எருமைக்குத் தீனி சேகரித்துக் கொண்டிருந்தாள்.

ஆதவனின் ஒளி இன்னும் முழுதாக மறையவில்லை. கிராமத்து மக்களும் விழித்துக் கொண்டிருந்தனர். நோயால் தந்தளித்துக் கொண்டிருந்த கிழவன் பரமா எட்டு தினங்களாக விழித்துக் கொண்டே உட்கார்ந்திருந்தான். இருமல் திரும்பிப் படுக்கக் விடவில்லை. காலு ஏரை எடுத்துக்கொண்டு கிளம்பினுன். அப்போது ராமா கதவைத் திறந்துகொண்டிருந்தான்.

'ஓய்! காலு அண்ணே!' ராமா கொட்டாவி விட்டபடியே கூறினுன் — 'நீ தூக்கத்தை வென்றுவிட்டாயா என்ன?'

'ஏன்?' காலு சற்று நின்றுன்.

'ஏனென்றுல் நாங்கள் நான்கைந்து பேர்கள் இருக்கின்றேம். இன்னும் களத்து மேட்டில் தானியம் அம்பாரமாகக் கிடக்கிறது. வயல்களையும் உழுதபாடில்லை...'

காலு வழக்கம் போல் பதிலளித்தான்.

'உனக்கென்னப்பா, எத்தனையோ ஆட்களிருக்கின்றனர். விவசாயம் பல மக்கள் சேர்ந்து செய்ய வேண்டிய வேலை... என்னைப் போன்ற தனியாள் பரபரவென்று வேலை செய்யாவிட்டால் என் வாழ்நாளே முடிந்துவிடுமே!' என்று கூறியபடியே வெளியே கிளம்பினுன் காலு.

ஒவ்வொரு வயலிலும் சோளக் கதிர்களை அறுத்து மூட்டையில்

கட்டி வைத்திருந்தார்கள். அறுவடை முடிந்துவிட்டது. வயல்கள் உழப்பட்டுவிட்டன. காலு போன்றவர்களின் வயலிலோ மண் கட்டிகள் தவிடு பொடியாகி விட்டன. கோதுமை விதைக்க வேண்டியதுதான். அதுவும் விதைக்கும் பருவம் வரும்போது, குளிர் காலம் ஆரம்பித்தால் தானே விதைக்கலாம்?

காலு களத்து மேட்டிலிருந்த கதிர்களைத் தண்ணிலவு வீசும் இரவு நேரத்தில் போரடித்து முடித்துவிட்டான். குதிருக்குள் அதைப் போட்டுவிட்டு, பலீ கோபித்துக்கொண்ட போதிலும், மாமனார் வீட்டிற்குப் புறப்பட்டு விட்டான்.

இங்கு வேலை செய்த காலுவிற்குத் தன் வீட்டை விட அதிக உற்சாகம் ஏற்பட்டது. களைப்பென்ற பேச்சே கிடையாது. தினை மாவினால் சுடப்பட்ட ரொட்டி, மோர், வெங்காயம் இவ்வளவு தான். ஆயினும் அதில் விசித்திரமான சுவை காணப்பட்டது — சிற்சில சமயங்களில் தன்னைத் தான் கேட்டுக் கொள்வான்— ரொட்டி சுடும்போது ராஜியின் கையிலிருந்து இனிப்பும் இதில் இறங்கிவிடுமோ? ... எத்தனை சாப்பிட முடிகிறது? வாழ்நாள் முழுதும் உள்ள பசி திரண்டெழுந்தாற் போலல்லவா இருக்கிறது?

இதற்கெல்லாம் காரணம் அந்த ராஜி ஒருத்திதான் என்பது காலுவிற்குந் தெரியும். ஆனால் மறுகணம் இந்த 'ஏழிற்கொடி' ராஜியின் குடித்தனத்தைப் பற்றி நினைத்தால் அவன் நடுங்கிப் போவான். நாநாவின் வீட்டிற்கு அவளைப் போய் வாழவிடாமல் பெரிய பாவம் செய்துவிட்டோமோ என்றுகூடச் சிற்சில சமயங்களில் தோன்றும். மற்றும் சில நேரங்களில் - கணவன் எப்போது இறப்பான், மறுமணம் செய்துகொள்ளலாமே என்று ராஜி எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறாளோ? எனக் கூடச் சந்தேகிப்பான்.

ஒரு நாள் புல் வண்டியைச் நிரப்பிக்கொண்டு வண்டியை வீட்டிற்குக் கொண்டு சேர்க்கும் வேலையில் ராஜி ஈடுபட்டிருந்தாள். காலு ராஜியின் உள்ளத்தை அறிய முயன்றான்— 'என் சித்தப்பாவிற்கு ஏதாவது நல்ல மருந்தாகக் கொடுக்கக் கூடாதா... நாளுக்கு நாள் இளைத்துப் போகிறாரே!'

'இன்னும் என்ன மருந்தைக் கொடுப்பது? சூடு கூடப் போட்டுப் பார்த்தாகி விட்டது. அவருடைய உடம்பை நீங்கள் பார்த்தீர்களோ? சூடு போடுபவர்களில் ஒருவன் இடுப்பில் போட்டான். இன்னொருவன் விலா எலும்புகளனைத்தையும் சுட்டெரித்து விட்

டான். உடுக்கை யடித்தும் பார்த்தாகிவிட்டது. நான் புக்ககத்திற்குப் புதிதாக வந்தபோது மடியில் போடப்பட்ட காசுகளை எல்லாம் எடுத்து மூன்று ரூபாய் சேர்த்து வைத்திருந்தேன். உடுக்கையடிப்பதில் அந்தப் பணம் செலவாகிவிட்டது. ஜிமிக்கி, தாழ்த்து, மோதிரங்கள் – எல்லாமே அதில் போய்விட்டன. அப்படியும் —'

'ஆனால் இப்படிச் சூட்டிலும், உடுக்கையிலும் வியாதி தீர்ந்து விடுமா என்ன? பக்கவாதம்தானே அது என்று எனக்குத் தோன்றுகிறது!'

'பக்கவாதமாகவே யிருந்தாலும், நாம் வைத்தியர்களா என்ன— ஐந்து சேர் மூலிகைகள் அவருடைய வயிற்றிற்குள் போயிருக்கும்!' பெரு மூச்செறிந்தபடி ராஜி கூறினள்— 'அதெல்லாம் விழலுக்கிறைத்த நீராகிவிட்டது!'

ராஜியின் வருத்தம் தோய்ந்த முகத்திலிருந்து காலுவிற்கு நம்பிக்கை வந்துவிட்டது— 'இல்லை இல்லை! அப்படி இவள் இல்லையே; தன் கணவனையும் வீட்டையும் அவள் விடத் தயாராக இல்லை. பாவம், தன்னாலியன்ற முயற்சிகளனைத்தையும் செய்து பார்த்து விட்டாள். இனி என்ன செய்வாள்? உடுக்கையடிப்பவன் ஆட்டையும் கோழியையும் கொடு என்பான். சூடு போடுபவன் அபினியும், பொங்கலும் தின்றுவிட்டுப் போவான்; பதிலுக்குச் சூடு போடுவான். மூலிகையும் வேரும் கொண்டு வருபவன் நான்கணாவில் திருப்தியடைந்து விடுவான். ஆனால் அவனுடைய வீட்டிற்கு அலைந்துகொண்டே யிருக்கவேண்டும். இல்லாவிட்டால்....

பீடியை ஒரு மூச்சு இழுத்துக்கொண்டே காலு சொன்னான் — 'ராஜி நீ சரியென்றால் நாம் அந்த பபூதேச்வர் கோயிலில் போய்ச் சிகிச்சையளிக்கலாம். அந்த சாது மகாத்மா எனக்கு ....'

'உடம்பு சரியானால் போதும். வேறென்ன வேண்டும். என் பிறந்தகத்தில் போட்ட ஒரு மூக்குத்தி இருக்கிறது. அதையும் விற்கத் தயார்' ராஜி பரபரப்படைந்தாள். உள்ளத்தில் மகிழ்ச்சி பொங்கிற்று.

காலுவின் வியப்பிற்கு அளவே கிடையாது. ராஜியின் உடலில்— கால்களில் வெள்ளிக் கொலுசுகளிருந்தன. நான்கணா எடையுள்ள தங்கத்தாலான ஒரு மூக்குத்தி மூக்கில் இருந்தது. இதைத் தவிர வெள்ளி வளைகள், ஏழு தோலா எடையுள்ள வெள்ளிக் கங்கணங்

கள் அணிந்திருந்தாள். அந்த மெல்லிய கழுத்தில் நான்கணுக் களே மதிப்பிடக்கூடிய மணிமாலை யிருந்தது. — காலு பெருமூச் செறிந்தபடி தனக்குள் முணுமுணுத்தான் —

'கள்ளிச்செடியில் இலைகளிருப்பது போல், ராஜியின் உடலிலும் ஏதோ சில நகைகளிருக்கின்றன !' பிறகு ராஜியிடம் சொன்னான்— 'மூக்குத்தி கிடக்கட்டும், ஆனால் —'

ஆனால் ராஜி சாதுமகாத்மாவை அழைத்துவரச் சொல்லிக் காலுவிடம் பிடிவாதம் பிடித்தாள். அவனைக் கெஞ்சினாள் — 'தயவுசெய்து அந்த சாதுமகாத்மாவை அழைத்துவாருங்களேன்!'

காலு சொல்ல விரும்பியதை இன்று வாய்திறந்து சொல்லி விட்டான் — 'ராஜி, நீ கோபித்துக் கொள்ளாமலிருந்தால், நான் உன்னை ஒரு விஷயம் கேட்கட்டுமா ?'

ராஜி புரிந்துகொண்டுவிட்டாள். அதனால் தானே இவ்வளவு மகிழ்ச்சியுடனிருக்கிறாள் ! ஏன் மகிழ்ச்சி இருக்காது ? வாழ்க்கை யில் இப்படி ஒரு கேள்வி கேட்பவன் யாருமில்லையே !

ஆனால் அடுத்தகணமே சினம்போன்ற ஒரு உணர்ச்சி முகத்தில் வெளிப்பட்டது. சிரிக்க முயற்சித்தபடி அவள் கேட்டாள் — ' நான் கோபிப்பேன். அதுவும் உங்களிடம் என்று நீங்கள் நினைக்கிறீர் கள் ?'

காலு நம்பிக்கையிழந்த தன்னை — 'கோபித்துக் கொள்வாயென் றல்ல' — என்று மழுப்பு வார்த்தைகளைப் பேசிச் சமாளித்துக் கொண்டான். பிறகு கேட்டான் — 'ராஜி ! உண்மையில் நீ தயாள்ஜிக்குச் சிகிச்சையளித்து அவரைப் பிழைக்கச் செய்ய விரும்புகிறாயா ?'

ராஜியின் முகத்தில் துக்கம் மேகம் போல் சூழ்ந்து கொண்டது. வேதனை கலந்த சிரிப்புடன் பேசினாள் — 'நீங்களுமா என்னை இந்தக் கேள்வி கேட்கின்றீர்கள் ? ... இந்த மனிதன் இறந்து போகட்டும் என்று ராஜி எதிர் பார்க்கிறாள் என உலகம்தான் நினைக்கிறது என்றால், நீங்களுமா கேட்கிறீர்கள் ? ஆனால் — அவளுடைய தோற்றத்தில் ஒருவித அலட்சியம் தென்பட்டது. அவள் கேட்டாள்—' எனக்கென்ன குறைச்சல் ?... தாய் தந்தையர் போல் ஓரகத்தியும் மைத்துனரும் இருக்கின்றார்கள்..... என்னிடம் அன்பாய் இருக்கின்றனர். என் அன்பிற்காக ஏங்கும் கணவரும் இருக்கிறார் —' அவள் சிரிக்க முயற்சித்தாள் — 'உங்களைப்போல் அழகாக இருந்தால் தினமும் இருபது முப்பது தடவை என்னைத்

திட்டிக்கொண்டேயிருப்பார். ஆனால் இவரோ, என் விருப்பத்திற்கு மறுபேச்சுப் பேசாதவர் .... ஒவ்வொரு கணமும் என்னைப் பற்றியே கவலை கொள்பவர் ....' சலிப்படைந்த கண்களுடன் வான வெளிப்பக்கம் பார்த்தபடி தனக்குள் சொல்லிக் கொண்டாள் — 'எனக்கு ஏது துக்கம்?' துக்கமளிக்கும் தெய்வத்தையே பரிகசிப்பவளைப் போலிருந்தது ராஜியின் தோற்றம்.

காலு ராஜியைப் பார்த்தபடி நின்றான் .... மிகவும் மரியாதையுடன் பார்த்தபடி கூறினான் — 'நம் கிராமத்திலேயே நம் சுற்றத்தாரிடையே உன்னைப் போன்ற பெண்கள் மிகக் குறைவாகத்தான் காணப்படுவார்கள் — ராஜி! நான் உன்னைப்போல் வேறொருத்தியையும் பார்த்ததே கிடையாது!'

'அது கிடக்கட்டும் — நீங்கள் அந்தச் சாது மகாத்மாவை எப்போது அழைத்துவருவீர்கள்?'

'நீ சொன்னால் இன்றே அழைத்துவருகிறேன்'

'நான் இப்போதே அழைத்துவரச் சொல்கிறேன், இப்போதே! வண்டியை நான் ஓட்டட்டுமா?' சிரித்துக்கொண்டே சொன்னாள்— சுயநலத்திற்கு அறிவேது?'

காரணமில்லாமல் காலு வருத்தமடைந்தான். ஓரிருமணிநேரம் வரைதான் ... ஆனாலும் ராஜியை விட்டுத் தான் மைல் கணக்காகத் தள்ளிச் சென்றுகொண்டிருப்பவன் போலிருந்தது அவனுக்கு.

மறுநாள் அவன் சாதுமகாத்மாவை அழைத்து வரப் புறப்பட்டான். வேறு வழியில்லை அவன் செல்லத்தான் நேர்ந்தது.

வழிமுழுவதும் அவன் தன்னைத்தானே அறிவுறுத்திக் கொண்டான் — 'ராஜிக்கு வருத்தம் எங்கே? அவளுடைய கணவனின் உடல் நிலை சரியாகி விடவேண்டும். அவ்வளவு தான் அவள் வேண்டுவது ... அவள் சொல்வதும் சரிதான். அவளுக்கு கிடைக்கும் சுகம் வேறு யாருக்குக் கிடைத்திருக்கிறது? வீட்டில் மருந்துக்குக் கூடக் கலகம், சண்டை — சச்சரவு கிடையாது. மனம் ஒத்துப்போனால் அங்குதான் சுகம் என்று யாரோ சொன்னது உண்மைதான்' ... ராஜியின் வார்த்தைகளையே அவன் சொல்லிக் கொண்டிருந்தான் —

'தாய் தந்தையரைப் போல் அன்பைப் பொழியும் ஓரகத்தியும் மைத்துனரும் இருக்கின்றார்கள். அன்பிற்காக ஏங்கும் கணவர் இருக்கிறார். ஒவ்வொரு கணமும் அவளைப்பற்றிக் கவலை கொள்பவர் .... அப்படிப்பட்டவர்! அவருக்கு மட்டும் என்ன குறைச்சல்? இப்படிப்பட்ட மனைவி கிடைத்திருக்கிறாள். பெரும்

அதிருஷ்டக்காரனுக்கு கூடக் கிடைக்காத பாக்கியம் அது.' சுக மாக வாழ்ந்து வரும் அந்தக் குடும்பத்தை நினைத்துப் பொருமை யால் பெருமூச்செறிந்தான் காலு — 'யார் உண்மையாக சுக வாழ்வு வாழ்பவர்கள்? வீட்டில் சாப்பிட இல்லாமல் இருந்தும் தினமும் சண்டையிட்டுக் கொள்பவர்களா, அல்லது சாப்பிட ஒன்றுமில்லாவிட்டாலும் அன்பின் அரவணைப்பில் வாழ்பவர்களா? வாய் நிரம்ப அன்புடன் உரையாடிக் கொண்டிருக்கும் இவர்கள் சுகமாக இல்லையா!' காலு தலையை அசைத்தபடி முணுமுணுத் தான் — 'வயிற்றுப் பசியைச் சகித்துக்கொள்ள முடியும், உள்ளப் பசியைப் பொறுத்துக்கொள்ள முடியாது! என்று அப்பா சொல் வாரே அது உண்மைதான்.'

காலு சிந்தித்தபடியிருந்தான் — ராஜியைப் போன்ற பெண்ணை அடையாத அவனுக்கு எந்தவிதச் சுகங்கள் இருந்தால்தான் என்ன பயன்? அவனுக்கு உண்பதிலும் சுகமிருக்காது, உடுப் பதிலும் சுகமிருக்காது. அப்படியிருந்தும் அவள் கேட்கிறாள் — துக்கம் எங்கே என்று! வாழ்க்கையில் துக்கம் என்று ஒன்று இருக்கிறதா என்று கேட்கிறாள். ... அல்லது மறுபடியும்? — இவ்விதம் துக்கத்தின் அடைப்படைக் காரணத்தைத் தேடி ஆராய்ந்தபடி அவன் தரிசு நிலத்தை கடந்து சென்றுகொண் டிருந்தான்.

## 26

## நிலத்தின் சுமையைத் தாங்குபவர்கள்

ஒருபுறம் குளிர் மும்முரமாக இருந்தது, மறுபுறம் வயல்களில் கோதுமையும், மற்ற தானியங்களும் புதிய கதிர்களுடன் மிளிர்ந்தன. எள் அறுவடையாகி விட்டது. வயலைச் சுத்தமாகப் பெருக்கி விட்டார்கள் மக்கள். வைக்கோல் – புல் – இவற்றை அட்டத்தின்மேல் வைத்து விட்டார்கள் .... ஓய்வுநேரம் கிடைத்த போது யாத்திரைக்கும் கிளம்பிவிட்டார்கள்.

வரி வசூல் ஆரம்பமாகி விட்டது ... கிராமத் தலைவரின் வீட்டில் டாகுரின் குதிரை கனைத்தது. டாகுரின் சித்தப்பனுடைய மகனை தீபூபா ஒவ்வொரு வீட்டிற்கும் சென்று சொல்ல ஆரம்பித்தான்— 'தம்பி! எங்களைக் கவனி — விருந்தாளிகள் வீட்டை நோக்கி வந்திருக்கிறார்!'

அறுபது வயது மெலிந்த டாகுர் நரைத்த தம் தாடியைக் காதின் பக்கம் உயரத் தூக்கியபடி, மீசையைத் தடவிக்கொண்டு தேர்ந்து விளைந்த முத்துக்களைப் போன்று பளபளக்கும் கண்களைச் சுழற்றிக்கொண்டு கிராம மக்களுடன் சிரிக்கத் துவங்கினார்-புதிய இளைஞர்களைப் புரிந்து கொள்ள முயற்சித்தார் — 'இவன் யார் தம்பி? ஓகோ, நம்ம வாலாபடேலுடைய மகன் காலுவா? சங்கர், இவன் உன் மகனா? நாநா, நீ என்னுடன் போட்டியிடுவாய் போலிருக்கிறதே! இருபத்தைந்து வயதிற்குள் இரண்டு பெண்டாட்டிகள் என்றால் என் வயது வரை வருவதற்குள் என்னைப்போல் நான்கு மனைவிகளாகி விடுவார்கள் போலிருக்கிறதே! வா, நாம் இருவரும் ஒரேமாதிரி அவதிப்படுபவர்கள்தான். நம் சொந்த விஷயத்தைப் பற்றிப் பேசலாம் வா! ஒரே மனைவியுள்ள காலு போன்றவர்களுக்கு இதைப்பற்றி என்ன தெரியும்? ராமபாணம் எந்த உடம்பில் பாய்கிறதோ, அவனுக்கல்லவா அதன் மகிமை புரியும்?' அங்கிருந்து குதிரைப் புல் வாங்க புல் கட்டுக்காரனை அழைக்கக் கிளம்பிக்கொண்டிருந்த தீபூபாவையும் பேச்சில் இணைத்துக் கொண்டார் டாகுர் — 'தீபுபா! புல் விற்பவனை அடித்துவிடாதே! உன்பேரில் உள்ள கோபத்தை அவன் தன் மனைவியின் மீது காண்பித்து விடுவான்! மனைவி குழந்தை குட்டிகள் உடையவளாக இருந்தால் அவள்குழந்தைகளின் பேரில் காண்பிப்பாள், குழந்தை

கள் இல்லாவிட்டால் — காலு ! நீதான் சொல்லேன், குழந்தைகள் இல்லாதவள் யாரிடம் தன் கோபத்தைக் காண்பிப்பாள் ?'

காலு என்னபதில் கூறுவான் ? டாகுர் வற்புறுத்தியதன் பேரில் அவன் பதில் சொல்ல நேர்ந்தது — 'கணவன் பேரில்தான் ...'

'இல்லை, இல்லவே யில்லை. உனக்கு அனுபவம் போதாது. உனக்கு எத்தனை குழந்தைகள் ? ... ஒன்று கூட இல்லையா ? ... சங்கர் ? அப்படியானால் நல்லவள்தானே ...'

ராமா குறுக்கிட்டான் — பெயர் என்னமோ பலீதான் — நல்லவள் என்ற பெயர்தான். வேலை செய்வதிலும் கெட்டிக்காரி— ஆனால் பேச்சில் ....' அவன் சிரிக்க ஆரம்பித்துவிட்டான்.

'உம், புரிந்துவிட்டது. எனக்குப் பெண்களைப் பற்றித் தெரியாமலில்லை. ஆனால் ஒன்று சொல்லட்டுமா, குழந்தைகளில்லாத மனைவி தன் பேரிலேயே ஆத்திரத்தைக் காண்பித்துக் கொள்வாள். கணவன் பேரில் கோபித்துக்கொண்டு கட்டிலைத் தள்ளிப்போட்டுக் கொள்வாள். இந்தக் குளிரில் தனிமையில் ...'

'ஆனால் கணவனும்தான் குளிரில் ....' மக்களுக்குக் காலுவின் கேள்வி பிடிக்கவில்லை. 'ஆமாம் அப்படித்தான் !' என்று தலையசைத்துக் கொண்டிருக்காமல் இதென்ன காலு இப்படிப் பேசுகிறான் ? — ஒரிருவர் தமக்குள் சொல்லிக் கொண்டனர் — 'வியாபாரி தலக்சந்த் இங்கு வந்திருந்தால், பெரியவர்களிடம் எப்படிப் பேசவேண்டும் என்று கற்றுக் கொடுத்திருப்பார் ...'

'காலு ! நீ இன்னும் ஒன்றுமறியாதவனாகத் தானிருக்கிறாய் !' கணவன், பாவம் வேலை செய்து உழைத்துக் களைத்துப்போய் வீட்டிற்கு வருவான், இந்தப் பெண்டாட்டி என்ன செய்வாள் தெரியுமா ...'

காலு மறுபடியும் அதை மறுத்துப்பேசினான் — 'எங்கள் வீடுகளில் பெண்களும் கடுமையாகத்தான் உழைக்கிறார்கள் ...'

டாகுர் மிகவும் மகிழ்ச்சியடைந்தார் ... 'அடேட ! நீயே புரிந்து கொண்டு வருகிறாயே ? உனக்குத் தெரியுமா ? எங்கள் குடும்பங்களில் கழுதையும் பெண்டாட்டியும் ஒரேமாதிரி என்பார்கள். நான்கு மணங்கு பாரத்தைச் சுமந்தாலும் சரி, 'பே பே' என்று கத்திக்கொண்டு மகிழ்ச்சியால் அவர்களும் கழுதையைப் போல் துள்ளிக் குதிப்பார்கள் ! அப்படிப்பட்டவர்கள் அவர்கள். சங்கர், நான் சொல்வது சரிதானே ?'

டாகுரின் வார்த்தை எல்லோருக்கும் சரி என்று பட்டது — 'பாபுஜி ! நீங்கள் சொல்வது சரிதானே ?'...

இவ்வாறு எல்லோரிடமும் அன்பு காட்டிக்கொண்டு பேசிக்கொண்டே, நல்ல வீடுகள் என்று கருதும் இடங்களில் சாப்பிட விடுக்கப்பட்ட அழைப்புகளை ஏற்றுக் கொண்டு, பொங்கல் முதலியவற்றைச் சாப்பிட்டுவிட்டுக் கடைசி நாளில் கிராமத்து ஐம்பது வீடுகளிலிருந்து வரி வசூலித்துக்கொண்டு, டாகுர் கிளம்ப முற்பட்டார். எஞ்சியிருந்த சில வீடுகளில் ஐந்து மணங்கு தானியமும் பத்து மணங்கு தானியமும் வரிக்குப் பதிலாக ஏற்றுக் கொண்டு மொத்தம் இருநூற்றைம்பது மணங்கு தானியத்தை வீட்டிற்கு அனுப்பச் சொல்லிவிட்டார். நான்கைந்து வீட்டாரிடம், இந்த ஆண்டு கொடுக்க இயலாததால், அடுத்த வருடம் கொடுத்துவிடு தம்பி, இந்த ஆண்டு உன் குழந்தைகள் பட்டினி கிடக்கவேண்டாம்!' என்று கூறியபடியே கணக்குப் புத்தகத்தில் இரண்டு எண்களைக் குறித்துவிட்டு மூட்டையைக் கட்டினார் டாகூர். அந்தக் குதிரையின் மீது மிகவும் மெல்லிய மஸ்லின் துணி போடப்பட்டது. கடிவாளம் இறுகக் கட்டிவிடப் பட்டது.

ரொம்பவும் வேண்டியவரை வழியனுப்புவதுபோல் வாசல் வரை கிராம மக்களனைவரும் வந்து டாகூரை வழியனுப்பி வைத்தனர். எல்லோருக்கும் 'ராம் ராம்' என்று வணக்கம் தெரிவித்த டாகூர் குதிரையைத் தட்டி ஓட்ட ஆரம்பித்தார். தட்டிலிருந்து ஓடும் பட்டாணி கடலையைப் போல், பறந்தது குதிரை... அதைக் கிராம மக்கள் மிகவும் ஆவலுடன் பார்த்துக்கொண்டே யிருந்தனர்.. 'அடே! பறக்குது பார்!... எல்லை வரை போய்விட்டதே! ஆமாம்! குன்றையும் கடந்து போய்விட்டது!.. அடே சபாஷ்!'

காலுவைப் போன்றவர்கள் இவ்விதம் கூறிக்கொண்டே திரும்பினர் — 'அப்பாடா! குதிரையின் வேகம்தான் என்ன? சும்மா பறக்கிறதே! எதிரே சுவர் இருந்தால் அதையும் துளைத்துக் கொண்டு பறந்துவிடும் போலிருக்கிறது!'...

டாகூரின் குதிரைகள் பறந்தன. கிராம மக்களின் குதிரைகள் திரும்பி வந்துவீட்டு வாசலில் கட்டப்பட்டன.

கணக்குப் பார்க்க ஆரம்பித்தனர் மக்கள்; மூன்று - நான்கு ஆண்டுகளாக இருந்த கொடுக்கல் வாங்கலைப் பற்றிக் கணக்குப் போட்டுப் பார்த்தான். காலு கூறினான் - 'தப்போ, சரியோ கடவுளுக்குத்தான் வெளிச்சம், அந்த வியாபாரி சொன்னது தான்!' பிறகு பதினாறு மணங்கு என்ற அளவில் தானியம் விளைந்தது. அது கணக்கில் எழுதப்பட்டது. சிலர் தம் நகைகளை

எழுதி வைத்து விட்டனர், ஏட்டில் பதித்து வைத்துவிட்டு மற்றும் சிலர் கடன் வாங்கியிருந்தனர்.... அவரும் ஒவ்வொரு வீட்டிலும் லட்டு முதலியவற்றுடன் விருந்து சாப்பாடு சாப்பிட்டுவிட்டு, நெய்யை வாங்கி நிரப்பிக்கொண்டு தன் வழியே போய்ச் சேர்ந்தார்.

பிறகு விளையாடும் திருநாளான மகர சங்கராந்தியும் வந்து சேர்ந்தது. குளிர் காலத்துப் பசுமையான பயிர்க் கதிர்களின் உடையையும் அது எடுத்துச் சென்றது. இளவேனில் மஞ்சள் விரிப்பை விரித்தது .... அதையும் பங்குனி மாதக் காற்று சுருட்டிக் கொண்டு சென்றுவிட்டது... ஒருபுறம் பழுத்து முதிர்ந்த கதிர்களின் மீது அரிவாள் பட்டது... மறுபுறம் ஹோலிப் பண்டிகையின் முரசுகள் ஒலித்தன.

மக்கள் நான்கைந்து நாட்கள் வரை அரிவாளை விட்டு விட்டனர். போரடித்தலையும் மறந்தனர். பெண்டிர் மண்-சாணம் இவற்றைக் கொண்டு ஹோலி விளையாட்டு விளையாடினர். ஆடவர் தடிகளை எடுத்துக்கொண்டு வட்டமாய் நின்றுகொண்டனர். குன்றுகளிலும், கிராம வெளிகளிலும் முரசொலிகள் 'தன் தன்' என்று ஒலித்தன.

ஹோலிப் பண்டிகையின் ஜ்வாலைகள் கொழுந்து விட்டெரியத் துவங்கின.... ஹோலிச் சாயங்களை எல்லோர் பேரிலும் வீசி விளையாடிக் கொண்டிருந்த மக்களைச் சுற்றிலும் ஜ்வாலைகள் பளிச்சிட்டன — 'போகிறது ஹோலி! ... போகிறது ... அடடா அடடா!'

கோதுமையும், பருப்பும் களத்து மேட்டிற்கு வந்துவிட்டன. ஈசல்களைப்போல் ஓடிவந்து கூடிவிட்டனர் பிராம்மண விதவைகள். அவர்களுக்கு இரண்டு அல்லது நான்கு சேர் தானியம் அளிக்கப்பட்டது. கடைக்காரர்களின் பத்திரங்களில் எழுதப்பட்ட அளவு தானியம் அவர்களுடைய குதிர்களில் கொண்டு சேர்க்கப்பட்டது. எஞ்சியவற்றைச் சாம்பல் கலந்து கிடங்குகளில் வைத்துவிட்டனர். காலு-கோதர் இவர்களைப் போன்ற முக்கால்வாசி கிராம வாசிகள் ஒன்றையும் கலக்காமலேயே வைத்தனர் — 'சாம்பலைக் கலந்து வைத்தாலும் வைக்காவிட்டாலும் சாப்பிடத்தானே வைக்கிறோம்!'

கோடை நாட்கள் ஆரம்பித்தன. பசியுடன் யாத்திரை செய்து கொண்டிருக்கும் சாதுமகாத்மாக்களின் கூட்டம் கிராமங்களில் போய் ஆங்காங்கே ஒட்டகங்கள் யானைகளுடன் கூடாரம்

போட்டுக்கொண்டு தங்க ஆரம்பித்தது. மக்களுக்கு உபதேசிக்கவும் தொடங்கியது-'தானமளிப்பது தான் கை கொடுத்துதவும். இங்கு கொடுப்பது அங்கு உதவும் ...புண்ணியம் செய்யச் செய்யப் பாவம் விலகிவிடும் —' இவ்விதம் ரொட்டியும் பால் பாயசமும் சாப்பிட்டுக் கொண்டே காலத்தைக் கழித்து வந்தது அந்தக் கூட்டம். இறுதியில் மக்களுக்கு ஆசி அளிக்கும் முறையில் மக்களின் நெற்றியில் திருநீற்றையும் பூசி வந்தது. சாதுக்களின் கூட்டமும் ஒவ்வொன்ருக காசி, வட மதுரை பரோடா முதலிய இடங்களுக்குச் சென்றுவிட்டது.

சிற்சில இடங்களில் திருமண நிச்சயம் நடந்துகொண்டிருந்தது. ஷெனய் வாத்தியம் முழங்கிக் கொண்டிருந்தது. ரண்சோட் போன்ற செல்வந்தர்கள் என்று கருதப்படும் வீட்டுப் பெண்கள் பெட்டிகளிலிருந்து தங்க நகைகளையும், புத்தாடைகளையும் எடுத்து அணிந்து கொண்டனர். மகிழ்ச்சியுடன் இங்குமங்கும் நடமாடத் துவங்கினர். மற்றும் சிலர் கண்களில் மையிட்டுக் கொண்டு களித்தனர். திருமணம் நடக்கும் மூன்று தினங்கள் வரை பெண்கள் இளமையின் மதத்தில் மூழ்கியிருந்தனர்.... கிழவர்கள் அபினியைக் கரைத்துக் குடித்தனர் —நான்காம் நாள்— இயந்திரத்தின் மீது தலைப்பாகையை வைத்து விட்டுக் காலு கூறினன்— 'திருமணம் முடிந்துவிட்டது. மயிலும் கொம்பில் எறிக்கொண்டது.'

கிழவன் பரமாவின் மரணத்துப் பன்னிரண்டாம் நாள் திருமணத்தையும் தூக்கியடித்துவிட்டது. சுற்றத்தார் எல்லோருக்கும் அழைப்பு விடுக்கப்பட்டது. எழுபத்தைந்து வயதில் இறந்த அந்தக் கிழவனுடைய கடைசிக் கடன்களை முடிக்க இரண்டு மூன்று மணங்கு நெய் தீர்ந்தது. சேட் கூறியது போல் வந்திருந்த மூவாயிரம் மக்களும் இருபது மணங்கு நெய்யை விழுங்கிவிட்டு மீசையை முறுக்கிவிட்டுக் கொண்டு சென்றனர்.

கோடைகால வெயில் காய்ந்தது. வைகாசியின் சுழல் வீச ஆரம்பித்தது. ஆங்காங்கு மக்கள் மணமான பெண்ணைப் புக்ககத்திற்கு அழைத்துச் சென்றனர். பாணர்கள் சதங்கை கட்டப்பட்ட குதிரைகளுடன் சிற்சில கிராமங்களில் மக்களை முகஸ்துதி செய்ய ஆரம்பித்தனர் — 'நன்ருக இரு சாமி! கொண்டு வா, உன் மகனுக்கு என்ன பெயர்? அடே! நீயா! உன் அப்பாவிற்கும் அம்மாவிற்கும் நல்ல காலம் வரப்போகிறது. கச்ச நாட்டுப்

பாலைவனத்தில் வாழ்ந்தாலும், பயங்கர நாட்களில் உயிருட னிருக்க நேர்ந்தாலும் பஞ்ச காலத்திலும் மூன்று குழந்தைகளைப் போர்த்தும்படியான ஒரு புடவை தாப்பா! நாள் முழுதும் கறந்து பாலை ஆறாகப் பெருகவிடும் எருமை தாப்பா! — கிராமத்திற்கு நான் போனவுடனேயே யானைக் குட்டி வந்திருக்கிறது, ஓடிவா! என்று சொல்லும்படியான எருமையைக் கொடுசாமி ...' இவ்விதம் ஆளுக்கேற்ற தாளம் போட்டுக்கொண்டே பாணர்கள் கிராமம் கிராமமாகச் சென்றனர்.

பாணர்களின் குதிரைகளுடைய சதங்கை ஒலி மறைந்ததோ இல்லையோ, விதூஷகர்களின் கொம்மாளம் ஆரம்பித்துவிட்டது— 'பாஹா ஹா ஹ... தாதை... தை தை!'

'ராஜா பர்த்ருஹரி—ராணி பிங்களா' நாடகம் ஒரு கிராமத்தில் நடந்தது. 'கோபிசன்', 'சுதரா ஜய்சிங்', 'ஜஸ்மா ஓட்னீ' போன்ற நாடகங்கள் மற்றும் சில இடங்களில் நடந்தன. ஆனால் மக்களுக்கு 'ரங்லா-ரங்லீ' (விதாஷகர்)தான் மிகவும் பிடித்திருந்தனர். அவர்களுடைய கொனஷ்டைகளும், சேஷ்டைகளும்தான் அவர் களுக்கு மிகவும் பிடித்திருந்தன. ரங்லியின் கோபம், நள்ளிரவில் அவளுடைய நடையுடைகள், சக்களத்திகளின் போராட்டம், ரங்லா அயல் வீட்டுப் பெண்ணைக் கண்டு மயங்குதல் போன்ற வற்றை மக்கள் மிகவும் ரசித்தனர்.

ராமா போன்றவர்கள் வாய்விட்டுக் கூறவும் செய்தனர் — 'இந்த ரங்லாவும் ரங்லியும் தான் மக்களுடைய உள்ளத்தைக் கவர்ந்திருக்கிறார்கள். அவர்களுடைய நடிப்புத்தான் ரசமாக இருக்கிறது!'

'ஏன் ரசமாக இருக்காது?' காலு கூறினான் ...' உன் வார்த்தை எனக்கு பிடிக்கிறது. என் வார்த்தை உனக்குப் பிடிக்கிறது — ரங்லியின் கன்னத்தை ரஸ்லா முத்தமிடுகிறான். ஆனால் நம் உதடுகள் நனைந்து காணப்படுகின்றன. இல்லையா? அந்தப் பெண்களின் கன்னங்கள், யாராவது போய்ப் பாருங்கள்! ரஸ்லியின் கன்னங்களல்ல, அந்தப் பெண்களின் கன்னங்கள்தான் முத்தமிடப்பட்டிருக்கும்! ...'

விதூஷகர்களின் தலைவன் ஆரம்பித்தான் — 'மாதா கீ ஜே! எல்லோரும் சொல்லுங்கள்!' பிறகு கேட்டான் —'லட்டு எங்கே?'

இவ்வாறு லட்டுடன் விருந்து சாப்பாடு சாப்பிட்டுக்கொண்டு, கிராமத்தில் யாருக்காவது குழந்தை பிறந்தால் அவர்களுக்கு

வாழ்த்துக் கூறிப் பாத்திரங்களைப் பரிசாகப் பெற்றுக்கொண்டு, பெண்களிடம் புடவைகள் வாங்கிக்கொண்டு கிராமம் கிராமமாகச் சென்றுகொண்டிருந்தனர். இந்த விதூஷகர்கள், கிராமங்களெங்கும் ஒரே ஒலிதான் கேட்டது "தா தை தை! தத் தைக்!"

சிற்சில கிராமங்களில் போய் பிசாசு என்று சொல்லிக்கொண்டு வேறு மக்கள் அட்டகாசம் செய்தனர். அந்தத் தேவதை, இந்தத் தேவதை என்று சொல்லிக்கொண்டு ஒன்றுமறியாத மக்களுக்குள் புகுந்துகொண்டனர். இவ்விதம் ஐந்தாறு நாட்கள் நடக்கும். 'மோதி சாடா தேவ், சீ தலா மாதா' — என்று ஏதேதோ பெயர் சொல்வார்கள். மிருதங்கம், மத்தளம் இவற்றின் ஒலியில் மயங்கிய மக்கள் ஆங்காங்கே பள்ளம் தோண்ட ஆரம்பித்தனர் சிலர் வளையல்களை உடைத்தனர், மற்றும் சிலர் சட்டைகளைக் கிழித்தனர்... அதுவும் தாமாகவே... தேங்காய், ஆடு, கோழி முதலியவற்றுடன் அவர்களும் விடைபெற்றுச் சென்றனர்.

எல்லோரும் வந்து போயினர். கழைக் கூத்தாடிகளும் செப்பிடு வித்தைக்காரர்களும் ஏன் சும்மா யிருக்கவேண்டும்? இவர்களைத் தவிர மகுடி ஊதியபடி பாம்பாட்டிகளும், குடு குடுப்பையை ஆட்டிக்கொண்டு நம் வருங்காலத்தைப் பற்றிக் கூறும் குடு குடுப்பாண்டிகளும் கிளம்பிவிட்டனர். ஈட்டி, வாள், அம்பு முதலியவை செய்து கொடுக்கும் தொழிலாளி வேறு வீடு வீடாகச் சென்று வார்த்தைகளை நீட்டி நீட்டிப் பேசியபடி கேட்க ஆரம்பித்தனர் — 'அம்மாவ் மருமகள் வருவாள். லட்சுமி மாதிரி! ரொட்டியும் கறியும் கொடுங்க! ...'

முடிவில் வைகாசிச் சுழலும் வந்துவிட்டது. பழைய மரங்கள் முறிந்தன. சில கிளைகள் மட்டும் முறிந்தன. சில வீட்டுக் கூரைகள் பறந்தன. வயல் வரப்பில் முளைத்திருந்த புல் இருந்த இடம் தெரியவில்லை. புதர்களிலிருந்து முட்களை எடுத்து எங்கும் வீசி எறிந்தது சுழற் காற்று!...

உலர்ந்த மரத்தின் இலைகளை ஆகாய வெளியில் பறக்கச்செய்து, நிலத்திலுள்ள தூசிகளால் ஒரு மேக மண்டலமே தயார் செய்துவிட்டது காற்று. தன் முழு சாமர்த்தியத்தையும் காண்பித்தபடி ஆதவனின் ஒளியைக் கூட மழுங்கச் செய்தது சுழல். பிறகு கீழ் வானத்தை நோக்கி மறைந்துவிட்டது —

ஆடி மாதம் வந்துவிட்டது.

தேவாவின் மகன் ரத்தன் அங்கு வந்தான் ... மால்வாவின்

பக்கம் திரும்பியபடியே அவன் தன்னுடன் பயணம் செய்து கொண்டிருக்கும் ஆடு மாடுகளை ஓட்டிக்கொண்டே பத்திரிகையைப் போல் புதுப் புதுச் செய்தியளித்தான் — 'நான் வெள்ளையனை என் கண்ணால் பார்த்தேன். ரயில் நிலையத்தில் உட்கார்ந்திருந்தான். ஐந்தணா கொடுத்துவிட்டு டிக்கட்டு வாங்கினான். ஐம்பது மைல் பயணம் செய்தான்!'

பலர் கேட்டனர். ஆனால் கேள்வி ஒன்றேதான் — 'ரத்தன் தம்பி! கடலைக் கடந்தா அவன் வந்திருக்கிறான்? மனிதனைப் போலத்தானே இருக்கிறான்? ... 'மேடம்' எப்படியிருக்கிறாள்? கொஞ்சம் புரியும்படி சொல்லேன்!'

ரசிகர்களின் ஈடுபாடு ரத்தனுக்கு மதுபானமருந்திய போதையை உண்டு பண்ணியது. ஒன்றுக்கு இரண்டாகப் பேச ஆரம்பித்தான் — 'அம்மாடியோ! வெள்ளைக்காரனா? முப்பத்தாறு கலைகளும் அவனுக்குத் தெரியும்.... தேவதையைப் போல அழகாயிருக்கிறான் — குங்குமத்தால் செய்த மாதிரி! மேடம்! அம்மாடி! கந்தருவப் பெண்தான். நடந்தால் குங்குமம் தெளித்தாற்போலிருக்கிறது. பேசினால் மலர்கள் உதிர்வது போலிருக்கிறது. கொஞ்சிக் கொஞ்சிப் பேசுவதைக் கேட்டால் தெரியும்! ...'

காலு வாய் திறந்து சொல்லியும் விட்டான்— 'ரத்தன்! மேடம் இருக்கிறாளே, அவளைப் பார்க்க நீ கொடுத்துவைத்து விட்டாய்! உன் பிறவியே கடைத்தேறிவிட்டது போ!' அடுத்த கேள்வி ஒன்று கேட்டுக் காலு வெள்ளையருடைய அழகு அந்தஸ்து எல்லாவற்றையும் ஒரு காசுக்குக் கூட மதிப்பில்லாததாக்கி விட்டான்— ரத்தனுடைய பெருமையையும் தவிடு பொடியாக்கி விட்டான் — 'ரத்தன் தம்பி! இந்த வெள்ளையர் வெளியே போனால், தண்ணீரால் கழுவிக்கொள்ள மாட்டார்களாமே, இது உண்மைதானா?'— ரத்தன் ஒப்புக்கொள்ள நேர்ந்தது— 'ஆமாம் என் கடைக்காரன் சொன்னான் — அது உண்மைதானாம்! இதைக் கூறிவிட்டு மைதானம் முழுவதும் 'தூ தூ தூ' என்று அவன் துப்பிவிட்டான்.

'அந்த அசிங்கம் பிடித்தவர்களைப் பற்றிய பேச்சை விடு. நாம் வண்டிகளைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தோமல்லவா?'

'அதை என்ன சொல்வேன்! மதம் பிடித்த எருமையைப் போல இருக்கிறது எஞ்சின். எப்படி ஓடுகிறது தெரியுமா .... அப்படி ஒரு ஓட்டம் ஓடுகிறது!'

'நம்ம ஐயா டாகுர் இல்லே, அவருடைய குதிரை மாதிரியாவா?' ராமா கேட்டான்.

ரத்தன் சிரித்தான் — 'உன் ஐயாவுடைய குதிரையாவது? அது எம்மாத்திரம்? ஆனால் வயிற்றிலே இருக்கிற தண்ணீர் கூட குலுங்காதே! ஆடாமல் அசையாமல் அல்ல, ஓடுது?'

'சும்மாப் பறக்குதோ!' காலு கேட்டான். ரத்தன் ஒன்றும் புரியாமல் திணறினன்— 'உங்களுக்கு நான் எப்படிச் சொல்வேன்? ... இந்தக் கட்டிலின் அகலத்திற்கு இரும்புத் தண்டவாளங்கள் இருக்கின்றன. அதன் மேல் வண்டி ஓடுகிறது. நம் கல் இயந்திரத்தைப் போல் சுழல்கின்றன. சக்கரங்கள் எல்லாம் தண்ணீர் வெள்ளமாகப் பாய்வது போல் 'சுக் சுக்' என்று சத்தம் போட்டுக்கொண்டே போகிறது. கண் மூடித் திறப்பதற்குள் பத்து மைல் தூரம் போய்விட்டோம்! ....'

இவ்விதம் வெள்ளையரையும் ரயில் வண்டியையும் பற்றிப் பேசிக்கொண்டே ரத்தன் மால்வா நாட்டு நீண்ட பயணத்தைக் கழித்துவிட்டான்.

தலைக்கு மேல் மேகங்கள் கூட்டம் கூட்டமாகப் பயணிகளைப் போல் தென்பட்டன.

ரத்தனுடைய கூடாரத்திலிருந்து திரும்பிய ராமா காலு, கோதர் முதலியவர்களிடம் கூறினன் — 'ரத்தனுடைய அலமாரியில் உப்பு, துணி, தேங்காய் எல்லாம் நிறைந்திருக்கின்றன. ஆனால் ஆகாயம் எனும் அலமாரியில் முத்துக்கள் தான் மினிர்கின்றன!'

'அதுவும், உண்மையான முத்துக்கள்!' கோதர் கூறினன். ஒரு கணத்திற்குப் பிறகு அவன் சொன்னன்— உலகம் முழுவதும் நமக்குக் கொடுப்பதற்குத் தயாராக ஓடி வருகிறது. ஆனால் நாம் மேக ராஜாவிடம்தான் கேட்கிறோம். அவனிடம்தான் நாம் கேட்போம்!'

'உழவனை நம்பி ஒரு கோடி! என்று யாரோ சொன்னர்களே, அது தவறில்லை தம்பி!' சங்கர் கூறினன்.

'அப்படியிருந்தும் உழவன்தான் வருத்தமாக இருக்கிறன். கடவுள் செய்வது நீதமா அநீதமா என்றுதான் புரியவில்லை! பிறந்த நாள் முதல் கடும் உழைப்பு! சுகம் என்பதே கிடையாது. சாப்பிட நல்லது கிடையாது, பெண்டாட்டியோடு சுகமாக வாழ்ந்தோம் என்று கிடையாது!—'

காலுவின் வார்த்தைகளுக்கிடையே ராமா கூறினன் —

'போடா பைத்தியக்காரா! நாம்தான் உலகைக் காப்பவர்கள் என்று சொல்கிறர்கள்! அந்த மிடுக்கான ஆசாமி ஒருத்தர்

சொன்னாரே— அம்மா குழந்தைகளைப் பற்றிக் கவலைப்படுவது போல், விவசாயிக்கும் உலகத்தைப் பற்றி கவலை — என்று உனக்கு நினைவில்லையா ?'

காலுவிற்குச் சிரிப்பு வந்தது. 'காப்பவர்கள் என்று சொல்லாதே, நிலத்தின் சுமையைத் தாங்குபவர்கள் என்று சொல்!' பிறகு சங்கர், கோதர் முதலியவர்களின் பக்கம் திரும்பிக் கேட்டான் — 'நான் சொல்வதில் என்ன தவறு இருக்கிறது, சொல்லுங்கள்! எருது எத்தனை வெல்லம், கோதுமை, நெய் எல்லாவற்றையும் சுமந்து சென்றாலும் அதன் வாயில் மட்டும் வைக்கோல் தானே இருக்கிறது? அதே மாதிரிதான் நம் நிலையும்!'

காலுவின் பேச்சு மக்களுக்கு அல்வாத் துண்டைப் போல் இனித்தது — 'உண்மைதான் தம்பி! எத்தனையோ கோதுமையை விளையவைக்கிறோம், ஆனால் எவனோ தின்பதற்கு! ஆனால் நமக்குத் தின்னத் தினையும், அதிகம் கிடைத்தால் சோளமும்தான்!'

ராமாவும் தன் பகைமையை மறந்துவிட்டான் —'இந்த எருமைகள் கறக்கின்றன. எருமைகள் நம்முடையவை. இந்தப் பால் பாத்திரங்கள் கடைக்காரனுடையவை!'

காலு கூறினான் — 'ராமா, ஒரு பழமொழி இருக்கிறது தெரியுமா? வெல்லம் இனிப்புத்தான், அதனால் முழங்கால்களுக்கு என்ன பயன்?'

எல்லோரும் சேர்ந்து கூறினர் — 'நான் சொல்வது சரிதான்— நாம் நிலத்தின் சுமையைத் தாங்குபவர்கள்தான்!' ஆனால் காலுவைப் பொருத்த வரையில் நிலத்தின் சுமையை மட்டுமல்ல. வாழ்க்கையின் சுமையையும் அவன் தாங்க வேண்டி வந்தது. அவன் உள்ளத்தில் அந்தப் பாரம் இருந்தது. ராஜியின்றி அவனுக்கு வாழ்க்கையே சுமையாக இருந்தது. ஏன் நாம் வாழ்ந்து கொண்டிருக்கிறோம் என்றே அவனுக்குப் புரியவில்லை — அப்படியிருந்தும் உயிர் வாழ்ந்து கொண்டுதானிருந்தான் — வாழ வேண்டியிருந்தது.

உதவி செய்யும் சாக்கில் ராஜியின் மாமியார் வீட்டிற்குச் சென்று அவளுடைய முகத்தைப் பார்க்க முடிந்தது. அந்த ஒரே ஒரு ஆறுதல்தான் அவனுக்குக் கிடைத்தது. அங்கு போய் அவளுடன் இரண்டு வார்த்தைகள் பேச முடிந்தது. மிகவும் அரிதான மரியாதையுடன் வயிற்றுப் பசியுடன் உள்ளத்துப் பசியும் ஒரு மணி நேரத்திற்கு ஆறி வந்தது.

ஆனால் இரண்டு மூன்று தினங்களுக்குப் பிறகு மறுபடியும் வீடு திரும்பும்போது, அதே அதிருப்தி, அதே வேதனை. கால்கள் முறிந்துவிட்டாற் போன்ற அதே நிலை .... உள்ளத்திலிருந்து எழும், அதே பெருமூச்சு ! ... அவன் கூறினன் — 'வீட்டிற்குள் ; வெளியே, எங்கும் நிலத்தின் முதுகில் சுமையே சுமைதான் !'

## 27

## நினைத்துக்கொள்வதுதான்

வைகாசிச் சுழல் அடங்கிற்றோ இல்லையோ ஆனி மாதத்து வெயில் தகிக்க ஆரம்பித்துவிட்டது. பகல் நேரம் ஆக ஆக நிலத்திலிருந்து நீராவி கிளம்ப ஆரம்பித்தது. பகல் நேரத்தில் வெளியே கிளம்ப ஒருவருக்கும் தைரியம் கிடையாது.

கோடை நாட்கள் சோம்பலாக்கக் கூடியவை என்று சொல்லப்படுகிறது. ஆனால் ஆனி மாதத்தில் ஒருவரும் சோம்பித் திரியவேயில்லை. எரு போட்டுக் கொண்டிருந்தனர் சிலர்—மற்றும் சிலர் வீட்டின் ஓடுகளை மாற்றிக் கொண்டிருந்தனர். இன்னும் சிலர் வீட்டில் புதிய சுவரை எழுப்பிக் கொண்டிருந்தனர். ஒருவன் அடுப்புக்கரி வாங்கி வருவதில் முனைந்திருந்தான். பெரிய குடும்பத்தைச் சேர்ந்த சங்கர் போன்ற சுகவாசி கூட இடுப்பில் நூலைக் கட்டிக்கொண்டிருந்தார். கையில் சக்கரம் சுழன்றுகொண்டிருந்தது.

பகல் முழுதும் கூடையில் எடுத்து வரும் அளவிற்கு எரு கிடையாது. ஆகையால் பலிக்கும் அதிக வேலை யிருக்கவில்லை. இரவில் வேலை முழுவதையும் செய்து முடித்துவிட்டு ஆடி மாதத்து முதல் நாளுக்காக அரிசி தயார் செய்ய உலக்கையைக் கையில் எடுத்துக்கொள்வாள். நள்ளிரவு வரை ‘டங் டங்’ என்று உலக்கையைப் போடும் ஒலி கேட்கும். ஒவ்வொரு வீட்டிலும் மிளகாய்ப் பொடி, மஞ்சள் பொடி முதலியவை இடிக்கப்படும்.

காலு தன்னந்தனியாக இருந்தான். இரண்டு வீட்டு வேலைகளைக் கவனித்துக் கொண்டாக வேண்டும். தன் வீடு, மாமியார் வீடு, இரண்டு வீடுகளுக்கும் எரு சேர்த்தல், விறகு வாங்கிக்கொடுத்தல், ஓடுகள் மாற்றுதல் — இத்தனை வேலைகளைச் செய்தாகவேண்டும். அவன் உதவிக்காக ஒருவனை யழைத்துக்கொண்டான். வாடகைக்கு ஒருவருடைய ஏர் கலப்பையையும் வாங்கி வந்தான்.

பத்தே நாட்களில் எல்லா வேலைகளையும் அவன் செய்து முடித்துவிட்டான். பதினொன்றும் நாள் ரொட்டி சாப்பிட்டபடியே, கத்தியைத் தயாராக வைத்துக்கொண்டு — ‘மாமியாரின் வீட்டிற்குப் போய் வரட்டுமா?’ என்று பலியைக் கேட்டான்.

பலிக்குப் புரிந்துவிட்டது. ‘அப்படியா சேதி? கழனிக்குத்தான் போகிறீர்களோ என்று நினைத்தேன்!’ அவளுடைய குரலைவிட பலியின் உருவமும் கண்களும் அதிகக் குரூரமாக இருந்தன.

'கழனிக்கு வேலை தேடப் போகவா வேண்டும்? ஆனால் அவர்கள் சொல்லியனுப்பி யிருக்கிறார்களே —'

பலியால் சொல்லாமலிருக்க முடியவில்லை — 'அவர்கள் — அவர்கள்! அந்த மினுக்கிதான் கூப்பிட்டாள் என்று சொல்லுங்களேன் —'

காலு மாமியார் வீட்டிற்குச் செல்வது பலீக்குப் பிடிக்கவில்லை என்பதை வெகு நாட்களாகக் காலு அறிந்திருந்தான். காரணத்தை இன்று பலீயே வாய் திறந்து கூறிவிட்டாள் — 'உங்களுக்கும் அவளைப் பார்க்காமல் இருக்க முடியாது. இந்தப் பதினைந்து நாட்களை —'

'அனுப்ப விருப்பமில்லா விட்டால் தெளிவாகச் சொல்லிவிடு — போகவேண்டாம் என்று சொல்லிவிடு. ஆனால் யோசிக்காமல் ஏதாவது பேசாதே.... இந்தா - கத்தியை எடுத்து வை.' என்று கூறியபடியே கத்தியை மேலேயிருந்த முளையில் தொங்க விட்டான். அருகேயிருந்த மாவரைக்கும் இயந்திரத்தின் மீது தலைப் பாகையை வைத்துவிட்டுக் கூறினான் — 'உன் பிறந்த வீட்டிற்கு எவ்வளவு உதவி செய்கிறேன் என்று நன்றியுடனிருப்பதை விட்டு விட்டுக் குத்திக் காண்பிக்கிறாய்! சரி, கிடக்கட்டும் போ!'

முணு முணுத்தபடியே வாசற் திண்ணையில் வைக்கப்பட்டிருந்த உக்காவை நெருப்பினருகே கொண்டு வந்தான் — 'அவள் கூறுவதும் சரிதான். இரண்டு வருடத்து எரு வயலில் சேர்ந்தால் இருபத்தைந்து மணங்கு அதிகமாக விளையுமே! குழந்தைகளுக்கும் தினைக்குப் பதிலாகச் சோளம் சாப்பிடக் கிடைக்கும்!' உக்காவை நிரப்பிக் கொண்டு வெளியே திண்ணையில் உட்கார்ந்தான் காலு— 'இன்று சொன்னதை முன்னமே சொல்லியிருக்கக் கூடாதா? இந்த மாதிரி அன்பிற்காக நான் அப்போது துடிக்கவில்லையே! வருடம் முழுவதும் இரண்டு மடங்கு அதிகமாக உழைத்திருப்பேனே!'

முதல் தடவையாக பலீ காலுவை இவ்வளவு நேரம் பேச அனுமதித்திருந்தாள். ஆனால் என்ன செய்ய முடியும்? ஒருபுறம் காலு கூறியதும் சரிதான்; மறுபுறம் அவளுடைய கருத்தும் தவறல்ல. அதனால்தான் அவள் தன்னுடைய ஆத்திரத்தையும் பொறுமையையும் பரிகாசத்துடன் கலந்துவிட்டாள். பலகையை ஊன்றியபடியே அவள் கேட்டாள் — 'நெஞ்சின் மேல் கையை வைத்துக்கொண்டு சொல்லுங்கள். உங்களுக்கும் ராஜிக்கும் ஒருவிதத் தொடர்பும் இல்லையா?'

ஓரிரு கணங்கள் காலு பிரமிப்படைந்து நின்று விட்டான். பிறகு சிரித்தான் — 'நீ கூடப் பைத்தியக்காரர்களைப் போல் பேசுகிறாயே. எனக்கும் ராஜிக்குமிடையே பார்க்கப் போனால் எவ்வளவோ இருக்கிறது. பத்தாண்டுகள் வரையில் எங்கள் திருமணம் நிச்சயமாகியிருந்தது. ஆனால் மறுபடியும் பார்க்கப் போனால் நாங்களிருவரும் அண்ணன் — தங்கையைப் போல் தானிருக்கின்றோம்-' இந்தச் சூழ்நிலையில் வருத்தம் வந்து கலந்து கொண்டது — 'நம்பிக்கையில்லை யென்றால் அவள் பேரிலேயே ஆணையிட்டுச் சொல்கிறேன்.' பலீ மௌனமாக சமாளித்துக் கொண்டாள். அவள் பேசாமலிருப்பதைக் கண்ட காலு மேலும் பேச ஆரம்பித்தான் — 'அது மட்டுமல்ல, நான் ஒரு தடவையாவது அவளைக் கேலி செய்து அவளுடன் விளையாட்டாகப் பேசியிருந்தால் அந்தத் தெய்வம் என்னைக் கேட்கட்டும்! .. என் தாயின் மீது ஆணையிட்டுச் சொல்கிறேன்! .... இப்போது சரிதானே!'

இந்தத் தடவையும் பலீ ஒன்றும் பேசவில்லை. தலையைக் குனிந்து கொண்டு கால் கட்டை விரலால் கல்லைக் கிளறிக் கொண்டிருந்தாள்.

'இன்னும் நம்பிக்கை வரவில்லை, அப்படித்தானே? நெய் விளக்கை எடுத்துக் கொண்டு வா. பஞ்சாயத்துத் தீர்ப்பளிப்பவர்களுடைய முன்னிலையில் எடுக்கிறேன் —சபத்தை — நீ சொல், எடுக்கட்டுமா? எடுக்காவிட்டால் எனக்குக் கடவுள் —'

பலீ கோபமடைந்தாள், இடையில் பேசினாள் — 'போதும் நிறுத்துங்கள்! சத்தியம் பண்ண ஆரம்பித்துவிட்டீர்கள். ஒரு வார்த்தை கூடக் கேட்கக் கூடாதா என்ன? எழுந்திருங்கள். நேரமாகிறது. பத்து மைல் தூரம் நடக்கவேண்டும்!'

காலின் மேல் காலைப் போட்டுக்கொண்டு உக்கா பிடித்த படியே காலு எதிரேயிருந்த நிலத்தைப் பார்த்தான். 'ஊஹூம்! வேண்டாம்!'

பலீ தலைப்பாகையை அவனுடைய மடியில் திணித்தாள் — 'உம்! எடுத்துக்கொண்டு கிளம்புங்கள்!'

'நீ உயிரையே விட்டாலும் போகமாட்டேன். இன்று போக மாட்டேன். வேண்டுமானால் நாளைக்குப் பார்த்துக்கொள்ளலாம்!'

'சரி அப்படியானால் அந்தக் கூலிக்குப் பார்க்கும் வேலையையாவது பார்த்தால், கொஞ்சம் கவலையாவது தீரும்!'

'என்னை விடேன்! போகிறேன்!'

காலு வருத்தத்துடன் இருந்ததைக் கண்டுதானே, அல்லது காரணமின்றியோ, பலீ பிடிவாதம் செய்யாமல் திண்ணையின் மீது கத்தியைச் சார்த்தி வைத்துவிட்டு உள்ளே சென்று விட்டாள் — இனிமையாக முணு முணுத்துக்கொண்டு தானிருந் தாள் — 'அப்பாடா! எவ்வளவு ரோசக்கார மனிதனப்பா!... ஒரு வார்த்தை கூட கேட்க முடியவில்லையே!....'

வீட்டில் உட்கார்ந்திருப்பது காலுவிற்கும் ஆகி வருவதில்லை. தலைப்பாகையைக் கட்டிக்கொண்டு கத்தியை எடுத்துக்கொண்டு நதிக்கரையை நோக்கிப் புறப்பட்டான் —

வழியெல்லாம் ஒரே யோசனை, ஒரே கேள்விதான் — 'அவளி டம் (பலீயிடம்) எனக்கும் ராஜிக்கும் ஏதோ தொடர்பு இருக் கிறது என்று சொன்னவர் யார்? .... அவளுக்காகத்தான் மாமி யார் வீட்டைச் சுற்றி வருகிறேன் என்று யார் அவளிடம் சொன்னவர்? அப்படி எனக்கும் ராஜிக்குமிடையே என்ன உறவு இருக்கிறது? அதனால்தானே 'நெஞ்சில் கை வைத்துச் சொல்லுங் கள்.' என்று பலீ என்னைக் கேட்டாள்.'

காலு சிரித்தான், ஆனால் அது வறண்ட சிரிப்பு — உண்மையில் மனம் விட்டு நான் அவளிடம் பேசியிருக்கிறேன். பார்க்கப் போனால் எங்களுக்குள் எவ்வளவோ இருக்கிறது ... ஒரு வருடத் திற்குள் அவள் கைம் பெண்ணாகி விட்டாலும் சரி, எனக்குக் குழந்தை பிறக்காமலிருந்தால், அவளுக்குப் புத்தாடை அணி வித்து விடுகிறேன் பார்! நாநாவுடன் நடந்தாற்போல் சண்டையே மூண்டாலும் சரி, அம்மாவிற்குக் கொடுத்த வாக்கு முறிந்தாலும் சரி ... நிறைவேறாத என் ஆசைகளைப் பூர்த்தி செய்துகொண்டு விடுவேன்! இளமையின் கனவுகளை நனவாக்கிக் கொள்கிறேன் ... நாக்கில் நீர் சுரந்தாற் போல் பேச ஆரம்பித்தான் — 'என்ன செய்வேன். ராஜியின் தாய் ராஜியைத்தான் பெற்றிருக்கிறாள்! ராஜியைப் போல் என்னருகே ஒரு பெண் வேண்டும்!' — எதிரே யுள்ள குன்றின் மீது தன் பார்வையைச் செலுத்தியபடி அவன் கூறினான். 'இந்தக் குன்றுகளைத் தகர்த் தெறிந்து சமவெளி யாக்கி விடுவேன், நதிகளைத் தடுத்து நிறுத்திக் குளங்களாக்கு வேன் — ஆங்காங்கே மாமரங்களைப் பயிர் செய்வேன். கிணறு கள் வெட்டுவேன் .... கானகத்தைப் பூங்காவாக அமைத்து விடு வேன் ... ஆனால் அதெல்லாம் எப்படி முடியும் ... ஒரே ஒரு ராஜி கிடைத்தால் ... காலு பெருமூச்செறிந்தான் — அந்த நாள் எப் போது வரப்போகிறது?'

நதிக் கரையில் ஊற்றெடுத்துத் தண்ணீர் குடிக்கத் திரும்பிய காலு சுய உணர்விற்கு வந்தான் — 'இப்படி வேறு நீ நினைக்கிறாய். ஆனால் இரண்டு பெண்டாட்டிகளின் வருத்தத்தைப் பற்றிச் சிந்தித்துப் பார். கந்தல் துணிகளை வைத்துக்கொண்டு பட்டாடை உடுத்திக் கொள்ளும் கற்பனையில் திளைக்கிறாயே! சக்களத்தி வேறு வந்துவிட்டால் நீங்கள் இருவரும் ஒரு கவளம் சோறு தின்னப் பார்த்துக் கொண்டிருப்பாளா அவள்? நாநாவைப் பார்க்கவில்லையா? இரண்டு மனிதர்களுக்கெதிரே உட்காரத் தகுதியுள்ளவனாக இருக்கிறானா? — உதையும் அடியும் கொஞ்சமாகவா கொடுக்கிறான். இருவரில் ஒருவருடைய உடலின் எலும்புகளாவது நொருங்காம லிருக்கின்றனவா? கடிவாளமில்லாக் குதிரையும் அடக்குவாரற்ற பெண்ணும் ஒரு மாதிரிதான் — உன் அம்மா உன்னிடம் வாக்கு வாங்கிக்கொண்டாளே, காரணமில்லாமலா அப்படிச் செய்தாள்? அவளை ஏன் எடுத்துக் காட்டாக ஏற்கக்கூடாது? கடவுளின் அருளால் நீ பிறந்தாய். இரண்டு பெண்டாட்டிகளைப் பற்றிய நினைவையே மறந்து விடு. அசட்டுப் பையனே! கணவனுடைய வேட்டியைத் துவைப்பதில் கூட இருவரும் சண்டையிட்டுக் கொள்வார்கள். நீ என்ன செய்வாய் சொல். இந்தப் பழையவளைத் (பலீ) துண்டு துண்டாக வெட்டினாலும் உன்னை விட்டு விட்டுப் போகமாட்டாள் ... ஆமாம்! ....'

'பாவம் அவள் மட்டும் கெட்டவளா என்ன? கொஞ்சம் துடுக்காகப் பேசுவாள். அவ்வளவுதான். வேலை செய்வதில் ஏழு பெண்களை ஒன்றாகச் சேர்த்துப் பண்ணியதுபோல் அப்படி உழைப்பவள்... ராஜியிடம் மட்டும் அப்படி என்ன அழகு ஒழுகுகிறது? உடம்பில் இளமையின் இரத்தம் ஓடுகிறது. அது இருக்கும் வரை மெருகும் இருக்கும்... எல்லாம் நான்கு நாட்கள் வரை மினுக்கும், அவ்வளவுதான். நமக்கு அந்த நான்கு நாட்கள் வரை கூடச் சுகம் அனுபவிக்கநேரம் கிடையாது இனிக்க இனிக்கப் பேசிவிட்டால் வயிறு நிரம்பிவிடுமா என்ன? நமக்கும் மாடாய் உழைக்கும் பெண்தான் அவசியம். நம்மை விட்டுத் தொலைவில் இருக்கிறாள், இனிமையாகப் பேசுகிறாள்...வீட்டிற்கு வந்த பிறகு எப்படி பேசுவாளோ?'

அருகே ஒரு மேட்டின் மீதிருந்த குடிசையைப் பார்த்து காலு சிரித்தான் — 'எல்லாம் சரிதான் ... எல்லாம் நினைத்துக்கொள்வதில் தானிருக்கிறது. இல்லாவிட்டால் அவளும் பெண், இவளும்

தான் பெண்; தூரத்துப் பச்சைதான் கண்ணுக்கு குளிர்ச்சி! அருகில் வந்தால் தெரியும்; போதுமடா என்றிருக்கும்.'

ஆனால் காலு அந்த தூரத்துப் பச்சையைப் பற்றியும் நிச்சயம் செய்துவிட்டான்—எங்காவது தூரத்துப் பச்சையையே நினைத்துக் கொண்டு தன் எதிரியிடம் கூறுவதுபோல் காலு பலீயின் வார்த்தைகளையே சொல்ல ஆரம்பித்தான்.... 'நெஞ்சில் கை வைத்துச் சொல்...'

காலு நிச்சயித்துவிட்டான். நெஞ்சில் கையை வைத்துக் கொண்டு சங்கல்பம் செய்தான் .... 'பரமேச்வரா; உன்னைச் சாட்சியாக வைத்துக் கூறுகிறேன். மிகவும் முக்கியமான வேலையிருந்தாலொழிய ராஜியின் வீட்டிற்குப் போகமாட்டேன்!'

# 28

## செப்புக் குடங்கள்

காலு நதியின் அக்கரையில் கிராமத்திலிருந்து நான்கு மைல் தூரத்தைச் சென்றடைந்தான். பாதை மிகவும் குறுகியதாக இருந்தது. அடர்ந்த புதராக இருந்தது. பட்டப் பகலில் கூடப் புலி பாய்ந்து கொன்றுவிடும். அவ்வளவு அடர்ந்த புதர் மேட்டின் மீது கோந்துக் கற்களைப் பொறுக்கியபடியே சுயநலத்துடன் ஒரு பார்வை பார்த்தனர் குறவர்கள்.—'அந்த இளைஞன் யாரைச் சேர்ந்தவன்?' கேட்டவனின் பார்வை காலுவின் அவயவங்களின் மீது சுழன்றுகொண்டிருந்தது.

கொள்ளையடிக்கத் தகுந்த பொருளொன்றும் காலுவிடம் இல்லாததாலோ, அல்லது, வாலாபடேலின் மகன் என்று அறிந்த தாலோ, காலுவின் பரந்த மார்பையும் பலமுள்ள கையையும் தோளில் தாங்கும் கத்தியையும் கண்டதாலோ என்னமோ, காலுவைத் தொந்தரவு செய்யவேண்டாம் என்றிருந்துவிட்டனர்.

குறவர்கள் காலுவின் தந்தை வாலாபடேலை மிகவும் மதித்து வந்தனர். ஐம்பதாண்டுகளுக்கு முன்பு வாலாபடேலின் இளமையில் வீரமும் சேர்ந்திருந்தது. அந்நாட்களில்தான் முஸ்லீம்கள் கிராமத்தின் மீது படையெடுத்தனர். முழுகிராமத்தின் மானத்தை இருவர்தான் காப்பாற்றினர். அவர்களில் ஒருவர் வாலாபடேல். மற்றொருவன் பேசாத்தின் தந்தை. கிராமம் முழுவதையும் கொள்ளையடிக்க அவர்கள் புகுந்தனர். அப்போது அந்த இருவரும் நதியின் மறுகரைப் பக்கத்து வழியைத் தடுத்து நிறுத்தினர். இருபது இருபத்தைந்து குறவர்களின் உதவிபெற்று... ஒரு குறுகிய இடத்தில் ஒளிந்துகொண்டனர்....

திடீரென்று தலைமீது கற்கள் வந்து விழுந்தன. அம்புகள் மழையெனப் பொழிந்தன. கொள்ளைக்காரர்கள் நடுங்கிவிட்டனர்... எப்படியோ தப்பித்தால் போதும் என்று கருதி ஓடிவிட்டனர். அந்த இடத்தில் எத்தனையோ பேர் இறந்துவிட்டனர். தப்பி ஓடியவர், மறைந்து கொண்டிருந்த மக்களிடம் சிக்கிக்கொண்டனர். எஞ்சியவர் எங்கு பதுங்கிக் கொண்டார்களோ தெரியாது.

அந்த நாளிலிருந்து அதன் பெயர் 'சிவப்புப் பள்ளத்தாக்கு' என்று வைக்கப்பட்டது. அங்கு துப்பாக்கிகள் ஏராளமாகக் கிடந்தன. வாலாவும் பேசாத்தின் காயமடைந்த தந்தையும்

கொள்ளையர்கள் கொள்ளையடித்து வைத்திருந்த பொருள்களை எடுத்துவந்ததுடன் ஆளுக்கொரு துப்பாக்கியும் எடுத்து வந்தனர். இன்றுகூட காலுவின் வீட்டில் அது இருக்கிறது. எங்கு இருக்கிறது என்று யாருக்கும் தெரியாது. ஆனால் இருப்பது என்னமோ நிச்சயம்.

அந்தக் குன்றுகளில் வாழ்ந்து வந்த சில குறவர்கள் காலுவின் கையில் அடிபட்டவர்கள். அப்படியிருந்தும் அவனுடைய பராக்கிரமத்தால் அஞ்சி நடுங்கிய அந்த மக்களுடன் வாலா மிகவும் நட்புக் கொண்டிருந்தான்.

காலு குன்றின் மீது ஏறி அந்தக் குடிசைக் கெதிரே ஒரு குரல் கொடுத்தான் — 'வீட்டிற்குள் யார் இருக்கிறார்கள்?' பத்தடி உயரமுள்ள அந்த வீட்டின் சுவர் முட் புதரினாலானது. ஓடுகளுக்குப் பதிலாகக் கூரையில் பலாச இலைகள் பரப்பப்பட்டிருந்தன. தாழ்வாரத்திற்குள் போகும்போதும் குனிந்து கொண்டுதான் போகும்படி அவ்வளவு தழைந்திருந்தது கூரை. கட்டிலுக்குப் பதிலாக நான்கு முளைகளடிக்கப்பட்டு உட்காருமிடம் செய்யப் பட்டிருந்தது. தாழ்வாரத்தில் விளையாடிக் கொண்டிருந்த மூன்று குழந்தைகள் காலுவின் குரலைக் கேட்டு வெளியே வந்தனர். ஏழு வயதுச் சிறுமியின் உடம்பில் வேறு துணியில்லை, வெறும் கச்சம் மட்டும் கட்டியிருந்தாள். மூன்று—ஐந்து வயதுச் சிறுவர்கள் நிர் வாணமாக நின்றுகொண்டிருந்தனர். சிவப்புக் கயிறு இடுப்பில் கட்டப்பட்டிருந்தது. கருப்பு என்று சொல்ல முடியாது. குழந்தைகள் மாநிறமாக இருந்தனர்.

'குழந்தைகளே! உங்கள் அப்பா எங்கே?' 'உர்' என்று உறுமிக்கொண்டிருந்த நாயிடம் தன் கத்தியைக் காண்பித்தபடி காலு கேட்டான்.

குழந்தைகள், பதிலளிப்பதற்குப் பதிலாக வீட்டுக் கதவுப் பக்கம் பார்த்தனர். ஒரு இளம் பெண் வெளியே வந்தாள். மாநிறம், வட்டமான முகம், சுமார் பதினைந்து வயதிருக்கும். கால்களில் சதங்கைகளிருந்தன. கந்தல் துணியை வரிந்து கச்சம் கட்டிக்கொண்டிருந்தாள். கழுத்தில் கண்ணாடி மணிமாலை— தலையில் அடர்ந்து வளர்ந்திருந்த கேசங்கள், ஒளிவிட்டுப் பிரகாச மளிக்கும் இளமையின் வனப்பு.

'என் அப்பா கோந்து எடுக்கப் போயிருக்கிறார்!' காலு சிறிது நெருப்புக் கேட்டு வாங்கிப் புகை பிடிக்க உக்காவில் புகை யிலையை நிரப்பினான். மேக மண்டலத்தைப் போல் புகையை விட்டான்...

நான்காவது மேட்டின் மீது ஒரு குரல் கேட்டது — 'என் தமக்கை மகனை அனுப்புகிறேன் வேலை செய்ய ; என்ன தருவாய் ?'

'எப்போதும் கொடுப்பதுதான் ! வேறென்ன ?'

'அப்படிச் சொன்னால் முடியாது. கிளம்புங்கள், கோமதியின் வீட்டிற்குப் போகலாம்.'

காலுவும் கிளம்பினான். இருவரும் மேட்டை விட்டுக் கீழே இறங்கினார். வழியில் மாடு மேய்த்துக்கொண்டிருக்கும் ஒரு சிறுவனை பார்த்தார்கள். எட்டு அல்லது பத்து வயதிருக்கும்; காலு அவனுடன் கொஞ்சம் பேச்சுக் கொடுத்துப் பார்த்தான் — 'உன் பெயரென்ன தம்பி ?'

'மங்கள் ! ஏன் ?'

'என் வீட்டிற்கு வேலை செய்ய வருகிறாயா ?'

'உம் ! மாமா அனுப்பினால் வருகிறேன் !'

தன்னைப் போன்றவன்தான் சிறுவனும் என்று நினைத்தான் காலு. கிழவன் கோமதியின் வீடு. நன்றாக மெழுகப்பட்ட சுவர்கள். தரை சுத்தமாக இருந்தது. முற்றமும் நன்றாக இருந்தது. நல்ல சுபிட்சமான நிலை. வாசலில் குதிரை கட்டப்பட்டிருந்தது. தாழ்வாரத்தில் உயர மாட்டப்பட்டிருந்தன இரண்டு துப்பாக்கிகள்; இரண்டு கத்திகள், அம்புகள், வில் முதலியவையும் இருந்தன; ஒரு பெருஞ்சுமையே போல் எல்லாம் தொங்கவிடப்பட்டிருந்தன.

கிழவன் கோமதி காலுவைப் புரிந்துகொண்டு விட்டான்— 'ஓகோ! என் வாலா தம்பியின் மகன்தானே! வாப்பா !' பிறகு கையைப் பிடித்துக் கட்டிலில் உட்காரவைத்தான்.

அறுபது வயதுக் கிழவனின் உடல் உறுதியாக இருந்தது. அந்தத் திறந்த உடலில் ரோமங்கள் காடாய் வளர்ந்திருந்தன. காதுகளைச் சுற்றிலும் கூட அவ்வளவு அடர்த்தியான ரோமங்கள் ! இவ்வளவு உறுதியான போர்வைக்கு மேல் முழங்கால் வரை வேட்டி, தலையில் இரண்டு மூன்று சுற்றுக்களுடன் தலைப்பாகை.

'பானைத் தண்ணீர் இருக்கிறது தம்பி ! குடிக்கிறாயா ?' கிழவன் கோமதி சொல்லாவிட்டாலும் அவனுடைய வீட்டில் எப்போதும் தண்ணீர்ப் பந்தல் இருக்கும் என்பது காலுவுக்குத்தெரியும்.

'மண் குவளை எங்கே என்று பார்க்கிறாய் ? மண் குவளை இல்லை, செப்புக்குவளை இருக்கிறது அதோ. எடுத்து வரட்டுமா ?' தண்ணீர் குடிக்கக் கொடுத்துக் கிழவன் காலுவிற்கு விருந்தோம்பல் செய்ய விரும்பினான். உயர்ந்த ஜாதியை சேர்ந்தவர் யாராவது அந்தத்

தண்ணீரை உபயோகித்தால்தான் அதை நிரப்பி வைப்பதற்கு ஒரு அர்த்தம் இருக்கும்.

'கொண்டு வாருங்கள், கொஞ்சம் தண்ணீர் குடிக்கலாம்!' என்று காலு கூற நேர்ந்தது.

செப்புக் குவளை என்றவுடனேயே ஒரு கதை காலுவின் நினைவிற்கு வந்தது. சிறந்த குலத்து மருமகள் ஒருத்தி ஒரு பானையை உடைத்துவிட்டாள். மருமகள் மாமி இருவரிடையே சண்டை மூண்டது. மருமகள் கூறினாள்: 'செப்புப்பாத்திரம் கொண்டுவந்திருந்தால் குயவனுக்கு தானியம் கொடுக்க வேண்டி வந்திருக்காது.' மாமி குத்தலாகப் பதில் சொன்னாள்— 'செப்புக் குடம் கிழவன் கோமதியின் வீட்டில் இருக்கிறது. அங்கிருந்து எடுத்து நீர் நிரப்பு!' குத்தலாகப் பேசின அந்தப் பேச்சை சகித்துக்கொள்ள முடியாமல் மருமகள் கிளம்பிவிட்டாள், வில்லிலிருந்து அம்பு கிளம்பியது போல்! வந்து கிழவன் கோமதியின் குடத்தில் தண்ணீர் நிரப்ப ஆரம்பித்துவிட்டாள். முதலில் தண்ணீர் குடித்தாள்; பிறகு தோண்டி குடத்தின் பொறுப்பையே ஏற்றுவிட்டாள்.

இந்தக் கதையைப் பற்றிக் கேட்கக் காலு விரும்பினான். ஆனால் அவள் அங்கேயே எங்காவது இருந்துவிட்டால்? அதுமட்டுமல்ல, இப்போது அவனுக்கு அதைப் பற்றிக் கேட்க நேரமில்லை. உபயோகமான வார்த்தைதான் அவன் பேசினான்— 'குடியுங்கள் சித்தப்பா! வந்து, வேலம்மாவின் மச்சானை என் வீட்டிற்கு வேலைக்கு வைத்துக்கொள்ள ஆசை. ஆனால் அவன் ஒப்புக்கொள்ள மாட்டேன் என்கிறான்—'

'ஏனடா பயலே?'

'இல்லை தாத்தா! நான் வேலை செய்து என்ன பயன்? என் குழந்தைகள் அந்தத் தானியத்தைத் தின்றுவிடுவார்கள்—காசு அவனிடம்...அதுதான் யோசிக்கிறேன்...'

'அப்படிச் சொல்! என்ன கேட்கிறாய் சொல்! உம், அதை என்னிடம் ஒப்படைத்து விடு. நான் பார்த்துக் கொள்கிறேன். இந்த திருதியை—மூன்றாம் நாள் முடிந்துவிட்டது. அடுத்த மூன்றாம் நாள் வருவதற்குள் வேலையை முடித்தாக வேண்டும்!'

அதிக நாட்களைப் பற்றி வாக்குவாதம் முடிந்தது. பிறகு பன்னிரண்டு கற்களை எண்ணி வைத்தான் அவன். கிழவன் கோமதியும் எண்ணிப் பார்த்தான். இரண்டு எண்ணிவிட்டாய், பாக்கியைக் காலுவுக்குக் கொடுத்துவிடு. பத்து மிச்சம்! உனக்கு

சரியாகப் படாவிட்டால் உன் விருப்பம் என்ன, சொல்லி விடு!' காலு யோசிப்பதைக் கண்டு கனகன் கூறினான் — ஒரு நாளைக்கு மூன்று பைசாக்கள் என்றால், எத்தனையாகும் கோமதி தாத்தா?'

'சரி! மொத்தமாகப் பேசிக்கொள்! அப்போது நாள் ஒன்றுக்கு எத்தனை என்று கணக்கிட வேண்டாம். என்ன யோசனை? நான் சரியாகத்தான் சொல்லுகிறேன்!'

காலு சற்றுத் தயங்கிய பிறகு ஒப்புக்கொண்டான். இரண்டு துணிகளும் கொடுப்பதாக ஒப்புக்கொண்டான். எழுந்து நின்று கொண்டு கேட்டான் —'அவனைக் கொண்டு வந்து விடுவதற்கு எப்போது வருவீர்கள்?'

'நீ சொல், எப்போது வரவேண்டும் லீம்பே?' கனகன் 'சரி' என்று சம்மதம் தெரிவித்தான். காலு கூறினான்— 'இன்று நல்ல நாள்—வியாழக்கிழமை. இன்றே கொண்டுவந்து விட்டால்—'

'சரி! இந்தப் பையனை இன்று நீ அழைத்துக்கொண்டு போ. நான் நாளைக் காலையிலேயே வருகிறேன்'—'சரி' என்று சொன்ன படி காலு சென்றான். கனகனும் கூடச் சென்றான். கிழவன் கோமதி கிராமத்து எல்லை வரையில் அவர்களை விட்டுச் செல்ல வந்தான்.

கனகன் மங்களை முன்னே போகச் சொல்லிவிட்டான். அவனுடைய கண்களில் நீர் மல்கியது. தாயில்லாப் பிள்ளை பாவம்—

'அவனுக்கு என்ன குறை? சாப்பிடுவான், தின்பான், எருதுகளை ஓட்டுவான். கனகத் தம்பி! நீ கவலைப்படாதே! இவன் உன் அக்காவின் மகன் இல்லையா, அப்படியேதான் எனக்கும்! புரிந்ததா?' காலு கனகனுக்கு ஆறுதல் வார்த்தை கூறிவிட்டு மங்களை உடனழைத்துச் சென்றான்.

காலு மங்களிடம் கேள்வி கேட்டுக்கொண்டே திடீரென்று செப்புக் குடத்தைப் பற்றிய சிந்தனையிலாழ்ந்து விட்டான். அவனுக்குக் கிழவன் கோமதியின் மீது பொறாமையாக இருந்தது. அவனுடைய வாழ்வே தன்னியமாகி விட்டதே என்று நினைத்தான் காலு. ராஜியைப் போல் அவள் கிழவனுடைய வீட்டிற்கு வந்திருக்கிறாள், ராஜியும் அப்படி வந்தால் செய்தி ஊர் முழுவதும் பரவி விடும். என் கண்ணே! அப்படி செய்யமாட்டாயா?....

சுய நினைவிற்கு வந்தவுடனே மறுபடியும் அதே பெருமூச்சு தான் — 'ராஜி எங்கே, இந்த விஷயம் எங்கே? செப்புக் குடத்திற்கே முதலில் வழியில்லை. பிறகுதானே இதெல்லாம். ஜமுனை

16

அத்தைக்கு நான் பிறந்தவுடனேயே ஒருசெப்புக்குடம் தருவதாக வாக்களிக்கப்பட்டிருந்தது. அதையே இன்னும் கொடுத்தபாடில்லே. செப்புக் குடத்தைச் சாக்காகக் கொண்டுதான் எவளாவது வர வேண்டுமானால் நாநாவின் வீட்டில் இரண்டு செப்புத் தோண்டி இருக்கின்றனவே! ஆனால் கோமதி சித்தாப்பாவைப் போல் அவனால் ஆக முடியுமா? என்ன சுபிட்சம், என்ன சுகம்!.. முதலில் ராஜியை அப்படிக் குத்தலாகப் பேசிப் புண்படுத்துவாரே ஒரு வருமில்லேயே, அப்படியிருக்க ஏன் பேச்சை வளர்த்த வேண்டும்!'

பிறகு அவன் மங்களுவுடன் பேசுவதில் தன்னை ஈடுபடுத்தினான்—'வீட்டிற்குப் போனதுமே இந்தச் சிறு துண்டை அவிழ்த்து எறிந்து விடு. நான் ஒரு பழைய வேட்டி தருகிறேன். சட்டையும் எடுத்துத் கொடுக்கிறேன்...'

காலு விழித்துக்கொண்டிருந்தான் ஆனால் சிந்தனை செய்வதை விட்டுவிட்டான். ஆனால் தூக்க நேரத்தில் என்ன செய்ய முடியும்? முப்பது ஆண்டுகளுக்கு முன்பு வாங்கப்பட்ட செப்புக் குடம் பள பளக்கிறது. பாத்திரங்கள் எல்லாம் பளிச்சிடுகின்றன... மெலிந்த, சிவந்த உடலுடன் அழகி ராஜி நிமிர்ந்த நடையுடன் வருகிறாள்.... வந்து அந்தப் பாத்திரத்தைத் தன் பொறுப்பில் ஏற்றுக் கொள்கிறாள்.

ராஜி குளத்திற்குப் போய் தண்ணீர் எடுத்து வருகிறாள். கை யால் குடத்தைப் பிடித்துக் கொள்ளாமலேயே தலையில் நேராக வைத்துக்கொண்டு நடக்கிறாள். குடங்களின் மீது சூரியனின் கிரணங்கள் விளையாடுகின்றன. அவளுடைய கண்களில் மோகினி யின் அழகு; மக்கள் ராஜியைக் கேட்கின்றனர்– ராஜி பதில் சொல்லுகிறாள் —'எனக்கு செப்புக்குடம் என்றால் ரொம்பப் பிடிக்கும்!' கண்களைத் திறந்ததும் மங்கள் சிரித்துக்கொண்டு காலுவின் முன் நின்றுகொண்டிருந்தான்.–

கடவுளின் திருவிளையாடல் என்று நினைத்துக் காலு சிரித்தான். மனதிற்குள் சொல்லிக் கொண்டான்—'கடவுள் இந்தப் பையனைக் கொண்டுவந்து என் முன்னே நிறுத்திவிட்டார்— காலு! நீ கொடுத்துவைத்தது இவ்வளவுதான். தினமும் காலையில் குறவ னுடைய முகத்தில் விழிக்கவேண்டும்!'

ஆனால்—மனிதனே! உன் நம்பிக்கையை என்னவென்று சொல் வது? கட்டிலிலிருந்து இறங்கிய காலு அழகான எதிர்காலத்தைப் பற்றிக் கற்பனை செய்துகொண்டிருந்தான்— குறவனாக இருந்தால் என்ன? அவனும் மனிதன்தானே!'... வாழ்க்கையிலேயே முதன்

முதலாக இன்று அதிகாலையில் சிரித்த முகத்தைப் பார்த்தேன்... காலை நேரத்தில் மலர்ந்தமுகம்!... என் உள்ளம் காரணமின்றி விழையவில்லை.... அப்பா பாடுவாரே ஒரு பஜனைப் பாடல்! காலு அதை நினைத்துக்கொண்டான்.

'கோணே டன் டோல்யா...'

... ... ... ....

[தூங்கிக் கிடந்த என் கனவுகளைத் தட்டி எழுப்பியது யார்? ... உள்ளம் விழைந்து விழைந்து உயிர்ப்பைப் பெற்றுவிட்டது. உன் கனவுகள்தான் உன்னை எழுப்பியுள்ளன!]

சாலு தன் உள்ளத்தை மகிழ்வித்துக்கொண்டிருந்தான் —'உன் கனவுகளும் விழித்தெழும்! போர்வையை எடுத்துவிட்டு உயிர்ப்புடன் எழுந்து நிற்கும். இந்நாட்களில் தோன்றுகின்ற கனவுகள் நனவாகும். உன் கனவிற்கேற்றவாறு ராஜியும் உன்னிடம் வந்து சொல்வாள் — எனக்குச் செப்புக் குடம் என்றால் ரொம்ப பிடிக்கும்···' காலுவின் மனதிற்குள் இரண்டு சொற்கள் கூடப் பதியவில்லை. அதற்குள் ஒரு சிரிப்புச் சிரித்து அவற்றை அப்புறப் படுத்திவிட்டான். எல்லோரிடமும் அவள் அப்படித்தான் சொல்வாள். இல்லையா? அப்படிச் சொல்வாளா என்ன?... மனம் ஒத்திருந்த காரணத்தால்··· இத்துடன் கூடவே காலுவின் உள்ளத்தில், அவனுடைய உடலின் ஒவ்வொரு அங்கத்திலும் ஒரு வித கிளுகிளுப்பு உண்டாயிற்று···கனவில் தோன்றிய ராஜியின் வார்த்தைகளை — கட்டிலிலிருந்து எழுந்த காலு உரைநடையில் சொல்லாமல், கவிதையில் பாடிப் பாடி மகிழ்ந்தான் —

'மனே தாம்பனே ரேட் லாகி'....

[எனக்குச் செப்புக் குடம் என்றால் ரொம்பப் பிடிக்கும். அதில் என் உள்ளம் ஈடுபட்டுவிட்டது... மனம் ஒத்திருந்த காரணத்தால் தான்···]

## 29

## கொஞ்சும் கிளிகள்

'உர்ர்ர் .... உர்ர்ர் ....' என்று குன்றுகளிடையே சிங்கங்கள் கர்ஜித்தன. வடதிசையில் மேகங்கள் சூழ்ந்துகொண்டன. உள்ளத்தைக் கடைந்தெடுக்கும் போராட்டத்தைப் போல் அவை பயங்கரமாக இருந்தன.

காலு, கோதர் மற்றும் ஒவ்வொரு பயிர்த் தொழிலாளியின் உள்ளமும் ஆனந்தத் தாண்டவமாடிற்று. எல்லோரும் தாழ்வாரத்திற்கு வெளியே வந்து அடிக்கடி பார்க்க ஆரம்பித்தனர். 'மேகம் மூண்டுவிட்டது. இன்று மழை பெய்வது நிச்சயம்!' என்ருன் ஒருவன். ராமாவைப் போன்றவர் மகிழ்ச்சியின் மிகுதியால் கத்தினர் — 'ஆகா! மேகம் ஓடுகிறதே! ஆகா! ஓடுகிறது பார்! ஒரே இருட்டு மூண்டுவிட்டது!'

உண்மையில் மேகம் ஓடிக்கொண்டிருந்தது. குழந்தை அழுது கொண்டிருக்குமே என்ற பரபரப்புடன் தண்ணீர் எடுக்கச் சென்ற பெண், குடத்துடன் வீட்டை நோக்கி ஓடுவது போலிருந்தது அதன் ஓட்டம்.

ஒரு நொடியில் மேகம் முழுதும் இருள் சூழ்ந்துகொண்டது. இடி இடிக்க ஆரம்பித்தது. மின்னல் ஆதவனைப் பழிப்பது போலிருந்தது — 'எங்கே நிலத்தை இவ்வளவு பள பளக்கச் செய், பார்த்து விடுகிறேன்!'

மேகம் தண்ணீர் நிரப்பச் செல்லும் பெண்ணிடம் கூறுவது போலிருந்தது — 'குடிசையின் வாசலில் பாத்திரங்களை வை, எவ்வளவு சீக்கிரம் தண்ணீர் நிரம்பிவிடுகிறது பார்!'

பார்த்துக்கொண்டே யிருக்கையில் மழை வெள்ளமாகப் பெய்தது. வயலெல்லாம் ஒரே வெள்ளம். காலு கூறியதைப் போல், 'இப்படியே இன்னும் இரண்டு மணி நேரம் வரை பெய்தால், அவ்வளவுதான், வயல்களும் நதியும் ஒன்ருய்ப் போய்விடும்!'

அப்படித்தானுயிருக்கும். ஆனல், நிலம் எட்டு மாதங்களாய்க் காய்ந்து, ஒரே தாகத்துடனிருந்தது. நீருக்காகத் துடித்துக் கொண்டிருந்தது. அதன் வயிறு சிறியதா என்ன? கிராமம் முழுவதும் வழிந்தோடிய நீர் அக்கம் பக்கத்து வயல்களுக்குக் கூடப் போதவில்லை.

மேக மன்னன் இப்படி ஒரே இடத்தைத் திருப்திப் படுத்திக் கொண்டிருந்தால், மற்ற இடங்களின் கதி என்னவாகும்? இது முதல் பரிமாறல். அவ்வளவுதான். ரொம்பவும் தாகமாக இருப் பவனுக்கு ஒரேயடியாக எல்லா நீரையும் அளித்துவிடக் கூடாது. இதுவும் நியாயம்தான். பிறகு மேகம் காளையைப் போல் கிரா மத்து நிலத்தில் மழை பெய்வதை விட்டுத் தென்புறம் சென்று விட்டது.

விவசாயிகள் மறுபடியும் கச்சையை வரிந்து கட்டிக்கொண் டனர். கலப்பையின் நுனியைச் சீர்ப்படுத்துவதற்காகக் கருமா னிடம் ஒருவன் ஓடினான். மற்றொருவன் ஏரைச் சரிப்படுத்த தச்ச னிடம் சென்றான். விதைகள் வாங்கச் சுற்றினான் ஒருவன்; மற்றொரு வன் மஞ்சள் குங்குமம் வாங்கக் கடைக்கு ஓடினான். நாவிதன் சிவா வீடு வீடாகச் சென்று அழைப்பைத் தெரிவித்தான் — 'கிராமத் தலைவர் உங்களை அவருடைய வீட்டிற்கு வரச் சொல் கிறார்! .... எல்லோரும் கிளம்புங்கள்!'

விரும்பாவிடினும், இன்று ஆடி மாத மாதலால், காலு கிராமத் தலைவருடன் உள்ள மனத்தாங்கலை ஒரு ஓரத்தில் வைத்துவிட்டுக் கூறினான் — 'சாப்பிட ஒன்றும் நான் உட்காரப் போவதில்லை.... கிராம மக்களோடு ஒருவனாய் நானும் வந்தேன் என்று தலையைக் காட்டிவிட்டு வந்து விடுவேன்!'

குதிரிலிருந்து சோளத்தை எடுத்துக் கொண்டிருந்த பலீ தன் பல்லவியையே பாடிக் கொண்டிருந்தாள் — 'எருப்போடத்தான் அவர்களுக்கு நீங்கள் உதவி செய்யவில்லை யென்றால், விதை கூடக் கொண்டு கொடுக்கப் போவதில்லையா?'

'வேண்டுமானால் கொடுத்தால் போகிறது!' காலு தலைப்பாகை யைக் கட்டிக்கொண்டே கூறினான்.

'இத்தனை நாட்கள்வரை பறந்துகொண்டு ஓடினீர்கள். இந்தப் பதினைந்து நாட்களாக உங்களுக்கு என்ன வந்துவிட்டது? நான் சொன்னேனே, அதனால்தானே?'

'அப்படியிருந்தாலும் தான் இதில் தவறென்ன?'

'ஆனால் விதையைக் கொண்டு கொடுத்துவிட்டு வாருங்கள். கோடை நாட்களிலிருந்து சொல்லி வைத்திருக்கிறார்.... இப்போது'

'வந்து, பிறகு கொண்டு போகிறேன். அவருடைய கால்களில் கட்டுப் போட்டிருக்கிறதா என்ன? இல்லாவிட்டால் ஒன்று செய் நீயே போயேன். இங்குள்ள வேலையைப் பார்த்துக் கொள்ளத் தான் நானும் மங்களும் இருக்கிறோமே!' — எருதுகளுக்கு தீனி

வைத்துக்கொண்டிருந்த மங்களையும் ஆமோதிக்க வைத்தான் — 'இல்லையா மங்கள் ?' பிறகு மனைவியிடம் கூறினான் — இல்லா விட்டால் மங்களையும் கூட வேண்டுமானால் அழைத்துக்கொண்டு போ. நான் தனியாகப் பார்த்துக் கொள்கிறேன்.' இவ்விதம் சொல்லி விட்டுக் காலு உக்காவை எடுத்தான்.

'நீங்கள் போனால் இன்றே திரும்பி வந்து விடலாம். காரணம், இன்று உழுவதற்கு, நல்ல நாளில்லை —'

'வேண்டாம், வேண்டாம் — எனக்கு எத்தனையோ வேலைகள் இருக்கின்றன. உனக்கு அக்கரை இருந்தால் எடுத்துச் செல் !' என்று கூறியபடியே காலு அங்கிருந்து கிளம்பிவிட்டான்.

ராஜியே தன் மைத்துனருடன் விதை வாங்கிக்கொள்ள வருவாள் என்று காலு நம்பியிருந்தான். இரண்டு நாட்களாகி விட்டன. ஆனால் ஒருவரும் வரவில்லை. 'பெரிய கருவக்காரப் பெண்ணப்பா இவள் !' காலு மனதிற்குள் முணு முணுத்தான். மற்றொருபுறம் வயிற்றெறிச்சலாக இருந்தது அவனுக்கு — 'கிராமத்தில் ஒரு சேர் தானியம் கடன் கொடுப்பவர் எவருமில்லை. கடைசியில் தினைதான் விதைப்பார்கள் போலிருக்கிறது. இதை விட நானே நேற்று கொண்டுபோய்க் கொடுத்துவிட்டு வந்திருக் கலாம் !'

ஆனால் இப்போது காலுவிற்கு ஓய்வு கிடையாது. மங்கள் இருந்தான். ஆனால் அவனுக்குச் சோளம் விதைக்க வருமோ என்னமோ ? வந்தாலும் காலுவுடன் போட்டியிடுவான். ஒரு கலப்பை வைக்கும் இடம் வரையில்தான் விதைப்பான் !

ஆடி மாதத்து இந்நாட்களில் காலுவின் கால்களுக்கு உற்சாகம் இன்னும் அதிகம். சட்டையைக் கழற்றினான். வேட்டியை உயர்த்திக் கட்டிக்கொண்டான். சென்ற ஆண்டு பயிர் செய்த மாமரத்தின் கிளை மீது தலைப்பாகையை வைத்தான். மேகங்களிடையே மறைந்திருந்த ஆதவன் இன்று சற்றுக் கோபமாகவே காணப் பட்டான். கோடை நாட்களின் வெயிலை விடக் கடுமையாக இருந்தது இந்தப் புழுக்கம். தாங்க முடியவில்லை. காலுவின் உடல் முழுதும் வியர்வை ஓடி வழிந்தது. மண் நிலம் மாதிரி இருந்தது அவனுடைய முதுகு. ஆனால் அவன் அதைப் பொருட் படுத்தவேயில்லை. அவனுக்கு அதுபற்றிய எண்ணமே இல்லை. ஒரே ஒரு கவலைதான் அவனுக்கு —'இன்று இந்தக் கிணற்றருகே யிருக்கும் நிலத்தில் சோளத்தை விதைத்துவிடுவேன் !'

பிற்பகல் நேரம். எல்லோருடைய ஏர்களும் நின்றுவிட்டன. ஆனால் காலு நிறுத்தவில்லை. தொலைவில் தெருக் கோடியில் சாப்பாடு வரும்போது நிறுத்தலாம் என்றிருந்தான் அவன்.

திடீரென்று காலுவின் பார்வை எதிலோ போய் வீழ்ந்தது. கண்கள் ஆரஞ்சுச் சுளைகளைப் போல் சிறுத்துப் போயின. அவன் சந்தேகித்தான்—'ராஜியா? இருக்காது. அவள் எங்கிருந்து வரப் போகிறாள்? -- அப்படியே வந்தாலும் அவளுடைய அண்ணனின் நிலம் இங்கில்லையே!... இல்லை, அவளேதான். அதே மெல்லிய உடல், அதே நடை, அதே மிடுக்கு! எனக்குத்தான் சாப்பாடு கொண்டு வருகிறாள்!'

கூடவே காலுவிற்கு வியப்பு உண்டாயிற்று. ஆயிரம் வேலைகளிருந்தாலும் வீட்டுப் பெண்மணி ராஜியிடமா சாப்பாடு கொடுத்தனுப்புவாள்?.... கனவிலும் கூட இதை நம்ப முடியாதே!'

அவன் ஏரை விட்டு விட்டான். எருதுகளை ஆலமரத்தடியில் கொண்டு சென்றான். ராஜியும் வந்து சேர்ந்தாள்.

காலுவின் உள்ளம் ஆனந்தக் களிப்பு பாடியது. ராஜியின் கையால் தரப்பட்ட சாப்பாட்டைக் காலு பல முறைகள் சாப்பிட்டிருந்தான். ஆனால் மாமியார் வீட்டில்தானே? ஆனால் இப்போது நாநா (பக்கத்து வயலில் உழுதுகொண்டிருந்தான்) பார்த்துக் கொண்டிருக்கையில் ராஜி கொண்டுவந்த சாப்பாட்டைச் சாப்பிடப் போகிறான். தன் நிறைவேறாத ஆசைகள் பூர்த்தியடைந்தாற் போலிருந்தது காலுவிற்கு. வட்டியும் முதலுமாக அவன் இன்று பழி தீர்த்துக்கொண்டு விட்டான்.

சற்றுத் தொலைவிலிருந்த மங்களைக் காலு அழைத்து எருதுகளுக்குத் தீனி போடச் சொன்னான்.

ஆனால் மங்கள் மாட்டிற்குத் தீவனம் வைத்தபடியே ராஜியைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

காலு கேட்கவில்லை. ஆனால் ராஜியே கேட்டுவிட்டாள் — 'ஏன் என்னை இப்படி முறைத்துப் பார்க்கிறாய்? ஏனடா பையா?'

ராஜி சிரிப்பதைக் கண்டு மங்கள் கூடச் சிரித்தான். — 'பலீ மாமி எங்கே போயிட்டாங்கன்னு பார்த்தேன்!'

'பலீ மாமிக்குப் பதிலாக இவள் வந்திருக்கிறாள், அதனாலென்ன?'

வாழ்க்கையில் முதல் முறையாகக் காலு கூறிவிட்டான். — 'மங்கள்! நீயே சொல்! ஒரு நாளைக்கு வந்திருக்கிறாள். எவ்வளவு

மகிழ்ச்சியாக இருக்கிறது தெரியுமா எனக்கு?' பிறகு ராஜி யின் கண்களைப் பார்த்தபடி கூறினான் — 'இரண்டு ரொட்டி தின்றால்தான் பசி ஆறும். ஆனால் கிடைப்பது ஒரு துண்டு ரொட்டி கூட இல்லை. இதனால் இன்னும் தவிப்புத்தான் அதிகரிக்கிறது!'

'தானியம் இருக்கும்போதே பசியால் மடிந்தால் அதற்கு யார் என்ன செய்வது?' ராஜி மங்களுக்குத் தருவதற்காகத் தொன்னை யில் பருப்பை எடுத்தபடி கூறினாள்.— 'இந்தா நீ எடுத்துக்கொள்!'

'வயற்றை ...' தலைக்கு மேல் ஆலமரக் கிளைமீது உட்கார்ந் திருந்த காகத்தை காண்பித்தபடி சொன்னான், 'இந்தக் காகங்கள் கூட நிரப்பிக் கொள்ளுகின்றன, ராஜி!'

'உங்களுக்குப் பின் என்னதான் வேண்டும்?' மங்கள் விரித்த சட்டைத் துணியில் இரண்டு ரொட்டிகளைப் போட்டபடி ராஜி கேட்டாள்.

மங்கள் ரொட்டியைத் தலைமீது வைத்துக்கொண்டு தொன்னை யில் பருப்புடன் சற்றுத் தொலைவிலிருந்த ஆலமரத்தடியை நோக்கிச் சென்றான்.

காலு பதிலளித்தான் — 'என்னவேண்டுமோ, அந்தக் கடவுளுக் குத்தான் தெரியும். ஆனால் ஒன்று மட்டும் நிச்சயம் — திருப்தி என்பதே கிடையாது. மனநிறைவு ஏற்படுவதில்லை. பசித்து வாடிப் பசியுடனேயே உயிர் வாழ்வேன் போலிருக்கிறது!'

'இந்தாருங்கள். கை கழுவிக்கொண்டு சாப்பிட ஆரம்பியுங்கள். பார்க்கிறேன் — எப்படி வயிறு நிரம்பாமலிருக்கிறது என்று!' காலுவின் வருத்தமான முகத்தைப் பார்த்து ராஜி சொல்ல வேண்டி வந்தது — 'இதுவரையில் ஒன்றுமே சொன்னது கிடை யாதே. இன்று மட்டும் ஏன் இப்படித் தோன்றுகிறது?'

'தோன்றிற்று, நாம் சிறுவர்களாக இருக்கும்போதிலிருந்தே! ஆனால் உள்ளத்தைத் திறந்து உங்கள் முன் இன்றுதான் வைக் கிறேன்!'

'இத்தனை நாட்களாக மூடி இருந்ததே, அதை இன்னமும் மூடியே வைத்திருப்பதுதானே?' ராஜி சிரித்தாளே தவிர அவளுடைய குரலும் கண்களும் காலுவைப் போல் அவளும் வருந்துகிறாள் என்று காண்பித்துவிட்டன.

காலு தனக்குள் பேசிக்கொண்டே கையைக் கழுவிக் கொண் டான்.

'இவ்வளவு தெரிகிறதல்லவா,' அப்போது மனம்திறந்து சொல்லி

யிருக்கக் கூடாது' ... ஒவ்வொரு கணமும் ராஜியின் தாமரை போன்ற முகம் வாடத் துவங்கியது.

'மனம் திறந்து சொன்னதால் என்ன வந்து விட்டது? உண்மையைச் சொல் ராஜி, உனக்கு நம் இளமைப் பருவம் நினைவிற்கு வரவில்லையா? கோதரும் நாமும் இந்த ஆலமரத்தடியில் விளையாடுவோமே. நீ ரொட்டி தயார் செய்வாய், நான் ஏர் உழுவேன் ... நீ சாப்பாடு கொண்டு வருவாய், குழம்பு கொண்டுவர மறந்துவிடுவாய்; நான் உன்னைத் துரத்தி அடிக்க வருவேன். நீ தண்ணீர்க் குடத்தை எடுத்துக்கொண்டு வருவாய். நான் அதை இறக்கி வைப்பேன். அதெல்லாம் உனக்கு நினைவில்லையா?'

கைகளை முழங்கால்களின் மீது ஊன்றிக்கொண்டு நின்ற ராஜி, காலின் கட்டை விரலால் மண்ணைக் கிளறினாள். தலையை நிமிர்த்தாமலேயே 'ஆமாம்' என்று பதிலளித்தாள்.

காலு மேலே சொல்ல ஆரம்பித்தான் — 'ஆடி மாதம் பிறந்தவுடனேயே என்னால் அவற்றையெல்லாம் நினைத்துக் கொள்ளாமல் இருக்க முடிவதில்லை, ராஜி! நீ நம்பமாட்டாய். ஆனால் அந்நாட்களில் பதிந்த உன் சின்னஞ்சிறு கால்களின் சுவடுகள் கூட எனக்கு இன்னும் இந்த நிலத்தில் தெரிகின்றன. அந்த அழகான பாவாடை, எல்லாமே என் கண் முன் நிற்கின்றன. அம் மாதிரி சிறுவர்களாகவே இருக்கக்கூடாதா என்று மனம் ஏங்குகிறது. கடவுள் நம்மைப் பெரியவர்களாகத் தான் வளரச் செய்தார் என்றால் ....'

ராஜி தனக்குள் சொல்லிக்கொண்டாள் — 'இதேதடா தொல்லை! நான் ஏன் சாப்பாடு எடுத்துக்கொண்டு வந்தேனோ!' மண் குவளையைத் தன்னருகே இழுத்தபடியே அவள் கூறினாள் — 'உம்! சீக்கிரம் சாப்பிடுங்கள். எனக்கு நேரமாகிறது!'

'வேண்டாம் .... எனக்கு அந்த நாட்கள் நினைவிற்கு வருகின்றன என்று ஒரு தடவை சொல்லேன்!'

'நினைத்துப் பார்த்தால் கூட ....' ராஜி காலுவை அன்புடன் பார்த்தாள். வேதனையுடன் கூறினாள் — 'என்ன செய்வது? எல்லாம் நல்லபடியாக, நம் விருப்பப்படி நடந்திருந்தால், அதே போல் விளையாடிக் கொண்டிருக்கலாம். நான் உங்களுக்காகச் சமையல் செய்வேன், தண்ணீர் கொண்டு வருவேன் — எல்லாம் செய்வேன். ஆனால் இப்போது என்ன செய்வது? நதியில் ஒரு மரக்கட்டை ஓடிவிட்டால், கடல் வரை போய்க் கூட அதை

எடுத்துக்கொண்டு வந்து விடலாம். ஆனால் இதுவோ—' அவள் நீண்ட மூச்சை உள்ளிழுத்துக் கொண்டாள் — அந்த நாள் திரும்பி வந்தால், பிறகு நமக்கு என்னதான் வேண்டும்? உம், சாப்பிடுங்கள், ஆகட்டும்!'

காலு ரொட்டியையும் குவளையிலிருந்த பருப்பையும் எடுத்த படியே, ஒரு வறண்ட சிரிப்புச் சிரித்தான்—'ராஜி! இன்று பசியே போய்விட்டது!'

'நான் வந்தால் பசியே போய்விட்டதா? அதனால் என்ன பயன்? இப்படியாகும் என்று தெரிந்திருந்தால் பலியையே அனுப்பியிருப்பேன்!'

'அதுதான் என் துரதிருஷ்டத்தோடு இணைந்த ...'

'அதிருஷ்டத்தோடு இணைந்தது என்று சொல்லுங்கள். உங்கள் உள்ளத்தோடு இணைந்தவள் அவள். எந்தத் தினை நம் பஞ்சத்தைப் போக்கிறதோ, அதையே இப்படிக் கேவலமாகப் பேசலாமா?'

'கேவலமாகப் பேசவில்லை. ஆனால் தினையைக் கோதுமை என்று சொல்ல முடியாதல்லவா?' காலு பெரிய ரொட்டித் துண்டு ஒன்றைத் தன் வாயில் போட்டுக்கொண்டான்.

'அதுதான் நமக்குக் கோதுமை! அறிவாளியாக இருந்த போதிலும் ஏன் இந்தத் தவறு செய்கிறீர்கள், காலு?'

ரொட்டியை நன்றாக மென்று தின்னாமல் விழுங்கியபடியே காலு தலையை ஆட்டினான்—'ஊஹூம்! சாப்பிடுவது, வயிற்றை நிரப்புவது இவ்விரண்டிற்கும் பெரிய வேற்றுமை யிருக்கிறது, ராஜி! .... நீயே சொல்! வேற்றுமை இல்லையா?'

நதிக்கரையில் தொலைவிலுள்ள புதரைப் பார்த்தபடி ராஜி, 'ஆமாம், இருக்கிறது!' என்று பதிலளித்தாள்.

'நாம் வாழ்வது வாழ்க்கை என்று நீ நினைக்கிறாய்?'

'எல்லோரும் வாழ்கின்றனர். அதே போலத்தான் நாமும் வாழ்கின்றோம். அவர்களுடைய வாழ்க்கையில் மட்டும் என்ன கிளி கொஞ்சுகிறதா?'

காலு பருப்பில் ரொட்டியைப் போட்டு மசித்துக்கொண்டே கூறினான்—'ஆனால் நம் இருவருடைய வாழ்வும் ஒன்றாக இணைந்திருந்தால், உண்மையாகச் சொல்கிறேன், ராஜி, இரவும் பகலும் கிளி கொஞ்சும் வாழ்க்கையாகத்தான் இருக்கும்!'

'அப்படித் தோன்றுகிறது. ஆனால் ராஜி உங்களை மணந்திருந்

தால் வீட்டுப் புழக்கடையில் இருக்கும் கிள்ளுக் கீரைக்கும் சமமாகத்தானுகி இருப்பாள். உலகின் வழக்கு இது.'

'இல்லவே இல்லே, அப்படிச் சொல்லாதே, ராஜி!'

'கண்ணுல் கண்ட விஷயம் அது. பேத்தா படேலின் வீட்டையே எடுத்துக் கொள்ளுங்களேன். லக்கு சகனிடம் எவ்வளவு ஆசையாக இருந்தாள்? அவனைப் பார்க்காவிட்டால் அவளுக்குப் பொழுதே விடியாது.... சகன் மட்டும் குறைந்தவனு? லக்குவைத் தன் கண்ணின் மணி என்று நினைத்து வந்தான், அவர்களிருவருடைய அன்பைப் போல் அந்தக் கிராமம் முழுவதிலுமே ஒருவரிடமும் அவ்வளவு அன்பையும் ஆசையையும் காண முடியாது. அப்படியிருந்தார்கள். அப்பாவின் கௌரவத்தையும் மண்ணேடு மண்ணுக்கிவிட்டு இருவரும் ஒருவரையொருவர் ஏற்றுக் கொண்டார்கள். முழுதாகப் பன்னிரண்டு மாதங்கள் கூட ஆகவில்லே. அந்தக் கண்ணின் மணி எங்கே போய்விட்டது? கிளி கொஞ்சுவதும் நின்றுவிட்டது. தினமும் பொழுது விடிந்தால் சண்டை-பூசல்! அவன் லக்குவைத் தினமும் அடிக்கிருன்.... சரி, எடுங்கள் குவளேயை, எனக்கு நேரமாகிவிடும்.'

விதை எவ்வளவு கொண்டு செல்லவேண்டும், எந்த வயல்களில் அவற்றை விதைக்கவேண்டும், யார் யார் வந்திருக்கின்றனர், கணவனும் – மனைவியும் நேற்று ஏன் வரவில்லே. – முதலியவற்றைப் பற்றிக் கேட்டுவிட்டு விடைபெறும் ராஜியிடம் கூறினுன் - 'நான் இனி உன் வீட்டிற்கு அடிக்கடி வரமாட்டேன். ஏதாவது கஷ்டமிருந்தால், எனக்குச் சொல்லியனுப்பு.'

'கோபித்துக் கொண்டு விட்டீர்களா?' என்று கேட்டபடியே ராஜி காலுவைக் கடைக்கண்ணுல் பார்த்தாள்.

'உனக்கென்ன தெரியும் ராஜி?...'

'பலீ என்னிடம் எல்லாம் சொன்னுள். அவள் பேச்சை நீங்கள் கவனிக்கத் தேவையில்லே. என்னிடம் சொல்லி அழுதாள். நான் தான் என் பிறந்தகத்தை நாசமாக்கப் பிறந்திருக்கிறேனும். மனதில் தோன்றுவதை அவள் உளறிவிடுகிருள், ஆனுல் பிறகு வருந்துகிருள்!... சொல்லுங்கள், எப்போது வருவீர்கள்?' – குவளேயையும் மூடியையும் எடுத்துக்கொண்டு எழுந்து நின்றபடியே கேட்டாள்.

'சோளக் கதிர்கள் கிளம்பியவுடன்' – காலு ராஜியை வழியனுப்ப எழுந்து நின்ருன்.

ராஜி சிரித்தாள்—'சோளம் விதைப்பதற்குக் கூடையில் இப்போதுதான் வந்திருக்கிறது! நீங்கள் —'

'ஏன் வரவேண்டும் ராஜி. வீணுக எல்லோரும் நம்மைப் பற்றித் தாறுமாருகப் பேசிக்கொள்ள இடம் கொடுப்பதா? சரி, எப்போதாவது சந்தித்தால், இன்று பேசினுற்போல் ஓரிரு மணி நேரம் வரை பேசலாம், உள்ளத்தின் சுமையும் குறையும், இல்லாவிட்டால் பசி என்றுமே ஆறப்போவதில்லை.'

'அப்படியேதான் நினைத்துக்கொண்டிருங்களேன்.' ராஜியின் முகத்தில் மறுபடியும் வருத்தம் படர்ந்தது. ஒரு கையில் குவளையையும் மறு கையில் மூடியையும் எடுத்துக்கொண்டு காலின் கட்டை விரலால் மறுபடியும் மண்ணைக் கிளற ஆரம்பித்தாள். தனக்குள் சொல்லிக் கொண்டாள் — 'உள்ளத்துக் கிளிகளை உள்ளத்திலேயே கொஞ்சி விளையாட விடுங்கள். இப்படித்தான் வாழ்க்கை முழுவதையும் கழித்தாக வேண்டும்!'

காலுவும் தனக்குள் சொல்லிக்கொண்டான் —

'உள்ளத்தில் கொஞ்சும் கிளியும், கற்பனையில் வாழும் வாழ்க்கையும் தான் உண்மையான வாழ்க்கை.' அங்கு ஒருவரும் இடைஞ்சல் செய்ய வரமாட்டார்கள், திருமண நிச்சயத்தை நிறுத்த யாரும் வரமாட்டார்கள், யாரும் நம்மைப் பழிக்க மாட்டார்கள், வீட்டுப் பெண்களும் பொருமை கொள்ள மாட்டார்கள், அல்லது —'

அன்பால் உருகும் உள்ளத்துடன் ராஜியைக் காலு பார்த்தான். 'இல்லாவிட்டால் வேறு வழி? நீயும் கணப்பொழுதில் எழுந்து சென்றுவிடுவாய்!'

ஆத்மா ஆத்மாவுடன் உரையாடிற்று. அதிலும் ஓரிரு கணங்கள் வரை அவர்கள் மௌனமாக இருந்தபோது யுகம் வரை பேச வேண்டியதெல்லாம் பேசி முடித்துவிட்டாற் போல் தோன்றிற்று. உள்ளங்கள் ஒன்ருய் இணைந்துவிட்டன. பிரிந்தவுடன் அழுதன! இருவருடைய கண்களிலும் கண்ணீர் நிரம்பி யிருந்தது. வழிந்து சொட்டிற்று — டப் –டப்!

ராஜி கண்ணீரைச் சமாளித்துக்கொண்டு சிரித்தாள். குந்துமணி போன்று சிவந்த இதழ்களிலிருந்து சொற்கள் உதிர்ந்தன — 'வயிறு நிரம்பிவிடும். ஆனுல் உள்ளம் —' வாக்கியத்தை முடிக்காமல் ஆரஞ்சுச் சுளைகளைப் போன்ற காலுவின் கண்களை ராஜி உற்று நோக்கினுள். ராஜியின் நனைந்த கண் இமைகள் மழைத் துளிகள் நிரைந்த ஆலிலைகளைப் போலிருந்தன.

'உண்மைதான்!' — நீண்ட மூச்செறிந்தபடி காலு கூறினன் — 'வயிறு நிரம்பக் கேட்டு விட்டோம், உள்ளம் நிரம்பக் கேட்கவில்லை என்று என் அப்பா சொல்வார்.' கனவிலிருந்து விழித்தவன் போல் பெருமூச்செறிந்தபடி காலு சொன்னன்— 'போ — உனக்கு நேரமாகிவிடும்!'

ராஜி அடியை வைக்க முடியாமல் வைத்தபடியே திரும்பி நடக்க ஆரம்பித்தாள். காலுவும் திரும்பினன். ஆனல் அவன் மட்டும் அதையே நினைத்துக் கொண்டிருந்தான் — 'உள்ளத்துக் கிளிகளை உள்ளத்திலேயே கொஞ்சி விளையாட விடுங்கள். இப்படித்தான் வாழ்க்கை முழுவதையும் கழித்தாக வேண்டும்!'

## 30

## வாழ்க்கையின் கடைசி ஆசை

விதை விதைத்து ஐந்தே நாட்கள்தானகியிருந்தன. தரிசு நிலம் முழுவதும் பச்சைப் பசேலென்று மாறிவிட்டது. யௌவனப் பருவத்தை யடைந்துள்ள கன்னிப் பெண்ணின் அங்க அவயவங்களிலும், உடலின் ஒவ்வொரு அணுவிலும் இளமையின் பொலிவு வெளிப்படுவது போல், நிலமகளின் அங்கங்களின் ஒவ்வொரு அணுவிலும் இளமை தளதளத்தது. திடீரென்று மரங்களெல்லாம் கருத்த பச்சை நிறத்தை மேற்கொண்டு விட்டன. குன்றுகளில் தேக்குமரங்கள் நிரம்பிவிட்டன. போதையுடன் குன்றுகள் மிளிர்ந்தன. வானத்தின் நீல நிறத்துடன் அழகாகக் காட்சியளித்தன.

சோளம் ஒரு சாண் வரை உயர்ந்துவிட்டது. தினை, துவரை, கடலை, பயிறு முதலியவை விதைக்கப்பட்டன. விவசாயிகள் மறுபடியும் சோளத்தின் மீது ஏரைச் செலுத்தி உழ ஆரம்பித்தனர். இந்தத் தடவை உழும்போது புல் எல்லாம் மண்ணோடு சேர்ந்துவிட்டது. நீரில் ஊறிப்போன சில சோள விதைகள் இரண்டே தினங்களில் வாடினற் போலிருந்து விட்டு முன்பைவிட இருமடங்கு வேகத்துடன் வளர ஆரம்பித்தன. காலுவின் வயல் நன்கு உழப்பட்டிருந்ததால் ஒரு சாணுக்கு ஒரு மாஞ்செடி முளைத்தாற் போல் பயிர்கள் வளர்ந்திருந்தன.

ராஜியின் வீட்டிலிருந்து இரண்டு – மூன்று தடவைகள் செய்தி வந்துவிட்டது. — 'காலுவைக் கொஞ்சம் வரச் சொல்!'

ஆனல் காலு சங்கல்பமே செய்திருந்தானே—'கதிர்கள் பழுத்த பின்புதான் போவேன்!' பயிர்த் தொழிலிலிருந்து சற்று விடுபட்ட காலு ராமாவிடமும் கோதரிடமும் கூறினன் ... 'இன்னும் ஒரு தடவை மழை பெய்தால் போதும், விதைத்து விடுவேன்! இந்தப் பாத்திகளை நனைத்துவிட்டால் போதும்!'

'நீ பாத்திகள் நனைவதை எதிர் பார்க்கிருய் - ஆனல் மழையை எதிர்பார்த்து எதிர்பார்த்து நம் கழுத்து வலிக்கா விட்டால் என்னை 'ஏன்' என்று கேள்! சோளத்தைக் கருகத்தான் செய்துவிடும் போலிருக்கிறது.'

ராமா எதிர்காலத்தை அறிந்தவன் போல் பேசினன்— 'ஆவணி மாதத்து மழை சோளத்தை அடித்துக்கொண்டு போகாவிட்டால்

பார்.' கிராமத்தையே மூழ்கடித்துவிடும். பலமான கூரைகளைப் பறக்க அடித்துவிடும்! நீரிருக்குமிடத்தில் நிலமிருக்கும். நிலமிருக்குமிடத்தில் நீர் இருக்கும்!'

காலுவிற்குச் சிரிப்புத்தான் வந்தது —'நீங்கள் எல்லோரும் கர்வம் படைத்தவர்கள், ... அப்படித்தான் நடக்கும். நடந்தால் நடக்கட்டும் போ. மேகம், கர்ப்பம், மரணம் இம்மூன்றையும் பற்றி அறிந்தவர் ஒருவருமில்லை. அறியவும் முடியாது என்று என் அப்பா சொல்வார்.'

அப்படித்தான் நடந்தது. ரொம்ப பெருமையடித்துக் கொண்டவர்கள் கூடப் பொய்யர்களாகி விட்டனர். நாட்கள் கழிந்து விட்டன. பஞ்சமி முடிந்துவிட்டது. இந்த ஏகாதசிக்கு மழை பெய்தாக வேண்டும் ... பௌர்ணமி யன்று அதன் அப்பனால் கூட மழை பெய்யவிடாமல் தடுக்க முடியாது .... கோகுலாஷ்டமி யன்று மழை பெய்யாவிட்டால் நான் என் மீசையை எடுத்து விடுகிறேன் —

காலு ஒரு மனிதனிடம் சொல்லிவிட்டான் — 'மீசையை எத்தனையோ பேர்கள் எடுத்து விடுவீர்கள். ஆனால் முகத்தைக் கழுவிக்கொள்ளத் தண்ணீர் இருந்தால்தானே? ஏற்கெனவே நதியில் வானரங்கள் ஓடி விளையாடுகின்றன. கிணறுகளில் பூதங்கள்தான் வாழுகின்றன. குடிக்கவே தண்ணீர் இருக்காது. மீசையை எடுப்பது ஒருபுறமிருக்கட்டும்.'

காலு சொல்வது உண்மைதான். தலைக்குமேல் மேகங்கள் சூழ்ந்துகொண்டு வராவிட்டால் அதை ஆடி மாதம் என்று ஒருவரும் சொல்லமாட்டார்கள். தினை, பருப்பு, துவரை, பயறு எல்லாம் தரையோடு மடிந்துவிட்டன. எஞ்சி வளர்ந்திருந்த வற்றை ஆடுமாடுகள் தின்றுவிட்டன. வயல்களில் கருமேகங்கள் இறங்கினாற்போல் சோளம் நாளுக்கு நாள் பழுக்க ஆரம்பித்தது. காற்றோடு உரையாடிக் கொண்டிருந்த இலைகள் அத்தனையும் களைத்துப் போனவைகளைப் போல் தொய்ந்துவிட்டன. இளமைப் பருவத்தை எட்டிப் பிடித்துக் கொண்டிருக்கும் பெண்ணிற்கு உருக்கு நோய் வந்துவிட்டாற் போலிருந்தது.

சோளத்தைப் பார்த்துப் பார்த்துப் பெருமூச் செறிந்த விவசாயிகள் திரும்பத் திரும்ப ஆகாயத்தைப் பார்க்க ஆரம்பித்தனர். ஆகாயத்தில் மேகங்கள் இப்படியும் அப்படியுமாக ஓடியபடி ஆசைக் காட்டிக்கொண்டிருந்தன. காலுவைப் போன்றவர்

களுக்குப் பல முறை தோன்றிற்று — 'இவ்வளவு நீரை நிரப்பிக் கொண்டு போகிறதே! (கடவுளுக்கு) கொஞ்சமாவது இரக்க மிருக்கிறதா?'...

ஒருமுறை காலு கூறினான்.— 'என்னிடம் யாராவது அவ்வளவு பெரிய ஈட்டியைக் கொடுத்தால்?'

'ஈட்டியை வைத்துக்கொண்டு என்ன செய்வாய்?' என்று கோதர் கேட்டான்.

'இந்த மேகத்தில் துளை செய்துவிடுவேன்!'

எல்லோரும் சிரித்தனர். ராமா கூறினான் —'ஆகாயத்தில் துளை செய்தால், பாவம் பலீ அண்ணீ! தினமும் கோழி கூவுவதற்கு முன்பு கிணற்றடியில் போய் நிற்கவேண்டி வராதல்லவா?'

பலீ மட்டும்தானா என்ன, கிராமத்துப் பாதி மக்கட் தொகையும் — முக்கியமாகத் தனித்து வீட்டிலிருப்பவர்களனைவரும் கிராமத்துக் கோடியிலுள்ள கிணற்றடியைப் போயடைந்து விடுவார்கள். இரண்டாவது முறையாகக் கோழி கூவுவதற்கு முன் நான்கைந்து ஆடவர்களையும் அழைத்துக் கொண்டு அங்கு போய் உட்கார்ந்து விடுவார்கள். செப்புக் குடங்களைக் கொண்டு செல்வோரின் சங்கர், நாநா போன்ற நான்கைந்து வீட்டோரின் பெண்கள் மகத்துவம் வாய்ந்தவர்களாகி விடுவார்கள் — 'இப்படிக் கொடுங்கள் நான் ஒரு தடவை தண்ணீர் நிரப்பி இழுத்துப் பார்க்கிறேன்!... இப்படிக் கொடுங்கள், உங்கள் குடங்களில் நானே நீர் நிரப்பித் தருகிறேன்... '

கிராமத்தில் இன்னொரு கிணறும் உண்டு — ஆனால் அது நதிக்கருகே, வெகு தொலைவிலிருந்தது. அதுமட்டுமா? அதில் தண்ணீர் மிகவும் ஆழத்திலிருந்தது. அதை எடுப்பதைவிட நதியில் வெட்டப்பட்டிருந்த சிறு கிணறுகளிலிருந்து தண்ணீர் எடுத்து வருவதையே மக்கள் அதிகமாக விரும்பினர்.

புரட்டாசி மாதம் வரை மக்கள் மழை பெய்யும் எனும் நம்பிக்கையைக் கைவிடவில்லை. உண்மையில் சோளப் பயிர்கள் முழுவதும் மாடுகளின் வயிற்றுக்குள் போய்விட்டன. — புல் பூண்டுகள் ஏதாவது எஞ்சியிருந்தால் கால் நடைகள் உயிர்வாழவாவது பயன்படுமல்லவா?

ஆனால் புல் பூண்டிற்கு வழி ஏது? காலு சொல்வதுபோல், 'ஆவணியே சும்மாக் கழிந்துவிட்டது, புரட்டாசியில் மட்டும் என்ன பொங்கி வழிந்துவிடப் போகிறது?'

ஐப்பசி மாதத்தில் ஆகாயம் முழுவதையும் யாரோ சுத்தம் செய்தாற் போல் களங்கமற்றிருந்தது.

தீபாவளிப் பண்டிகையும் ஒரே சூனியமாகக் கழிந்தது. பட்டாசு ஒருவரும் கொண்டு வரவில்லை. பூப்போட்ட சட்டையும் எவரும் எடுத்து வரவில்லை. மாடுகளை ஓட்டி விளையாடினர்; ஆனால் சிறுவர்கள்தான் தோரணத்தைத் தாண்ட வைத்தனர். அப்போது பாட்டுமில்லை, ஆட்டமுமில்லை. எல்லோருமே மயானத்தில் உட்கார்ந்திருப்பவர் போலிருந்தனர். கால்நடைகளுக்கு வேண்டிய வைக்கோல் முதலியவை கிடைத்தன. ஆனால், வரப்போகும் பஞ்சத்தை முன்கூட்டியே அறிவிப்பது போல் ஆடு மாடுகளின் கால்கள் முறிந்துவிட்டாற் போலாகிவிட்டன.

ஆனால் இந்த ஆண்டு இலுப்பைப் பூக்கள் பூத்துக் குலுங்கின. பெண்களைத் தவிர சிறியோர் பெரியோர் எல்லோரும் ஒரே ஆனந்தக் களிப்பில் மூழ்கிவிட்டனர். மக்கள் பாட்டுப் பாடிக் களிக்கவோ, ஒருவருக்கொருவர் இருந்த மனத்தாங்கலைப் போக்கிக்கொள்ளவோ. ஒன்று சேரவில்லை. கடைசி முறையாக ஒன்று சேர்ந்திருக்கலாம் என்று கருதி வந்தனர். சங்கர் கூறியதைப் போல் — 'நம்மில் எத்தனை பேர் உயிருடனிருப்போம், எத்தனை பேர் இறந்துவிடுவோம் என்று யாருக்குத் தெரியும்! ஒருவேளை எல்லோருமே இறந்தாலும் இறந்து விடுவோம். ஆனால் நான் உங்கள் எல்லோரிடமும் கேட்டுக் கொள்வது ஒன்றே ஒன்றுதான். உயிருடனிருப்பவர் இறந்து போனவர்களை அடுத்த ஆண்டில் நினைவு கூறுங்கள் —'

அவருடைய குரல் கம்மியது. பேசவே முடியவில்லை... எல்லோரும் ஒருவரையொருவர் தழுவிக் கொண்டனர். 'ராம் ராம்!' என்று கூறி அவர்களும் இறுதியாக விடை பெற்றுக் கொண்டனர்!

ஆனால் கிராமத்தை நோக்கித் திரும்பும்போது இளைஞர்கள் மட்டுமல்ல, ரண்சோட், சங்கர் போன்ற முதியோரும் ராமாவின் ஏழு வயது மகனும்கூடப் பாட ஆரம்பித்தனர் —

'ஜீவோ ஜாகீ! தோ ராவ்ஞு பேசாட் ஜீ
... ... ... ...'

[உயிருடனிருந்தால் ஒன்றாய்க் கூட்டத்தில் சந்தியுங்கள்; இறக்கப் போகிறவருடைய கடைசி வணக்கம்!]

அவர்கள் பாடுகிறார்கள் என்று யார் கூறுவார்கள்? சங்கர் —

காசம் இருவருடைய கண்களிலிருந்தும் கண்ணீர் வழிந்தோடி யது. காலு — பகா போன்ற கல் நெஞ்சம் படைத்த இளைஞர் களின் குரல் கூடச் சற்று தழுதழுத்தது. மரணத்தின் வாயில் நின்றிருந்தால் கூட ராமாவினுல் வேடிக்கையாகப் பேசாம லிருக்க முடியாது. ஆனுல் இன்று அவன்கூட மனத்தளர்வுடன் காணப்பட்டான். கிராம மக்கள் அனைவரும் அவரவர்களுடைய இல்லம் செல்ல ஆரம்பித்தனர். பிறகு ராமா தன் நண்பர் களுக்கு மட்டும் அழைப்பு விடுத்தான் — 'பகா, கோதர்! சாப்பிட்டுவிட்டு வாருங்கள்! நடப்பது நடக்கத்தான் போகிறது. கடைசி தடவையாக என் வீட்டில் எல்லோரும் சேர்ந்து பாடலாம்!'

கிராமத்தில் மக்கள் கூட்டம் கூட்டமாக வீடுகளுக்குச் சென்று கொண்டிருந்தனர். குழந்தைகள் முதல் கிழவர் வரை எல்லோரை யும் சந்தித்து அளவளாவினர். .. உணர்ச்சி வசப்பட்டு அழுத கண்களுடன் வாழ்க்கையில் கடைசியாக விடை பெற்றுக்கொண் டனர்!

டாகுர் வந்தார்; ஆனுல் வரி வசூலைப் பற்றிய பேச்சே எடுக்க வில்லை. ஒவ்வொரு வீட்டோரையும் தனக்கு அழைப்பு விடுக்க வும் அனுமதிக்கவில்லை. போகவேண்டிய வீட்டிற்கெல்லாம் சென்ருர். உபசார வார்த்தைகளும் நடந்தன. ஆனுல் எல்லாம் வாசலோடு முடிந்துவிட்டது. தன் குதிரைமீது ஏறுவதற்கு முன்பு டாகுர் கூறினுர் – 'பஞ்சம் வந்துவிட்டது போலிருக்கிறது ... என் உயிரும் இதில் போய்விடும்! உயிருடன் நீங்கள் எல்லோ ரும் இருந்தீர்களானுல், கொள்ளைக் கூட்டத்தார்களின் காரணத் தால் டாகுர் இறந்துவிட்டார் என்று நினைவு வைத்துக்கொள்ளுங் கள்!' பிறகு நீண்ட மூச்சு விட்டபடி கூறினுர் — 'ஆனுல் என்ன செய்வேன்! என்னுல் முடிந்தால்தானே. நீங்கள் எல்லோரும் குடும்பங்களை உடையவர்கள்; என்னுல் எப்படி உங்களுக்கு உதவ முடியும்? ஆனுல் ஒன்று மட்டும் சொல்கிறேன். இயன்ற வரை யில் கிராமத்தில் இருங்கள், முடியாவிட்டால் 'ஷேர்பூர்' வந்து விடுங்கள். தானியத்தையும் நான்கைந்து மாடுகளையும் எடுத்துக் கொண்டு வந்துவிடுங்கள்: அங்கு உங்கள் பேரில் துரும்புக் கூடப் படாமல் நான் பார்த்துக்கொள்கிறேன்.' குதிரையின் சேணத் தைச் சரிப்படுத்திக்கொண்டு தோலுக்குள் கால்களை நுழைத்த படியே கூறினுர் — 'நானும் என்னுடைய இந்தக் குதிரையும்

உயிருடன் இருக்கும் வரையில் உங்களைக் காப்பாற்றும் பொறுப்பு என்னுடையது. சரி .... வரட்டுமா ... ராம் ராம்!'

'ராம் ராம்! பெரியவரே!' ஐம்பது-அல்லது அறுபது மக்களின் உள்ளம் சேர்ந்தாற் போல் வண்டுகள் ரீங்காரம் செய்வதுபோல் முணுமுணுத்தது. கிளம்பிக்கொண்டிருந்த டாகூரிடம் ரணசோடும் காசமும் கூறினர் — 'சித்தப்பா! . எங்களையும் கொஞ்சம் நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்! ஜாக்கிரதையாக உடம்பைக் கவனித்துக்கொள்ளுங்கள்!'

காலு உரத்த குரலில் பேசினான் — 'நாங்கள் இறந்து போய் விட்டால், இந்த நாற்சந்தியில் எங்கள் ஞாபகார்த்தமாக ஒரு தூணை எழுப்புங்கள்!'

சங்கர் — 'ஜீவோ, ஜாகோ தோ...' என்ற பாட்டுடன் வழியனுப்ப அந்த நிலமே ஒன்றாய்ப் பாடி முடித்தது — 'கடைசி வணக்கம் இது!'

ஓரிரு கணங்கள் வரை அமைதி நிலவிற்று. அந்த அமைதியினிடையே தொலைவில் சென்றுகொண்டிருக்கும் குதிரையின் குளம்போசை கேட்டது — டப் டப், டப் டப் ....

இந்த மக்கள் எதை நினைத்து அஞ்சினர்? பஞ்சத்தில் மடிவதும், நினைவுச் சின்னம் நாட்டுவதும் எப்படி? டாகூரிடம் இருந்தால் தானே தானியம் தீர்ந்தவுடன் கூறுவதற்கு— 'பஞ்சம் வந்தது ... உயிரும் போயிற்று.'

அவர்களுடைய பயத்திற்குக் காரணம் வேறு. பஞ்சத்திற்கு பயந்தவர்கள் நதிக் கெதிரேயுள்ள குன்றுகளில் போய் வாழ ஆரம்பித்தனர். வெகு காலமாக வாழ்ந்து வரும் இம்மக்கள் துணிப்பஞ்சத்தைப் பஞ்சமென்றே கருதாதவர். தானியப்பஞ்சம் தான் எப்போதும் இருந்து வந்தது. பயிர்த் தொழில் செய்து வந்தனர். ஆனால் அவர்களுக்குப் பயிர்த் தொழில் செய்யத் தெரியவில்லை. ஏதோ கொஞ்சம் தானியம் தேறும். ஆனால் அதைப் பத்திரப்படுத்தி வைத்துக்கொள்ளத் தெரியாது.

அலகா கோமதி போன்ற ஒரு சிலருக்குத் தானியத்தைப் பத்திரமாகப் பாதுகாக்கத் தெரியும். ஆனால் அவர்களும் இம் மாதிரி நேரங்களில் இவர்களைப் போலவே அஞ்சி நடுங்க ஆரம்பித்தனர்!

பயம் அவர்களைக் கண்டுதான்.

புல், வைக்கோல், பிண்ணாக்கு முதலியவற்றை விற்றும்,

மரத்தின் பட்டைகளைச் சமையல் செய்தும், புளியந்தளிர்களைத் தின்றும் நாட்களைக் கழித்துவந்தனர். ஆனால் இப்போது?

குளிர்காலத்து நீண்ட இரவுகளை அவர்கள் வயிற்றுக் குழிகளில் முழங்காலைப் புதைத்துக்கொண்டு படுத்தபடி கழித்தனர். ஆனால் கோடைகாலத்து நீண்ட பகல் நேரங்களை எவ்விதம் கழிப்பார்கள்?

மாட்டுக்கு வேண்டிய தீனியைக் கூட இனி ஒருவரும் வாங்க முடியாத நிலைக்கு வந்துவிட்டனர். எப்படி வாங்குவார்கள் பாவம்? பெரிய செல்வந்தர் என்று கருதப்பட்டு வந்த இந்த விவசாயிகளே மழை வருவதற்குள் மூச்சுத் திணறும்படி தவித்துக்கொண்டிருந்தனர். அப்படியிருக்க, தானியத்திற்குப் பதிலாக மாடுகளை உயிருடன் இருக்கச் செய்ய முயற்சித்தால் இந்த முயற்சியில் மனிதன் — மாடு இருவருமே மடிய நேரிட்டால்?

மாட்டுக்கு வேண்டிய தீனி வாங்கிக்கொண்டிருந்த மக்களுக்கும் சோதனைக் காலம் வந்துவிட்டது. சிலர் நகைகளை அடகு வைக்க ஆரம்பித்தனர், மற்றும் சிலர் நிலத்தையே ...

சங்கர், காசம், மற்றும் ரண்சோட் — நாநா போன்றவர்கள் கவலை கொண்டனர். ஐநூறு ரூபாய் மதிப்புள்ள நிலத்தை ஐந்து மணங்கு தானியத்திற்கு விற்க நேரிடுமோ, அதுவும் கெஞ்சிக் கெஞ்சி விற்க நேரிடுமோ என்று நினைத்தனர்.

பங்குனி மாதம் இருள் கவ்விய இரவு நேரங்களிலிருந்து வதந்தியும் ஆரம்பித்துவிட்டது — 'கொள்ளைக்காரர்கள் வந்துவிட்டார்கள்! கொள்ளையடிக்கக் கிளம்பிவிட்டார்கள் ... இன்று வந்துவிடுவார்கள் போலிருக்கிறது ... அதோ ஆந்தை கூவுகிறது. — துப்பாக்கி சுடும் சத்தம் ... ஓடுவது தெரியவில்லையா? ...'

இவ்விதம் மக்களின் தூக்கமும் தடைப்பட்டுவிட்டது.

இளைஞர்களுடன் சேர்ந்துகொண்டு கிராமத்தைக் காவல் காத்து வந்த காலுவிற்கும் இந்தக் கும்பிருட்டில் மரணம் எட்டிப் பார்ப்பது போல் தோன்றிற்று ... நிலவு பளிச்சென்று வீசிக் கொண்டிருக்கும்போது கூடத் திருடர்கள் வருவதுபோல் அவனுக்குத் தோன்றியது. பளபளவென்று மின்னும் உடை வாட்களைப் போல் தெளிவாகத் தெரிந்தது.

ஒருநாள் இரவு நேரம். காலு நினைத்தான் — 'நான் என்

வாழ்வின் இறுதிச் சந்திப்பை நாளைக்கு முடித்துக்கொள்ளப் போகிறேன்!'

உண்மையில் காலு அதிகாலையில் எழுந்து ராஜியைச் சந்திக்கச் சென்றான் ...

வாசலில் உட்கார்ந்திருந்த ராஜியால் வந்துகொண்டிருந்த காலுவைப் புரிந்துகொள்ள முடியவில்லை. எப்படித் தெரிந்து கொள்ள முடியும்? தோளில் வாள் தொங்கிக்கொண்டிருந்தது. கையில் பத்துப் பதினைந்து அம்புகள் கொண்ட அம்பறுத் தூணி இருந்தது. நடையிலும் ஒரு மாற்றம். காலு இப்போதெல்லாம் விவசாயியல்ல, உயிரை உள்ளங்கையில் வைத்துக்கொண்டு வளையவரும் ஒரு நடைபிணம். தலையில் மூடப்பட்டிருந்த முகத் திரைக்கிடையே பளிச்சிடும் அந்தக் கண்களும் அப்படித்தானிருந் தன .... மிகவும் அருகில் வந்த பிறகுதான் காலுவை ராஜி கண்டு கொண்டாள். சிரித்தபடியே அவள் கூறினாள் — 'என்னால் உங்களை அடையாளம் கண்டுகொள்ளவே முடியவில்லை!'

'நீ மட்டும் அடையாளம் கண்டுகொள்ளும் படியாகவா இருக் கிறாய்? ... தானியம் ஏதாவது கிடைக்கிறதா ... இல்லை இப்போதி லிருந்தே ...'

'தானியம் கிடைக்கிறது — ஆனால் வேலைதான் கிடைப்ப தில்லை!' கட்டிலை நகர்த்திப் போட்டபடியே ராஜி பதிலளித்தாள்.

'இப்படி ஒரேயடியாக உட்கார்ந்தேயிருந்தால் மனிதன் பருத்து விடுவான் .... இல்லாவிட்டால் இப்படித்தான் மெலிந்து விடுவான்!' வீட்டைச் சுற்றிலும் பார்த்தபடி 'எல்லோரும் எங்கே?' என்று கேட்டான்.

'மூவரும் கிராம மக்களுடன் டேகடியா சென்றிருக்கின்றனர். தானியம் கொண்டு வருவதற்குத்தான் ... குழந்தைகள் இங்கு தான் எங்காவது விளையாடிக் கொண்டிருப்பார்கள்.'

'வீட்டில் கொஞ்சம்கூட தானியம் இல்லையா?'

ராஜி சிரித்தாள். அலட்சியமாக நடந்துகொள்ள முயன்றாள். ஆனால் உடல் முழுவதுமே வறண்டு கிடக்கிறதே. சிரிப்பில் எங் கிருந்து கவர்ச்சியைக் கொண்டு வரமுடியும்?

'இருக்கிறதே! பூராவும் தீர்ந்துவிடுமா என்ன?'

'இல்லை! நான் நம்பமாட்டேன் — எங்கே, எனக்குக் காண்பி!' தோளிலிருந்து கத்தியை இறக்கிவிட்டுக் காலு எழுந்து நின்றான்.

அந்தக் குதிர்களை நான் பார்க்கவேண்டும்' என்று கூறியபடியே வில்லுடன் குதிருக்கருகே சென்றான்.

ராஜி அவனைத் தடுக்க விரும்பினாள். 'நான் பொய்யா சொல்கிறேன்!' என்று கூற நினைத்தாள். ஆனால் 'உம் ஒருவருடைய மானத்தையும் வாங்காமல் போய் உட்காருங்கள் சும்மா' என்றும் சொல்ல நினைத்தாள். ஆனால் எப்படிச் சொல்வாள்? துக்கமும் தொண்டையை அடைத்துக்கொண்டு வந்தது. அவள் ஜடமாகி விட்டாற்போல் எண்ணினாள் - கட்டில் காலருகே யிருந்த அம்புகளைக் கட்டிலின்மீது வைத்தாள். அருகேயிருந்த துடைப்பத்தை ஒரு மூலையில் வீசியெறிந்தாள். வீட்டில் குவிந்து கிடக்கும் குப்பையை நினைத்துக்கொண்டு மறுபடியும் அதை எடுத்தாள்.

காலு குதிர்களுக்குள் வில்லை விட்டுப் பார்த்தான் - 'தம் தம்' என்று ஓசை வந்தது - அடியில் உட்கார்ந்துகொண்டு காலன் தான் உறுமுகிறானோ எனும்படி யிருந்தது அந்த ஓசை. அதுமட்டு மல்ல, குடிசையிலிருந்து வந்த 'சர்ர் ... சர்ர்' எனும் ஒலிகூட அந்த நிச்சப்தமான சூழ்நிலையில் பயங்கரமாக இருந்தது.

ராஜி வீட்டைச் சுத்தம் செய்துவிட்டுத் துடைப்பத்தை ஒரு பக்கம் போட்டாள். வீட்டிற்குள்ளிருந்து திரும்பி வந்த காலு வில்லை அம்புகளுடன் வைத்தான். கட்டிலில் உட்கார்ந்தபடி கூறினான் — 'அவ்வளவுதான்! .... இன்னும் தானியத்தைப் பயிர் செய்யக் கோடைகாலத்து மூன்று மாதங்களும், மாரிகாலத்து நான்கு மாதங்களும் சேர்ந்து மொத்தம் ஏழு மாதங்களிருக் கின்றன. வீட்டில் ஒரு மணி தானியம்கூட இல்லை!'

காலுவின் அந்த வார்த்தைகளைக் கேட்கவில்லை போல் பாசங்கு செய்தபடி ராஜி உக்காவை எடுத்து நெருப்புக் கொண்டுவர வெளியே சென்றாள்.

அவளுடைய முதுகையே பார்த்துக்கொண்டிருந்த காலு மறு படியும் முணுமுணுத்தான் — 'வீட்டில் தானியம் இருந்தால்தானே அடுப்பு மூட்ட நெருப்பு வேண்டும்?' அவன் ஒரு பெருமூச்சு விட்டான் — 'சாதம் சாப்பிட்டு எத்தனை நாட்களாகி விட்டனவோ, யாருக்குத் தெரியும்?'... இன்னும் ஏதோ சிந்தித்த வண்ணம் ராஜியை எதிர்பார்த்தபடி வாசற்படியைப் பார்த்துக் கொண் டிருந்தான்.

ராஜி வந்தவுடன் கூறினான் — 'உக்காவை வை இப்படி. என்னுடன் கிளம்பு, நாம் போகலாம்!'

ராஜி பிரமித்துவிட்டாள். அவளைப் பார்த்தால் அழப் போகிருளா, சிரிக்கப் போகிருளா என்று புரியவில்லை. அப்படி ஒரு குழப்ப நிலையில் இருந்தாள்.

காலு மட்டும் அழுது விடுபவனைப் போலத்தானிருந்தான். 'நான் இம்மாதிரி உன்னைச் சாகவிட மாட்டேன். இது கெட்ட மரணம்!' என்றான் அவன். 'கெட்ட மரணம் எனக்கு மட்டுமா என்ன? நம் நாடு முழுவதற்கும்தான்! உங்கள் வீட்டில் மட்டும் குதிர்கள் நிரம்பி வழிகின்றனவா என்ன? விதை வாங்கிக்கொள்ள வந்தேன் அப்போது உள்ளே ...'

'எல்லாம் பார்த்துக்கொள்ளலாம். நான் கணக்குப் போட்டுப் பார்த்தேன். நாம் இரண்டு மாதங்கள் வரை தாராளமாக வாழ முடியும். மங்கள் .... நான் இங்கு வந்துவிட்டேன், இல்லாவிட்டால், கொண்டுபோய் விட்டுவிட்டு —'

ராஜி குறுக்கிட்டாள் — 'நாநா! நீங்கள் அவனை விட்டு விட்டு வந்துவிடுவீர்கள். ஆனால் உலகம் என்ன சொல்லும்? கிடக்கிறது உலகம் ... உள்ளம் என்பது எல்லோருக்கும் ஒரே மாதிரியாகத் தானிருக்கும்., இல்லையா?'

ஒரு கணம் தாமதித்துத் தலையை ஆட்டியபடி அவள் கூறினாள்— 'ஊஹூம்! நம்முடன் ஏதாவதொரு மைத்துனனை அழைத்துக் கொண்டு போனால்தான் அது சரியாகும், இல்லாவிட்டால் எனக்கும் உங்களுக்கும் என்ன உறவு?'

'அவ்வளவுதானே, இப்படிச் சொல்லிவிட்டாயே ராஜி!' காலுவின் குரல் மட்டுமல்ல, முகமும் வருத்தத்தால் சூழ்ந்துகொண்டது.

'அப்படியில்லை! நம் மனதில் ஆயிரமிருக்கும். ஆனால் உங்கள் வீட்டில்' —

'அடே! நாம் இருவரும் என் ஒருவனுடைய பங்கு உணவைப் பகிர்ந்து ஒரு வேளை சாப்பிட்டு நாட்களை கழிக்கலாம். சரிதானே?'

ஒருகணம் ராஜி சிந்தனையில் மூழ்கிவிட்டாள். திக்குத் தெரியாமல் தவித்தவள் திடீரென்று சுய உணர்வு பெற்றவள்போல் திடீரென்று தூக்கிவாரிப் போட்டுக் கொண்டு பேசினாள் — 'இதென்ன பேச்சுப் பேசுகிறீர்கள்? ... எதை நினைத்துக்கொண்டு இந்த மாதிரி நீங்கள் பேசுகிறீர்கள்? .... என் வீட்டோர் எல்லோரையும் மரணத்தின் வாய்க்குமுன் நிறுத்திவிட்டு வந்துவிடுவதா?'

நான்கைந்து கணங்கள் வரை மௌனமாக இருந்துவிட்டுப் பிறகு தூணின் மீது நகத்தால் கோடுகள் கிழித்தபடி ராஜி கூறினாள் —

'என்னை அழைத்துக்கொண்டு போகும் விஷயத்தை மறந்து விடுங்கள். அது கனவிலும் முடியாத காரியம்!'

'அப்படியானல் நான் மடிந்துதாஞக வேண்டும் என்று சொல்லி விடேன்! யாருக்குத்தான் இறக்கப் பிடிக்கும்?' சிரிக்க முயற் சித்த ராஜி கூறினள். 'அதுவும் நான் ஏன் —'

'ஏன் என்பதெல்லாம் எனக்கு நன்ருகத் தெரியும் ராஜி! நான் உன்னைத் தெரிந்துகொண்டிருப்பது போல் வேருருவரும் இந்த உலகில் தெரிந்துகொண்டிருக்க மாட்டார்கள்' — ராஜியைப் பார்த் துக் கொண்டே அவன் கேட்டான் — 'சொல், நீதான் சமையல் செய்கிருய், இது சரியா தப்பா?'

'சரிதான்!'

'எல்லோருக்கும் நீதானே பரிமாறுகிருய்?'

ராஜி ஆமாம் என்று கூறும் வகையில் தலையசைத்தாள். கூறி ஞள் — 'பங்கிட்டுக் கொடுக்கிறேன்!'

'பங்கு போடுபவருக்கு என்ன மிஞ்சுகிறது என்று சொல்லட் டுமா?'

ராஜியின் ஒளியிழந்த கண்கள் சிரித்துக் கொண்டிருந்தன. புருவங்கள் மேலெழுந்தபடி 'சொல்லுங்கள்' என்று கூறுவது போலிருந்தன.

'அந்தப் பங்கு போடுபவருக்கு எச்சிலைச் சுத்தம் செய்வதற் கும் பாத்திரத்தைத் துலக்குவதற்குமே நேரம் சரியாக இருக்கும்' என்று கூறியபடியே காலு எழுந்து நின்ருன்.

'ஏன் நீ உன் கையாலேயே — உன்னையே நீ வதைத்துக் கொள் கிருய். பைத்தியக்காரி! உலகம் உன்னை நசுக்கிவிடும் என்று நீ நினைக்கிருய், ஆனல் இங்கே யாருக்கு நேரமிருக்கிறது? எல் லோருக்கும் அவரவர்களின் கவலை. தாயே தன் குழந்தையைக் கொன்று தின்னுவிட்டால் என் பெயரென்ன என்று கேள்? நான் சொல்கிறேன் கேள் — முட்டாள் பெண்ணே!' —

'வீணுகப் பிதற்றுகிறீர்கள் நீங்கள்!' ராஜி சற்றுக் கடுகடுப் புடன் பேசினள் — 'நான் இந்த வீட்டை விட்டு ஒருபோதும் போகத் தயாராக இல்லை.' தரையில் உட்கார்ந்தபடி அவள் கூறினள் — 'என் அண்ணன் அழைத்துப் போக வந்தாலும் சரி, போகமாட்டேன்!'

காலுவிற்கு இன்று ராஜி மிகவும் சக்தி படைத்தவளாகக் காட்சியளித்தாள். மனதிற்குள் அந்தத் தேவியை நமஸ்கரித்

தான். 'வெகுநேரம் வரை உக்கா பிடித்த பிறகு ராஜியைப் பார்த்துக்கொண்டே காலு கூறினன் — 'கடைசியாக உன்னைச் சந்திக்க வந்திருக்கிறேன், நல்வாழ்த்துக் கூறு!'

'எதைக் குறித்து நல்வாழ்த்து? கடைசியாக ஏன் சந்திக்க வர வேண்டும்?' ராஜியின் களையற்ற முகம் திடீரென்று பஞ்சுபோல் மிருதுவாகி விட்டது — 'நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?'

'உண்மையாகத்தான் சொல்கிறேன், ராஜி! நம்மில் அநேகருடைய நிலை உன் நிலையைப் போலத்தானிருக்கிறது. எஞ்சியுள்ள தானியமும் கொள்ளையடிக்கப் பட்டுவிடும். பசியால் மடிவதைவிடக் கொள்ளைக் கூட்டத்தை எதிர்த்து மடியலாம் என்று நான் அதனல்தான் நிச்சயித்திருக்கிறேன்! உலகம் நினைவுச் சின்னமாகத்தான் ...'

'உம் ...! அதனல்தான் வில்லும் அம்புமாக வந்திருக்கிறீர்களா?'

ராஜி ரகசியத்தைப் புரிந்துகொண்டாள். கூடவே அவளுடைய கூரிய கண்கள் ஒளிவிட்டுப் பிரகாசித்தன. கடைக் கண்ணலேயே பேசினள் — 'அப்படியானல் கொள்ளைக்காரர்களுடன் சண்டையிட்டுச் சாக வேண்டும். நினைவுத் தூணில் உயிருடனிருக்க வேண்டும் என்று சொல்லுங்கள்!'

காலுவிற்கு அவளுடைய கடைக்கண் மொழி புரியவில்லை. ராஜியையும் அவனல் புரிந்துகொள்ள முடியவில்லை.

அதனல் அவன் இரண்டு விதமாக ஒலிக்கும் பதிலளித்தான் — 'பின்பு பசியால், நாயைப்போல் வாள் வாள் என்று கத்திக்கொண்டு யார் உயிரை விடுவார்கள்?'

'உம் ....!' ராஜியின் கண்கள் வாசலுக்கு வெளியே தென்படும் ஆகாயத்தைப் பார்த்தன. அவளுடைய கவனமும் வேறெங்கோ தானிருந்தது.

அவள் மௌனமாக யிருப்பதைக் கண்ட காலு, அவளுக்குப் புரியவில்லையோ என நினைத்துக் கூறினன்—

'சாகும் வரை இந்த உடல் யாருக்காவது பயன்பட்டால் பட்டுமே!'

ராஜியின் கூரிய கண்கள் பளிச்சிட்டன. காலுவைப் பார்த்தபடி கேட்டாள் — 'நீங்கள் இதுவரை பட்டினி யிருந்ததுண்டோ?'

'இதுவரையில் கடவுளின் கிருபையால்—'

'அப்படியானல் ஒன்று செய்யுங்கள். இரண்டு தினங்கள்

சாப்பிடாமல் இருந்து பாருங்கள் — அப்போது பசி என்பது என்ன என்று புரியவரும்! பிறகு எல்லாம் —'

காலுவிற்கு ராஜியின் சொற்களைவிட அவளுடைய நலிந்த உருவம் இன்னும் அதிக வேதனையளித்தது. அந்த வேதனையிலும் குழப்பத்திலும் பாதி வார்த்தைகளை அவனால் புரிந்துகொள்ள முடியவில்லை. இடையே சொன்னான் — 'எனக்கு நீ என்ன சொல்கிறாய் என்று கொஞ்சம் கூடப் புரியவில்லை!'

'பசி என்ன என்பது உங்களுக்குத் தெரியாது, பின் எப்படி நான் சொல்வது புரியும்?' ராஜி தனக்குள் சொல்லிக்கொள்வது போல் பேசினாள். மறுகணம் அவள் காலுவைப் பார்த்துக் கூறினாள். அவளுடைய கண்களும் குரலும் சற்றுக் கடுமையாக இருந்தன — 'நான் சேட்டின் வீட்டிற்கு ஒரு நாள் தானியம் வாங்கி வரப் போனேன். அவருடைய குதிர்களிலும் கிடங்குகளிலும் தானியம் நிரம்பி வழிந்துகொண்டிருந்தது. சேட் என் அழகை வர்ணிக்க ஆரம்பித்தான், என்னுடன் அதிகப்பிரசங்கித்தனமாக நடந்துகொள்ள விரும்பினான். வெறுங்கையுடன் உடனே திரும்பிய நான் வழியெல்லாம் யோசித்தபடி வந்தேன். நான் மட்டும் ஒரு ஆண் மகனாக இருந்தால் அந்த சேட்டைக் கொலை செய்திருப்பேன்; பசியுடன் வாடுபவரனைவருக்கும் அந்தக் கிடங்கு தானியத்தை வாரிக் கொடுத்திருப்பேன். இப்படியெல்லாம் நினைத்தபடியே வந்தேன்!' ராஜியின் கண்களில் உண்மையாக ரத்தம் நிரம்பினதுபோல் காணப்பட்டது.

வேகமாக மூச்சு விட்டதால் அவளுடைய குரல் கம்மிவிட்டது - 'நீங்கள் வந்து கொண்டிருந்தீர்களே இன்று, அப்போது கூட நான் அதைப் பற்றித்தான் நினைத்துக்கொண்டிருந்தேன். ஆனால் என்ன செய்வேன்? கடவுள் என்னைப் பெண்ணாய்ப் படைத்து விட்டாரே.'

காலு அப்படியே அமைதியாக உட்கார்ந்துவிட்டான். பேச அவனுக்கு ஒன்றுமே கிடைக்கவில்லை.

அவன் மௌனமாக இருந்ததைக் கண்டு அவள் மேலும் கூறினாள் — 'ராஜி முட்டாள் என்று உங்களுக்குத் தோன்றும். ஆனால் ராஜி என்ன செய்வாள்? இருந்த நகையை விற்றுச் சாப்பிட்டாகி விட்டது. இந்த வீட்டையும் நிலத்தையும் யாராவது வாங்கிக் கொண்டால் மூன்று மணங்கோ, இரண்டு மணங்கோ தானியம் வாங்கிக்கொண்டு விற்றுவிடுவேன். 'உயிருடனிருந்தால் பிச்சையெடுத்தாவது உண்ணலாம்;' என்று ஒரு பழமொழி உண்டல்லவா? ஆனால் —'

காலு சொல்ல விரும்பினான் — 'ஆனால் நீ உயிருடன் வாழவா விரும்புகிறாய்? .... ஊருக்கு உழைத்து உழைத்து நீ உயிர் தரிக்க விரும்புகின்றவள்!' சொல்லிவிடுவான். ஆனால் உள்ளத்துணிவு வரவில்லை ... ஒரு நீண்ட மூச்சு விட்டபடி அவன் கூறினான் — 'நீ கொள்ளையும் அடிக்கமாட்டாய், தன் மக்களையும் கொள்ளை யடித்துப் பிழைக்க விடமாட்டாய்; பிறகு மடிவதுதான் ஒரே வழி!'

இவ்வளவு வருத்தத்திலும் காலு வருந்த ராஜியால் சகிக்க முடியவில்லை — 'உங்களுக்கு மரணத்தைப் பற்றிக் கவலை... நாங்கள் என்றோ மடிந்துவிட்டோம். அந்த நதியில் தினமும் நான்கைந்து சிதைகள் எரிவதைப் பார்க்கின்றோம். அவற்றுடன் எங்கள் சிதைகளும் எரிந்துவிடும் ... அதனால் என்ன? ... 'மரணத் தைக் கையில் வைத்துக்கொண்டு திரிகிறேன்!' என்று நீங்கள் தான் சொல்கிறீர்களே!'

காலுவிற்கு மறுபடியும் அதே குரல் நினைவிற்கு வந்தது. அதே உருவம் கண் முன் வந்து கூறுவது போலிருந்தது — 'மரணத்தை கண்டு இங்கு யார் பயப்படுகிறார்கள்? ஆனால் இறக்கும்போது இருவரும் ஒன்றாய்ச் சேர்ந்து இறக்கலாமே என்ற ஆசை தான் —' காலுவின் கண்கள் நீரால் நிரம்பிவிட்டன. அவன் மௌனமாகி விட்டான்.

'உங்களுக்குத் தோன்றுவது எனக்கும் தோன்றாமலா இருக் கும்?' — ராஜி கிழிந்த புடவைத் தலைப்பைக் கிழித்துக் கொண்டிருந்தாள்—'உயிருடனிருக்கும் போது தான் சேர்ந்து வாழ முடியவில்லை யென்றால் இறக்கும்போதாவது ...' பிறகு பெரு மூச்செறிந்தபடி கூறினாள் — இறக்கும்போது ஒன்றாய் இறக்க நாம் அவ்வளவு கொடுத்து வைத்திருக்கிறோமா என்ன? —'

மேலே பேசத் தொடங்கிய ராஜி, தன் கணவன், மைத்துனன், அவனுடைய மனைவி எல்லோரும் முற்றத்திற்கு வந்துவிட்டதைக் கண்டாள். தலை மீது மூட்டைகளைப் போல் எதையோ பார்த்த வுடனேயே ராஜியின் முகம் மலர்ந்தது — 'தேவலையே! ஒரு மாதம் வரை மரணம் அருகே அண்டாது. அதற்குள் அரசு செலுத்திவிடலாம் போங்கள்!' என்று கூறியபடியே அவள் எழுந்து நின்றாள்.

ராஜியின் இந்த அலட்சியமான செயலும், பேச்சும் தன்னை மகிழ்விக்கத்தான் என்பதைக் காலு புரிந்துகொண்டு விட்டான்.

இளைய மாமனாரிடம் 'ராம் ராம்' என்று வணக்கம் தெரிவித்துக் கொண்டு, பிறகு அவர்களிடம் கேட்கவேண்டுமே என்பதற்காகக்

கேட்டான். எருதுகளை விற்றுத் தானியம் வாங்கி வந்திருப்பதை அறிந்து மகிழ்ச்சியடைந்தான் — 'நல்ல அறிவுடன் செய்திருக்கிறீர்கள். பசுக்களும் தங்காமல் போய்விடும். அவற்றையும் யாருக்காவது விற்று —'

'விலைக்கு வாங்கிக்கொள்ள யாராவது கிடைத்துவிடுவார்கள். ஆனால் — சுச்சு .... சுச்சு ... சுச்சு' — காலுவின் மாமனார் தமக்கு விருப்பமில்லை என்று தெரிவித்தார். — 'ராம் ராம்! அவர்கள் பசிக் கொடுமையின் காரணமாகத் தகாத செயல்களைச் செய்கின்றனர், என்றால் நாமும் அந்தப் பாவச் செயல்களுக்கு பங்குதாரராவதா!'

'அந்த எருதுகளும் நம் பசியை ஆற்றத்தான் விற்கப்பட்டன — அந்தப் பசுக்களை வாங்குவோரும்' — காலு தன் கருத்தைத் தெரிவித்ததற்காக வருத்தப்பட்டான் — ஏதோ பெரும்பாவச் செயல் புரிந்துவிட்டாற் போல் மன நலிவுற்றான்.

'ராஜி சொன்னதைக் கேட்டுக்கொண்டு ஏதாவது பேசி வைக்கப் போகிறாய்!'

மாமனாரின் அந்த வாக்கியத்தைக் கேட்டுக் காலு ராஜியைப் பற்றிக் குத்தலாகக் கூற நினைத்தான் — 'நீங்களும் உங்கள் மருமகள் ராஜியும்! மனிதனைக் கொலை செய்வதிலும் கொள்ளையடிப்பதிலும் சாஸ்திரம் குறுக்கிடுவதில்லை ... இந்தப் பசுக்களை விற்பதில்தான் —' ஆனால் மறுகணமே அவன் அதே ராஜியைப் மனதிற்குள் வணங்கினான். காலு தனக்குத் தானே கூறிக்கொண்டான் — 'ராஜி! இந்தப் பிரேதப் பிரதேசத்தில் நீ ஏன் பிறந்தாய்? இப்படிப்பட்ட ஈரமற்ற ஜாதியிலா நீ உதிக்கவேண்டும்? நீ அரச குலத்திலாவது சிறந்த அந்தணர் குலத்திலாவது தோன்றியிருக்க வேண்டியவள்! ....'

இதன்பிறகு காலு தானியத்தைப் பத்திரப் படுத்துவது, சிக்கனமாகச் சாப்பிடுவது முதலியவைப்பற்றிச் சில அறிவுரைகள் வழங்கினான். தன் கிராமத்தையும் பற்றிப் பேசிய அவன் தன் வீட்டைப் பற்றிய கவலையில் எழுந்து செல்ல அனுமதி கேட்டான் —'அப்படியானால் நான் போய்வரட்டுமா?'

மாமியாரும் மாமனாரும் சாப்பிட்டுவிட்டுப் போகும்படி வற்புறுத்தினர். உள்ளே சமையல் செய்துகொண்டிருந்த ராஜி வெளியே வந்து காலுவை அன்புடன் கடிந்துகொண்டாள் — 'உங்களுக்குச் சிறிதாவது வெட்கமிருந்தால் சாப்பிடாமல் கிளம்புவீர்களா?'

காலுவிற்குச் சாப்பிடவே பிடிக்கவில்லை. பசியும் தீர்ந்துவிட்டது. ஆனாலும் என்ன செய்வான்? பேச்சால் கூறாமல் ராஜி காலுவிடம் தன் கண்களால் கூறினாள் — 'என் கையால் கடைசி முறையாகச் சாப்பிட்டுவிட்டுப் போங்களேன். பிறகு யார் இறந்துவிடுவார்களோ, யார் உயிருடனிருப்பார்களோ, யார் கண்டார்கள்?'

காலுவிற்கு வேறு வழியின்றி உட்கார நேர்ந்தது. ஒரு மணி நேரத்திற்குள் ராஜி மாவரைக்கும் வேலையை முடித்து விட்டாள். காலு குளிப்பதற்குள் ரொட்டிகள் தயார் செய்துவிட்டாள். அடுப்பிற்கு மிகவும் அருகிலேயே அவள் காலுவைச் சாப்பிட உட்கார வைத்தாள்.

விதுரர் சாப்பிட அந்தக் கீரையில் கூட இந்தத் தினை ரொட்டியைப் போன்ற இனிமை இருந்திருக்காது. பூண்டுச் சட்டினியும் மோரும் வேறு இங்கு சாப்பிடக் கிடைத்திருக்கிறது.

சாப்பிட்டுக் கொண்டேயிருந்த காலுவின் கண்களினின்றும் நீர் ததும்பியது. அந்த இருளிலும் ராஜி அதைக் கண்டுகொண்டு விட்டாள். மெள்ளக் கூறினாள் —

'ஆண்பிள்ளை என்று சொல்லிக்கொள்கிறீர்களே, இவ்வளவு தான் தெம்பா?'

'மறுபடியும் சந்திக்க முடியுமோ, முடியாதோ!'

'முடியாவிட்டால் என்ன, அங்கு சந்திப்போமல்லவா?'

'நான் உன்னிடம் ரொம்பப் பேசவேண்டியிருக்கிறது ராஜி!— உன் மடியில் தலை வைத்துப் படுத்துக்கொண்டு கடைசியாக அழ வேண்டும் —' தன்னையுமறியாமல், அவனுடைய தலை ராஜியின் பக்கம் சாய்ந்தது.

'பேசாமல் சாப்பிடுங்கள்!' ராஜி காலுவின் தலையைத் தடவிக் கொடுத்தாள். அடுத்த கணமே டம்ளரில் தண்ணீர் கொண்டு வரும் சாக்கில் எழுந்து சென்றுவிட்டாள். ஆனால் இப்போது ராஜி அங்கு உட்கார்ந்திருந்தாலும் காலுவிற்கு ஒரு விருப்பமும் இருக்கவில்லை. வாழ்த்தும் அறை குறையாக இருக்கவில்லை. மடியில் படுத்துக்கொண்டு அழவேண்டும் என்ற ஆசையும் நிறைவேறாமல் அறை குறையாகி விட்டதாய்த் தோன்றவில்லை. தலையை வருடிய அந்த ஐந்து விரல்களுக்குள் எல்லாமே வந்து விட்டாற் போலிருந்தது — வாழ்க்கையின் கடைசி ஆசை நிறைவேறினாற் போலிருந்தது அவனுக்கு.

சாப்பிட்டுவிட்டு உக்கா பிடித்த மறுகணமே ஆயுதங்களுடன் கிளம்பச் சித்தமாகி விட்டான். மாமி மாமனுடன் கண்ணீர் ததும்ப விடை பெற்றுக்கொண்டான். கடைசியாக, ராஜியிடம் ஆனல் கண்களின் வாயிலாகத்தான். 'பதினைந்து நாட்களில் ஒரு சுற்றுச் சுற்றிவிட்டு வருவேன். நீங்களும் ஏதாவது செய்தியிருந்தால், சொல்லியனுப்புங்கள். ... வரட்டுமா! ராம் – ராம்!' பிறகு திரும்பிச் சென்றபடியே ராஜியிடம் கூறினன் — 'ராஜி! மறுபடியும் சந்திப்போமோ, மாட்டோமோ தெரியாது. ஆனல் வாழ்க்கையின் கடைசி ஆசை —'

துக்கம் தொண்டையை அடைத்துக்கொண்டு வந்ததால் 'கடைசி ஆசை' ... அறை குறையாகவே நின்றுவிட்டது!

ராஜியே சுய நினைவிழந்து நின்றிருந்தாள் காலுவின் முதுகையே கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தாள் .... கண்ணீர் வழிந்துகொண்டிருந்தது. காலுவின் உருவம் முற்றிலும் பார்வையிலிருந்து மறைந்து போயிற்று. அதன் பிறகுதான் ராஜி திரும்பினள்; தன் கண்களையும் துடைத்துக்கொண்டாள்.

## 31

## பசித்த பிசாசுகள்

காலு சென்றுகொண்டிருந்த வழியில் தென்பட்ட பாழ் இடமெல்லாம் ஐம்பத்தாரும் ஆண்டுப் பஞ்சத்தால் பதறிக்கொண்டிருந்தது பறவைகளும் கூடப் பசியாலும் தாகத்தாலும் துடித்துக் கொண்டிருந்தன. சித்திரைமாதத்து வெயிலும் ஒரே வறட்சியாக இருந்தது. கொதித்துக் கொண்டிருக்கும் நிலம் வெறுங் கால்களில் நடந்துகொண்டிருந்த காலுவிற்குப் பகைவனைப் போலிருந்தது. கால்களில் தடி கொண்டடிப்பதைப் போன்று அவனைத் துடிக்கச் செய்தது.

ஆனால் காலு அதையெல்லாம் பற்றிச் சிறிதும் கவலைப் படவில்லை. உள்ளத்தில் ஒரே ஒரு எண்ணம்தான் அலைமோதிக் கொண்டிருந்தது — 'ராஜி, அந்தக் கடைக்காரனிடம் தன்னை அர்ப்பணித்துவிடப் போகிறாளோ ?'

மறுபுறம் அவனுக்கு நல்ல நம்பிக்கையும் இருந்தது — 'இந்த உலகமே புரண்டு போனாலும் சரி, ராஜி பிழை செய்யமாட்டாள்!... நாளைக்குப் பசியால் சாக வேண்டியவள், இன்று சாக நேர்ந்தாலும் சரி, அவள் அப்படியெல்லாம் — '

இப்படிக் கூடச் சந்தேகித்தோமே என்று காலு தன்னை தான் வெறுத்துக்கொண்டான் — 'சீ கொலைகாரப் பயலே! நீ இன்னும் ராஜியைப் புரிந்துகொள்ளவில்லை. திருடினாலும், கொள்ளையடித்தாலும், ஆத்திரத்தில் பெண் சிங்கத்தைப் போல் பலரைக் கொலை செய்தாலும் செய்வாள், ஆனால் ... அந்த ஒரு செயல் அவளால் முடியாத காரியம் !'

ஆயினும் தானிய மூட்டைகளையும் வீட்டில் உள்ள மக்களின் எண்ணிக்கையும் கணக்கிட்டுப் பார்த்தான் காலு.. எப்படியாவது சிக்கனமாக ராஜி ஒரு மாதம் வரை கழித்துவிடுவாள். பிறகு அவன் முடிவு செய்தான் — பதினைந்து நாட்களுக்கொரு முறை ஒரு சுற்றுச் சுற்றிப் பார்த்துவிட்டு விடுகிறேன் !

கூடவே பலீரின் கால் கொலுசுகள், கம்மல், ஜிமிக்கி, குண்டலங்கள், இரண்டு — மூன்று மோதிரங்கள் முதலியவற்றை எண்ணினான். உக்காவின் மீது சுற்றப்பட்டிருந்த சிறு கம்பிகளின் மீதும் ஒரு கண்ணோட்டம் விட்டபடி காலு கூறினான் —

இவை எல்லாவற்றையும் விற்ருல் இன்னும் ஒரு மாதம் கழிக்கலா மல்லவா ? பிறகு — '

அந்தத் தானிய மூட்டைகள், நகைகள் இவற்றின் பலத்தில் இரண்டு மாதங்கள் வரை கழிக்கலாம் என்று யோசித்தபடியே அவன் கேட்டான் — பண்ணிரண்டு மாதங்களாகப் பெய்யாத மழை ஆனி மாதக் கடைசிப் பதினைந்து நாட்களுக்குள் கூடவா பெய்யாது ?

ஆனி மாதத்து இரண்டாம் பட்சம் கூட வந்துவிட்டது போல் அவன் முணுமுணுத்தான் — 'ஆடி மாதம் ஆரம்பித்துவிட்டது. இன்னுமா சோம்பித் திரிகிருய் ? மரத்தின் தளிர்களையும் கீரை யையும் தின்ருவது காலத்தைக் கழித்துவிடலாம் — ஆனல் ஒரு தடவை மட்டும் மழை பெய்யட்டும் ....'

இவ்விதம் சிந்தித்ததாலோ, கிராமத்து எல்லை வந்ததாலோ, மறையும் சூரியனின் வெயில் குறைந்திருப்பதன் காரணத் தாலோ, காலு வேகமாக நடக்கத் தொடங்கினன். ஆனல் எடுத்து வைத்த அடி அப்படியே நின்றுவிட்டது ! கிராமத்து வடதிசையில் நதிக்கரையிலிருந்து ஒரு கூக்குரல் கேட்டது — 'ஓடுங்கள் ! மாடு களைத் திருடக் கொள்ளைக்காரர்கள் கிளம்பி விட்டார்கள் ! ஓடுங்கள் ! ...'

காலுவின் அவயவங்களில் லேசாக ஒரு நடுக்கம் கண்டது — 'அடே ! இதென்ன, அக்கம் பக்கத்து மரங்களிலும் காற்றிலும் கூட நிச்சப்தம் நிலவுகிறதே !'

ஆனல் அந்தக் கூக்குரலுக்குப் பதிலளிக்கும் முறையில் கிராமம் முழுதும் விண்ணையே அதிரச் செய்துவிட்டது — ' ஐயோ ! வந்து விட்டார்களா ! அப்பப்பா ! ... எவ்வளவு தூரம் அவர்கள் ஓடு கிருர்கள். எதிரேயுள்ள மேட்டின் மீது ஏறிக்கொண்டு அடடா . !

கம்பம் போல் நின்றுகொண்டிருந்த காலு சுய உணர்விற்கு வந்தான். அவனுடைய உடலின் ஒவ்வொரு அவயவமும் நடுங் கிற்று .... எங்கிருந்தோ வீராவேசம் வந்தது. இடது புறம் அவன் திரும்பினன், வயல் வெளியா, வரப்பா, மேடா பள்ளமா என்று கூடப் பாராமல் ஓடினன். அவனுடைய உயரம் வரை வளர்ந் திருந்த மரங்களையும் தாண்டிச் சென்ருன். முட்புதர்களைக் கவனிக்காமல் அவற்றின் மீது நடந்து சென்ருன் ... நதிக்கரையை அடைந்து அவன் ஒரு குரல் கொடுத்தான் — ' அடேய் ! வந்து விட்டேன் பார் ! இன்னும் கொஞ்சம் நேரம்தான் ; பார்த்துக்

கொள்ளுங்கள்!' அவர்கள் அட்டகாசம் செய்து சிரித்தனர்... 'ஹி... ஹி... ஹி!'

கிராமத்தில் இரண்டு பேர்களின் குரல்கள் உரக்கக் கேட்டன. ஒன்று காலுவின் குரல், மற்றொன்று பேசாத்தின் குரல். எல்லோருக்கும் இந்தக் குரல்கள் தெரியும். குன்றுகளிலிருந்து பேசாத் அலறினன் — 'தப்ப வழியில்லை... இதோ என் தோழன் வந்து விட்டான்!...'

ஆனால் இந்தத் தோழனே அந்தக் குரல் கிளம்பிய பக்கம் போகாமல் வேறு பக்கம் திரும்பிவிட்டான்.... முட் புதர்களைப் பொருட்படுத்தாமல் காலு ஓடி வந்துகொண்டிருந்தான். ரோமங்களுக்கிடையே ஊர்ந்து வரும் பேனைப்போல் வந்துகொண்டிருந்தான்.

ஆனால் காட்டு மனிதர்களை விடக் காலு வேகமாக ஓடினன் என்று சொல்ல முடியாது. இவர்களிலும் சிலர் ஓடும் முயலைப் பிடிப்பவர்கள்தான். ஆனால் என்ன செய்வார்கள், பாவம் பசியால் நலிந்த உடல்; ஆடு மாடுகள் வேறு அவர்களை அவதிப் படுத்தி விட்டன. தடியால் அடித்து எருமைகளை ரொம்பவும் ஓட்டிவிட்டார்கள். ஆனால் நலிந்த உடலுடன் எவ்வளவு தூரம் தான் ஓட முடியும்!

கிராமத்து மக்கள் ஓடி வந்து ஆடுமாடுகளை விடுவிக்க உதவி செய்வதற்கு முன்பு குன்றுகளை நோக்கி ஓட ஆரம்பித்தனர்... பழமொழி ஒன்று சொல்வார்களே, அது தவறல்ல — 'பிறந்த வீட்டிற்குப் போன பெண்ணும், மலையை அடைந்த குறவனும் யாருடைய பிடியிலும் அடங்கமாட்டார்கள்!'

பல்லைக் கடித்துக்கொண்டு, கைகளைப் பிசைந்து கொண்டு ராமா, பகா, நாநா, கோதர் முதலிய இளைஞர்களும், சங்கர். காசம் போன்ற முதியோரும் திகைத்து நின்றனர் — 'எல்லாம் போய்விட்டது! கொள்ளை போனதைப் பற்றிக் கூட அழுகை வரவில்லை. ஆனால் வீட்டைப் பார்த்துவிட்டுப் போய்விட்டார்களே என்றுதான் அழுகை வருகிறது! எரிகிற உடம்பில் எண்ணெயைக் காய்ச்சி விட்டு விட்டுப் போய்விட்டார்கள்.'

கிராமத்தில் ஒரே அமளி துமளி, கொள்ளை போன பொருளை நினைத்து அவர்கள் அழவில்லை... எது எஞ்சியிருந்ததோ, அதை நினைத்து அழுதனர். பயங்கரமான எதிர்காலத்தை நினைத்து தாய் அழுதாள்; தாய் அழுவதைக் கண்டு குழந்தைகள் அஞ்சினர்.

யார் யாருக்கு ஆறுதலளிப்பது? ஆகாயமே இடிந்து விழுந்த பிறகு எந்த இடத்திற்கு ஓட்டுப் போடுவது? குன்றுகளே நம்மிடம் கோபித்துக்கொண்டால், பிறகு எதைச் சரணடைவது?

கிராமம் முழுவதிலும் பேசாத் ஒருவனுடைய வீட்டில்தான் அழுகையும் அலறலும் குறைவாக இருந்தது. காரணம் அவன் தன் ஏழு எருமைகளில் இரண்டை மீட்டுக்கொண்டு திரும்பி விட்டான்.

இங்கு காலுவின் வீட்டில் பலீ கதவில் தலையை மோதிக் கொண்டாள். 'பேசாத் தனியாக வந்துவிட்டார்! யாராவது போங்களேன் ... என் வீட்டவர்களின் கதி என்னவாச்சு என்று பார்த்து வாருங்களேன்! ... ஐயோ! இனி என்ன நடக்குமோ!... அந்தக் கொள்ளைக்காரர்களின் கையில் சிக்கிக்கொண்டு விட்டாரோ என்னமோ! ... அந்தக் குறப்பசங்கள் ... ஐயோ! ராமா! கோதர், போய்ப் பாரப்பா!.... எத்தனை நாட்களாக ஒன்றாய் உட்கார்ந்துகொண்டு உக்கா பிடித்திருக்கிறீர்கள்! முட்டாள் பசங்களா! கொஞ்சம் அவனைப் பற்றிக் கவலை கொள்ளுங் களடா!' பிறகு பேசாத்திடம் சென்று கெஞ்சிக் கேட்டுக்கொண்டு திரும்பினாள். மறுபடியும் பதினைந்து ஜவான்கள் கிளம்பினர்.

திரும்பிய காலு ஒரு மூச்சில் குன்றின்மீது ஏறினான்; ஒரு சிறு பள்ளத்தாக்கை அடைந்தான். பெரிய பெரிய கற்களைக்கொண்டு வந்து அவன் பள்ளத்தாக்கின் மீது வைத்தான். உடைவாளைத் தயாராக வைத்துக்கொண்டான். வில்லில் அம்பைத் தயாராக நாணேற்றி வைத்துக்கொண்டான். ஒரு சிறு பலாச மரத்தின் மீது சாய்ந்துகொண்டு கொள்ளைக் கூட்டத்தாரை எதிர்பார்த்து நின்றான்.

'மே ... மே' ... வெட்டுண்டு உயிரை விடும் மாட்டின் கடைசிக் குரல் காலுவின் கூரிய செவிகளில் விழுந்தது. அவன் தனக்குள் சொல்லிக்கொண்டான் - 'இந்தப் பள்ளத்தாக்கைக் கடப்பதற் குள் எல்லா மாடுகளும் இறந்துவிடும் போலிருக்கிறது!' அங் கிருந்து காலு கிளம்பினான். ஒளிந்து மறைந்துகொண்டே இரண் டாவது குன்றின்மீது ஏறினான்.

ஏறியவுடன் அவன் கண்ட காட்சி! அப்பப்பா! ஏழு பிறவிகள் வரை அவனால் மறக்க முடியாது. அரை உயிருள்ள இருபது இருபத்தைந்து மனிதர்கள் அந்த இறந்த மாடுகளின் மீது பாய்ந் தனர். பற்கள்தான் கத்திகளைப் போன்றிருந்தன. நெருப்புத்

தான் வயிற்றிலேயே எரிந்துகொண்டிருந்ததே! காலு நடுங்கிப் போனுன். ஒரு கணம் அவனுக்குச் சந்தேகம் தோன்றிவிட்டது— 'இவர்கள் கழுகுகளில்லையே!' கழுகுகளைப் போன்றுதான் அவர்கள் நடந்துகொண்டனர். சிலர் குழந்தைகளைத் தள்ளிக்கொண்டிருந்தனர். கிழவி ஓரிடத்தில் ரத்தத்தைக் குடித்துக் கொண்டிருந்தாள். மாட்டின் ஒவ்வொரு காலையும் இருவர் சேர்த்து வெட்டினர். கத்தியை எடுத்துக்கொண்டு உட்கார்ந்தபடி அவர்கள் மாமிசத்தைத் தனியாக வெட்டி எடுத்தனர். பிறகு தொடையில் அல்லது இடுப்பில் ஒளித்து வைத்துக்கொண்டனர். கத்தி இருக்கிறதே என்று பயம். அப்படியிருந்தும் ஓரிருவர் அதைப் பிடித்து இழுத்துத் தன்னுடையதாக்கிக் கொண்டனர்.

காலு நடுங்கிப்போனுன். அவனுடைய உடல் மயிர்க்கூச் செறிந்தது. உயிர் போவது அப்புறம் ஆகட்டும், கண்களிலிருந்து கண்ணீர் வழிந்தது — 'நீ நாசமாய் போ, தெய்வமே, மனிதப் பிறவிகளின் நிலையா இது?' குன்றுகளே வெடித்துவிடும் போல் பெருமூச்செறிந்தபடி அவன் கூறினுன் — 'இவ்வுலகில் எல்லாவற்றையும் விட மிகக் கொடியது ஒன்று உண்டு என்ருல், அது பசிதான்!'

காலுவின் கைகளைவிட உள்ளம் தந்தையைப் போல் பெயரெடுக்க அதிகம் விழைந்தது. ஆனுல் இங்கு ஆடு மாடுகள், மனிதர்கள் எல்லோரும்தான் பிணங்களாகக் கிடக்கின்றனர், யாரைக் கொல்வது? கொல்வது ஒருபுறம் இருக்கட்டும். எலும்பும் தோலுமாகக் கிடக்கட்டும் அந்த நடை பிணங்களுக்கிடையே துடித்துக் கொண்டிருந்த இரண்டு மூன்று சிறுவர்களைப் பார்த்து அவன் வாய் விட்டலறினுன் — 'அடே பிணங்களா! அந்தப் பேதைக் குழந்தைகளுக்கும் ஏதாவது கொடுங்களேன்!'

யாரவது பதில் பேசிவிடப் போகிருர்கள் என்ற பயத்தாலோ அல்லது அந்தக் காட்சி மறைந்து விட்டதாலோ, அவன் அங்கிருந்து மெள்ள நழுவிவிட்டான். 'என்ன செய்வேன்?' என்று சிந்தித்துக்கொண்டிருந்தான். அப்போது ஐம்பது நடை பிணங்களைக் கொண்ட ஒரு கூட்டம் சுமார் பதினைந்து மாடுகளுடன் தெருக்கோடியை அடைவதைக் கண்டான். அந்தக் கால்நடைகளுக்கிடையே தன் எருமையைப் பார்த்த காலுவின் உள்ளத்தில் ஓர் ஆசை எழுந்தது —

தன்னந் தனியாக என் எருமையை மீட்க முடிந்தால்தான் நான் வாலாபடேலுக் கேற்ற மகன்!

பிறகு காலு அந்தப் பள்ளத்தாக்கில் போய் உட்கார்ந்து கொண்டான். வாளை வெளியே எடுத்தான். பலாச மரத்தின் மறைவிலிருந்து பார்க்க ஆரம்பித்தான். அந்த ஐம்பது மக்களின் கூட்டம் பதினைந்து பேர்களுடைய இடத்தைப் பிடித்திருப்பார்கள் போலிருந்தது. அவர்களில் இளைஞர்களிருந்தனர் பெண்டிரிருந்தனர். துணிக் கோவணம் கட்டிக் கொள்வதற்குப் பதிலாக மரப் பட்டைகள், இலைகள் முதலியவற்றை உடலில் சுற்றிக் கொண்டிருந்தனர். ஆயினும் கண்டு பிடிப்பது கடினமாகிவிட்டது, எட்டு மாதங்களுக்கு முன்பு ஒரு குடம் பால் உரைந்திருந்த மார்பகம் இப்போது வற்றி உலர்ந்து காணப்பட்டது. தோல் தான் தொங்கிக்கொண்டிருந்தது. அதுவும் ஒரு கருப்புக் கோடு போட்டாற் போல் அவ்வளவு மெல்லியதாகக் காணப்பட்டது. பின்னால் வந்து கொண்டிருந்த கிழவர்களும் கிழவிகளும் உந்தப் பட்டு நடப்பதைப் போல் நடந்து வந்துகொண்டிருந்தனர். இவர்கள் எல்லோருடைய கால்களையும் கட்டிக்கொண்டு குழந்தைகள் வேறு — 'எனக்குச் சாப்பாடு! ... உயிர் போகுதே! சாப்பாடு வேணுமே!' இவர்கள் பேசும் தெம்பைக் கூட இழந்து காணப் பட்டனர். மெள்ள அரற்றத்தான் அவர்களால் முடிந்தது. ஒரு துரும்பைக் கூடக் கிள்ளும் தெம்பு அவர்களிடம் கிடையாது என்று காலுவிற்குத் தெரியும். ஆனாலும் சென்றுகொண்டிருந்தார்கள். முன்னே சென்றுகொண்டிருந்த நான்கு கால் பிராணிகளைக் கண்டு அவர்களுக்கு அவ்வளவு தெம்பு வந்தது ....

அந்தக் கால்நடைகளும் மனிதர்களும் பள்ளத்தாக்கை அடைவதற்குள் ஒருவன் — நான்கு பேர்கள் தடுத்த போதிலும் — ஒரு எருமைக் கடாவின் கழுத்தில் கத்தியை வீசிவிட்டான்.

'வேண்டாம், வேண்டாம்' என்று சொல்லிக் கொண்டிருந்தவர்களும் ஆளுக்கு ஒரு அடி போட்டனர்.

வெல்லக் கட்டியின் மீது ஈக்கள் மொய்ப்பது போல் அந்த எருமையின் மீது அவர்கள் பாய்ந்து அதனை மொய்த்துக்கொண்டனர்.

கையில் ஆயுதமில்லாதவர் கைகளைப் பிசைய ஆரம்பித்தனர். கேட்ட போதிலும், கெஞ்சிய போதிலும் யாரும் கத்தி தரத் தயாராக இருக்கவில்லை. எப்படித் தருவார்கள்? மாடுகளின் மீது கத்தியை வீசி வெட்டுவதற்குள் இவர்களுடைய உயிர் போய்விட்டால்?

பத்துக் கணங்கள் வரை ஆயுதங்களின்றிக் குழப்பத்திலேயே இருந்தனர். ரத்தத்தைக் குடிப்பதிலும், நக்குவதிலுமே முனைந்திருந்தனர்.

உண்மையில் அந்தக் கால் நடைகள் அமைதியாக அங்கேயே நின்றிருந்தால், இவர்கள் புலி பாய்வதைப் போல் அவற்றின் மீது பாய்ந்து தின்றுவிடுவர். மனிதனே அங்கிருந்தாலும் கழுத்தைத் திருகி அவனைக் கொன்றுவிடுபவர்கள் தான் அவர்கள்! ஆனால் இவ்வளவு பெரிய மிருகத்தை —

ஒருவன் சிறு கத்தியை உபயோகித்தான்; மற்றொருவன் கோடரியைப் பயன் படுத்திக்கொண்டான். ஒரு ஆயுதமுமில்லாத மூன்றாம் மனிதன் அந்த பள்ளத்தாக்கருகே போய் ஒரு வெள்ளை மாட்டைத் தடுத்து நிறுத்தினான். இரு புறங்களிலும் கற்களை மாரியெனப் பொழிந்தான்.

நலிவிழுந்த மனிதர்களின் பரபரப்பையும், வலுவுள்ள மாட்டின் துடிப்பையும் கண்டான் காலு!...

பெருமூச்செறிந்தபடி ராஜிக்கு பதிலளிப்பவனைப் போல் அவன் கூறினான் — 'நீ சொல்லிக் கொண்டிருந்தாயே, ஆனால் நான் இன்று பசியென்பது என்ன என்று நன்றாகப் பார்த்துவிட்டேன்.'

காலு அவர்களை அடித்துக் கொல்வதை விட்டுவிட்டு அவர்களைப் பற்றிய கவலையில் சிக்குண்டான். ஒரு கணத்தில் பலவிதமான எண்ணங்கள் தோன்றின — 'இவர்களால் எப்போது இந்த மாட்டை யடிக்கமுடியும்? இதை எப்போது இவர்கள் தின்னப்போகிறார்கள்? பாவம் இந்த மாடு எப்போது விடுபடப் போகிறது?'

மாடு துடிப்பதைக் கண்டோ, அல்லது கொல்ல முயற்சிப் போர் படும் வீண்பாட்டைக் கண்டோ, பின்னால் துடித்துக் கொண்டு தரையில் ஊர்ந்து கொண்டிருந்த குழந்தைகளைக் கண்டோ காலு தன் கத்தியை எடுத்து வீசினான் — 'இந்தாருங்கள், செல்வக் குழந்தைகளே!' உடனே அவன் அங்கிருந்து கிளம்பிவிட்டான். கடவுளைச் சபித்தான், வசை வசையாகப் பொழிந்தான் — 'கடவுளே! நீ நாசமாய்ப் போ! நீ மனிதனை இந்நிலைக்குக் கொண்டுவந்து விட்டுவிட்டாயே ....'

ஆனால் வழியெங்கும் இதே மாதிரி நிலைகள் தான். காலுவிற்கு நம்பிக்கை ஏற்பட்டுவிட்டது. 'மாலை நேரத்திற்குள் கிராமத்து

முன்னூறு கால்நடைகள் வரை உயிர் தப்பாமல் போய்விடும் போலிருக்கிறதே!' இந்தக் குன்றுகளை விட்டு எப்போதடா வெளியே செல்வோம் என்றிருந்தது அவனுக்கு ...

குன்றை விட்டு வெளியே வந்தால் பாதை தெரியவரும். கால் வாய்க்கருகே அவனுடைய பார்வை விழுந்தது. அந்தக் காட்சியைக் கண்டு அவன் அப்படியே பிரமித்து நின்றுவிட்டான். எதிரே புலியைக் கண்டு அசைய முடியாமல் நின்றுவிடும் குதிரையின் நிலைபோலாகிவிட்டது அவனது மன நிலை. இரண்டு கணங்கள் வரை கால்கள் முன்னுக்கும் செல்லவில்லை. பின்னுக்கும் செல்லவில்லை — பார்வையும் அங்கிருந்து விலகவில்லை. அப்போதுதான் அவன் சுய நினைவிற்கு வந்து நிமிர்ந்து நின்றான். ஒரு சிறு முயலைப் போல் அருகேயிருந்த புதரில் போய் அவன் ஒளிந்துகொண்டான். மனதைத் தேற்றிக்கொண்டான் — 'இருக்காது. இவள் ஒரு பேயாய்த் தானிருக்க வேண்டும். இல்லாவிட்டால் ... அடேடே இவள் பெண்ணல்லவா? ஒரு முயலைப் பிடித்துத் தின்றுகொண்டிருக்கிறாளே ...'

முயலைப் போல் ஓடியபடியே காலு தன் வழியே சென்றான். பிறகுதான் அவனது மனம் அமைதியுற்றது.

ஆனால் காலுவின் நடுக்கம் இன்னும் நிற்கவில்லை. இதயம் வேகமாகப் படபடத்துக் கொண்டிருந்தது. மண்டையோ சிறிதும் சக்தியற்றுச் சூனியமாகிவிட்டது. தன் கண்களால் பார்த்த போதிலும் தன்னையே அவன் மறுபடியும் மறுபடியும் கேட்டுக் கொண்டான் — இது உண்மைதானா? இல்லை, இல்லை ... கனவுதான் ... நான் தூக்கத்திலிருக்கிறேன் போலிருக்கிறது. இல்லாவிட்டால், இப்படியும் நடக்குமா என்ன ? ...'

உண்மையில் காலுவின் தலை சுழன்றது. எதிரே வந்துகொண்டிருந்த பேசாத், கோதர் முதலியவர்களை அவன் பார்த்தான். காலுவின் மயங்கிக் கிடந்த கண்கள் அவர்களுடைய குரலைக்கண்டு சுய நினைவிற்கு வந்தன. உடனே அவன் தரையில் உட்கார்ந்து கொண்டான்; உட்கார்ந்தவுடனேயே அழ ஆரம்பித்தான் — இன்றுதான் அவனுடைய தாய்—தந்தை இருவரும் இறந்துபோனாற் போலிருந்தது அவனுடைய அழுகை.

அந்த நண்பர்கள் பயந்துவிட்டனர், பயம் மேலிட அவர்கள் கேட்டனர், —'காலு, என்ன நடந்தது? விஷயத்தைச் சொல்லேன். எங்காவது காயம் பட்டுவிட்டதா என்ன ?' — பகாவைப் போன்றவர்கள் தாறுமாறாக எதையோ சொல்லிவைத்தனர் —

இவனுடைய மாடுகள் களவு போய்விட்டன. அதனுல் அழுகிருன். ஏனப்பா வீணுக வருத்தப்படுகிருய்?'

உள்ளத்து வேதனை சற்றுத் தணிந்ததும் காலு மேலே பார்த்தான்.— கண்களில் நீர் நிரம்பியிருந்தது. முகத்தினின்றும் அழுகையின் சாயல் மறையவில்லை. அப்போது காலுவின் நிலையைப் பார்த்தால் வாழ்நாள் முழுவதும் அவனுடைய அழுகை ஓயாது என நினைக்கும்படி யிருந்தது.

எழுந்து நின்றபடி அவன் அவர்களிடம் சொன்னுன். —'ஒன்றுமில்லையப்பா!... ஆனுல் பசி ...' தனக்குள் சொல்லிக்கொண்டான் — 'இல்லை, இல்லை! பசியை இன்னும் பார்க்கவேயில்லை. இவர்கள் பார்த்தது பசியையல்ல, பசித்த மனிதர்களை! ...மனிதர்கள் கூட இல்லை. பசித்த பிசாசுகளின் கூட்டங்களை!' மறுபடியும் அவனுடைய கண்களிலிருந்து கண்ணீர் வழிந்தோடியது.

கோதரும் பகாவும் நடுங்கிவிட்டனர் — 'இவனுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதா என்ன?' ... இல்லாவிட்டால் காலுவைப் போன்றவனுடைய கண்களிலிருந்து கண்ணீர் வர முடியாதே!'

காலுவும் அவனுடைய உற்ருர் உறவினர்களும் கிராமத்தை அப்போதுதான் வந்தடைந்திருப்பார்கள். அதற்குள் கிராமம் முழுவதிலும் ஒரே பேச்சு. 'காலுவின் துணி முழுதும் ஒரே ரத்தம்' என்ருன் ஒருவன். 'கை முறிந்துவிட்டது' என்ருன் மற்ருெருவன். அதை மறுத்து இன்னெருவன் கூறினன் — இதெல்லாம் சுத்தப் பொய். நான் என் கண்களால் பார்த்துவிட்டு வருகிறேன். ஒன்று மட்டும் உண்மை. 'இனி இந்தப் பஞ்சத்து ஆண்டிகளை நம்மால் காப்பாற்ற முடியாது; அவர்களாக எப்படியோ பிழைத்துக் கொள்ளட்டும்' என்ற செய்தியை இங்கு அனுப்புவதற்குத்தான் கிழவன். கோமதி காலுவை உயிருடன் மீட்டு அனுப்பியிருக்கிருன் ...'

இந்த வார்த்தைகளை ஓரளவு உண்மை என்று சொல்லலாம். கிராமத்திற்கு வந்தபடியே தனித்துப் பிரிந்து சென்றுகொண்டிருந்த அந்த இளைஞர்களிடம் காலு கூறினன் — 'உயிருடனிருக்க விரும்பினல், நாளையிலிருந்து மூட்டை கட்டுங்கள்; இல்லாவிட்டால் சாகவேண்டியதுதான்!'

ஒருபுறம் சித்திரை மாதத்து இருள் கவ்விய இரவு. மறுபுறம் இந்தச் செய்தி! இந்தச் செய்தியின் காரணமாகவோ அல்லது குறைந்து கொண்டிருக்கும் தானியங்களிஞலோ (எருதும் சில எருமைகளும்தான் சில வீடுகளில் எஞ்சியிருந்தன.) – மக்களுக்கு வீட்டில் தங்கப் பயமாக இருந்தது. பேய் பிசாசுகளைப் பற்றிய வர்ணனையைக் காலுவின் வாயிலாகக் கூடக் கேட்டதனல் மக்கள் உண்மையாகவே அட்டங்களிலிருந்து இருட்டில் பேய்கள் 'தாம் தூம்' என்று ஆட ஆரம்பிப்பது போல் பிரமையுண்டாயிற்று.

கிட்டத்தட்ட கிராம மக்கள் அனைவருமே காலுவிடம் விவரமாக விஷயத்தை அறிந்துபோக வந்தனர். ஒருமுறை கேட்டு முடித்த இளைஞர்கள் மறுபடியும் வந்து உட்கார்ந்தனர். காலுவின் சிறு தாழ்வாரத்திலும் பெரிய முற்றத்திலும் மக்களின் கூட்டம் பொங்கி வழிந்தது. அடுப்பில் கொதித்துக் கொண்டிருக்கும் பொங்கலைப் போல் வழிந்தது கூட்டம். காலுவைக் கேள்வி கேட்க எல்லோருக்கும் ஆசை. எதிரே உட்கார்ந்துகொண்டு அவன் சொல்வதைக் கேட்க ஆவல். ஆதலால் முன்னல் வந்து உட்கார

ஒரே போட்டி நடந்தது. சில பெண்கள் தொலைவிலிருந்தே கூக்குரலிட ஆரம்பித்தனர் — 'காலு அண்ணே! எங்களுக்கும் நிலவரத்தைப் பற்றிச் சொல்லுங்களேன்!'

காலு தான் பிறந்ததிலிருந்து ஒரு கூட்டத்திலும் சென்று சொற்பொழிவைக் கேட்டதே கிடையாது. பிறகு அவன் எப்படிப் பேசுவான்? அவனுக்கு மேடைமீது ஏறிப் பேசுவது என்றாலே என்ன என்று புரியாது. அவன் கட்டிலிலிருந்து எழுந்து — 'நான் எதைச் சொல்வேன், எதைச் சொல்லாமலிருப்பேன்?' என்று கூறிய படியே வீட்டு வாசற்புரம் வந்து நின்றான். சரியாக இன்னும் எழுந்து நிற்கக்கூடவில்லை. அதற்குள் குரல் வந்தது. — 'அங்கில்லை ... இந்தப் பக்கம் ... முற்றத்தின் பக்கம் வாருங்கள்!'

இந்த மாதிரி வேளையில் கூட ராமாவிற்கு விசித்திரமான யோசனை தோன்றிற்று. தலைக்குமேல் கட்டிலைத் தூக்கிக் கொண்டு — 'உம், தள்ளுங்கள், தள்ளுங்கள்' என்று சொல்லிய படியே வந்து சேர்ந்தான். முற்றத்திற்கெதிரே கட்டிலைப் போட்டு விட்டு ஓடினான் — 'நில் ... இரு காலு!'

ராமா பெரிய கூடை ஒன்றுடன் வருவதைப் பார்த்து அனேகர் சிரித்தனர். சிலருக்குக் கோபம் வந்தது — 'சுத்த மடையனாக இருக்கிறான்! இதென்ன வேலை செய்கிறான்?'

ராமா கட்டிலின் மீது கூடையைக் கவிழ்த்து வைத்தான் — 'காலு! எழுந்து நில்! ஏறு இதன்மேல்!' என்று கூறினான். ராமாவிடம் கோபித்துக்கொண்டவர் கூட மகிழ்ச்சியைத் தெரிவித்தனர் — 'ராமா, செய்தது சரிதான் தம்பி!'

காலுவிற்கும் சரி என்று பட்டது. கூடையின் மீது அவன் நின்று கொண்டான். தலைக்குமேல் பளிச்சிடும் ஆகாயத்தின் ஒளியில் காலு அவர்களுக்குத் தேவ தூதனைப் போல் காட்சியளித்தான்.

ஆனால் உண்மையில் காலு தேவதூதனல்ல. பசியால் தவிக்கும் அந்தப் பிசாசுக் கூட்டங்களின் தூதன்!

காலு எழுந்து நின்றுவிட்டானே தவிர ஒரு கணம் திகைத்துப் போனான் — 'நான் என்ன சொல்லவேண்டும்? இந்த மக்கள் என்ன கேட்கவிரும்புகிறார்கள்!' பிறகு அடுத்த கணமே மக்களிடம் கேட்டான் — 'இதோ பாருங்கள், நீங்கள் சொன்னபடி வந்து விட்டேன். உம், சொல்லுங்கள், என்ன கேட்டீர்கள்?'

நாதாவின் மனைவி கங்கு பேச ஆரம்பித்தாள் — 'எங்களுக்கு விவரமாகச் சொல்லுங்களேன்! நீங்கள் போயிருந்தீர்களே அங்கு ...'

'அண்ணி! அங்கு நடந்தது சொல்லும்படியாக ஒன்று மில்லையே!' காலுவின் கண் முன்னே அந்தக் காட்சிகள் எல்லாம் வந்து நின்றன. 'இறந்த ஆடு மாடுகளைச் சூழ்ந்துகொண்டு நின்ற அந்த மனிதக் கழுகுகள், பச்சை மாமிசத்தைத் தின்னும் புலையர்கள், ரத்தத்தைக் குடிக்கும் கொடியர்கள்' பெருமூச் செறிந்தபடி காலு கூறினன் — 'தெய்வமே! இந்த மாதிரிக் காட்சிகளைக் காண்பிக்காதே. ஏழேழு பிறவிகளிலும் இது வேண் டாம். அதைவிட என்னைக் குருடனுக்கிவிடு. அது மேல் என்று தான் வேண்டிக் கொள்வேன். என் கண்ணெதிரேயே ஆடு மாடு களை வெட்டப்படுவதைப் பார்த்தேன். அந்தக் கொல்லப்பட்ட ஆடுமாடுகளை கழுகுகளைப்போல் அவர்கள் சூழ்ந்துகொண்டனர். பிணந்தின்னும் கழுகுகள்தான், வேறென்ன? அதே போலத்தான் அடிதடி சண்டை, அவசரம் ஆத்திரப்பட்டுப் போட்டியிடுதல் எல்லாம்! .... அதே காட்சிதான்!' காலுவின் குரல் சிறிது மந்த மடைந்து, கண்களின் ஓரங்கள் சற்று நனைந்து காணப்பட்டன. தொண்டையைக் கனைத்துக்கொண்டு அவன் கூறினன் — 'மயானத்துப் பேய்கள் உயிர் பெற்றெழுவதை நாம் பார்த்த தில்லை. ஆனல் மக்கள் சொல்கிருர்களே, அம்மாதிரியும் நடப்ப துண்டாம். பூதம் ஒன்று கிளம்பினல் அதைத் தொடர்ந்து நிறைய பூதங்கள் கிளம்புவதுண்டாம் — வறண்ட ரோமங்கள், எலும்பெடுத்த உடல். 'ஆ ஆ!' என்று கத்தியபடி கிளம்புமாம்!'

காலு மறுபடியும் தொண்டையைக் கனைத்துக்கொண்டான். ஒரு மூச்சை உள்ளே இழுத்துக்கொண்டான் — 'ஆனல் அங்கே ஒரு காட்டாள் இல்லையே என்றிருந்தது!'

ராமா கூறினன் — உண்மைதான்! காட்டாள் இருந்திருந்தால் எல்லோரையும் சரிப்படுத்தி யிருப்பான்! — உப்பில்லாத சாம் பாரைப் போலாகிவிட்டது நிலைமை!'

'ராமா நீ சரியாகச் சொன்னய்!' என்ருன் காசம். சினத்தால் சிவந்து அவன் எழுந்து நின்ருன். கையை ஆட்டிக்கொண்டு சொல்ல ஆரம்பித்தான் — 'காட்டாள் ஒருவனை நம்பி எல்லோரும் இருந் தார்கள் — மயானத்தில் அவன் விழித்துக்கொண்டு பாரா கொடுப்பான் — நம் டாகுர் முதலியவர்கள் கவலையே இல்லாமல் தங்கக் கட்டிலில் உட்கார்ந்துகொண்டு உக்கா பிடிப்பார்கள். பஞ் சணையில் அமர்ந்துகொண்டு அட்டகாசம் செய்வார்கள். காலு சொல்வதில் தவறே கிடையாது. உப்பில்லாத சாம்பாரின் நிலை

போலத்தானுகிவிட்டது. ஆடு மாடுகளைக் கடத்திக்கொண்டு ஓடி விட்டார்கள். இனி நம் வீடுகளையும் கொள்ளையிடும் நேரம் வந்து விட்டது. தப்பித்துக்கொள்ள முடிந்தால், பிழைக்க வழி தேடிக் கொள்ளுங்கள் — ஒன்று, இரண்டு, மூன்று தினங்களில் எல்லாம் தீர்ந்துவிடும்!' பிறகு தாழ்வாரத்திற்குத் திரும்பியபடியே கூறினுன்—'பிறகு நான் சொல்லவில்லை என்று புகார் செய்வீர்கள்!'

ஓரிரு கணங்கள் வரை ஒரே அமைதி – நின்றபடியே எல்லோரும் உலர்ந்து நின்றுவிட்டனரோ என்று சந்தேகம் உண்டாயிற்று.

காலு இறங்கித் தாழ்வாரத்தில் போய் உட்கார்ந்துகொண்டான். இருமல், தும்மல் முதலிய ஒலிகள் கேட்க ஆரம்பித்தன — 'வீட்டைக் கொள்ளையடிப்பார்களா? யாருடைய வீட்டில் ஏதாவது பொருளிருக்கிறதோ, அவர்கள்தானே கவலைப்பட வேண்டும்?' என்று ஓரிருவர் பேசிக்கொண்டனர்.

நான்கைந்து பேர்கள் அதனை ஆமோதித்தனர் — 'ஆமாம், ஆமாம்! என்னையும் உன்னையும் போன்றவர்களிடம் மூட்டை கட்டிக்கொண்டு போக என்ன இருக்கிறது? ஒரு வேளைக்கு காணும்படி தானியம் இருக்கும். 'அதைக் கொள்ளையடிப்பதற்குப் பதிலாக வயிற்றில் போட்டுக்கொண்டு விடலாம்.'

'வாஸ்தவம்தான். மூட்டை கட்டிக்கொண்டு அந்நிய நிலத்தில் உயிரை விடுவதைவிட, நம் வீட்டுத் திண்ணையில் உயிரை விடுவதில் என்ன தீமை இருக்கிறது?' ராமாவும் அந்த மக்களின் வரிசையில் போய் அமர்ந்துகொண்டான் ... கிட்டத்தட்ட கிராமத்துப் பாதி மக்கள் தத்தம் நிலைமையின் ரகசியத்தை அவிழ்த்துவிட்டுவிட்டனர். 'ராமா தம்பி சொல்வதில் தவறொன்றுமில்லை. கன்னம் வைத்தாலும் இரண்டு மணங்கு தானியம் கிடைக்கப் போகிறது. போகட்டுமே! தாராளமாக எடுத்துக்கொண்டு போகட்டுமே! ஏற்கனவே நாம் அரை உயிரைத்தான் வைத்துக் கொண்டிருக்கிறோம். இன்னும் பாதி உயிர் இருக்கிறது. — பதினைந்து நாட்களுக்குப் பிறகு உயிரை விடுவதைவிட இன்றே இறந்துவிடுவோம்!'

பேசாத், பகா, நாநா போன்று சுபிட்சமான வாழ்க்கை நடத்துவோர் சிலரும் கிராமத்தை விட்டுச் செல்வதை விரும்பவில்லை. நாநா கூறினுன் — 'நாம் எல்லோரும் ஒன்ருகச் சேர்ந்திருந்தால் அந்தக் குறவர்கள் நம்மை வந்து கொள்ளையடித்து விடுவார்களா? அவ்வளவு தெம்பு அவர்களிடம் இருக்குமா என்ன?'

'பின்னே? அவர்களுக்குத் துணிச்சலேது?' அந்தக் குன்றின் பக்கம் அவர்கள் திரும்பிப் போவதைப் பார்ப்பவன் போல் பேசாத் பேசினன்.

'அப்படியானல் இப்படிச் செய்வதுதான் சரி!' ரண்சோடின் வாடிய முகம் சற்று பளபளத்தது.

காசம் கூட மகிழ்வுற்ருன் — 'ஆமாம்! அவ்வளவு தைரியமிருந் தால், யார் இதை விட்டுப் போகத் தயாராக இருப்பார்ாள்?' இதன் பிறகு ரண்சோடைப் போன்ற மக்கள் கற்பனை செய்ய ஆரம்பித்தனர் — 'மூட்டை முடிச்சுகளுடன் போகிரும் என்றே வைத்துக்கொள்வோம், வழியில் கொள்ளைக்காரர்கள் வந்து விட்டால் என்ன செய்வது? ஷேர்பூரைப் போன்ற பெரிய கிராமம் இன்னும் கொள்ளையடிக்கப் படவில்லை என்பது என்ன நிச்சயம்? அங்கு செல்வதை விட நம் வீட்டில் உள்ளதைப் பதுக்கி வைத்துக் கொண்டு இங்கேயே இருக்கலாம்!'

காலுவால் பேசாமலிருக்க முடியவில்லை — 'உங்கள் எல்லோ ருக்கும் விருப்பமில்லை என்ருல் யாரும் உங்களை மூட்டை கட்டிக் கொண்டு கிளம்பச் சொல்லி வற்புறுத்த வில்லையே. பிறகு நீங்கள் சொல்லவில்லையென்று என்னைக் குறை கூறுவீர்கள். இன்னும் சொல்கிறேன் கேளுங்கள், அவர்களை எதிர்ப்போம், பசியுடன் இருப்போம் என்றெல்லாம் சொன்னவர்களின் பேச்சை நான் வீண்வம்பு என்றுதான் கூறுவேன். ஏனென்ருல் அவர்கள், நான் பார்த்தாற்போல், அந்தக் கூட்டத்தவர்களைப் பார்க்கவில்லை.' காலுவின் உடலும், குரலும் நடுங்கின. 'இத்தனை பேர் எங்கிருந்தடா வந்தார்கள் குன்றுகள்தான் அதிகமாகி விட்டனவா, அல்லது ஆகாயம்தான் பிளந்து கீழே வந்துவிட்டதா என்றுதான் நானும் வியப்படைகிறேன்!'

ஒருகணம் நின்றுவிட்டுப் பிறகு காலு கூறினன் — 'குன்றுகளும் அதிகமாகவில்லை, ஆகாயமும் பிளக்கவில்லை. பசி தாங்க முடியாமல் இந்த வியாபாரிகளை நோக்கி அவர்கள் வந்துகொண் டிருக்கிருர்கள் ... ஆமாம் வந்துகொண்டிருக்கின்றனர்! நினைவிருக் கட்டும் தேனீக்களைப்போல் குன்றுகளில் அடைஅடையாக அவர் கள் நிரம்பிவிடுவார்கள். இன்னும் சில நாட்களுக்குள் அவர்கள் தேனீக்களைப்போல் கூட்டமாகச் சேராவிட்டால், என் பெய ரென்ன என்று கேளுங்கள்!' உக்காவைப் பிடித்தபடியே கூறினன். இப்போது நான் ஒன்றும் சொல்லவில்லை!'

'கூட்டமாக இருக்கிறூர்கள் என்பது எனக்கும் தெரியும். ஆனல் வந்து தானியங்களைத்தானே எடுத்துச் செல்வார்கள்? மனிதர் களைத் தின்றுவிடப் போவதில்லையே?' என்று ராமா கேட்டான்.

உக்காவை நிரப்பியபடியே காலு வெளியே ஒரு துள்ளுத் துள்ளிக்கொண்டு கிளம்பினன். அடுப்பிலிருந்து எடுத்த நெருப்பு அப்படியே இடுக்கியில் இருந்தது.

ராமாவை நோக்கி அவன் நடப்பதைக்கண்டு மக்கள் சந்தேகித் தனர். வேண்டுமென்றே எரித்துவிட நினைக்கிருனு? காலுவின் உருவமும் குரலும் அப்படித்தானிருந்தன — 'மனிதனைத் தின்று விடுவார்கள் .... அப்படியே பச்சையாக வெட்டித் தின்றுவிடுவார் கள் ... உனக்குத் தெரியாது .... கிராமத்தில் இருக்கும் கிழவர் களிடம் போய்க் கேட்டுவிட்டு வா .... பிறகு வந்து பேசு. மனிதன் மனிதனைத் தின்பதுண்டா என்று கேள், அதிலும் தாய் தன் மக்களைத் தின்பாளா என்று கேள்!'

காலு ஒருகணம் மௌனமாக இருந்து பிறகு சுற்றும் முற்றும் பார்த்தான் — 'கேட்டிருக்கிறேன். உண்மைதான் என்று யாரா வது சொன்னலும் நாம் ஒப்புக்கொள்ள மாட்டோம். ஆனல் ஒன்று நினைவிருக்கட்டும் ... இந்த ஐம்பத்தாரும் ஆண்டில் அதைக் கண்ட துரதிருஷ்டம் படைத்த ஒருவன் நானிருக்கிறேன் ... இவ்வளவுதான் சொல்லமுடியும்!' பிறகு பின்புறம் திரும்பிய வண்ணம் கூறினன் — 'இன்னும் ஒப்புக்கொள்ளாவிட்டால்· அனுபவித்துப் பாருங்கள்!' மறுபடியும் ஒரே நிச்சப்தம் நிலவியது. ரண்சோட் கூறினன் — 'அப்படியானல் சேர்ந்து ஆலோசனை செய்யுங்கள்!'

'சேர்ந்துதானே யோசித்துக் கொண்டிருக்கிறேம்? வீட்டைக் காத்துக்கொண்டு வீடுகளிலிருக்கும் ஒவ்வொரு மனிதரையும் அழைத்துவருவதா என்ன?' என்று ராமா கேட்டான்.

கூடவே மங்களின் நினைவு வந்துவிட்டது — 'அடடா! என் வீட்டில் யாருமே இல்லையே!'

'நான் வீட்டைப் பூட்டாமல் வந்துவிட்டேனே!' என்றுள் ஒரு பெண்மணி.

ஆடவரனைவரும் அங்கிருக்கப் பெண்கள்மட்டும் தனிமையில் எப்படிச் செல்வர்? ஆகையால் ஒவ்வொரு பேட்டையின் நான்கைந்து ஆடவர்களுடனும் பெண்களையும் குழந்தைகளையும் அனுப்பிவைத்தார்கள். மக்கள் சிந்தனையிலாழ்ந்தனர். இரண்டு

கட்சிகளும் தெளிவாக அவர்களுடைய மனதில் இருந்தன— ஒன்று காலுவின் கட்சி, மற்றொன்று ரண்சோட் நாநாவின் கட்சி. முதல் கட்சியில் சுயநலம் என்று ஒன்றுமே கிடையாது. ஆனால் இரண்டாவது கட்சியில் சுயநலமிருந்தது, பொறுப்புமிருந்தது. நாளைக்கு அரசாங்கம், 'கிராமத் தலைவனாக இருந்துகொண்டு கிராம மக்களை ஏன் வெளியே அனுப்பினாய்?' என்று கேட்டால் என்ன பதில் சொல்வது? ஆனால் இது சாதாரணமான காரணம்தான்— முக்கியமான காரணம் மற்றொன்று. 'காலுவின் வார்த்தைப்படி நடந்துதானாக வேண்டுமா?' என்பதுதான் அது.

ஆனால் நாநாவும் ரண்சோடும் சற்று ஆழ்ந்து சிந்தித்துப் பார்த்தால் இதில் காலுவின் முயற்சி ஏதுமில்லை என்று புரிந்துகொண்டுவிடுவர். — 'நான் இப்போது சொல்லவேண்டியதைச் சொல்லிவிட்டேன். இனி என்ன செய்யவேண்டும் என்பதுபற்றி நீங்கள் யோசித்துக்கொள்ளுங்கள். நம் மக்களிருக்குமிடத்தில் நான் இருப்பேன், அது நிச்சயம்,' என்று கூறியபடியே அவன் உக்கா பிடிப்பதில் முனைந்துவிட்டான்.

கிராமத்தில் தீர்ப்புக் கூறும் மக்களும் ஒரே விஷயத்தைப் பற்றித் திரும்பத் திரும்ப இப்படியும் அப்படியுமாகப் பேசிக்கொண்டிருந்தனர் ... எழுந்திருக்கத் தயாரான பேசாத்தைச் சேர்ந்த பத்துப் பதினைந்து பேர் ஒரு சிறு கூட்டம் போட்டனர். கிராமத்தை விட்டுச் செல்வதுபற்றி ஒன்றுமே நிச்சயிக்கப்படவில்லை. ரண்சோட் காசமிடம் கூறினான் — 'உங்களில் யாராவது இருவர் ஷேர்பூர் சென்று வாருங்கள். தங்க இடம் முதலியன இருக்கின்றனவா என்று பார்த்து வாருங்கள்.' பத்துப்பதினைந்து பேர்களின் இந்தக் கூட்டம் கூடக் காலுவிற்குப் பிடிக்கவில்லை. ஆயினும் என்ன செய்வான்? அவனுடைய பேச்சின் ரகசியத்தை ஒருவரும் புரிந்துகொள்ளவில்லை. ஆனால் வெளிப்படையாக ஒருவரும் எதிர்ப்பு தெரிவிக்கவில்லை. ஆனால் இந்த ஷேர்பூர் விஷயத்தில் அவன் வெளிப்படையாக எதிர்த்தான். -'வேண்டாம். போவதாக இருந்தால், மேற்குத் திசையை நோக்கிச் செல்லுங்கள். இல்லாவிட்டால் இங்கிருப்பதே மேல்!' அப்படி அவன் கூறுவதற்குக் காரணம் விளக்கும் வகையில் கிழக்கு, மேற்கு இரு திசைகளின் மக்கட்தொகை, அரசாட்சி நிலை முதலியவை பற்றிச் சொன்னான். இரண்டிற்கும் உள்ள பேதங்களை எடுத்துரைத்தான் —'இம்மாதிரி வேளைகளில் டாகுரின் பறக்கும் குதிரை கூட பறந்துபோய்விடும்!'

ரண்சோட் கூடக் கடுமையாகக் கூறினன்— 'டேகடியா கிரா மத்திற்குப் போய்ப் பார் !' தோளின்மீது சவுக்கத்தைப் போட்டுக் கொண்டு ரண்சோட் எழுந்து நின்ருன்.

நம் நாட்டை விடவேண்டுமே என்பதாலோ, கிராமத்தில் வண்டி கள் குறைவாக இருப்பதாலோ, வீட்டைவிட்டு எதை எடுத்துச் செல்வது, எதை விட்டுச் செல்வது என்னும் குழப்பத்தில் ஈடுபட விரும்பாததாலோ, எந்தக் காரணத்தாலோ, காசமும் மற்ற எல்லோரும் எழுந்தனர். எழுந்தபடியே கூறினர்கள் — 'சரி நாளைக்கு இருவர் டேகடியா போய்வாருங்கள் !'

ஆனல் டேகடியா கிராமம் நித்திரையில் ஆழ்ந்துவிட்டது. எல்லோரும் வீட்டிற்குள் சென்று கதவை மூடிக்கொண்டு வேலை செய்ய ஆரம்பித்தனர். சிலர் பெண்களை எழுப்பி அவர்களுடைய கால்களிலிருந்த வெள்ளிக் காப்புகளைக் கழற்றச்சொன்னர்கள். மற்றும் சிலர் பெண்களின் வளையல்களை முடிச்சுகளிலிருந்து எடுக்க ஆரம்பித்தனர். பின்பக்கத்து அறையின் சுவற்றிலிருந்து ஐந்தாறு முழதூரம் தள்ளி மற்ருெரு சுவற்றைக் கட்ட ஆரம்பித் தான் காலு. ரண்சோடும் நாநாவும் கூடையைத் திறந்து நகைகளை எடுத்து மாலியின் மடியில் வைத்துக்கொண்டிருந்தனர். கோத ரும் சாணத்தை எடுத்துவந்து ஒருபிடி தானியத்தைப் போட்டு வரட்டிகள் தட்டுவதில் முனைந்தான் ...

பொழுது விடிந்துவிட்டது. இருவர் உக்கா பிடித்துக்கொண் டிருந்தனர். ஆனல் ஒருவரும் தன் கலையைப் பற்றி ஒன்றுமே சொல்லிக்கொள்ளவில்லை.

காலு மட்டும்தான் கூறினன். ஆனல் அவனும் கோதர், ராமா, பகா இம்மூவரிடம்தான் கூறினன்— 'பின் பக்கத்து அறையில் ஒரு புதிய சுவற்றை எழுப்பிவிடு. ஓட வேண்டிய நிலை வந்தால், அங்கு கட்டப்படும் எருதுகள் பத்திரமாக இருக்கும்.'

இவ்விதம் ஒவ்வொரு இரவிலும், ஒவ்வொரு தந்திரம் ! கிராமம் முழுவதிலும் கிழவி மாலியின் வீட்டில்தான் கவலையும் பயமும் அதிகமாக இருந்தது. 'உங்கள் பெண்டாட்டிகளின் நகைகளைக் கழற்றிக்கொண்டு வாருங்கள் .. எடுங்கள் இப்படி எல்லா வற்றையும், எல்லா நகைகளையும் சேர்த்துப் பார்க்கும்போது, அந்த அரை மணங்கு நகைகளைப் பார்க்கும்போதெல்லாம் மகிழ் வுறும் மாலிக்கு இன்று ஒரே பயம். ரத்தம் கொதிக்க ஆரம்பித்து விட்டது.

'அம்மா, எடுங்கள் அதை! நான் எங்காவது புதைத்து வைக்கிறேன்!' என்று நாநா கூறினான். கிழவிக்கு வந்தது கோபம் — 'சீ போ! பெரிய மனிதன் வந்துவிட்டான் புதைத்து வைக்க!' ரண்சோட் கூறினான் 'என்னிடம் கொடு. நான் எது செய்தாலும் சரியாகச் செய்வேன்!' சுவற்றிற்கும் மனிதர்களுக்குமிடையே சிறு இடம் செய்து ஒவ்வொரு நகையாகப் புதைக்கலாம் என்று அவன் நினைத்தான்.

ஆனால் கிழவி சீறி விழுந்தாள் —'சீ, உதவாக்கரைப் பசங்களா! எனக்கு எல்லாம் தெரியும். நீங்களெல்லோரும் ஒரு மூலையில் போய் உட்கார்ந்து கொள்ளுங்கள். இந்தத் தலை நரைத்திருக்கிறதே, சும்மா நரைத்து விடவில்லை!' கிழவி தான் கற்ற அனுபவ அறிவை முடிச்சுப் போட்டு வைத்துக்கொண்டாள். அதனால்தானே என்னமோ நகைகளையும் மூட்டையாகக் கட்டி வைத்துக்கொண்டாள். நகை முடிச்சுடன் அவள் கட்டிலில் போய் உட்கார்ந்துகொண்டாள்...

பிறகு அவள் சாப்பாட்டைக் கூட அந்தக் கட்டிலருகே வைத்துக் கொள்வாள். எங்காவது வெளியே சென்றால் முடிச்சைக் கந்தலுக்குக் கீழே வைத்துவிட்டுப் பலவிதமான சாமான்களையும் அதன்மேல் அடுக்கிட்டு வைப்பாள். நாநாவை அங்கு காவல் வைத்து விட்டுத்தான் செல்வாள்.

'வயிற்றில் கட்டிக்கொண்டுதான் போகப்போகிறாளோ என்னமோ'– என்று மருமக்கள் கூறினர்.

கோடி நினைத்ததே வேறு–அவள் சொன்னாள் — 'இவள் இறந்த போதிலும் பாம்பைப் போலத்தான். நகையை அணிபவர்களின் உயிரை எடுத்துவிடுவாள் ...'

அவள் பாம்போ, அல்லவோ கடவுளுக்குத் தெரியும். ஆனால் கிழவியின் உயிர் அவளுடைய உடலில் இருப்பதைவிட, அந்த நகை முடிச்சில்தானிருந்தது என்று சொல்லலாம். அதே நினைவு அவளுக்கு.

மாலியைப்பற்றி மட்டும் ஏன் சொல்லவேண்டும்! கோதரின் தாய் அந்தக் கறவை எருமைகள் இரண்டிலும் தன் உயிரையே வைத்திருந்தாள். ராமாவின் உயிர் குழந்தைகளின் பேரிலிருந்தது, காலுவைப் போன்றவரின் உயிர் அந்த எருதுகளின் மீது—

ஆனால் இரவு வந்ததோ இல்லையோ, எல்லோருடைய உயிரும் கிராம எல்லையில் போய் ஒன்றிவிட்டது. குரல்கள் கேட்டன—

'அதோ, துப்பாக்கி வெடி ஓசை'... அதோ கொம்மாளம் — அதோ கருப்பாகத் தெரிகிறதே...மேகத்தைப் போல்...!'

இவ்வாறு இந்தக் கிராமத்து மக்கள் சாப்பிடுவதை மறந்து விட்டனர். தூக்கத்தைக் கூட மறந்துவிட்டனர். பொழுது விடிந்ததும், சேவல் கூவியதும்தான் மக்களுக்கு நம்பமுடிந்தது. தம்மையுமறியாமல் கூறினர்: 'இன்று இன்னும் ஒரு நாள் உயிருடன் வாழக் கொடுத்து வைத்திருக்கிறோம்.'

# 33

## வேதனையில் நசுங்கி

கோடை நாட்கள்; அதிலும் வேலையொன்றும் கிடையாது. தலை மேல் கத்திபோல் மரணம் வேறு காத்துக்கொண்டிருக்கிறது. நாள் கழிவதே கடினமாக இருந்தது. 'இந்த நாட்கள் பாவம் பசியால் கொத்துயிராகிவிட்டன போலும். அசைய மாட்டேன் என்கின்றன!' — என்று சொல்வதும் பொருத்தம்தான்.

கால்நடைகள் காணுமற்போன செய்தியைக் கேட்டதிலிருந்து மக்களின் கவனம் முழுவதும் இராப்பகலாக நதிக்கரையோரத்திலேயே இருந்தது. அப்போது தொலைவிலிருந்து ஒரு செய்தி வந்தது — 'ஒரு கடைக்காரனின் பீரோக்கள் திருட்டுப் போய் விட்டன!'

விஷயம் இனி தொலைவிலிருந்து வந்ததா என்ன? அடுத்த இரவே அக்கம்பக்கத்து கிராமங்களில் கூக்குரல்கள் கிளம்பி விட்டன. தம்பட்டம் அடிக்கப்பட்டது. துப்பாக்கிகள் வெடித்தன. ஒருவருக்கொருவர் எச்சரிக்கை விடுத்துக்கொண்டனர். ஒரு மணி நேரத்தில் ஓடிப்போன மக்களனைவரும் கிராமத்திற்கு வந்து சேர்ந்தனர். காலுவின் கிராமத்து மக்கள் இவர்களுக்கு ஆறுதலளித்தனர். இல்லாவிட்டால் அங்கு எரிந்துகொண்டிருக்கும் பந்தங்களிலிருந்து தெரியும் மக்களின் நிழல்களைக் கண்டு கூட அவர்கள் ஓட ஆரம்பித்துவிடுவார்கள் ...

'அங்கு கிளம்பிய கூட்டம் இங்கும் வரும், புலி ரத்தத்தை ருசி பார்த்துவிட்டது!' என்பது மக்களின் நம்பிக்கை.

ஆனால் ஒவ்வொரு தொகுதியிலும் இளைஞர்கள் அம்பு — வில், வாள் இவற்றுடன் தயாராக நின்றுகொண்டிருந்தனர். பிறகு நினைத்தனர் — 'வீணுக உயிரை விட்டுவிடக்கூடாது. எதிர்த்துச் சண்டையிட முடிந்தால்தான் தாக்க முற்படவேண்டும்.'

காலுவின் பெரிய பெரிய ஆசைகளை ராஜியே கரைத்து அழித்துவிட்டாள். ஆண் மகனின் கடமையையே அந்த நடை பிணங்களின் சமூகம் ஒழித்துக் கட்டிவிட்டது. 'ஏற்கனவே கடவுள் அவர்களுடைய வயிற்றில் அடித்திருக்கிறார். போதாக் குறைக்கு நாமும் அவர்களைக் கொல்வதா? பசிக் கொடுமை. பொல்லாதது; மனிதன் கொடியவனல்ல.' இவ்விதம் தன் கருத்தைத் தெரிவித்தபடி காலு கூறினன் — 'என் சித்தாந்தம்

இதுதான். என்னைக் கொல்ல வந்தவனைத்தான் நான் அடிக்கக் கையை ஓங்குவேன். இல்லாவிட்டால் அடிக்கப் போகமாட்டேன். .... கிராமம் முழுவதையும் கொள்ளையடித்தாலும் சரி!'

ஒருநாள், கிராமத்து எல்லைப் புறத்தில் உட்கார்ந்துகொண்டிருந்த பேசாத்தின் குழுவினரிடமும் அவன் கூறினான் — 'ஏன்! நீங்கள் எத்தனை பேரைக் கொல்வீர்கள்? உங்களை ஒருவருமே கோபத்தால் கொல்ல வரமாட்டார்களா? ....'

'கொன்றுதானாக வேண்டும் என்றால் கொல்வான்' பேசாத் கூறினான். 'உயிருடன் இருந்து எந்த நாட்டை ஆளவேண்டும்?' பேசாத் இப்படிப் பேசாமலிருக்க வழியில்லை. காரணம், ஒவ்வொரு வீட்டிலிருந்தும் அவன் பத்து சேர் தானியம் வாங்கியிருந்தான். ஆயினும் வீரத்துடன் அதைச் சமாளிக்கவேண்டி யிருக்கிறதல்லவா? இன்னும் மீதிப் பத்து சேர் வாங்கியாக வேண்டுமே.

ஆனால் காலு கூறினான் — 'மாமன் வீடு எவ்வளவு தூரம். விளக்கெரிகிறதே அவ்வளவு தூரம்தான்!' மூன்றாம் நாள் இரவு நேரத்தில் திடீரென்று நதியின் இக்கரையில் 'டமால் டமால்' என்று துப்பாக்கிகள் வெடித்தன, ஒன்றல்ல மூன்று வெடித்தன.

அவர்கள் வந்து சேர்ந்தனர். உக்கா நிரப்பிக் குடிக்கும் நேரம் அது. ஆனால் கிராமம் முழுதையும் பயம் தொத்திக்கொண்டது. எங்கு ஓடி ஒளிந்துகொள்ளலாம் என்று மக்கள் தவித்தனர். பெண்டிர் கேட்பதை ஆடவரால் புரிந்துகொள்ள முடியவில்லை. ஆடவர் எச்சரிக்கை செய்து சொல்லும் வார்த்தைகளைப் பெண்டிரால் புரிந்துகொள்ள முடியவில்லை. இதற்கிடையே குழந்தைகளின் எண்ணிக்கைக்கு அளவே கிடையாது. மனித வாழ்க்கையின் இந்த இளந்தளிர்கள் இந்நேரத்தில் பெருஞ்சுமையாக விளங்கின.

மேடைமீதிருந்த பேசாத் கூறினான் — 'சண்டையும் வேண்டாம். பூசலும் வேண்டாம். அறிவிருந்தால் சும்மா இருங்கள். பேசாமல் கூட்டத்தைக் கலைத்துக்கொண்டு போய்ச் சேருங்கள். இல்லாவிட்டால் ஒவ்வொரு வீட்டிலிருந்தும் கிடைக்கும் அந்தப் பத்து சேர் தானியமும் கிடைக்காது. ஒருவரையும் அடிக்கவேண்டாம். ஏதாவது செய்தீர்களோ பிறகு தேனீக்களின் கதை போலாகிவிடும்; ஒன்றைத் தாக்கினால் எல்லாம் ஒன்றாய்ச் சேர்ந்துகொண்டு உங்களைச் சூழ்ந்துகொண்டு விடும்.'

உண்மையில் புதிதாய் உதிக்கும் அந்த நான்காம் பிறையின்

மங்கிய ஒளியில் மக்கள் தேனீக்கூட்டங்களைப் போன்று காட்சியளித்தனர். அதே ரீங்காரம், அதே வேகம்! அருகே நெருங்க நெருங்க அவர்களுடைய குரல்களும் பலதரப்பட்டனவையாக இருந்தன. சிலர் வீரர்களைப் போன்றிருந்தனர்; வேறு சிலர் கோழைகளைப் போல், ஏதோ வலி தாங்க முடியாமல் துடித்து அழுதுகொண்டிருந்தனர் ....

'டமால்,' மேடைக்கருகேயிருந்த கிணற்றின்முன் மறுபடியும் அதே ஓசை!

காலு மிகவும் திறமையுடன் யோசித்து பலீ, கங்கு போன்ற கிராமப் பெண்களையும் குழந்தைகளையும் உட்காரவைத்திருந்தான் — 'இப்போது வேண்டாம். நான் சொல்லும்போது எழுந்திருங்கள், போதும். அப்போது போய் அந்த வீட்டிற்குப் பின்புறம் ஒளிந்துகொள்ளலாம். பயத்தால் ரொம்பத் தொலைவு போய்விடாதீர்கள்!' — ஆனால் இந்த ஓசை கேட்டதும் களத்து மேட்டில் உட்கார்ந்திருந்த பெண்டிரும் குழந்தைகளும் பறவைகளைப் போல் படபடத்தனர்.

கிராம மக்கள் எல்லோருடைய நிலையும் அப்படித்தானிருந்தது. கணவன் மனைவியைப்பற்றிய கவலையை விட்டுவிட்டான். மனைவி குழந்தையை மறந்துபோனாள். பால் குடிக்கும் குழந்தைகளை விட்டுவிட்டு ஓடிய தாய்மார்களும் பலரிருந்தனர். யாரும் எவருக்கும் உரித்தவர் என்று நினைக்கவில்லை.... யாரும் எவரையும் தெரிந்துகொள்ளவும் இல்லை.

ரண்சோடின் வீட்டில் முதலிலேயே களவு போய்விட்டது. கிழவி மாலி நகைமூட்டையை எடுத்துக்கொண்டு எப்போது நழுவினாளோ, யாருக்கும் தெரியாது. அந்த பயத்தில் நாநாவின் மனைவி கோடியின் காலும் முறிந்துவிட்டது....அவள் அந்தப் பேட்டையில் வாயிலும் வயிற்றிலும் அடித்துக்கொண்டு கதற ஆரம்பித்தாள். கடைசியாகக் கிழவியைத் தேடவென்று ரண்சோடும் நாநாவும் ஓடினர். ஓடிக்கொண்டே இருவரும் சண்டையிட்டுக் கொண்டனர். ரண்சோட் கூறினான் — 'என் அறிவு ஏன்தான் மயங்கிவிட்டதோ — அவளிடம் நான் எதற்காக எல்லா நகைகளையும் தொடுத்தேனோ! தெய்வமே.'

நாநா ரண்சோடை அடிக்கவும் முற்பட்டான். மேலே விழுந்து கையோங்கியபடியே திட்டினான்— 'இப்போது பார்த்தாயா? கொடு இப்படி, நான் புதைத்துவிடுகிறேன் என்று சொன்னேனே

கேட்டாயா? நீயும் அந்தப் பேராசை பிடித்த கிழவியும்! இருக்கட்டும். நகை காணுமல் போகட்டும். அப்புறம் என்ன செய்கிறேன் பார் உன்னை! கிழவியை இரண்டு துண்டாக வெட்டிவிடுகிறேன் பார்!...'

ஆனால் உண்மையில் ஓடுபவர்களை விடத் துரத்துபவர்கள்தான் அறிவிழந்தவர்கள். எங்கு நுழையலாம் எங்கு நுழையக் கூடாது என்ற பாகுபாடே அவர்களிடமில்லை. இந்த வீட்டில் சோறு கிடைக்குமா அல்லது அந்த வீட்டிலா? முதலில் அறையைத் திறக்கலாமா, அல்லது அலமாரிகளையா? சிலர் சாவதற்கு முன்பே துக்கக் கொண்டாட்டத்திற்கு ஆரம்பித்து விட்டனர்; மூட்டை முடிச்சுகளைக் கட்டுவதற்கு வேட்டியைக் கீழே விரிக்க ஆரம்பித்தனர்.

இவ்வாறு, அவரவர்க்குத் தோன்றியதைச் செய்ய முற்பட்டனர். சிலர் பெட்டியை உடைக்க முற்பட்டனர், மற்றும் சிலர் கூடையோ குதிரோ எது கிடைத்ததோ அதில் சாமான்களை நிரப்ப ஆரம்பித்தனர். சிலர் சாமான்களை அடைத்துவிட்டு அந்தக் கூடையை இழுப்பதற்காக அதன்பேரிலேயே ஏறி நின்று விட்டனர். குதிர்களுடன் அவதிப்படுபவர்களின் நிலையும் அப்படித்தானிருந்தது. பாலோ, தயிரோ, தானியமோ, மாட்டுத் தீனியோ, எதற்கும் பேதமே புரியவில்லை. அவர்களில் சிலருக்குத் தானியம் எது மாட்டுத்தீனி எது என்றே புரியவில்லை. வாயில் போட்டுப் பார்த்தவன் தானியத்தை எடுத்துக்கொண்டு ஓடிவிட்டான். கையில் கிடைத்த பொருள்களுடன் இன்னும் அதிகமாக எடுத்துக்கொள்ளும் பேராசையில் சிலர் உள்ள பொருளையும் நழுவவிட்டுவிட்டனர்.

இங்கும் சிறுவர்களின் நிலை அதேதான். இவ்வாறு அடிதடியின் போதும், வாயில் போட்டுக்கொள்ளும்போது கை நழுவிக் கீழே விழும்போதும் அந்தப் பொருள்களால் இந்தச் சிறுவர்களுக்குத் தான் லாபம். அதுவும் தலையைப் பணயம் வைத்துப் பெற்றுக் கொள்வது போலத்தான். பொருளை எடுத்துக் கீழே குனியும் போது யாருடைய காலாவது பட்டால் அவ்வளவுதான்... தீர்ந்தது கதை.

காலு இருந்துவந்த இடம் கிராமத்து மேற்றிசையின் கோடியிலிருந்தது— வேப்பமரத்தடியில் காலு நின்றுகொண்டிருந்ததைப்

பார்த்த ராமா, நாதா, மற்றும் கிராமத்து இரண்டு இளைஞர்கள் ஓடுவதற்குப் பதிலாக அவனருகே போய் நின்றுகொண்டனர்.

'காலு! என்ன யோசனை?' ராமா கேட்டான். 'எத்தனையோ எண்ணங்கள் ராமா!'— காலு சிரித்தபடி கூறினான்— 'ஒரு தடவை சண்டை போடலாம் என்று தோன்றுகிறது. மறுதடவை நம்மிடம் சண்டை போட ஒன்றுமில்லையே. அப்படியிருக்க ஆபத்தை வரவழைத்துக் கொள்வானேன் என்றும் தோன்றுகிறது!'

'உனக்கென்ன! உன்னுடன் மங்கள் இருக்கிறான். அதோ பார். சட்டையையும் வேட்டியையும் கழற்றிவிட்டு அந்தக் கூட்டத்தோடு கூட்டமாகச் சேர்ந்துவிடுவான் போலிருக்கிறது. அங்கே எப்படி உட்கார்ந்திருக்கிறான் பார் அவன் ....'

பந்தங்கள் இந்தப் பக்கம் வருகின்றனவே என்று மங்கள் பார்த்தான்.

'காலு! அவர்கள் வழியிலேயே சிக்கிக்கொண்டு விடுவார்களோ?' என்று கேட்டபடியே நாதா வேகமாக ஓடினான். அவன் பின்னால் அந்த இரண்டு இளைஞர்களும் கூட ஓடினர். வேட்டியை உயரத்தூக்கிப் பிடித்தவண்ணம் ராமா கேட்டான்-'காலு, என்ன சொல்கிறாய்?'

'நீ போ! நான் அப்புறம் வருகிறேன்.'

மாமாவும் நழுவிவிட்டான். காலு ஓடுவதற்குப் பதிலாக வில்லை வேப்பமரத்தின் அடியில் சாய்த்து வைத்தான். சட்டையையும் தலைப்பாகையையும் கழற்றிவிட்டான். கத்தியுடன் கூடிய கயிற்றை இடுப்பில் கட்டிக்கொண்டான். இடுப்பிலிருந்த வேட்டியைக் கச்சம்போட்டு வரிந்து கட்டிக்கொண்டான். அடுத்தகணமே வில்—அம்பு இரண்டையும் எடுத்துக்கொண்டு குரங்கைப்போல் வேப்பமரத்தின் மீது ஏறி உட்கார்ந்துகொண்டான்.

கிராமத்து இரண்டு பக்கங்களிலிருந்தும் கூட்டம் வந்து கொண்டிருந்தது. மனதிற்குத் தோன்றியபடி அவர்கள் ஆங்காங்கே புகுந்தனர். எஞ்சியிருந்த பத்துப் பேர் காலுவின் வீட்டுப்பக்கம் திரும்பினர்.

காலு கதவைத் திறந்தே வைத்திருந்தான். மங்கள் கோவணம் மட்டும் கட்டிக்கொண்டு உட்கார்ந்திருந்தான். கூட்டத்தைப் பார்த்ததும் அவன் அழ ஆரம்பித்துவிட்டான். அழுதுகொண்டே கூறினான்: 'வீட்டில் ஒன்றுமே இல்லை அண்ணே. நான் பட்டினி

யால் மடிந்துகொண்டிருக்கிறேன் :— என்னையும் உங்களுடன் அழைத்துச் செல்கிறீர்களா ?'

ஆனால் காலு செய்த இந்தத் தந்திரம் வீணாகிவிட்டது. அவன் பேசியதை யார் கேட்டார்கள்? அந்தக் கும்பல் நேராக உள்ளே நுழைந்துவிட்டது.

அப்போது காலுவின் ரத்தம் கொதித்தது. — 'இறங்கட்டுமா வேண்டாமா? அவர்களைத் தாக்கட்டுமா, போக விடட்டுமா?' அந்தச் சுவற்றருகே கட்டப்பட்டிருந்த எருதுகளைப் பற்றிய கவலை தான் அவனுக்கு. வேறு ஒன்றும் அவர்களால் செய்ய முடியாது. காலியாகக் கிடக்கும் அறைகளையும், குதிர்களையும் வேண்டு மானால் இடித்துத் தள்ளமுடியும், அவ்வளவுதான். தானியத்தைத் தான் மூட்டைகளாகக் கட்டித் தனித்தனி இடங்களில் புதைத்து விட்டானே— துணிகளின் மூட்டையை வேப்பமரத்து உச்சிக் கிளையில் எடுத்துச்சென்று கட்டி வைத்துவிட்டான். அடுப்பை அப்படியே விட்டுவைத்திருந்தான். மாதக் கணக்காக வீடு காலி யாகவே கிடக்கிறது என்று தோன்றும்படி செய்துவிட்டான்.

வாலா படேலின் வீடு கொள்ளை போவதா? அதைத்தான் காலுவால் சகித்துக்கொள்ள முடியவில்லை. அதுவும் அவன் பார்த்துக் கொண்டிருக்கும் போதா! .... முடியாது. காலு வாளை உருவி இடுப்பில் மாட்டிக்கொண்டான். வில் அம்புகளுடன் மெள்ள இறங்கினான். தன் வீட்டை நோக்கிச் சென்றுகொண் டிருந்த இரண்டாவது கும்பலுடன் தானும் உள்ளே சென்றான்.

மங்கள் இன்னும் அந்த இடத்திலேயே உட்கார்ந்திருந்தான். காலு அவனுக்கு எத்தனையோ தந்திரங்கள் சொல்லிக் கொடுத் திருந்தான். ஆனால் இந்தப் பேய்க் கும்பலைக் கண்டதுமே அவனுடைய சுயநினைவு பறந்தோடி விட்டது. அப்படியிருக்க அறிவை எங்கிருந்து அவனால் பயன்படுத்த முடியும்?

'மங்கள் !' காலுவிற்கு முன்னே சென்றுகொண்டிருந்த ஒருவன் மங்கள் இருந்த பக்கம் திரும்பினான். காலு அவனைப் புரிந்து கொண்டான். அவன்தான் கனகன். ஆனால் மங்கள் மாமாவை புரிந்துகொள்ள முடியவில்லை ... புரிந்துகொண்ட போதிலும் ஒன்றுமே புரியாதவன்போல் வெறித்துப் பார்த்துக் கொண் டிருந்தான். எருமைக் கடாவைப் போலிருந்த மாமா கனகன் எங்கே, இந்த உயிரற்ற உடல் எங்கே!

மாமன் தன் மருமகனை மார்புறத் தழுவிக்கொண்டான். ஏனோ பாவம், மங்கள் வாய்விட்டலறி அழுதான்.

காலுவிற்கு மங்கள் பேரில் கோபம் வந்தது.— 'இப்படித் தேம்பித் தேம்பி அழும்படி இந்தப் பையனுக்கு என்ன வந்து விட்டது?' கனகன் நின்றுவிட்டதால் தான் காலு கோபித்துக் கொண்டான். மாமன் — மருமகனின் சந்திப்பிற்கிடையே அவன் வர நேர்ந்தது. கனகனின் காதில் கூறினான் —'கனகன் அண்ணே! நீ உள்ளே நுழைந்து வீட்டில் ஒன்றுமில்லை, ஒன்றுமில்லை என்று கூச்சல் போடு. அந்தக் கும்பலை வேறு இடத்திற்கு அழைத்துக் கொண்டுபோய் விடு. இல்லாவிட்டால் முதலில் உன் மருமகனின் உயிருக்கு ஆபத்து வந்துவிடும்!'

கனகன் புரிந்துகொண்டு வீட்டிற்குள் நுழைந்தான். பின் தொடர்ந்த காலுவும் கும்பலுடன் சேர்ந்துகொண்டான்.

'இங்கிருக்கும், இங்கிருக்கும் பார்!' என்று கூறியபடியே கனகன் குதிரை எடுத்து இப்படியும் அப்படியுமாகப் போட்டான். பிறகு பின்புறத்து அறைக்குப் போனான். அங்கே ஐந்தாறு பெண்டிரும் சிறுவர்களும் இருந்தனர். கூடக் காலுவும் இருந்தான் —

பின்பக்கத்து அறையிலிருந்து வெளிவந்த கனகன் கத்தினான் — 'அடே இங்கே ஒன்றுமில்லையப்பா, கிளம்புங்கள் அந்த வீட்டிற்கு முதலில் போகலாம். இல்லாவிட்டால் யாராவது கொள்ளை யடித்துக்கொண்டு போய்விடுவார்கள் ... உம் கிளம்புங்கள்!'

'கிளம்புங்கள், கிளம்புங்கள்!' என்று கூறியபடியே அந்த இருபது — முப்பது பேர்களும் அந்த வீட்டை விட்டு வெளியே வந்துவிட்டனர். காலுவும் அவர்களுடன் சேர்ந்துகொண்டான்.

'தம்பி ஒரு துணியாவது கொடுத்துத்தானாக வேண்டும்.' — கனகன் கூறினான்.

'நான் எங்கே போவேன் துணிக்கு' காலுவிற்குக் கவலை உண்டாயிற்று. — 'இந்த மடையன் நமக்குத் தெரிந்தவனா யிற்றே. நம்மைக் காவல் நிலையத்திற்கு அழைத்துக்கொண்டு போய்விடுவானே!'

'நான் கொஞ்சம் தானியம் சேர்த்துக்கொண்டு வந்திருக் கிறேன் ... ஆனால் அதை எப்படி எடுத்துக்கொண்டு போவேன்?'

'ஒன்று செய்யேன். இந்தா மங்களின் வேட்டியை எடுத்துக் கொண்டு போ!'

கனகன் வேட்டியை எடுத்துவந்தான். அதைத் திருப்பித் தர வேண்டும் எனும் நிபந்தனையின் பேரில் கொடுத்தான்.

'இந்தக் கும்பல் இங்கிருந்து எப்போது ஒழியும் அண்ணே! இவர்கள் கொள்ளையடிக்கிறதை விட உடைப்பதிலும், நொறுக்கு வதிலும்தான் அதிகக் கவனம் செலுத்துகிறார்கள்.'

கனகன் தன் வேட்டியுடன் கிளம்பினான் — 'அந்த மேடைப் பக்கம் போய்த் துப்பாக்கியைச் சுடவேண்டியதுதான்!' காலு வும் கிளம்பினான் — இப்போது பயம் என்பதே அவர்களுக்குத் தோன்றவில்லை. வீட்டைப் பற்றிய கவலை இருக்கத்தான் செய் தது. ஆனால் கனகனுடன் வந்த கும்பலைக் கண்டவுடன் அந்தக் கவலையும் மறைந்துவிட்டது.

அரை உடல் மட்டும் துணி உடுத்தியிருந்த மக்களின் கூட்டம் திருவிழாவைப் போல் கூடிவிட்டது. பந்தங்கள் தீபாவளியின் தீப ஒளிபோல் பிரகாசித்தன. இவர்களுள் கொள்ளையடிப்பவர் கள் எத்தனை பேர், அவர்களைத் தடுத்து நிறுத்துபவர் எத்தனை பேர் என்று காலு பார்த்துக்கொண்டிருந்தான்.

அந்தக் கும்பலைக் கிராமத்திற்கு வெளியே போகச் செய்வதற் காக கனகன் துப்பாக்கியை எடுத்துக்கொண்டு கிளம்ப, அவனைக் கொண்டு மேடைவரை விட்டுவிட்டுக் காலு வீட்டை நோக்கி நடந்தான். பரபரப்புடன் துப்பாக்கியின் ஒலியை எதிர்பார்த்திருந்தான். ஆனால் ஒரு கும்பல் அவனது வீட்டை நோக்கி விரைந்துகொண்டிருந்தது. இந்தத் தடவை காலு பின் பக்கத்து அறையிலிருந்த அட்டத்தில் போய் ஒளிந்துகொள்ள நேர்ந்தது. உட்கார்ந்தபடியே வீட்டிற்குள் வந்து எதையோ அவர் கள் தகர்த்தெறிந்ததையும் பார்த்துக்கொண்டிருந்தான் காலு. சிறிது நேரத்தில் அவர்கள் வெளியே சென்றுவிடுவார்கள் என்று தோன்றிற்று. இதற்குள் மங்கள் கத்தினான் — 'இந்தக் கல் இயந்திரத்தை எடுத்துச் செல்ல விடமாட்டேன். நான் கனகன் மாமாவின் மருமகன்தான் ... எங்களுக்குள் பகை வந்துவிடும் .. இதை எடுத்துப் போகக்கூடாது .... ஆமாம்!' மங்கள் கூட அந்தக் கும்பலைப் பின்தொடர்ந்து சென்றான்.

காலு பூனையைப்போல் அட்டத்திலிருந்து இறங்கி வந்தான். 'இயந்திரத்தை எடுத்துக்கொண்டு போனால் போகட்டுமே ... ஆனால் ...' என்று நினைத்தான் காலு.

ஆனால் அவர்கள் மங்கள் சொன்னதை ஒப்புக்கொண்டனர்.

'அப்படியானால் நீ எங்களுக்கும் மருமகன்!' என்று கூறிவிட்டு அவர்கள் மாவரைக்கும் இயந்திரத்தை நாதாவின் வீட்டிற்கெதிரே போட்டுவிட்டுச் சென்றனர். மங்கள் கல்லைத் தூக்க முடியாததால் அதன்மேல் உட்கார்ந்துவிட்டான்.

காலு வெளியே வந்து பார்த்தான். அப்போது கிராமத்திலேயே நான்கைந்து பந்தங்கள்தான் எரிந்துகொண்டிருந்தன. 'டமால்' என்று ஒலி கேட்டது. எஞ்சியிருந்த தீவட்டிகளும் கிராமத்து எல்லையை நோக்கித் திரும்பின.

'ஆனால் இதென்ன? பந்தத்தின் ஒளியின்றியே இரண்டு பேர் வரும் நிழல் தெரிகிறதே?' சிறு திண்ணையின் மீது உட்கார்ந்தபடியே காலு முணுமுணுத்தான்.

'அங்கே ஒன்றையும் வைத்துவிட்டுப் போகவில்லையே!' என்று மங்கள் கூறினான். காலு மறுபடியும் எழுந்தான். கதவருகே ஒளிந்துகொண்டு பார்க்க ஆரம்பித்தான்.

அந்த இரு நிழல்களும் நேரே வீட்டிற்குள் நுழைந்தன, ஒன்றின் கையில் கத்தியிருந்தது. மற்றதன் கைகளில் ஒன்றுமிருக்கவில்லை.

கத்தி பிடித்திருந்த கை வீட்டின் வாயிலருகேயே மற்றொரு நபரின் கையைப் பிடிப்பதைக் கண்டு காலு நடுங்கிவிட்டான் — 'அட கொலைகாரா! கொல்லவா அழைத்து வந்திருக்கிறாய்?'

அந்த இரண்டாவது நபர் பெண் என்று தெரிந்ததும் காலு அஞ்சினான். மூலையைத் தேடி அவன் பதுங்க நேர்ந்தது.

'டமால்' என்று இரண்டாவது ஒலி கேட்டது. மூன்றாவது ஒலிக்குப் பிறகு கிராமத்தில் பூகம்பம் கிளம்பியதுபோல் அத்தனை மக்களும் ஓடிவந்தனர். இப்படியும் அப்படியும் துரத்தி அமர்க்களம் செய்துகொண்டிருந்த காவற்காரர்களும் திரும்பிவந்தனர். காலுவால் சும்மா இருக்கமுடியவில்லை. கேட்டான் — 'என்ன அவர்களை வழியனுப்பவா சென்றிருந்தாய், பேசாத்?'

அதிக நேரங்கழிந்த பிறகு நதியின் அக்கரைப் பக்கம் தீவட்டிகள் செல்ல ஆரம்பித்தன. மேடைமீது வந்து நின்றுகொண்டிருந்த மக்களிடம் காலு கூறினான். — 'மடையன்கள், கள் குடிக்க வென்று கிளம்பியிருப்பார்கள்.'

'திருட்டுப் பொருள் —' என்றான் ராமா.

காலு கூறியது உண்மையாயிற்று. குன்றுகளையும், ஆகாய வெளியையும் எதிரொலிக்கச் செய்துகொண்டு பாட்டொலி கிளம்பியது. இனிய, போதை தரும் ஒலி.—

'பாயி யா ஸப்னே......

..........................

[தம்பி! இது ஐம்பத்தாரும் ஆண்டுப் பஞ்சம்! நான் பசியை ஆற்றிக்கொள்ள மது அருந்தினேன். நான் நிச்சயம் செய்து விட்டேன் மது அருந்துவதென்று! என்னை யாரால் தடுக்க முடியும்?]

பாட்டின் எல்லாச் சொற்களும் தெளிவாகக் கேட்கவில்லை. ஆனால் அவர்களுடைய ஆனந்தக் களிப்பும், கொம்மாளமும் நன்ருகத் தெரிந்தன. போதையில் எழுந்த சிரிப்பும் கொம்மாளமும் ஐந்து மைல் தொலைவுவரை கூட எதிரொலிக்க ஆரம்பித்தன! 'ஹி.... ஹி... ஹி...'

வீடு திரும்பிய மக்கள் தத்தம் வீடுகளின் நிலையைக் கவனித்துக் கொண்டிருந்தனர். அப்போது காலு திண்ணைமீது அமர்ந்தபடி உக்காவைச் சுவைத்துக்கொண்டிருந்தான். அவர்கள் அடித்த கொம்மாளத்தை நினைத்து அவனால் சிரிக்காமலிருக்க முடியவில்லை. அவன் கூறினான்.—'அப்பா சொல்வாரே அதில் ஒரு சிறிதும் தவறில்லை. இந்தக் குன்றுகளைப் போலத்தான் இந்த மலை ஜாதிகளும் ... பெரும் காட்டுத் தீயிலும் அவை தளிர்விட்டுப் பசுமையுடன் காட்சி தருகின்றன, ஆடி மாதத்தில் அவர்களுக்கு மது அருந்தும் போதை வந்து விடுகிறது. வருத்தத்தையும் அரைத்துக் குடித்துவிட்டு நிம்மதியுடனிருப்பவர், உலகம் முழுவதிலுமே இந்த ஒரு வகுப்பைச் சேர்ந்த மக்கள்தான்.' அந்த மக்களின் சுபாவத்தை ரசித்துப் பாராட்டுபவனைப் போல் காலு தலையை அசைத்துக் கொண்டிருந்தான். குன்றுகளுக்கிடை ஒலித்துக் கொண்டிருந்த சிரிப்பையும் கொம்மாளத்தையும் அவன் ரசித்துக் கேட்டுக்கொண்டிருந்தான். ஏனோ தெரியவில்லை.. மட்டற்ற மகிழ்வடைந்தான்.

## 34

## மாலியின் மரணம்

கிராமத்தில் ஏதோ பகைவர்களின் படைகள் நுழைந்துவிட்டாற் போல் தோன்றிற்று. அடுப்பு, குமிட்டி, மேடை முதலியவை இடித்துத் தள்ளப்பட்டன. தயிர்—பால் வைக்கப்படும் பானைகள், சமையறையில் காணப்படும் பாத்திரங்கள், குடம், செம்பு எல்லாம் தூள் தூளாகக் கிடந்தன. சிற்சில இடங்களில் எங்காவது தானியத்தைப் பதுக்கி வைத்திருப்பார்களோ என்ற சந்தேகத்தில் பின்புறத்து அறைகளில் குழிகள் தோண்டப்பட்டிருந்தன. இவ்விதம் நான்கைந்து பேர்கள் பதுக்கி வைத்திருந்த தானியம் எடுக்கப்பட்டு விட்டது. கொள்ளையடித்ததிலிருந்து எஞ்சியிருந்த கறவை மாடுகள் எருமைக் கடாக்கள் முதலியவற்றைக் கூட, கைக்கு அகப்பட்டதெல்லாவற்றையும் கொண்டு போயினர். சிற்சில வீடுகளிலிருந்து கல்லுரல், இயந்திரம், உலக்கைக் கதவுகள் இவற்றைக்கூட பெயர்த்தெடுத்துக் கொண்டனர். கிராமம் முழுவதிலும் எஞ்சியிருந்தவன் காலு ஒருவன் தான். எல்லோரையும்விட அதிகப் பொருள்களை இழந்தது ரணசோடின் வீடுதான்.

பெட்டிகள் உடைத்தெடுக்கப்பட்டன. அலமாரிகள் பிளக்கப்பட்டன. கறவை எருமைகள் நான்கிருந்தன. எருமைக் கடாக்களுடன் அவற்றையும் கொண்டு சென்றுவிட்டனர். குதிரையும் போய்விட்டது. உலக்கை முதற்கொண்டு போய்விட்டது. அப்படியிருக்கக் கதவு, இயந்திரம், தாமிரப் பாத்திரங்கள் இவற்றை யாராவது வைத்துவிட்டுப் போவார்களா? மூடப் பெண்மணியின் உடலின் துணியென்று பெயருக்குக் கூட ஒன்றை விட்டு வைக்கவில்லை. அந்த அரை மணங்கு நிறுத்தலுள்ள நகைகள்... பொழுது கூட விடியும் நேரம் வந்துவிட்டது. இன்னும் கிழவி மாலி இருக்குமிடம் தெரியவில்லை. வீட்டைச் சுற்றிலும் தேடியாகிவிட்டது. புல் கட்டுகளைப் பிரித்து உதறிப் பார்த்தாகிவிட்டது. வயல் வெளிகளிலும் மேடை, முட்டுகளிலும் சென்று கிராமத்து இளைஞர்கள் தேடிப் பார்த்தனர். எங்காவது கிழவி மாலி இருந்தால்தானே தென்படுவதற்கு?

வீட்டோடும், கிராமத்தவர்களும் கவலையுற்றனர். கிழவி பின்னே எங்குதான் போயிருப்பாள்?

காலையில் வெளிச்சம் கிளம்பிவிட்டது. கிராமத்துப் பதினைந்து இருபது பேர்கள் அவளைத் தேடக் கிளம்பினர். இந்தத் தடவை காலுவும் வந்தான். நாநாவையும் உடனழைத்துக் கொண்டான் அவன்— 'கிளம்பு, அந்த வெள்ளைத் தண்ணீர் ஓடும் ஓடையருகே போய்ப் பார்க்கலாம்!'

'அடே! வெள்ளையாவது, கருப்பாவது! எல்லா ஓடைகளையும் தான் பார்த்துவிட்டு வந்திருக்கிறோம்.' — நாநா நம்பிக்கை யிழந்துவிட்டான்.

'ஆமாம்! தம்பி நகைதான் காணோம். சரி .... கிழவி எங்கே? என்னுடன் நீ வாயேன்!—'

காலுவிற்கு இரண்டுவிதக் கவலை. கிழவியைத் தேடிப் பிடித்த பிறகு, அவளுடைய நகைகள் துரதிருஷ்டவசமாக அவளுடைய உடலில் காணப்படாவிட்டால் பழி இவன் பேரிலல்லவா வந்து சேரும்! அவளைத் தேடச் செல்லாவிட்டாலும் மக்கள் இவனைச் சந்தேகிப்பர்!

கிழவி வீட்டுப் பின்புறத்தின் வழியாக ஓடிப் போய் நேராக மேட்டின் மேல் ஏறியிருப்பாள். பசியில் போய் அமிழ்ந்து கிடப் பாள் — என்று சந்தேகமடைந்தான் காலு. பாம்பு கடித்திருக் குமோ ... கிராமத்துக் காவலாள் பார்த்திருந்தால் கூட அவன் என்ன செய்திருக்க முடியும், இதுவரை உயிருடனிருக்க வழி யில்லையே!

அப்படித்தான் நடந்தது. இரண்டு பெரிய கற்களின் நடுவே கிழவி அகப்பட்டுக் கொண்டிருந்தாள். ஒரு பெரிய கொக்கு தன் வெண்மையான சிறகை விரித்துக்கொண்டு கிடந்தாற் போலி ருந்தது அந்தக் காட்சி.

நாநாதான் முதலில் அந்தக் காட்சியைக் கண்டான் — 'அடே! செத்துக் கிடக்கிறாளே!' என்று கூறியபடியே நகை மூட்டையை தேட ஆரம்பித்தான். காலு கிழவியின் வெறும் உடலின் மேல் தன் தலைப்பாகைத் துணியைப் போர்த்திச் சுருட்டினான். அவன் பதைபதைத்துப் பேசினான்—'அட தெய்வமே! இறுதியில் இந்தக் கதியா வரவேண்டும்!' வீண் முயற்சி செய்துகொண்டிருந்த நாநாவிடம் கூறினான்.

'அடே கொஞ்சம் அறிவைத்தான் உபயோகித்துப் பாரேன்! கிழவியின் துணிகளைக் கூட பறித்துக்கொண்டு சென்றிருக்கிறார் கள். அப்படியிருக்க அவளுடைய நகைகளையா விட்டு வைத்

திருக்கப் போகிறார்கள்? அவர்கள் எல்லோரையும் அழைத்து வா.... இடுப்பில், கீழே தள்ளப்பட்ட காயம் இருக்கிறது பார்! பாவம் கால்கள் தேய்ந்து குச்சிகளைப் போலாகி விட்டனவே, இங்கிருந்து தெரியவில்லையா?' பிறகு தனக்குள் சொல்லிக் கொண்டான் ... 'பாவம், உயிர் போகும்போது எவ்வளவு கஷ்டப் பட்டிருப்பாளோ? ....'

கிராமம் முழுதும் கலங்கிவிட்டது. மருமகப் பெண்கள், சொந்தப் பிள்ளைகள் எல்லோருக்குமே அவள் ஒரு எதிரிபோல் தோன்றினாள். நாநா வாய்விட்டுச் சொல்லிவிட்டான் — 'சாகப் போகும்போது கூட வாரி எடுத்து மடியில் கட்டிக்கொண்டு தான் போவேன் என்று சொன்னாள். அப்படியேதான் செய்தும் விட்டாள்! ...'

மயானத்திற்குச் சடலத்தை எடுத்துச் சென்றனர். அதன் மேல் போர்த்தப்பட்டிருந்த பழைய துணியைப் பார்த்து மக்கள் கூறினர் - 'அட பாவமே! என்னுடையது என்னுடையது என்று அடித்துக் கொண்டாள். விதியின் கூத்தைப் பார்த்தாயா? இல்லாவிட்டால் கிழவி எண்பது வயதில் செத்திருக்கிறாள் — வைரத்தால் இழைத்த போர்வையல்லவா போர்த்தி எடுத்துச் செல்வார்கள்! ... இப்படியா ஒப்புக்கு ஒரு போர்வை கிடக்கும்!'

பெண்கள் குளிக்க நதிக்கரை சென்றனர். அங்கும் அதே பேச்சு தான். 'கிழவி கொடுத்துவைத்தது அவ்வளவுதான். மருமகப் பெண்களின் தொண்டைக்குக் கீழ் ஒரு வாய்ப் பொங்கலை இறங்க விடமாட்டாள் கிழவி. அப்படிச் சேர்த்துவைத்து என்ன கண்டாள். நீயே எண்ணிப் பார், எண்பது ஆண்டுகளில் எல்லோரையும் உருட்டி மிரட்டி என்ன பாடு படுத்தியிருப்பாள்!'

'படுத்தித்தானிருப்பாள். அவளுடைய வீட்டில் பத்துக் கறவை மாடுகளுக்குக் குறைவாக நான் பார்த்ததே கிடையாது. ஒரு வருடத்திற்கு ஐந்து எருமைக் கடாக்கள் என்றால் கணக்குப் போட்டுப் பார்த்துக் கொள்ளேன்!' —சங்கரின் மனைவி கூறினாள்.

சில பெண்கள் கணக்குப் போட்டுப் பார்ப்பதில் முனைந்தனர். சில வயது முதிர்ந்த பெண்மணிகள் — 'பாவம் செத்தாளே! அவளுடைய சாவிற்கு லட்டு கூடச் செய்து ஒருவருக்கும் கொடுக்க வழி கிடையாது. இருக்கும்வரை பிதற்றிக் கொண்டிருந்தாள், வயிற்றெரிச்சலுடன்தான் போகவேண்டும்!' என்று அங்கலாய்த்துக் கொண்டனர்.

பிறகு கிழவிகள், நம் நிலையும் இப்படித்தானுகி விடுமோ, என்று கவலைகொண்டனர். மரணத்திற்கு முன்பே அதற்குப் பிறகு நடக்கப்போவதைப் பற்றிக் கவலையுற்றனர்.

சுவர்க்கத்திற்குப் போவதைக் குறித்துக் கொடுக்கப்படும் லட்டு கிடக்கட்டும், மயானத்தில் கொடுக்கப்பட வேண்டியது கூடப் பாதிதான் கிடைத்தது. அதுவும் சங்கரின் வீட்டிலிருந்து கொண்டுவரப்பட்ட லட்டு!

கிழவியின் மரணத் திட்டு அன்றே முடிக்கப்பட்டது. நாநா கூறினன் — 'மலர்களா? நதியில் அடுத்த பிறவியில் போடலாம், அவளுடைய வயிற்றில் பிறந்தால் பார்த்துக் கொள்ளலாம்!'

நாநா வாய்விட்டுக் கூறிவிட்டான். ரண்சோடின் உள்ளத்திலும் அதே சலிப்புத்தானிருந்தது, வருத்தம்தானிருந்தது. ஏனிருக்காது? நேற்று இந்த நேரம் வரை கிராமம் முழுவதிலும் இவர்களுடைய அட்டகாசம்தான், அதிகாரம்தான். ஆனல் இவர்களைப் போல் ஏழைகள் ஒருவருமில்லை. சொத்தில் எஞ்சியவை இரண்டு எருதுகள்தான். அவையும் ரண்சோடின் மனைவியினல் தப்பின. அவற்றையும் வீட்டுப் பின்புறத்தில் கட்டியிருந்தால் அவையும் திருட்டுப் போயிருக்கும்.

காலுவினல் கூருமலிருக்க முடியவில்லை — 'துப்பாக்கியின் வெடிச் சத்தத்திற்கு வெகு நேரத்திற்குப் பிறகுதானே கொள்ளையர் வந்தார்கள்? அதுவரை என்ன செய்துகொண்டிருந்தீர்கள்? அதற்குள் நன்கு ஆலோசித்திருந்தால் —'

'நாங்கள் தானிய மூட்டைகளைக் கூடக் கட்டி வைத்துவிட்டோம். செல்பவர்கள் ஒவ்வொன்ருக எடுத்துச் செல்வார்கள் என்று நான் நினைத்தேன். துணிகளையும் கட்டி வைத்தோம். ஆனல் இந்தக் கிழவி எமன் மாதிரி இருந்துகொண்டு எங்களை ஏமாற்றிவிட்டாள்.' இத்தனை நாட்கள் வரை நகைகளை இடுப்பில் முடிந்துகொண்டு திரிந்தாள். நமக்கும் ஆயிரம் வேலைகளிருக்கின்றன. கிழவியே அவற்றைப் பத்திரமாகப் பார்த்துக்கொள்ளட்டும் என்று நானும் இருந்துவிட்டேன். காலரா வாரிக்கொண்டு போகட்டும் அவளை! துப்பாக்கியின் ஒலி கேட்டதுமே, 'ரண்சோட், நான் போகிறேன்' என்று ஒரு வார்த்தை சொல்லிவிட்டு போகக்கூடாதா? நாங்கள் அவளைத் தேடிக்கொண்டேயிருந்தோம். அப்படியிருக்க, தானியத்தையும், துணி மூட்டைகளையும் எடுக்க நாங்கள் அங்கு எப்படித் தங்குவோம்?

'பெரிய மேதாவி! அந்தப் பெட்டியை ஏன் பூட்டி வைத்தாய்? அதைத் திறந்து வைத்திருந்தால் நம் முன்னோர்களின் அந்த ஒரு பொருளாவது மிஞ்சியிருக்குமல்லவா?' காலு தன் ஆத்திரத்தைக் கொட்டிவிட்டான்.

'தம்பி! அது போய்த்தானாக வேண்டும் என்றிருந்தால், நேர்மையானவனுக்கும் விபரீதமாகத்தான் ஏதாவது தோன்றும். நீங்களே யோசித்துப் பாருங்களேன் — ஒரு கிழவி ஓடிவிட்டாள். அதற்குள் எவ்வளவு அமளி துமளிப் பட்டுவிட்டது. நம் துரதிருஷ்டம் என்றுதான் இவைச் சொல்லவேண்டும்!'

சங்கர் கூறியதை யாவரும் ஆமோதித்தனர்— 'நாம் கொடுத்து வைத்தது அவ்வளவுதான்! பாலிலும் தயிரிலும் குளித்துவந்தாள் கிழவி- அப்படிப்பட்டவளின் சாவுக்குப் பிறகு ஒரு குழந்தைக்குக் கூடத் தின்னக் கொடுக்க ஒன்றுமில்லை என்றால் இது விதியின் விளையாட்டுதானே?'

சிதையில் கிழவியின் சடலம் வைக்கப்பட்டது. 'கிழவியின் வாயில் ஏதாவது வைக்க வேண்டாமா?' என்று யாரோ கேட்டு வைத்தனர்.

நாநாவிற்கு கோபம் வந்தது. —'ஒரு வெள்ளி மோதிரத்தையாவது என்னிடம் விட்டுவைத்திருந்தால் உடைத்து அவளுடைய வாயில் போடுவேன்' உடலின் மீது ஒரு விறகுக் கட்டையை வைத்துவிட்டுக் கூறினான், 'இது போதும், அரை மணங்கு நகைகளை எடுத்துக்கொண்டு ஓடினாளல்லவா?'

காலுவின் உள்ளத்தில் இந்தப் புதல்வர்களின் மீது வெறுப்பு உண்டாயிற்று. தன் மோதிரத்தை உடைத்துக் கிழவியின் வாயில் ஒரு துண்டை வைத்தான்.

தொலைவில் உட்கார்ந்திருந்த வயது முதிர்ந்தவர்களில் சங்கர் தனக்குள் சொல்லிக்கொண்டான் — 'இறைவா! உன் திருவிளையாடல் தானிது. கரியன் கரியன் என்று காலுவைக் கரித்துக் கொட்டிக் கொண்டிருந்தாள். அந்தக் கரியனின் மோதிரம்தான் கடைசிக் காலத்தில் பயன்பட்டது.'

கிழவிக்கு அறிவுறுத்தத்தான் இம்மாதிரி கடவுள் செய்திருக்கிறார் என்று மக்களுக்குத் தோன்றிற்று.

ஆனால் அறிவிறுத்த வென்று அவளுடைய வாயில் காலுவின் மோதிரம் வைக்கப்பட்டிருப்பது அவளுக்குத் தெரிந்திருந்தால்! 'தூ' என்று காலுவின் மோதிரத்தை அவள் உமிழ்ந்திருப்பாளோ,

அவள்தான் எப்போதோ இறந்துவிட்டாளே — இதெங்கே மகன்களுக்குத் தெரியப்போகிறது.'

சிதை எரிந்து அமைதியுற்றது. பிறகு கிராம மக்கள் வீடு திரும்பினர்.

வீட்டைப் பார்த்தவுடனேயே ரண்சோடும் நாநாவும் அலறி அழுதனர். சிறு குழந்தைகளைப் போல் உரத்த குரலில் அழுது கொண்டேயிருந்தனர்.

உலகத்தோருக்கும் அப்படித்தான் தோன்றிற்று — 'ஏன் அழுகை வராது? எத்தனை துக்கங்களைச் சகித்துக்கொண்டு பிள்ளைகளைப் பெரியவர்களாக்கியிருக்கிறாள்? ஒன்பது மாதம் வரை வயிற்றில் வைத்துக் காப்பாற்றியவளாயிற்றே. பெற்றவளை நினைத்து யார்தான் அழமாட்டார்கள்?' ஆனால் மனதிற்குள் எல்லோரும் அவர்களுடைய அழுகையின் உண்மையான காரணத்தைப் புரிந்துகொண்டனர். தமக்குள் சொல்லிக் கொள்ளவும் செய்தனர். — 'கிழவி செத்தாலும் செத்தாள். உயிருடன் இருப்பவர்களையும் சாக அடித்துவிட்டாள். பின்பு அழுகை ஏன் வராது?'

'ஆனால் சமுதாயத்தின் பழக்க வழக்கத்தின்படி கூக்குரலிட்டுக் கொண்டு மருமக்கள் அழுதனர் — 'சொன்னபடி செய்துவிட்டாளே! வயிற்றில் கட்டிக்கொண்டு போவேன் என்றாள், அப்படியே செய்தும் காண்பித்துவிட்டாள்!'

கோடி வசைகள்தான் பொழிந்துகொண்டிருந்தாள்—'பாவி, ஒரு நகையை அணிய விடவில்லை. கூடவே எடுத்துக்கொண்டு போய் விட்டாள். ஜன்மப் பகை அவளுக்கு நம்மிடம்!'

கன்னத்தில் கை வைத்துக்கொண்டு உட்கார்ந்திருந்த நாநாவிற்குக் கூடத் தனக்குப் பிடிக்காத கோடி கூறிய வார்த்தைகள் பிடித்திருந்தன. 'உம்' என்று கூறியபடியே முணுமுணுத்தான்— 'குதிரையை விட்டுத் துரத்தினால் கூட இனிக் கிடைக்கமாட்டாள், அந்தமாதிரி இடத்திற்கு மறைந்துவிட்டாள்.' நாநா மனதிற்குள் அதைப் பற்றித்தான் நினைத்துக்கொண்டிருந்தான். — ஆகாய வெளியில் கிழவி நகை முடிச்சுடன் சென்றுகொண்டிருக்கிறாள். கையை அசைத்துக்கொண்டு கூறுகிறாள். 'இப்போது உன் பெண்டாட்டிக்குப் பூட்டிப் பார்! நான் அப்போதே சொன்னேனா இல்லையா? என்னிடம் வாயைக் காட்ட விடாமல் அவர்களை அடக்கிவை என்று சொன்னேனல்லவா? என்னை வருத்தப்

படுத்தினையல்லவா? உன் பெண்டாட்டி செய்து கொடுத்த சோள ரொட்டியைத் தின்று என் வாய் புண்ணாகிவிட்டதடா!... இந்தா, உன் புதுப் பெண்டாட்டிக்குப் பூட்டிப் பார்த்துக் கொள்!... நான் சொன்னேனே முதலிலேயே, கேட்டாயா? —' இந்தக் கற்பனையுடனேயே நாநா சுய நினைவிழந்துவிட்டான்.

கோபத்தால் மார்பைக் குத்திக்கொண்டும் அடித்துக்கொண்டும் அலறினான் — 'ஒழிந்துவிட்டாய் போ போ! கடவுளின் தர்பாருக்கு வந்துகூட உன்னைச் சும்மா விடுகிறேனா பார்! உன்னைப் பழி வாங்காவிட்டால் உன் வயிற்றில் பாறுங்கல் பிறந்தது என்று சொல்.'

ஒரு வேலையுமின்றிச் சும்மா உட்கார்ந்திருந்த ரண்சோடின் வீட்டாருக்குக் காலையில் எதைச் சாப்பிடுவது என்ற கவலையில்லை. கிராம மக்களின் பழக்க வழக்கம் என்ன என்பதுப் பற்றித்தான் கவலையாக இருந்தது. சங்கர், கோதர் முதலியவர்கள் துக்கத்தின் போது சாப்பிடப்படும் மோரும் கஞ்சியும் அளித்துவிட்டனர். ஆனால் மாலை வேளைக்கு என்ன செய்வது?

ரண்சோடின் சொத்தெல்லாம் போய்விட்டது. ஆனால் மானம், கௌரவம் என்பது இன்னும் எஞ்சியிருந்தது. ஆனால் அது எதற்குப் பயன் படும்? டேகடியா அல்லது ஷேர்பூர் சென்று எந்தக் கடைக்காரனிடமிருந்தாவது கொஞ்சம் தானியம் வாங்கி வரலாம் என்றால் அது, முடிகிற காரியமா என்ன? பத்து மைல் தூரம் நடந்து பத்திரமாக வந்து சேர முடியுமா?

கிராமத்தில் காலுவிடம் எல்லோரையும் விட அதிக தானியம் இருந்தது. சங்கரிடம் கூட இருந்தது. மற்றவர்களில் சிலரிடம் இரண்டு மணங்கு, மற்றும் சிலரிடமும் ஐந்து சேர் தானியம் தானிருந்தது. கிராமத்தில் பாதிப் பேரிடம் இந்தக் கொள்ளைக்கு முன்னமேயே எல்லாம் செலவழிந்துவிட்டது. புளி இலையையும் வேறு சில பொருள்களையும் அரைத்துக் கொதிக்க வைத்துச் சாப்பிட்டு வந்தனர். ரண்சோடைப் பற்றி வேறு யார் கவலைப் படுவார்கள். காலுதான் அக்கறை கொண்டான். தானே அவனுடைய வீட்டிற்குச் சென்று பத்து சேர் அரிசி கொடுத்துவிட்டு வந்தான் — 'இப்போதைக்குச் சமாளித்துக் கொள்ளுங்கள்.' நாநாவிடமிருந்து பெற்றுக்கொள்ள அவனுக்குச் சிறிதும் விருப்பமில்லை. ஆயினும் என்ன செய்வான்? உறவுக்காரரே இல்லை என்று சொல்லும்போது? நாதாவும் இல்லை என்று சொல்லி விட்டான் — பின்பு வேறு வழி? ... இருந்தபோதிலும் மாலையில் சாப்பிட உட்காரும்போது, காலு வாழ்நாள் முழுவதும் தன்னை இடித்துக் காண்பிப்பானே என்று அவன் நினைத்தான்.

நாநா அப்படித்தான் நினைப்பான் என்று காலுவும் புரிந்து கொண்டான். ஆதலால் ஐந்தாம் நாள் இன்னும் பத்து சேர் அரிசி கொண்டு கொடுக்கச் சென்றான், பிறகு சொன்னான் — 'காலு நமக்கு உதவுகிறானே என்று நீங்கள் நினைக்கலாம். அப்படி

யொன்றும் கிடையாது. இதில் ஒரு புதுமையும் இல்லை. நமக்குத் தந்தை வெவ்வேருக இருக்கலாம். பாட்டன் ஒருவர்தானே? இந்த நிலம் உங்கள் தாயைப் பெற்ற பாட்டனுடையதாக இருக்கலாம். ஆனால் என்னிடம் உள்ளது உங்கள் பாட்டனருக்குச் சொந்தமானதுதானே?'

நாநாவின் விட்டேத்தியான சுபாவத்தை ரண்சோடும் தெரிந்து கொள்ளாமலில்லை. அதனால்தான் அவன் காலுவிடம் சொல்வதற்கு பதிலாக நாநாவிடம் மறைமுகமாகச் சொன்னான். 'நிலத்தில் என்னப்பா இருக்கிறது! நீ எங்களைச் சேர்ந்தவன். அதனால்தான் இவ்வளவு அக்கறை உனக்கு. இல்லாவிட்டால், இந்த மாதிரி நிலைமையில் நாதாவையே பார்த்துக்கொள்ளேன்! உண்மையான நல்லெண்ணம் இந்த மாதிரி நேரத்தில் வெளிப்பட்டுவிடும். இல்லாவிட்டால், குதிர்களில் நீ கொட்டியா வைத்திருக்கிருய்?'

'நான்கு மணங்கு தானியம் இருக்கிறது — நாங்கள் நான்கு பேரும் எத்தனை நாட்கள் இதை வைத்துச் சமாளிக்க முடியும் என்று பார்க்கிறோம்!'

'எனக்குத் தெரியும். ஆனால் —' மரணம் கூப்பிடு தூரத்தில் இருப்பதுபோல் ரண்சோட் கருதினான். தன் குடும்பம், காலு — பலீ எல்லோருடைய மரணத்தையும் பற்றித்தான் அவன் அவ்வாறு நினைத்தான். அவனுடைய கண்களில் நீர் நிரம்பி விட்டது. 'வேண்டாம் காலு! இந்தத் தடவை வாங்கி வந்துவிட்டாய். போனால் போகிறது — இனி போதும். ரொம்பவும் சிரமம் எடுத்துக்கொண்டு விட்டாய் .... காலு! எங்களுக்காக நீ ஏன் ?'

'ரண்சோட் அண்ணே! நீங்கள் என்ன இப்படிச் சொல்கிறீர்கள்! நாம் பட்டினியால் மடிந்துவிடுவதா என்ன? இந்தக் குறவர்கள் வாழக் கற்றுவிட்டார்கள், நாம் வாழ வழியில்லாமல் தவிப்பதா?' காலுவின் குரல் மட்டுமல்ல, அவனுடைய கண்களும் கூட உள்ளத்தெம்புடன் பரிமளித்தன.

அதைக் கண்டு ரண்சோடின் கண்ணீரும் நின்றுவிட்டது. காலுவைப் பார்த்துக்கொண்டே யிருந்தான் அவன். பலவித எண்ணங்கள் உதித்தன — 'இதென்ன இவன் நேர்மையான வழியை விட்டு நேர்மையற்ற வழியைப் பின்பற்றச் சொல்கிருனே? மயிலைக் கொன்று சாப்பிடச் சொல்கிருனு? .... நம்மிடம் தானியமே இல்லையே, கொள்ளையா அடிப்பது?' பிறகு அவன் கேட்டான் — 'எப்படி வாழ்வது என்று நீதான் சொல்லேன்?'

'இப்போது எனக்கும் ஒரு வழியும் தோன்றவில்லை. ஆனால் பட்டினியால் அவதிப்படும்போது தானாக ஏதாவது வழி தோன்றும்.' ஒரு கணம் நின்றுவிட்டு அந்தராத்மாவின் குரலுக்குத் தலையசைத்துச் சம்மதம் தெரிவித்தபடி கூறினான் ... 'ஊஹூம் பசியால் நாம் மடிந்துவிடுவோம் என்று ஒருநாளும் நான் ஒப்புக்கொள்ள மாட்டேன்.' அந்த 'வழி'யைத் தேடச் செல்பவனைப் போல் எழுந்து நின்றுவிட்டான் காலு. — 'ஆனால் நீங்கள் இப்படித் தைரியமிழந்து விடக் கூடாது, விண்ணைப் பிளந்தாவது தானியத்தை இங்கு கொண்டுவந்து விடுவோம் தெரியுமா?' என்று கூறிவிட்டு அவன் இங்கிருந்து கிளம்பினான்.

ரண்சோட் முணுமுணுத்துப் பேசினான் — 'நான் தைரியத்தை இழக்கவில்லை. ஆனால் இந்த வீட்டில் இருப்பவர்கள் — பாதிப் பேர் 'பஞ்சம்-பஞ்சம்' என்று கூக்குரலிட்டே உயிரை விட்டு விடுவார்கள்!' பிறகு அருகில் உட்கார்ந்திருந்த நாநாவைப் பார்த்துச் சொன்னான் — 'உன் மனைவி கோடி, என் குழந்தைகள் மூன்று பேர் — இவர்களைப் பொருத்தவரையில் பஞ்சம் வந்து தான் விட்டது. கோடி முன்பைவிட ஒன்றரைமடங்கு அதிகமாகச் சாப்பிடுகிறாள். அப்படியிருந்தும் தினமும் காலையில் இந்தப் பஞ்சம் எப்போது தொலையுமோ, நாம் வயிறு நிறைய எப்போது தான் சாப்பிடப்போகிறோமோ' என்று சொல்லிக்கொண்டே கோடி எழுந்திருக்கிறாள் என்கிறாள் உன் அண்ணி. அப்படியானால் அவளுக்கு எவ்வளவு சாப்பாடு வேண்டும் என்று நினைத்துப் பார்?'

'ஒரு வேளைக்குப் பெரியவர்களுக்கு ஒரு ரொட்டி, குழந்தைகளுக்குப் பாதி ரொட்டி அவ்வளவுதான். அதற்குமேல் வேண்டும் என்பவர்கள் எங்கு விருப்பமோ அங்கு செல்லட்டும் என்று நான் அண்ணியிடம் இன்று சொல்லிவிட்டேன்.'

ஆனால் நாய்வாலை யாரால் நிமிர்த்த முடியும்? கோடி ஒளிவு மறைவாகப் பச்சைத் தானியங்களையே தின்ன ஆரம்பித்து விட்டாள். இதை ரண்சோடின் மனைவி கண்டுபிடித்துவிட்டாள். கோடி உடனே ஆரம்பித்துவிட்டாள் — 'உன் கையில் அதிகாரம் இருக்கிறது. நீ இரண்டு ரொட்டி தின்கிறாய் ....' நாநாவின் புதிய மனைவியும் முணுமுணுத்தாள் — 'நீ வேண்டிய அளவு தின்கிறாய்— நாங்கள்மட்டும் நீ கொடுத்ததைத்தான் ...'

ஆனால் இம்மாதிரி பூசல்கள் ரண்சோடின் வீட்டில் மட்டும் நடக்கவில்லை. ஒவ்வொரு வீட்டிலும்தான் நடந்தது. காலுவின் வீட்டிலேயே கணவன் மனைவிக்கிடையே வாக்குவாதம் நடந்தது.

காலு பலீயிடம் சொல்வான் — 'தூக்கம், சாப்பாடு, சுமை இதெல்லாம் குறைத்துக்கொண்டால் குறையும். வளர்த்திக் கொண்டால் பெருகிவிடும். முன்போல் சாப்பாட்டை வைத்துக் கொள்ளாதே. கொஞ்சம் குறைத்துச் சாப்பிடலாம். அதிலேயே மனத்திருப்தியடையக் கற்றுக்கொள் !'

'பசியால் என்னைச் சாகச் சொல்கிறீர்களா?' பலீ இன்னும் அதிக ஆவேசத்துடன் எழுந்தாள் — 'உங்களுக்குத்தான் உங்கள் அண்ணன் தம்பிகளைக் காப்பாற்றவேண்டும். நீங்கள் வேண்டுமானால் பட்டினிகிடந்து மடியுங்கள்.'

வாழ்நாளில் காலுவை இவ்விதம் உதாசீனப்படுத்தி யாருமே பேசியது கிடையாது. சமூகத்தில் மானம் அவமானம் என்பதே போய்விட்டதாலோ. அன்றி மரணம் எதிரேவந்து நிற்பதாலோ— இப்படிப்பட்ட அவமானமான வசையை யாரும் பொருட்படுத்த வில்லை. அடிதடிவரை போவதற்குப் பதிலாகக் காலு இவ்வளவு தான் பேசினான் — 'எனக்குச் சாப்பாடே வேண்டாம். ஆனால் ஒன்றுமட்டும் நினைவிருக்கட்டும். இப்படிக் 'காள் காள்' என்று கத்திக்கொண்டே யிருந்தால் நீதான் முதலில் மடிவாய் ! உலகத் திலே என்ன நடக்கிறதோ தெரியாது. ஆனால் என் கண்ணெதிரே நான் பார்ப்பது என்னவென்றால் சுபிட்சமாக இருக்கும்போது சாப்பிட முடியாத அளவு இப்போது சாப்பிட்டாகிறது. கோபித்துக்கொள். எனக்கு ஒன்றும் குறைந்துவிடாது. ஆனால் போய்ப் பார்த்துவிட்டு வா. வெளியே எத்தனை தானியம் இறை பட்டுக் கிடக்கிறது என்று புரியும் !'

'நானா இறைத்தேன் ?'

'நீயும்தான்! உன் சாப்பாட்டைக் குறைத்தால், நீயும் அப்படித் தான் செய்வாய்! பெரிய பேச்சுப் பேசவராதே !' காலு வீட்டை விட்டு வெளியே வந்தான்.

காலுவின் நிலை அவனுடைய வீடு, கிராமம், இவற்றுடன் நின்று விடவில்லை. பஞ்சத்தால் பிடிக்கப்பட்ட நாடு முழுவதிலும் அதே நிலைதான். மனிதன் இன்று சாப்பிடும் உணவு ஒரு வாரம் வரை தாங்கும் என்று நினைத்தானா என்ன ? நம்பிக்கை என்பதே அவனை விட்டுச் சென்றுவிட்டது.

மூட்டை முடிச்சுகளைக் கட்டுவது மறைந்துபோயிற்று. சேர்ந்து உட்கார்ந்திருப்பதையும் மக்கள் மறந்துவிட்டனர். வீடு, வயல் வெளி எல்லாம் மறைந்தன. தம் நாட்டின் வடகிழக்கு முனையும் மறைந்துவிட்டது. யாரும் எவரிடமும் ஒன்றும் சொல்லிக்

கொள்ள நினைப்பதில்லை. அப்படியிருக்க கேட்பதும், கருத்தை ஏற்பதும் எங்கே? யார் எவருடைய வீட்டிற்குச் சென்றுரோ, யார் கண்டார்கள்? மயானம் செல்லுவோரின் எண்ணிக்கையும் அதிகரித்துக்கொண்டே வந்தது.

'பசியால் மடிந்துபோய் விடுவோம் என்ற விஷயத்தை மறந்து விடு!' — என்று கூறிய காலுவின் வீட்டிலேயே பசிவந்து நின்று விட்டது. இன்னும் இரண்டே தினங்களுக்கு வேண்டிய தானியம் தானிருந்தது.

கவலையுடன் திண்ணைமீது உட்கார்ந்து பல்லைக் குத்திக்கொண் டிருந்தான் காலு. கிராமத்தில் கடைக்காரனே கிடையாது. மிளகாய் — உப்பு வியாபாரம் செய்யும் காசம் இருந்தான். ஆனல் அவனுடைய பொருள்களெல்லாம் கொள்ளைபோய் விட்டன.

கடைசியில் அவன் ஒரு முடிவிற்கு வந்தான் — 'எல்லோருமே டேகடியா கிராமத்திற்கே சென்றுவிடலாம் — அங்கு ஏதாகிலும் செய்து தானியத்தைப் பெறமுடியும்!'

ரண்சோடும், நாநாவும் கூட ஒப்புக்கொண்டனர். கோதரும் சங்கரும் எப்போதடா இங்கிருந்து கிளம்பலாம் என்று காத்துக் கொண்டிருந்தனர். காசம் தன் பொருள் கொள்ளைபோன நாளே அங்கு தங்காமல் சென்றுவிட்டான். பேசாத் கூட அந்தப் பத்து சேர் தானியம் வசூலிக்க அங்கு இருக்கவில்லை.

இந்த வார்த்தையை ஒப்புக்கொண்ட ரண்சோடும் சங்கரும் கூட நினைத்தனர் — 'கட்டுங்கள் மூட்டையை. நம்மிடம் என்ன சொத்து இருக்கிறது, எடுத்துச் செல்ல. நம்மை விட்டு அகலக் கூடாது என்று சொல்லும்படியான பொருள் நம்மிடம் ஒன்றுமே கிடையாது. வெறுங்கையை உதறிக்கொண்டு எழுந்து நின்றபடி நடக்க வேண்டியதுதானே!'

காலுவிற்குக் கவலையுண்டாயிற்று. போர்வைகள், கட்டில்கள், துப்பாக்கி, மாவரைக்கும் இயந்திரம், இரண்டு லோட்டாக்கள், ஒரு தட்டு, வானலி, மண் பாத்திரங்கள், மத்துக்கயிறு, மற்ற கயிறுகள், மற்றும் மங்கள் கூட! .... வீடு முழுதும் இருக்கிறதே.

காலு யோசித்தபடி யிருந்தான்: 'எதை விட்டுச் செல்வது. எதை எடுத்துச் செல்வது? .... எடுத்துச் செல்வதும் எப்படி? காலியாகக் கிடக்கும் கிராமத்தை யாரும் எறிந்துவிடக் கூடாதே என்ற கவலையில் மங்களின் மாமா லீம்பாவிடம் கிராமத்தைக் காவல் காக்கும் பொறுப்பையளிக்க நிச்சயித்தான் காலு. வீட்டி

லிருந்து எதை எடுத்துச் செல்வது, எதை விட்டுச் செல்வது என்று இன்னும் அவன் நிச்சயிக்கவில்லை. முதலில் மங்கள் வீட்டிலேயே இருக்கட்டும் என்று நிச்சயித்தான். அப்படியிருந்தும் சில பொருள்களை மறைத்து வைக்க ஆரம்பித்தான்.

இதற்குள் மறுதினமே ரண்சோட் செய்தியனுப்பினன் – 'நீ நான்கைந்து போர்வைகளை எடுத்துக்கொள்ள விரும்பினல் வண்டிகள் வந்திருக்கின்றன. எடுத்து வைத்துக்கொண்டு போகலாம்!'

'மாட்டு வண்டிகளா?' காலுவிற்கு உண்மையில் வியப்பாக இருந்தது. ரண்சோட் தாழ்வாரத்திலேயே தங்கிவிட்டான்.

'ஆமாம் ஆமாம். நம் தலக்சந்த் இல்லை, வியாபாரி, அவருடைய இரண்டு வண்டிகள் இருக்கின்றன. உடன் இரண்டு சிப்பாய்கள் இருக்கின்றனர், சரியாக இருக்கும். சர்க்காரின் ஆட்கள், ஆகையால் வழியில் ஒருவனும் நிறுத்திப் பெயரைக் கூடக் கேட்க மாட்டான்!'

ரண்சோட் கூறியது உண்மைதான். இதுவரை சர்க்காரை எதிர்த்து ஒருவரும் ஒன்றுமே செய்தது கிடையாது. அதன் அதிகாரத்திற்குக் கட்டுப்படுதல், மரியாதை, பயம் எல்லாம் இன்னும் இருந்தன.

காலு கேட்டான்—'வண்டிகளில் என்ன நிரப்பியிருக்கிருர்கள்? அவைகள் எங்கே, எப்போது கிளம்பப்போகின்றன?' பிறகு 'சரி' என்று கூறிச் சென்றுவிட்டான். ஒரு வத்திக்குச்சியை எடுத்துக்கொண்டு திண்ணைமீது உட்கார்ந்தான். அவனுடைய மண்டையை என்னமோ செய்தது. கைகால்களைச் சொறிந்து கொண்டான். பல்லைக் குச்சியால் குத்தினன். பல்லிலிருந்து மட்டுமல்ல, காலுவின் கண்களிலிருந்தும் ரத்தம் வந்தது.—'இந்த முழுக் கிராமமும் தானியமில்லாமல் துடித்துக்கொண்டிருக்கிறது. இந்த தலக்சந்த் வியாபாரமா செய்கிருன்? வியாபாரமில்லாமல் என்ன? ... இல்லாவிட்டால் முதலில்கூட நான்கைந்து வண்டிகள் கிளம்பினவே அப்படி இவனுக்கு எத்தனை உற்ருர் உறவினர் இருக்கப் போகிருர்கள்! இருந்தால் இருக்கட்டும் நமக்கென்ன? இது நீதமா அநீதமா? ... தானியம் நம்முடையது .... தானியத்துக்கு உடமைக்காரர்கள் பசியால் மடிந்துகொண்டிருக்கின்றனர். நம் கண்ணெதிரேயே, நம்மைத் துடியாய்த் துடிக்க விட்டுவிட்டு ... போ! ... அந்தத் தானியம் முழுதும் கிடைத்தால் கிராம மக்கள் அனைவரும் ஒரு மாதம்வரை சாப்பிடலாமே! ... இப்போது

ஏதாவது செய்தாகவேண்டும்! ... நீ வாலா படேலின் மகன் ... நீ ஏதாவது வழி செய்யாவிட்டால் வேறு யார் செய்வார்கள்?' கிழவனே எதிரேயுள்ள தூணிலிருந்து எதிர்ப்பட்டாற்போல் தோன்றிற்று காலுவிற்கு. — 'காலு! என் ரத்தம் உன் உடலில் இருந்தால், மக்கள் பசியால் மடிந்துகொண்டிருக்க இந்தக்கிராமத்திலிருந்து தானிய வண்டியைப் போகவிடக் கூடாது ....எழுந்திரு· எழுந்து நில்!...தலக்சந்தின் அப்பனுக இருந்தாலும்தான் என்ன?.. இம்மாதிரி நேரத்தில் என் மகன் — நீ எதிர்க்காவிட்டால் இந்தக் கிராமத்தில் வேறு யாரைத்தான் நம்பமுடியும்? வேறு யாரிடம் இதை எதிர்பார்க்க முடியும்? ... நான் எப்படிப்பட்ட வீரன் என்று நீ காண்பி! என் பெயரை முன்னுக்குக் கொண்டுவா! ... எழுந்திரு! இல்லாவிட்டால் .... நானே உனக்கு ஒரு முழுக்குப் போட்டுவிடுவேன் ...'

கடவுளே வரமளித்தாற் போலிருந்தது காலுவிற்கு. காலு திடீரென்று எழுந்து நின்ருன். வீட்டிற்குப் போய்ச் சட்டை போட்டுக்கொண்டான், தலைப்பாகையணிந்தான். கையில் வில்லை யும் அம்பையும் எடுத்துக்கொண்டு கிராமத்து எல்லையில், வண்டிகள் தங்கியிருந்த அந்தப் புளியமரத்தடியை அடைந்தான்.

பகல்வேளை சாப்பாட்டை முடித்துக்கொண்டு எருதுகளை வண்டியில் பூட்டத் தயாராயிருந்தனர் வண்டிக்காரர்கள். சர்க்காரின் இரண்டு சிப்பாய்களும் சுருட்டுப் பிடித்துக்கொண்டிருந்தனர். ஒருவனிடம் கத்தியிருந்தது, மற்ருெருவனிடம் துப்பாக்கி காணப்பட்டது. அந்தப் பயங்கரத் துப்பாக்கியைவிட அதை வைத்துக் கொண்டிருந்தவன் இன்னும் பயங்கரமாகக் காட்சியளித்தான். அயல்நாட்டுக் (காபூலி) கிழவன் அவன். ஆனுல் இன்றைய காலு காலனுக்கும் காலனுக வந்திருந்தான். 'அந்தக் கிழவனைவிடக் குறைந்த பலமா என்னிடமிருக்கும்? ஆனுல் அவனிடம் அந்தப் பயங்கரத் துப்பாக்கி யிருக்கிறது. குறி சரியாக நின்றுவிட்டதோ அவ்வளவுதான். விடாமல் சுட்டுத் தள்ளிவிடும். வில்லில் அம்பை ஏற்றுவதற்குள் ஆளைத் தீர்த்துக் கட்டிவிடும்.'

'எந்த இடத்தைச் சேர்ந்தவர்கள்? எங்கே போகவேண்டும்?' என்று வண்டிக்காரர்களைக் கேள்விகள் கேட்டபடியே காலு யோசனை செய்துகொண்டிருந்தான்.

'யாரப்பா நீ?' என்று காலுவை முறைத்துப் பார்த்தபடி கேட்டான் கிழவன்.

'யாரா? இந்தக் கிராமத் தலைவன் நான்!' காலுவின் கை தன்னையுமறியாமல் மீசையைத் தடவிற்று.

'அடே! கிராமத் தலைவரை இப்போதுதான் நான் பார்த்து விட்டு வந்திருக்கிறேன்!' என்றான் இளஞ் சிப்பாய். — நீ எந்தக் கிராமத் தலைவன்?'

காரணமின்றி காலுவின் அங்கங்கள் படபடத்தன. தன்னை நிதானப்படுத்திக் கொள்வது கூட கடினமாகிவிட்டது. 'கிராமத்தின் வழியாகத் தானியம் ஏற்றிக்கொண்டு வண்டிகள் போவதை நாம் வாயைப் பிளந்துகொண்டு பார்த்து நிற்பதா?' இதே ஒரு எண்ணத்துடன், சற்று சிடுசிடுப்புடன் கூறினான் — 'அவர் என் அண்ணன். ஜமாதார், நான் உன்னிடம் சொல்லி வைக்கிறேன். இந்த வண்டிகள் இந்த இடத்தை விட்டு நகராது!' ஓட்டுவதற்குத் தயாராக இருந்த வண்டிக்காரர்களிடம் கூறினான். இல்லை, கட்டளை பிறப்பித்தான் — 'உயிருடன் இருக்க விரும்பினால், வண்டிகளைத் திருப்பித் தந்துவிடுங்கள்!'

ஒருகணம் சிப்பாய்களும் பிரமித்து நின்றுவிட்டனர். கிழவன் அவனை ஏளனமாகப் பார்த்தான். இரக்கப்பட்டுக் கேட்டான்— 'இது யாருடைய வண்டி என்று உனக்குத் தெரியுமா?'

'தெரியும். தலக்சந்த் வியாபாரியுடைய தானியம் இது. அவருடைய வீட்டிற்குக் கொண்டு சேர்க்கப்போகிறீர்கள். சர்க்காரின் வால் அவர் என்பதும் தெரியும். அவரை யாராலும் எதிர்க்க முடியாது என்பதும் தெரியும். ஆனால் வண்டிகள் இங்கிருந்து கிளம்பினால் நீங்கள் அல்லது நான் நம்மிருவரில் ஒருவர் இறக்க வேண்டும். அப்போதுதான் போகும் — இல்லா விட்டால் அசையாது.'

காலுவின் குரலை விட அவனுடைய கண்களின் சலனமற்ற பார்வை, நிமிர்ந்த கழுத்து, பரந்து விரிந்த மார்பகத்தின் பயமின்மை இவை யாவும் மிகவும் பயங்கரமாகக் காட்சியளித்தன. வண்டிக்காரர்களும் நின்று விட்டனர். அவர்கள் கிழவனைப் பார்த்தனர்.

'நீ சாகப் போகிறாய்!' வாயில் பட்டும் படாமலும் பேசிய காபூலிவாலா எழுந்து நின்றான். இப்போதே காலுவின் தலையைச் சீவி விடுபவன் போல் அவனை முறைத்துப் பார்த்துக் கேட்டான் — 'நீ யார் அயல் நாட்டானைக் கேட்க?'

ஆனால் காலு பயப்படுவதற்குப் பதிலாக அதிகச் சீற்றமடைந்

தான். உடல் முழுவதிலும் ஏதோ தந்திக்கம்பி 'டண்' என்று அடித்தாற் போலிருந்தது. ஒரு கணம் தோன்றிற்று — 'இந்தக் கிழவனுடைய கைகால்களை முறித்துவிடலாமா! அல்லது உயரத் தூக்கிக் கீழே போட்டுச் சட்டினியாக்கி விடலாமா!' ஆனால் எச்சரிக்கை மட்டும் விடுத்து விட்டுச் சும்மா இருந்துவிட்டான் —' 'உன்னைப் போன்ற காபூல்காரர்களின் ரத்தத்தைக் கையில் பூசிக் கொள்ளும் படேலின் மகன் நான் தெரியுமா? கையை ஓங்கு பார்க்கலாம், என்ன நடக்கிறது என்று பார்த்துவிடலாம்!'

காலுவின் உறுதியைப் பார்த்தோ அல்லது மெள்ள மெள்ளக் கூட்டம் கூடுவதைப் பார்த்தோ, காபூலியும் காலுவுக்கு எச்சரிக்கை விடுத்தான் — 'இதோ பார் — உன் நலனுக்காகத்தான் சொல்கிறேன். எங்கள் வழியைத் தடைசெய்யாதே, இல்லாவிட்டால்....' அவன் தன் கையையே, வாளால் கீறினான். வழியும் ரத்தத்தைக் கூட அவன் கவனிக்கவில்லை. அவன் கூக்குரலிட்டான் — 'உன்னை அப்படியே தீர்த்துக்கட்டிவிடுவேன்.' அவனுடைய உடலும் பழுப்பு நிறத் தாடியும் நடுங்கின. ரண்சோடும் சங்கரும் அங்கு வந்து சேர்ந்தனர். சினத்துடன் நின்றுகொண்டிருந்த காபூலியின் கடுக்கத்தையும் அவனுடைய கையிலிருந்து வழிந்துகொண்டிருந்த ரத்தத்தையும் கண்டு பயந்துபோயினர்.

காலுவைத் தடுத்து நிறுத்துவதும், சமாதானப்படுத்துவதும் கூட சாமானியமான செயலல்ல. காலுவின் கட்சியில் பகா, கோதர் மற்றும் நான்கைந்து பேர்களும் இருந்தனர். பகா கூறிவிட்டான்— 'ஜமாதார்! அவனைத் தனி ஆள் என்று நினைத்துவிடவேண்டாம். தீர்த்துக்கட்டினாலும் சரி, கட்டித் தீர்த்துவிட்டாலும் சரி, இந்தக் கிராமத்து எல்லையைத் தாண்டி தானியத்தை ...'

இவர்கள் உயிரைப் புல்லென மதிப்பவர்கள் என்று ஜமாதார் புரிந்துகொண்டான்; ஆனால் அவனும்தான் என்ன செய்வான்? அவனுடைய தைரியத்தை நம்பித்தான் தலக்சந்த் வண்டியைக் கொடுத்திருந்தான். தன் நாட்டிலேயே தோல்வியை ஒப்புக் கொள்வதா என்ன — பின்பு அவனுடைய முன்னோரின் மானமும் கௌரவமும் போய்விடுமே. வெளிநாட்டவரின் பெருமையே போய்விடுமே! ...

உடனே அவன் தன் சுபாவத்தை மாற்றிக்கொண்டு வண்டிக் காரர்களிடம் வண்டியை ஓட்டும்படி கூறினான் — 'வண்டியை ஓட்டுங்கள் பார்க்கலாம். யார் தடுக்கிறார்கள் பார்க்கலாம், அயல்நாட்டானை!' உடனே கிராம மக்களைப் பார்த்துவிட்டுத்

துப்பாக்கியை எடுத்தான். தன் நண்பனையும் துரிதப்படுத்தினான்– 'எடு! கத்தியை! என்ன பார்த்துக்கொண்டிருக்கிறாய்?' காலுவைச் சண்டைக்கு இழுத்தான் — 'வாடா! கழுதைப் பயலே வா!'

துப்பாக்கியைத் தயாராகப் பிடித்தவுடனேயே பெண்களும் குழந்தைகளும் பறந்தோடிவிட்டனர். சங்கரும் ரண்சோடும் ஒரு புறம் நழுவிவிட்டனர். பகாவும் கோதரும்கூட ஒவ்வொரு அடி தள்ளி நின்றனர் ....

ஒரு துளிகூட அசையாமல், இன்னும் உறுதியுடன் காலு நின்றான். மார்பு இன்னும் பரந்து விரிந்துவிட்டது. 'எங்கே விடு பார்க்கலாம்!' என்று கூறியவன் மனதிற்குள் பச்சாத்தாபம் அடைந்தான் —'அடடா! விட்டுவிட்டான் போலிருக்கிறதே!'

ஒருபுறம் வண்டிக்காரர்கள் நுகத்தடிகளின்மீது உட்கார்ந்தனர். நுகத்தடிகள் நேராக நின்றன. எருதுகள் அவற்றை நிமிர்த்தின. வண்டிகளின் சக்கரங்கள் மெள்ள-மெள்ளச் சுழல ஆரம்பித்தன.

காலு மறுபடியும் எச்சரித்துப் பேசினான் — 'போகிறாயா, அந்தக் கால்வாயைத் தாண்டவிட்டால் நான் வாலாபடேலின் மகனல்ல, அவருடைய வயிற்றிலிருந்து பிறந்த கருங்கல்!'

'இப்போதே ஏன் நிறுத்தவில்லை, அந்தக் கால்வாயில் என்ன இருக்கிறதாம்?'

'துப்பாக்கி வெடிக்கப்போகிறது!' — காலுவின் தன்னம்பிக்கை ஆரஞ்சுச் சுளைபோல் கண்களிலும், ஒவ்வொரு அவயவத்திலும் விளையாடிக்கொண்டிருந்தது. வேறு வழி என்ன இருக்கிறது என்று தேடிக்கொண்டிருந்தான்.

'உன் உயிரை எடுத்து விட்டுத்தான் மறுவேலை!' ஜமாதார் தன் வெற்றியை நினைத்து மகிழ்ந்துகொண்டிருந்தான் — 'உம்! நீ என்ன நினைக்கிறாய்?'

'துப்பாக்கியை நீங்கள் வெடிகுண்டுகளால் நிரப்புவீர்கள், இவர்களெல்லோரும் அதைப் பார்த்துக்கொண்டிருப்பார்கள் என்று நினைக்கிறீர்கள்?' காலு பகாவைப் பார்வையால் சமிக்ஞை செய்தான்.

பகா கூறினான் — 'ஏற்கெனவே நாங்கள் எல்லோரும் — மருமகள், மாமியார் எல்லோரும் பட்டினியால் மடிந்துகொண்டிருக்கிறோம்!'

'நீயும் எதிரே வா! ஏன் தள்ளிப்போய் நின்றுகொண்டிருக்கிறாய்?'

'இதோ வந்துவிட்டேன். யாருக்குப் பயமாம்?' பகா தடியுடன் காலுவின் பக்கத்தில் வந்து நின்றுகொண்டான். சங்கர் — 'அடே! பகா!' என்று கத்தினான். 'பகா—பகா என்று கத்தாதீர்கள், இல்லாவிட்டால்!' சங்கரின் பக்கம் காலு திரும்பினான் – 'அண்ணன் தம்பி என்று பார்க்கமாட்டேன். முதலில் உங்களையே...' பகாவின் கையிலிருந்த தடியைப் பிடுங்கி சங்கரின் மேல் ஓங்கினான் காலு- 'இதோ! பார்த்தீர்களா?' அவனுடைய குரலில் ஒரு நடுக்கம் ஒலித்தது, உள்ளம் படபடத்ததன் காரணமாகவோ என்னமோ!

ஏன் படபடக்காது? உயிரைப் பணயமாக வைக்கும் செயலாயிற்றே, ஓங்கிய கையுடன் காலு ஜமாதாரின் பக்கம் திரும்பினான். மின்சாரப் பித்தானை அழுத்தியவுடனேயே பொம்மை திரும்புவது போன்ற வேகத்தில் திரும்பினான். தடியை வீசியவுடனேயே கத்தினான் — 'வாளை வைத்துக்கொண்டு போவாயா?'

'டமால்' என்று துப்பாக்கி ஒலிசெய்தது. கிளம்பிய தூசியுடன் காலு ஓடினான். ஒருவேளை அவனுக்கே ஒன்றும் புரியவில்லை போலும்! போய் ஜமாதாரின் கால்களுக்கிடையே தன் தலையைக் கொடுத்து ஒரு நெம்பு நெம்பித் தள்ளினான். பிறகு மறுகணமே அவனுடைய மார்பின்மேல் ஏறி உட்கார்ந்தான். பகாவும் கோதரும் கத்தி வைத்திருந்தவன்மீது பாய்ந்தனர்.

கோபத்தால் அறிவிழந்த காலு அவனுடைய கழுத்தையே திருகிப் போட்டிருப்பான். ஆனால் அதற்குள் — 'போதும், நிறுத்து காலு! நிறுத்து!' என்று கூறியவண்ணம் ரண்சோடும் சங்கரும் ஓடிவந்தனர். இரண்டு பேர்கள் காலுவின் கைகளைப் பிடித்துக்கொண்டனர். ஆனால் காபூலி மட்டும் கண்களை மூடிக் கொண்டு அடிதடியைப் பார்த்துக்கொண்டிருந்தான் ...

ஆனால் அவன் நினைத்திருந்தால் சிங்கத்தைப் போல் காலுவை குதறியிருப்பான், கழுத்தை நெறித்துப் போட்டிருப்பான்.

உண்மையில் அந்தக் கிழவனின் மீது காலுவல்ல, பத்தாண்டுகளுக்கு முன்பு அவனை விட்டுப் பிரிந்த தன் மகனே இருப்பது போல் அவனுக்குத் தோன்றிற்று! — தான் கற்றுக் கொடுத்த வித்தையைத் தன்னிடம் காண்பித்தான் அவன், தடியை வீசி விட்டு அதே வேகத்தில் பாய்ந்தான் அவன் ... அதே விறுவிறுப்பு. அதே கடுமை!

கிழத்தந்தை தன் உள்ளத்துச் சொத்தில் மதியிழந்து விட்டான் ... மகனின் வீரத்தையும் அவனைப் பற்றிய இனிய நினைவு

சுளையும் எண்ணியபடியே கழுத்தை அழுத்தும் காலனையும் அவன் மறந்துவிட்டான். இறக்கும்போதிருந்த அதே நினைவில் மூழ்கி விட்டான்.

ஜமாதாரின் வாயிலும் மார்பிலும் ரத்தப் பெருக்கத்தைக் கண்டு ரண்சோட் நடுங்கிவிட்டான் — 'இதென்ன விபரீதம் – இந்தச் சிப்பாய் இறந்துபோனால் கிராமம் முழுவதும் இறக்க நேரிடுமே. கிராமத்தில் பீரங்கி வந்து நின்றுவிடும்!'

'சரியாகப் பார்! ஜமாதாருக்கு எங்கே காயம் பட்டிருக்கிறது? காலுவிற்குத்தான் பட்டிருக்கிறது! கையில் துப்பாக்கியின் குண்டு பட்டிருக்கிறதே, தெரியவில்லையா? — சங்கர் காலுவின் கையைக் காண்பித்தபடி கூறினான் — உண்மைதான். காலுவின் இடது கையில் மணிக்கட்டருகே குண்டு விழுந்து காயம் பட்டிருந்தது. அவனுடைய கை முழுவதும் ரத்தம் வழிந்துகொண்டிருந்தது. ஆனால் காலுவிற்கு இன்னும் அந்தக் காயத்தைப் பற்றிய நினைவில்லை. அதனால் சங்கரைப் பார்த்து முறைத்தான் — 'நீங்கள் எல்லோரும் என்னைக் கட்டுப்படுத்த விரும்புகிறீர்களா? ஆனால் நினைவிருக்கட்டும், நீ அவர்களுடைய பக்கம் சேர்ந்து கொண்டு ....'

'இதென்ன தம்பி நீ? கையில் குண்டு பட்டுக் காயமாகி விட்டதே தெரியவில்லையா?' ரண்சோட் கேட்டான்.

அப்போதுதான் காலு சுய உணர்விற்கு வந்தான். கையி லிருந்து ரத்தம் வெள்ளமாக வழிந்துகொண்டிருந்தது, ஆயினும் அவன் லட்சியம் செய்யவில்லை. — 'முதலில் இந்த மடையனைப் பிடி! பிறகு என் காயத்திற்குக் கட்டுப் போடலாம்!'

இதென்ன! அயல் நாட்டினுடைய கண்களில் நெருப்புப் பொறிக்குப் பதிலாகக் கண்ணீர்த் துளிகள் ஏன்? உதடுகளில் வசை மொழிகளுக்குப் பதிலாகப் புன்சிரிப்பு ஏன்? காலு தன்னையே மறந்த நிலையிலிருந்தான். பகாவும் கோதரும் சற்று ஜாக்கிரதையாக இருந்தனர். தன் தலைப்பாகைத் துணியால் அந்த அயல்நாட்டானின் நீட்டிய கைகளைக் கட்டினார்கள் ...

கூட்டம் முழுவதும் ரண்சோடின் வீட்டின் வழியாகச் செல்ல விருந்தது. ஆனால் நாநா ரண்சோடின் காதில் ஏதோ ரகசியமாக கூறியதால், காலுவின் வீட்டிற்குச் சென்றது ...

ஆனால் காலு கிராமத்தின் நிலை கண்டு வருந்தினான். 'முட்டா ளின் நட்பு உயிருக்கு ஆபத்தாக வந்துவிட்டது!'

ரண்சோட், சங்கர், பகா, கோதர் முதலிய பதினைந்து பேர்களையும் காலு அழைத்தான். வீட்டிலிருந்து நாநாவையும் வரவழைத்தான். —

'சரி, இனி இவனை என்ன செய்யலாம், சொல்லுங்கள் !' நாநா கூறினான் — 'செய்ய ஆரம்பிக்கும்போது எங்களைக் கேட்கவில்லை, இப்போது கேட்கிறாயே என்ன பயன் அதனால்?' காரியத்தைச் செய்துவிட்டான் காலு, ஆனால் எல்லோருக்கும் இப்போது கவலையாகிவிட்டது. தைரியமிழந்து எல்லோரும் காணப்பட்டனர்.

காலுவிற்கு மக்களின் அந்த மனநிலை புரிந்துவிட்டது. அவர்கள் காண்பித்த கவலையை இருமடங்காக்கி விட்டான் அவன் — 'நீங்கள் எல்லோரும் இப்படி நழுவிவிடுவீர்கள் என்று எனக்கெப்படித் தெரியும் ?'

'பின் என்ன செய்வது ! அரசாங்கத்தையே கொள்ளையடிப்பதல்லவா இது? சித்தப்பன் செக்கில் வைத்து ஆட்டி நம்மைத் திரித்தெடுத்து விடுவானே !' ... நாநா கிடைத்த சமயத்தை நழுவவிடவில்லை.

'அப்போது நான் என்ன நினைத்தேன் தெரியுமா? கிராமம் முழுவதும் பட்டினியால் மடிவதா என்று எனக்குத் தோன்றிற்று.'

'ஆனால் எங்களை ஒரு வார்த்தை கேட்டிருக்கலாமல்லவா? பைத்தியக்காரா ! ரண்சோட் வருத்தமாக இருந்தார். இனி ஒரே ஒரு வழிதான், அந்த அயல்நாட்டானைச் சமாதானப்படுத்தியாக வேண்டும். அவனைப் போக விடுங்கள். இல்லையா சங்கர் அண்ணே ?'

ஏதோ யோசனை செய்பவரைப்போல் சங்கர் தலையசைத்துப் பதிலளித்தான் — 'உங்கள் எல்லோருக்கும் எது சரி என்றுபடுகிறதோ, அதைச் செய்யுங்கள் தம்பி !'

மற்றவர்களுக்கும் இவ்விதமே தோன்றிற்று — 'பசியால் மடிந்துகொண்டிருப்பது போதாதென்று, சர்க்காரின் குதிரைகள் வேறு வந்துவிடும் !' இரண்டு — மூன்றுபேர் கூறினார்கள் — 'நம் கிராமத்தலைவர் சொற்படியே செய்துவிடுவோம் ! காலனுடைய தூதர்களைக்கூட எதிர்க்கலாம், ஆனால் திவானின் தூதர்களை எதிர்க்க முடியாது. அவனை வந்தவழியே போகவிடு !'

'சரி, அவ்வளவுதானே ?' காலு எல்லோரையும் கேட்டுவிட்டு மறுபடியும் நிச்சயப்படுத்திக் கொண்டான் — 'சரி அப்படியே

செய்துவிடுகிறேன்!' என்று பதிலளித்தபடியே கிராம மக்களிடம் கூறினான்— 'முதலில் நீங்கள் எல்லோரும் வந்தவழியைப் பார்த்து கொண்டு கிளம்புங்கள்.'

மக்களைப் பிரமிக்கச்செய்யும் காலுவின் வறண்ட வார்த்தைகளைக் கேட்டு அவர்கள் கவலையிலாழ்ந்தனர். உடனே அவன் எழுந்திருந்து கூறினான்— 'நீங்கள் இங்கிருந்து புறப்பட்டால் நான் அந்தத் தானியத்தை என்னசெய்யவேண்டும் என்று பார்த்துக் கொள்வேன்!'

காலுவின் கருத்தைக் கிராம மக்கள் புரிந்துகொண்டனர். காலுவே வீட்டிற்குச் சென்றபடி கூறினான் — 'இந்தக் குண்டுக் காயத்தையும் பட்டுக்கொண்டு மரணத்தின் வாயிலிருந்து தப்பி வந்திருக்கிறேன் ... அதை அப்படியே அனுப்பிவிடுவதற்காகவா என்ன?' அவன் சிரித்தான் — 'அக்கம்பக்கத்தாருக்காக நான் இவ்வளவு சிரமப்படவில்லை .... நீங்கள் நிம்மதியாகச் செல்லுங்கள். மரணத்தை வரிக்கச் செல்ல எனக்கு அறிவு மயங்கிவிடவில்லை... உங்கள் எல்லோரையும் என்னைக் காப்பாற்றுவதற்காகவா கூப்பிட்டேன்!' பிறகு கதவின்வழியாக எட்டிப் பார்த்தான்— 'நாநா சொன்னது சரிதான். நான் உரலில் தலையைக் கொடுத்துவிட்டு உட்கார்ந்திருக்கிறேன். நீங்கள் வீணாக என்னைச் சூழ்ந்துகொண்டு! எழுந்திருங்கள் ... இங்கிருந்து கிளம்புங்கள் ... அப்போதுதான் என்னால் சந்திக்க முடியும்!' காலு பிறகு வீடு திரும்பினான். உக்காவை எடுத்தான். ஒரு கை பையிலிருந்தது ... மற்றொரு கை உக்காவில் நெருப்பைப் பற்றவைத்துக்கொண்டிருந்தது. அவர்களெல்லோரும் எப்போது கிளம்புவார்கள் என்று எதிர்பார்த்திருந்தான்.

தாழ்வாரத்தில் உட்கார்ந்திருந்த அந்த இருபது பேர்களும் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டிருந்தனர் எல்லோருடைய முகங்களும் ஒரே விஷயத்தைத்தான் தெரிவித்தன. — காலு தன் போக்கில்தான் போவான். சர்க்காருடனும் சண்டை போட்டுக் கொள்ளப் போகிறான். அவனுக்குத் திறமை இருந்ததால்தானே இந்தக் கிழவனை எதிர்த்தான்? ... இது தலைபோகும் வேலைதான். உயிர் பிழைத்தால்தான் உண்டு. இல்லாவிட்டால் ஏற்கெனவே உயிரற்றுத்தானே கிடக்கிறோம்! மரணம் தலைக்குமேல் நின்று காத்துக்கொண்டே தானிருக்கிறது —

பகா எழுந்து நின்றபடி கூறினான்— 'சர்க்கார்தானே! நாளைக்குப் பகைத்துக் கொள்பவன், இன்றே வேண்டுமானாலும் வரட்டுமே,

ஆனால் பசியின் தகிப்புதான் தாங்கவே முடியவில்லை. காலுவுடன் நானும் இருக்கிறேன்' கூடவே கோதர் எழுந்தான் – 'நான் மட்டும் இல்லையா? நானும்தான் சிப்பாயை அடிப்பதில் சேர்ந்து கொண்டேன்?' 'நாம் வீட்டை யடைந்தால் பிழைத்தோம். தாழ் வாரத்தில் உட்கார்ந்திருப்பவர்களுக்குக் கோதுமை ரொட்டி யும் சோள ரொட்டியும் கிடைக்கும். நாம் போய்க் கொண்டிருப் போம். வழியில் சர்க்காரின் குதிரைகள் வரும். அவ்வளவுதான். உயிருக்கு ஆபத்து வந்துவிடும்' — என்று எல்லோரும் நினைத்தார் கள்.

நாநாவைத் தவிர மற்ற எல்லோரும் காலுவின் வரிசையில் உட்கார்ந்துகொண்டனர். ரண்சோட் கூறினான் — 'நாநாவின் புதிய மாமனார் வீட்டின் நிலை நன்றாக இருக்கிறது. அதனால் அவனுக்குக் கவலை கிடையாது. நீங்கள் எல்லோரும் என்ன நிச்சயிக்கிறீர்களோ அதை ஒப்புக்கொள்வதைத் தவிர எனக்கு வேறு வழி கிடையாது. கிராமத் தலைவனாக ஏனிருக்க வேண்டும் என்று தோன்றுகிறது!' — இவ்விதம் கூறிவிட்டு அவன் வீட்டிற்குப் போய்விட்டான். மரணத்திலிருந்து விடுபட்டு உயிர் பெற்றெழுந்தாற் போலிருந்தது அவனுக்கு. நாநா ஒருவனைத்தான் விரும்பிய போதிலும், சந்தேகத்தை விடமுடியவில்லை. எழுந்து வீட்டிற்குச் சென்றுவிட்டான்.

காலு கூறினான் — 'பார்த்துக்கொண்டேயிரு. அப்புறம் பார் என்ன நடக்கிறதென்று. ... இது பெரிய பலசாலியுடன் போடும் சண்டையப்பா!' இவ்விதம் எச்சரித்துவிட்டுத் தானியம் எவ் வளவு இருக்கும் என்று ஒரு உத்தேசமாகக் கணக்கிட்டுவிட்டுக் கூடையில் அளந்து எல்லோருக்கும் பங்கிட ஆரம்பித்தான், ... கிராமத்தில் கொள்ளை நடப்பதுபோலிருந்தது. குழந்தைகளின் கொண்டாட்டத்திற்கு அளவே கிடையாது. அறிவாளிகள் காலுவை மகாத்மா என்று கருதினர். ஒன்றுமறியாதவர் —'காலு செய்தது பெரிய காரியம்!' என்று எண்ணினர். பகாவும் கோத ரும் கூறினர் — 'காலுவிற்கு இரண்டு பங்கு தரவேண்டும். உண் மையில் இந்தத் தானியம் முழுவதற்கும் அவன்தான் சொந்தக் காரன், ஆனால் ......'

காலு தன் உயிரைப் பணயமாக வைத்துவிட்டான். ஆயினும் தன் இடது கையை ஓரளவு இழந்துவிட்டான் என்றே சொல்ல வேண்டும். முழங்கைக்குக் கீழே குண்டு பட்டிருந்தது.

ஒருபுறம் இந்த விநியோகிக்கப்படும் தானியத்திற்காக அடிதடி நடந்துகொண்டிருந்தது. மறுபுறம் காலுவின் வீட்டுத் தாழ்வாரத்தில் இருந்த கல்லுரலிற்கெதிரே கூட அதே காட்சி தான். 'உனக்குப் பின் நான் .... இந்தா தானியம் வாங்கிக் கொள் ... எழுந்திரு ... மூன்று பேருக்கு அதிகம் !'

அந்தக் காபூலியின் கண்களில் கண்ணீர் நிரம்பியது. கல்லுரலிற்கருகே நடந்த காட்சியைக் கண்டோ, முற்றத்தில் சிதறியிருக்கும் தானியத்தைப் பொறுக்கித் தின்பதைப் பார்த்தோ, தானியம் வாங்கிச் செல்லும் புடவையைப் பற்றிக்கொண்டு, அட்டகாசம் செய்துகொண்டு செல்லும் குழந்தைகளைப் பார்த்தோ. அவனுடைய கண்களில் நீர் மல்கியது. எதிரே உட்கார்ந்து கதை பேசிக்கொண்டிருக்கும் சங்கர், ரண்சோட் இருவரையும் கூட அவன் கவனிக்கவில்லை .... அவனுடைய எண்ணமெல்லாம் காபூல் நாட்டிலேயே இருந்தது. உடையிலும் மொழியிலும் தான் வேற்றுமை .... இல்லாவிட்டால் அதே ஏழ்மை, அதே தரித்திர நிலையா....முற்றம் கூடக் காலுவின் வீட்டு முற்றமல்ல....தன் வீட்டு முற்றம்தான் !

இரண்டு மணி நேரத்திற்குள் தானியம் உரலில் மசிந்து ... அடுப்பில் வெந்து, மக்களின் வயிற்றையும் அடைந்துவிட்டது. பிறகு கிராம மக்கள் வெறும் வண்டிகள், வெளிநாட்டவன், இவ்விரண்டையும் பற்றித் தீர்ப்பளிக்க ஒன்று சேர்ந்தனர். அப்போது அந்த அயல்நாட்டானே பேச ஆரம்பித்தான் — 'நீ கவலைப்பட வேண்டாம், படேல். நான் ஒன்றும் சொல்லவில்லை ... ஒன்றும் செய்யவும் மாட்டேன் ! இந்தக் கிராமம் முழுவதிலும் ஒரே ஒரு ஆண் பிள்ளையைத்தான் நான் பார்த்தேன் ! ... அவன் உண்மையைத்தான் சொன்ஞன். கிராமத்து மக்கள் பசியால் மடிகிறது ... என்று சொன்ஞனே அந்தக் காளை— உங்கள் தானியம், அதை நீங்கள் எடுத்துக்கொண்டீர்கள். கடவுளின் வீட்டில் இதற்கு தீர்ப்பு நடக்கும் !'

'அப்படியிருந்தால் முதலிலேயே ஏன் அப்படி நினைக்கவில்லை, ஜமாதார் ?' பகா கேட்டுவைத்தான்.

'என்ன செய்வேன் ? நாங்கள் வேலைக்காரர்கள் — எங்களை அனுப்பிஞர்கள். நாங்கள் வந்தோம். அவ்வளவுதான்—' கிழவன் உண்மையில் வருந்திஞன்.

'உங்கள் வியாபாரியிடம் சொல்லித்தாஞக வேண்டும்....' காபூலி

சிரித்தான். — 'நான் அயல்நாட்டுக் குழந்தையப்பா. இனி வியாபாரியின் முகத்தில் கூடப் போய் விழிக்கமாட்டேன்!'

'என்ன செய்வீர்கள்?' காலு கேட்டான். 'ஏதோ செய்கிறேன், செத்துப் போகிறேன். ஆனால் அவனிடம் ஒருக்காலும் திரும்பிப் போகமாட்டேன், மகனே!' கிழவன் தனக்குள் பேசிக்கொள்பவன்போல் கூறினன்.

திடுக்கிட்டெழுந்தான் கிழவன் — 'சீச்சீ! அயல்நாட்டவர் நாங்கள். பின்புறத்தில் வந்து தாக்கமாட்டோம். சண்டை போடும்போது போடுவோம். .... பிறகு மறந்துவிடுவோம் —' பாதி மூடிய கண்களால் அவன் காலுவைப் பார்த்தான். — 'உனக்கு நம்பிக்கையில்லையா? ... நாணயம் என்ன என்று உனக்குத் தெரியுமா? .... அது போதும்!' என்று கூறியபடி கிழவன் மார்பை நிமிர்த்திக்கொண்டு உட்கார்ந்தான். — 'அந்த நாணயம், நேர்மை — அதன் பேரில் ஆணையிட்டுச் சொல்கிறேன் ....'

காலு கூறினன் — 'இல்லை, ஜாமதார்! நீங்கள் இப்படிச் சபதம் செய்யத் தேவையில்லை. எனக்கும் மரணம் என்றால் அப்படியொன்றும் பயம் கிடையாது. இந்தப் பஞ்சத்தில்தான் எல்லோரும் மடிந்து கிடக்கிறார்களே?' பகாவிடம் அவன் கூறினன் — 'இவனுடைய கைகளை விட்டுவிடு!'

பகா, கோதர் முதலியவர்களுக்கு விருப்பமில்லை. ஆயினும் காலு துணிவுடன் நம்பிக்கையளித்தான். — 'அயல்நாட்டவன் இரண்டு விதமாகப் பேசமாட்டான் என்று எல்லோரும் சொல்வார்கள். அப்படியே பேசினாலும், நாம் ஏமாந்தால் பரவாயில்லை, கள்ளன் யார் என்று புரிந்துகொண்டு விடலாமல்லவா?'

கைகள் விடுபட்டவுடன் அயல்நாட்டவன் எழுந்து நின்றுகொண்டான். கிராமத்து மக்கள் நடுங்கிப் போயினர். காலுவே கவலையில் ஆழ்ந்துவிட்டான். உடனே அயல்நாட்டவன் தன் கையைப் பிடிப்பதைப் பார்த்துப் புரிந்துகொண்டான். அவனும் எழுந்து நின்றான். இருவரும் மார்புறத் தழுவிக்கொண்டனர். இரண்டு அன்பர்களைப்போல் தழுவிக்கொண்டனர் ...

பிரிந்து நின்ற இருவருடைய கண்களிலும் கண்ணீர் இருந்தது.

'என் வாழ்வின் இத்தனை வருடங்களில் உன்னைப் போன்ற இளைஞனைப் பார்த்ததேயில்லை. உன்னைப் பார்த்ததும் என் மகனின் நினைவு வந்துவிட்டது! ...' அவனுடைய கண்களிலிருந்து

கண்ணீர் 'டப் டப்' என்று சொட்டிற்று, தனக்குள் மெதுவாக அவன் சொல்லிக்கொண்டான் — 'கடவுள் தயை புரிந்தார் .... இல்லாவிட்டால் உன் போன்ற மகன் என் கையால் ...'

சங்கர் இடையே பேசினன் — 'அவனுடைய தந்தை வாலாவும் உங்களைப் போலத்தானிருப்பான். அதே போன்ற மெலிந்த உடல், இதே உயரம்! தாடியின் நிறத்தில் கொஞ்சம் வேற்றுமை யிருக்கும். அவன் தாடியை இரண்டாகப் பிரித்து வைத்திருப் பான், நீங்கள் அப்படியே வைத்திருக்கிறீர்கள். அவ்வளவுதான் வேற்றுமை!'

அந்த வண்டிகள், சிப்பாய்கள் எல்லாம் திருப்பியனுப்பப் பட்டன. காபூலி துப்பாக்கியையும் கொடுத்துவிட்டான் — 'வியாபாரியிடம் — அயல்நாட்டவன் இனி முகத்தைக்கூட அங்கு கொண்டுவந்து காண்பிக்கமாட்டான் — என்று சொல்.'

இதன்பிறகு காபூலி கிராம மக்களிடம் தன் கிராமத்தையும் தன் மகனையும் பற்றிப் பேசினன் — கிராம மக்கள் அபினி ரசம் பிழிந்து அவனுக்குக் கொடுத்தார்கள். அவன் மிகவும் மரியாதை யுடன் அதை வாங்கிக் குடித்தான் — மாலைநேரம் வந்தது — பிறகு அவன் எழுந்தான்.

'காபூலி சித்தப்பா, இப்போதே போகவேண்டுமா ...?' காலு உறவையும் இணைத்துக்கொண்டான் — உறவு இணைந்துவிட்டது.

கிழவனின் கண்களிலிருந்து மறுபடியும் கண்ணீர் வந்தது — 'இனி எனக்குக் காலையென்ன, மாலையென்ன மகனே!' காபூலி யின் குரலில் வேதனை ஒலித்தது.

'ஆனல் இந்த நேரத்தில் நீங்கள் எங்கு செல்வீர்கள்?' சங்கர் கேட்டான்.

'எங்கோ ஒரு இடத்திற்கு. அயல்நாட்டிலிருந்து இங்கு வரும் போது இந்தக் கிழவனுக்கு என்ன கவலையிருந்தது? அப்படியே இன்றும்! ...'

காலுவிற்குத் தோன்றியது — அதனல் சொன்னன் — 'இன்று ஒருநாள் தங்கிவிடுங்கள் சித்தப்பா. நாம் பேசிக்கொண்டிருக் கலாம். நாளைக்கு நீங்கள் உங்கள் வழியே செல்லுங்கள், எங்கள் வழியைத் தேடி நாங்கள் செல்கிறோம். நாங்களும் இந்தக் கிராமத்தை விட்டுச் சென்றுதாகை வேண்டும். நாங்கள் எல்லோரும் டேகடியாவின் பக்கம் ...'

கிழவன் ஒப்புக்கொள்ளவில்லை. அமைதியற்ற அவனுடைய

குழப்பத்தைக் காலு கண்டான். 'இனியும் நாம் வற்புறுத்தினுல் கிழவன் அழுதுவிடுவான்' என்று கருதி காலு பிடிவாதத்தை விட்டுவிட்டான். — 'பிறகு உங்கள் விருப்பம்!'

சிப்பாய் வெறுங்கையுடன் செல்வதைப் பார்த்து காலு மறுபடியும் அவனைத் தடுத்து நிறுத்திஞன். — 'ஒரு நிமிடத்தில் வந்துவிடுகிறேன், இருங்கள் சித்தப்பா!' — என்று கூறியபடி பரபரவென்று காலு வீட்டிற்குள் ஓடிஞன்.

ஒரு சிறு துப்பாக்கியுடன் சில கணைங்களில் ஓடிவந்தான் காலு. 'இதை எடுத்துக்கொள்ளுங்கள் சித்தப்பா! உங்களுடையதை நாங்கள் வாங்கிக்கொண்டோம். எங்களுடையதை நீங்கள் வாங்கிக்கொள்ளுங்கள்!' என்று கூறி காலு சிரித்தான்.

'எங்களுடையதை' என்பதைக் கேட்டு மகிழ்வுற்ற காபூலி வாலாவைக் கண்டு கிராம மக்களும் மகிழ்ச்சி யடைந்தனர். பகா கூறியேவிட்டான் — 'தாளம் சமத்திலே வந்துவிட்டது!'

'சரி மகனே!' கிழவன் காலுவின் தோளில் கை வைத்தான் — 'இனி நான் உன்னை எப்படியும் மறக்கவே முடியாது, உன்னுடைய இந்த அன்பளிப்பு —'

'சித்தப்பா! உங்கள் அன்பளிப்பு குறைந்ததா என்ன?' — துணியால் மூடப்பட்டிருந்த ஊனமான அந்தக் கையை எடுத்துக் காண்பித்து விட்டுச் சிரித்தான் காலு. — 'இது வாழ்நாள் முழுதும் உங்களை ...'

'அது வீரர்களின் சின்னம் மகனே! கொண்டு வா இப்படி ... மறுபடியும் ஒரு தடவை ...'

இந்த வீரர்கள் தழுவிக்கொள்வதையும் பிரிவதையும், விடைபெறுவதையும், விடையளிப்பதையும் கண்ட கிராம மக்களனைவருமே கண்ணீர் உதிர்த்தனர். விடை கொடுத்தனுப்பிய குரல்கள் தழு தழுத்தன — 'ஜமேதார் சாகப்! .... காபூலி சித்தப்பா!... எங்களைப் பற்றி விசாரித்துக் கொண்டிருங்கள் ... எப்போதாவது ...'

காலு வெகுதூரம் சென்ருன் ... மேட்டின் மீது ஏறி நின்று கொண்டு மறையும் ஆதவனின் ஒளியில் மறைந்துகொண்டிருக்கும் சித்தப்பாவை இமை கொட்டாமல் பார்த்துக்கொண்டேயிருந்தான் ... பிறகு திரும்பிக் கண்களைத் துடைத்துக்கொண்டான். தனக்குள் முணுமுணுத்தான் — 'இதுவும் ஒரு கூத்துத்தானே! ஒருமணி நேரத்திற்கு முன்பு ஒருவரை யொருவர் மாய்க்

கும் காலனாக இருந்தோம். ஒரு மணி நேரத்திற்குப் பிறகு.... பிரிந்து விடைபெற்றுச் செல்வதைக்கூடத் தாங்க முடிய வில்லையே!' பிறகு வறண்ட சிரிப்புச் சிரித்தபடி சொல்லிக் கொண் டான் — மனித வாழ்க்கை ஒரு நாடகம்தான், ஒரு கூத்துத்தான். வேறென்ன ?

## 36

## சோதனை நாள்

வைகாசி மாதத்துச் சுழல் ஆரம்பித்துவிட்டது. இவ்வாண்டு வயல்களில் புல்கூட அசையவில்லை. ஏதாவது முளைத்தால் தானே அசைய? வெப்பக்காற்றும் புழுதியும்தான் எங்கும் வீசிக் கொண்டிருந்தன. சிலரின் தலையிலிருந்து உலர்ந்த கேசங்கள் தான் பறந்துகொண்டிருந்தனவோ?

வைகாசிமாதச் சுழல் விவசாயிகளின் உள்ளத்தையும் சுழலென வளைத்தது. ஊக்கம் பிறந்தது; நம்பிக்கைகள் தளிர்விட்டன — 'நாளைக்கு வேலைமுடிந்துவிடும். வருடம் பிறந்துவிட்டதே!'

ஆனால் இந்த வருடம் விபரீதமான நிலை. ராம ராமா! இன்னும் ஆனி மாதம் முழுவதும் கிடக்கிறதே. ஒரு யுகம்போல் கழிக்க வேண்டும்போலும். ஆமாம் யுகம்தானே? ஒவ்வொரு வேளையும் கழிவதற்குள் போதும் போதும் என்றாகிவிடும். அப்படியிருக்க முப்பது முழு நாட்கள் என்றால் சாமானியமா?

காலு, ரண்சோட் முதலியவர்கள் பேடகியா கிராமத்திற்கு வந்து பார்த்தனர். சுமார் ஐநூறு — அல்லது எழுநூறு வீடுகள் உள்ள அந்தக் கிராமம் மக்களின் கூட்டத்தால் நிரம்பி வழிந்தது. அவர்களுடைய முயற்சியாலேயே எழுந்த இந்த கிராமத்தில் அவர்களுக்கே இடமில்லை. மிகவும் கஷ்டப்பட்டு முயன்றதில் கிராமத்து இந்தப் பதினைந்து குடும்பங்களுக்கும் ஒரு வீடு கிடைத்தது. அதில் காலுவின் மாமனாருடைய குடும்பமும் வந்து சேர்ந்தது.

'இந்த ஆனிமாதத்தை எப்படியாவது வென்றுவிட்டால் பின்பு ஆடிமாதத்தில் நம்பிக்கை தோன்றும்...' என்று காலு நினைத்தான். ஆனால் ஆனிமாதத்தை வெல்வதுதான் கடினமாக இருந்தது... அந்த இரண்டு வண்டி தானியமும் மொத்தமாகப் பார்த்தால் எழுபது — எண்பது மணங்கு இருந்ததே தவிர, ஒவ்வொரு குடும்பத்திற்கும் பங்கிட்டதில் வீடொன்றிற்கு இரண்டு மணங்குதான் கிடைத்தது. மேலும் சங்கர், ரண்சோட் போன்றவர்களின் வீட்டிலோ ஆறுபேர் சாப்பிடுபவர் இருந்தனர். நாநாவின் மனைவி கோடியையும் ரண்சோட்தான் கவனித்துக்கொள்ள நேர்ந்தது.

சங்கர், பகா, கோதர், காலு இவர்களின் பொறுப்பில் ஏழாயிரத்து ஐநூறு மக்களின் உயிர்களும் இருந்தன.

ஆனல் உண்மையில் இவர்கள் எல்லோருடைய பொறுப்பும் காலுவின் பேரில்தானிருந்தது. அவன் எல்லோரையும் எச்சரித்தபடி சில அறிவுரைகள் கூறினன்.

'ஜாக்கிரதையாக இருந்தால் பிழைப்போம், இல்லாவிட்டால் இப்போதே உயிர் பிழைப்பதா, துறப்பதா என்னும் பிரச்சனை வந்துவிடும். ஒவ்வொரு வேளையும் கழிவது கடினம். நான் சொல்வதைக் கேட்டால் ஒன்று சொல்வேன். எல்லோருக்கும் சேர்த்து ஓர் சமையலறை இருக்கட்டும். ஒரு ஆளுக்குப் பத்து சேர் தானியம் என்ற கணக்குப்படி சேகரிக்கலாம்— சமைக்க வேண்டிய பெரிய பாத்திரத்தை எங்கிருந்தாவது கொண்டு வருவோம்.'

இதன் பிறகு பெண்டிர் எல்லோரையும் ஒற்றுமையாக இருக்கும்படி கூறினன். உணவைக் குறைத்துச் சாப்பிடும்படி சொன்னன். ஐந்து பெண்களிடம் சமையலறையின் வேலையை ஒப்படைத்தான். அவர்களில், ரண்சோடின் மனைவி, பகாவின் தாய், தன் மாமியார், கோதரின் தாய் இவர்களைத் தவிர மற்றும் வேறொரு பெண் இருந்தாள்.

இன்னும் ஒரு வேளைகூட முழுதாகச் சமைக்கப்படவில்லை. சமைக்கவேண்டிய பொருள்கள் இருந்தால்தானே? மோர் கிடைப்பது வெறும் பகற்கனவாகிவிட்டது. வயிற்றில் கனமாக போய்த் தங்கவேண்டும் என்பதற்காக ஏதேதோ இலைகளும் தோலிகளும் அரிசியுடன் சேர்த்துச் சமைக்கப்பட்டது. அப்படியிருந்தும் கோதர்— பகா முதலியவர்களின் மனைவிமார்கள் முகத்தைத் தொங்கப் போட்டுக்கொண்டிருந்தனர். ஆலிலைகளின் மீது எல்லோருக்கும் ஒரே சமயத்தில் இரண்டு கரண்டி சாதம் பரிமாறப்பட்டது. அப்படியிருந்தும் சமைத்தவர்களின் இலையில் அதிகம் இருப்பதுபோல் அவர்களுக்குத் தென்பட்டது. சாப்பிடச் சாப்பிடச் சண்டையும் மூண்டது. சாதம் வேகவில்லை என்றனர் சிலர், குழம்பிற்கு உப்பு அதிகம் என்றனர் மற்றும் சிலர். சமைத்த பாத்திரங்களை யார் தேய்ப்பது என்றும் தகராறு நடந்தது.

உள்ளே ஒன்றும் மிச்சமில்லை என்று காலு எவ்வளவோ சொல்லிப் பார்த்தான். 'தேய்த்தால் பாத்திரத்திலிருந்து கரி

தான் வெளியே வரும். அதனுள் வேறொன்றும் கிடையாது—' என்றும் சொல்லிப் பார்த்தான். யாராவது அதைக் கேட்டால் தானே? ஒவ்வொரு நாளும் எப்படித்தான் அவர்களைச் சமாதானப் படுத்துவது?

காலு அலுத்துப் போய்ச் சமையல் வேலையையும் பாத்திரம் துலக்கும் வேலையையும் ஆண்களிடம் ஒப்படைத்துவிட்டான். பெண்களிடமும் இவ்விதம் கூறிவிட்டான்—'இங்கு இவ்வளவு தான் கிடைக்கும். அதிகம் வேண்டுமானால் வேறெங்காவது போய் வேலை தேடிக்கொள்ளுங்கள்!'

ஆனால் வேலை எங்கே இருந்தது? காலுவே கடைக்காரர்களின் வீட்டையும் பிராம்மணர்களின் வீட்டையும் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தான். அவனுக்கே வேலை கிடைக்கவில்லை....

ஐந்தாம் நாள் எவ்வளவோ அவஸ்தைப்பட்ட பிறகு ஒருவனிடம் வேலை கிடைத்தது. அதுவும் அரைசேர் தினைக்காக நாள்முழுதும் செக்காட்டவேண்டும். அந்த வேலையும் காசம் செய்த சிபாரிசின் பலனாகத்தான் கிடைத்தது.

அதிகாலையில், மாமனாரையும் அழைத்துக்கொண்டு காலு சேட்ஜியின் வீட்டிற்குச் சென்றான். —'சேட்ஜி! நீங்கள் என்ன செய்வீர்களோ தெரியாது, ஐந்து பேருக்கு வேலை கொடுத்தாக வேண்டும்.'

'வேலைக்கு நான் எங்கு போவேன்? வேலையிருந்தால் மகிழ்வுடன் கொடுப்பேன் — ஆனால் உங்கள் அரை வயிறாவது நிரம்பவேண்டுமே, என்ன செய்வேன்?'

'ஆமாம் காசி சித்தப்பா! வயிற்றுப் பாட்டிற்காகத்தானே இத்தனை ராமாயணமும்!.... இல்லாவிட்டால் கடனாவது கொடுங்கள். என்ன வேண்டுமானாலும் செய்யுங்கள், ஆனால் இனி எங்களால் பசியைத் தாங்கமுடியாது. உங்கள் உதவியை என்றும் நான் மறக்கமாட்டேன்!' காலுவின் கண்களில் நீர் நிரம்பிற்று.

'அட பைத்தியக்காரா! நீ என்ன பேசுகிறாய்? நீங்கள் எல்லோரும் உயிருடனிருந்தால்தானே எங்களுக்குப் பிழைப்பு நடக்கும்? ஆனாலும் என்ன செய்வது? கொடுக்க ஏதாவது இருந்தால்தானே?'

'பின்பு, விதை விதைக்கும் நம்பிக்கையும் போய்விடுமே சித்தப்பா!'

காசிதாஸ் சேட் சிரித்தபடி கூறினார் — 'முதலில் மழை பெய்

யட்டும். விதை கொடுக்காவிட்டால், உன் வீட்டிலிருந்து வேறு என்னதான் கிடைக்கும்?'

காலுவின் கால்களுக்குத் தெம்பு வந்தது. —'அப்படியானால் வீட்டில் ஒரு மணங்கு விதை யிருக்கிறது அதிகமாக — அதை எடுத்து வந்துவிடுகிறேம்!' பிறகு நட்டிட வேலை நடந்துகொண் டிருந்த பக்கம் திரும்பிக் கேட்டான். — 'அங்கே ஒருத்தருக்கா வது ஏதாவது வேலை கிடைக்குமா?'

ஆனால் வேலைக்கு வாய்ப்பெங்கே? வீட்டுச் சொந்தக்காரனால் கூட அது இயலாததாயிற்றே. காலை வேளையில் மண்வெட்டியும் கையுமாக வேலைக்கு வந்தவன் அப்படியே வேலை செய்துகொண் டிருக்கிறான். ஒன்றேகால் சேர் வாங்கிக்கொண்ட கூலியாள் ஒன்றரை சேர் தானியம் கேட்க ஆரம்பித்துவிடுகிறான். வீட்டுச் சொந்தக்காரன் சொல்வதுபோல் — 'ஒரு பிடி தானியம் வாங்கிக் கொண்டு வேலை செய்யக்கூட எத்தனையோ பேர் தயாராகத்தா னிருக்கின்றனர். ஆனால் கடவுளின் அருள் நமக்கிருந்தால்தானே கூலி கொடுத்து வேலை வாங்க முடியும்?'

உண்மைதான். டேகடியா சிற்றூரே ஏதோ பயங்கர நோயால் பீடிக்கப்பட்டு வயிறு ஊதிவிட்டாற் போலிருந்தது. மக்களின் எண்ணற்ற தொகையால் சூழப்பட்டது அந்த ஊர்.

போலீஸ்காரர்களும் அஞ்சினர். ஊரிலுள்ள வியாபாரிகள் எல்லோரும் ஒன்று சேர்ந்து – 'இந்த ஊர் இனித் தப்ப வழி யில்லை!' என்று சர்க்காரிடம் மனுவைச் சமர்ப்பித்துவிட்டனர்.

காலுவின் குடும்பங்கள் வந்து சேர்ந்து எட்டு தினங்களிருக்கும். ஊரில் பேச்சு நடந்தது — 'வெள்ளையர்கள் எப்படிப்பட்ட துப் பாக்கிகளை அனுப்பியிருக்கிறார்கள் பார்த்தாயா? மருந்து, குண்டு, தோடா ஒன்றும் போட்டு நிரப்பத் தேவையில்லை. ஒரு அமிழ்த்து அமிழ்த்தினால் போதும் 'டம் டமா டம்' தான் — புதுவிதமான துப்பாக்கிகள்!'

அடுத்த நாள் ஹவல்தார் தோளின் மீது துப்பாக்கியை வைத்துக்கொண்டு ஊரைச் சுற்றி வரக் கிளம்பினான். ஒரு கணம் பசியை மறந்துவிட்டனர் மக்கள். அவனையும் அந்தத் துப்பாக்கி யையும் பார்த்துக்கொண்டே நின்றனர்.

'இனி டேகடியாவில் திருட்டு நடக்க வழியில்லை தம்பி!' டேகடியா மற்றும் அருகேயுள்ள கிராமத்து மக்களும் நம்பிக்கை யிழந்தனர்.

காலுவைப் போன்றவர்களும் நம்பிக்கை யிழந்துவிட்டனர் — 'முன்னே சென்று கன்னம் வைக்கவும் வழி கிடையாது. யாராவது அதற்கும் தயாராக இருந்தால் அவர்களுடன் சேர்ந்துகொள்ள லாம்!' பெருமூச்செறிந்தபடி அவன் முணுமுணுத்தான் — 'வண்டியிலிருந்து துப்பாக்கிகளை இறக்கினார்களே, அப்போது தானிய மூட்டைகளையும் இறக்கியிருக்கக் கூடாதா? முட்டாள் பசங்கள் .... ஏற்கனவே உயிரை மாய்க்க மரணம் திரிந்து கொண்டிருக்கிறது. போதாதென்று நீங்கள் வேறு துப்பாக்கி களுடன் வந்து நிற்கிறீர்கள்? ... உயிர் வாழ வைப்பவர்களை அனுப்புவதுதானே? மனிதர்களைக் கொல்வதற்கு முப்பத்தாறு கலைகளையும் பயன்படுத்துகிறாயே, அதற்குப் பதிலாக மக்களை உயிர் வாழச் செய்ய அந்தக் கலைகளைப் பயன்படுத்தியிருந்தால் உண்மையில் நீ திறமைசாலி என்று நாங்கள் ஒப்புக்கொண் டிருப்போம்...'

இந்தத் துப்பாக்கிகளுடன் இரவில் ஊரைக் காக்க வேறு போலீஸ்காரர்கள் சுற்றிக்கொண்டிருந்தனர். அவர்களைக் கண்டு காலு இன்னும் அதிக மன நலிவடைந்தான். அவனுடைய உள்ளத் தின் ஆழத்தில் ஒரு எண்ணம் நிச்சயமாகக் குடிகொண்டிருந்தது. — 'ஒன்றும் கிடைக்காவிட்டால் தானியத்தைத் திருடவேண்டியது தான்.' ஓரிரு இடங்களில் நுழையும் எண்ணத்துடன் தானியம் வைத்திருக்கும் இடத்தை அறிந்து வைத்துக்கொண்டான்.

'இந்த அநியாயத்தைப் பார்த்தீர்களா?' கோதர் பகா முதலி யவர்களிடம் காலு கூறினான் — 'இந்தச் சோதனை நேரத்தில் உள்ளே பதுக்கி வைத்திருக்கும் தானியத்தை வெளியே எடுக்க வேண்டும் – அதற்குப் பதிலாகத் துப்பாக்கியுடன் இதென்ன பாரா? பசியால் யார் மடிகின்றனர்? வியாபாரிகளின் கிடங்கு கள் தானியத்தால் நிரம்பி வழிகின்றன. பெரும்பாலான பிராம் மணர்கள் தேசாந்தரத்திற்கு யாத்திரைச் செல்லப் புறப்பட்டு விட்டனர். எஞ்சியிருப்பவர் நாம்தான். மடிபவர்கள் எல்லோ ரும் உழவர்கள்தான்.' ஒருகணம் நிறுத்திவிட்டுப் பிறகு ஆரம்பித் தான். 'இறைவனுக்கே இந்த அநீதம் அடுக்கும்போது என்ன சொல்வது? இல்லாவிட்டால் தானியத்தைப் பயிரிட்டு உற்பத்தி செய்பவனே உணவின்றி மடிகிறானே — இது எங்காவது நடக் குமா? இந்த கிடங்குகளில் இருப்பது யாருடைய தானியம்? கேட்டுப் பாருங்கள். கடும் உழைப்பு உழைத்து யார் உற்பத்தி செய்தார்கள்?'

இப்படிப்பட்ட சூடான வார்த்தைகளைப் பலர் கூறினர், அவற்றைக் கேட்டுக்கொண்டிருந்தவர்களும் அனேகர்தான். இதனால் யாருக்கென்ன லாபம்?

'நீ ஏற்கெனவே வற்றி உலர்ந்திருக்கிறாய்,' என்றான் கோதர். பகாவும் கூடச் சேர்ந்துகொண்டான். — 'இந்த அய்யா மட்டுமா, ஊர் பூராவும் இதே நிலைதானே!'

உண்மையைச் சொல்ல வந்தவர்களிடம் காலு சீறி விழுந்தான்— 'நான் என்ன செய்வேன்! ஒரு நாளைக்கு ஒன்றரை சேர் தானியத்தைத் தின்னும் வயிறு இது. இதற்கு இப்போது அரை வயிற்றுக்குக் கூடக் கிடைப்பதில்லை. கோதர், உண்மையைச் சொல்கிறேன். என்னால் இனி பசியைத் தாங்கவே முடியாது. ஏன் தாங்கிக் கொண்டிருக்க வேண்டும்? அந்த வீட்டில் இரண்டு பேர் மடிந்து போனார்களே அப்படி நானும் செத்துவிட்டால் என்ன?'

காலு தன் நினைவிழந்து ஏதேதோ உளறுகிறான் என்று நினைத்துக் கோதரும் பகாவும் அவனுடைய பேச்சைக் கவனிக்கவேயில்லை. ஆனால் காலு வழியெல்லாம் பேசிக்கொண்டே நடந்தான்.

'எதற்கு உயிர் வாழ வேண்டும்? சம்பாதித்து இந்த மிராசுதாரர்களின் கிடங்குகளை நிரப்புவதற்காகவா? வியாபாரிகளின் உற்றார் உறவினரெல்லோரும் செல்வத்தில் புரளச் செய்யவா?... வேண்டாம் தம்பி வேண்டாம். நாம் இனி உயிர் வாழ வேண்டியதில்லை....'

ஆனால் காலுவின் இந்தப் பிதற்றலைக் கேட்டு ரணசோடும் சங்கரும் சலித்துப்போயினர். அவர்கள் அவனைக் கடிந்து கொண்டார்கள். ஆயினும் அதே கேள்வி, அதே பதில்—பிறகு கண்ணீர்த் துளிகள்! தூக்கம்கூட வரவில்லை.

பலீயும் அவனைக் கோபித்துக்கொண்டாள். — 'பிதற்றல் போதுமே. எல்லோரையும் சற்றுத் தூங்கவிடுங்களேன். இதோ சாப்பிடுங்கள். நானும் எத்தனை தடவை தடுத்தேன். ஆனால் கேட்டால்தானே? ... குசல்ஜி (காலுவின் தாத்தா) வின் குடும்பம் பூண்டற்று அழிந்தால் அவர்களுக்கென்ன?' பிறகு திரும்பிப் படுத்தபடியே கூறினாள் — 'உம் சாப்பிட்டுத் தொலையுங்கள்! உங்கள் அப்பனையும் அம்மாவையும் நினைத்து இப்போது அழுங்கள்!'

வராந்தாவிற்கடுத்த அறையில் படுத்திருந்த காலுவிற்குக் கோபம் வந்தது. ஆனால் வசைகளைப் பேசினால் மாமியும் மாமனும்

கேட்டுத் தொலைப்பார்களே என்று நினைத்து மெதுவாகக் கூறினன் — 'தெரியும் எனக்கு! நீ இப்போது மாறிவிட்டாய். உயிருடனிருந்தால் உன்னைச் சரிப்படுத்திவிடுகிறேன்.'

'ஆமாம்! சரிப்படுத்தினீர்கள்.'

அப்போது பகாவின் தங்கை ருக்கி பலீயின் வாயைப் பொத்தினள். — 'அண்ணி! வாயை அடைத்துக்கொண்டு கிடவேன் ...' பிறகு மெள்ளச் சொன்னுள் — 'பசியால் செத்தால்தான் உனக்கென்ன? நீயோ பசியால் மடிந்துவிடப் போவதில்லை!'

'நீ' — என்று கோபத்துடன் பலீ சீறி விழுந்தாள்.

'பசியால் கேசர் இறந்துவிடுவாள், பாவம்!' பகாவின் மனைவி மறுபடியும் கோதரின் மனைவியுடன் சேர்ந்துகொண்டு மிடுக்காகப் பேச ஆரம்பித்தாள்.

பெண்கள் உள்ளே இருந்தனர். ஒரு கதவு திறந்திருந்தது. நள்ளிரவு நேரம். யாராவது பேசினல் தெளிவாகக் கேட்கும் நேரம். ஆனல் எல்லோரும் தூக்கக் கலக்கத்திலிருந்தனர். விழித்துக் கொண்டிருந்தவர் செவிடராகிவிட்டனர்.

காலுவும் செவிடனைப் போலத்தான் படுத்திருந்தான், ஆனல் தூக்கம் வரவில்லை. எப்படி வரும்? சங்கரின் மனைவிக்கு—காலு சொல்வதுபோல்—போதாத காலம்தான். அவள் எல்லாப் பெண்களிடமும் சென்று, ஏன், தன் சொந்த மகள் ருக்கியிடமே சென்று கேட்டுக்கொண்டாள் — 'பசியுடன் நீ போவதாக இருந்தால், நாளைக்கு என்னையும் அழைத்துக்கொண்டு போயேன்!'

'ஆமாம் ஆமாம்! இளமையில் எஞ்சியிருந்த ஆசையை இப்போது முடித்துக்கொள்!' என்று சொல்ல வந்தான் காலு. ஆனல் பேசாமலிருந்துவிட்டான் ...

ஏதாவது வீட்டு மாடியிலிருந்து கீழே குதித்துத் தற்கொலை செய்துகொள்ளலாமா என்று தோன்றிற்று காலுவிற்கு. அதையும் செய்துவிடுவான் — 'ஆனல் மரணம் வரும் என்று என்ன நிச்சயம்?'

நள்ளிரவில் அவன் நிச்சயம் செய்தான் — 'நாளையிலிருந்து பெண்டிர் ஒருவரையும் வெளியே போகவிடக் கூடாது.'

காலையில் தன் முடிவை ஆடவர்களிடம் காலு தெரிவித்தான். ஆனல் அவர்களுடைய முடிவு அவ்வளவு உறுதியுடனிருக்கவில்லை. சங்கரே சொல்லிவிட்டான் — 'இம்மாதிரி நிலையில் மானம், கௌரவம் என்று பார்க்கக்கூடாது. எல்லோரையும் வாழ விடுகிறது உலகம் — அது நல்லதுதான்.'

சங்கர் கூறிய கடைசி வாக்கியம் பெரும்பாலும் உண்மையானது தான். சில நாட்களுக்குள் காலு இதனை உணர்ந்துகொண்டான்.

பகாவிற்கு ஓரிடத்தில் வேலை கிடைத்தது. ஒரு ரொட்டியைப் பெற்றுக்கொண்டு, இரண்டு அறைகளில் கொள்ளும்படியான அளவுக்குச் சாம்பலைச் சலித்துத் தரவேண்டும். 'ஆனால் எனக்கு மூன்று ரொட்டிகள் கிடைத்தன!' என்று பகா காலுவிடம் கூறினான்.

'பாவம் கொடுத்தவள் நல்லவளாக இருந்திருப்பாள்!'

'ஆமாம் நல்லவள் தான் ....'

காலு உடனே புரிந்துகொண்டு விட்டான். — 'உட்கார், சும்மா வம்படிக்காதே! உங்களிருவரையும் தனியே விட்டுவிட்டு, வீட்டுக் குச் சொந்தக்காரன் மாடு மேய்க்கப் போயிருப்பான்! அப்படித் தானே? ...'

'முதலில் நான் சொல்வதை முழுதாகக் கேள். வீட்டுச் சொந்தக் காரனும் வீட்டில்தானிருந்தான். ஆனால் அவன் மாடியில் ஓர் அறை யில் உட்கார்ந்துகொண்டு தானியத்துடன் சாம்பலைக் கலந்து கொண்டிருந்தான்.'

'நீ சொல்வதை நான் ஒப்புக்கொள்ள மாட்டேன். இம்மாதிரி நேரத்தில் வீட்டில் யாரையும் இருக்கவிட மாட்டானே! சேட் ஒரு புது மனிதனை வீட்டில் வைத்துக்கொண்டு ...'

'புது மனிதனல்ல!' கட கடவென்று சிரித்தபடியே பகா காலு வின் காதருகே, ஏதோ சொல்வதற்காக, நகர்ந்தான்.

ஆனால் காலு எழுந்துவிட்டான் — 'இந்த உலகம் எந்தக் கதியை அடையப் போகிறதோ!'

ஆனால் காலு சிறிது சிந்தித்துப் பார்த்தால் அவனுடைய மனச் சலிப்பிற்குக் காரணம் உலகம் போன போக்கல்ல; அவனுக்குச் சாப்பிட ஒன்றும் கிடைக்காததுதான் என்பதைப் புரிந்துகொண் டிருப்பான். அதனால்தானே - 'யாராவது ஒரு தடவை வயிறு நிறைய சோறு போட்டால் அவர்களுக்கு வாழ்நாள் முழுதும் அடிமையாயிருப்பேன் ... ' என்று சொல்லிக்கொண்டிருந்தான்.

இதே நம்பிக்கையோடுதானே என்னமோ டேகடியாவின் தெருக்களைச் சுற்றிச் சுற்றி வந்தான் அவன். ஒவ்வொரு வீட்டி லும் நுழைந்து — 'ஏதாவது வேலை கொடுங்களம்மா, ஒரு ரொட்டி கொடுத்தால் போதும்! ஒரு பிடி சோறுகூடப் போதும்' என்று கெஞ்சினான்.

மாட்டிற்கு ஒரு கவளம் சோறு கொடுத்துக்கொண்டிருந்த கைம்பெண் ஒருத்தியைப் பார்த்து—'அந்தக் கவளத்தை எனக்குக் கொடுங்களம்மா, நான் உங்கள் பாத்திரங்களைத் துலக்கித் தருகிறேன்!' என்று கேட்டுக்கொண்டான் காலு.

'செத்துப் போடா! மாட்டின் வாயிலிருந்து கவளத்தைப் பிடுங்கப் பார்க்கிறாயா?' முதலில் திட்டிய அந்தக் கைம்பெண் மறுகணமே கூறினாள் — 'தேய்த்துக் கொடு, உனக்கு வேறு சோறு போடுகிறேன். ஆனால் பளிச்சென்று வெளுத்தால்தான்!'

'அந்த முடம் என்னம்மா செய்யும் —' என்று கூறியபடியே வேறொருவன் பாத்திரங்களினருகே வந்து உட்கார்ந்துகொண்டான். 'முதலில் இவன்தான் தேய்க்கிறேன் என்றான்' எனச் சொல்லி அவள் அவனை எழுப்பிவிட்டாள்.

காலு மகிழ்வடைந்தான். 'என் கை சிறிது நேராக இல்லாவிட்டாலும், ஒரு தடவை நீங்கள் ...' தோள்பட்டைவரை துணியை ஒதுக்கிக்கொள்ளத் தேவையிருக்கவில்லை. அப்படியிருந்தும் அவன் கந்தலை மேலே தூக்கிப் போட்டுக்கொண்டான். பாத்திரங்களின் பக்கத்தில் உட்கார்ந்தபடியே கூறினான் — 'கண்ணாடி போல் துலக்கித் தருகிறேன். அதில் உங்கள் முகம் தெரியாவிட்டால் ஏன் என்று கேளுங்கள்!'

உண்மையில் காலுவின் இடது கை சற்று ஊனமானதுதான். ஆயினும் துலக்கப்பட்ட பாத்திரங்கள் பளிச்சிட்ட தண்ணீரைத் தெளித்துக்கொண்டிருந்த அந்தப் பெண்மணியினிடம் தட்டைக் கொடுத்தபடி மறுமுறையும் சொன்னான் — 'பாருங்கள் அம்மா, இதில் முகம் தெரிகிறதா இல்லையா?' காலு அந்த வட்டமான இளம் முகத்தை ஓரிருகணங்கள் பார்த்துக்கொண்டே இருந்தான்.

'சரி சரி! ரொம்பப் பெருமையடித்துக் கொள்ளாதே .... அந்த மேடையின்மீது கவிழ்த்து வைத்துவிட்டுப் போ ... முதலில் உன் கைகளை நன்றாகக் கழுவிக்கொள் ... சரி நீ எந்தக் குடும்பத்தைச் சேர்ந்தவன்?'

'படேல்' காலு பெருமிதத்துடன் கூறினான்.

'அப்படியானால் சரி, உள்ளே கொண்டுவந்து வை.'

அன்று காலு வயிறு நிரம்ப இல்லாவிட்டாலும் அரைவயிறாவது சாப்பிட முடிந்தது. இரவு வேளையில்தான் சாப்பிட வைத்திருந்த முழுச்சாப்பாட்டையும் பெண்மணி காலுவிற்குக் கொடுத்துவிட்டாள். இது வேறெந்த வேலைக்கும் பதிலாக அல்ல, இரக்கம்,

தயை இதனால்தான் கிடைத்தது. அப்படியிருந்தும் அவன் மனதிற்குள் வருத்தமடைந்தான். பகாவின் பேச்சு உண்மையாகத் தோன்றியபோதிலும், பொய்யென்று நினைத்து முணுமுணுத்தான் — 'ரொம்பவும் தற்பெருமையைக் காண்பித்துக் கொள்வதற்காகப் பிதற்றுகிறான் !'

எது எப்படியோ, ஆனால் ஒன்றுமட்டும் நிச்சயம். மனிதன் மனிதத்தன்மையை விட்டுவிட்டான், தன்னடக்கத்தை விட்டுவிட்டான். கூடவே மானம் கௌரவம் எல்லாவற்றையுமே கப்பலேற்றி அனுப்பிவிட்டான். தெய்வபக்தி, இரக்கம் முதலிய பண்புகளை அந்தக் கண்ணபிரானின் கோயிலுக்குள்ளே போட்டடைத்து விட்டான். ஒன்றுமட்டும்தான் எஞ்சியிருந்தது. பசிக் கொடுமையை எப்படித் தணிப்பது? உயிர் வாழ வழி என்ன என்று தேடுவது ... அது மட்டும்தான் இப்போது அவனிடம் எஞ்சி உள்ள பண்பு.

இந்த ஒரே ஒரு எண்ணம்தான், இதே ஒரு வேலைதான்— அதனால்தான் டேகடியாவின் தெருக்களில் மக்கள் நாய்களைப்போல் அலைந்துகொண்டிருந்தனர். சங்கர், ரண்சோட் போன்றவர்கள் அச்சத்தையும் வெட்கத்தையும் ஒருபுறம் உதறித் தள்ளிவிட்டனர். சேவல் கூவியதுமே மண்வெட்டியையும் கடப்பாறையையும் எடுத்துக்கொண்டு கிளம்பிவிட்டனர் — பலமுறைகள் தோல்வியுற்றுச் சலிப்புடன் வீடு திரும்புவர், சிற்சில சமயங்களில் நாள் முழுதும் உழைத்துவிட்டு, ஒன்றரை ஆழாக்கு அரிசி கொண்டு வருவர். அதைச் சோறாக்கித் தின்றுவிட்டுப் படுக்கும்போது எலும்புகளும் நரம்புகளும் வலிக்கும் வலியிலிருந்து மரணத்தின் துடிப்பே கேட்பதுபோல் அவர்களுக்குத் தோன்றும் .... நான்கைந்து முறைகள் இவ்விதம் வேலை செய்தபிறகு அந்த ஒன்றரை ஆழாக்கு அரிசிக்குப் பதிலாக புளியந்தளிருடன் ஒரு பிடி அரிசிதான் கிடைத்தது. அதைச் சாப்பிட்டுவிட்டுக் குப்புறப் படுத்துக்கொள்வதும் சரி என்று அவர்களுக்குப் பட்டது. அதுவே அதிக லாபமானது என்று தோன்றிற்று. பகல்வேளையில் ஒவ்வொரு தெருவாகச் சுற்றி அலைவர். எந்த வீட்டுக் கதவாவது திறந்திருந்தால் அங்கு உதவி கிடைக்குமா என்று கேட்பர் — இந்த விவசாயிகளின் முகங்களைப் பாருங்கள் ! நாங்கள் உயிருடன் இருந்தால் உங்கள் கிடங்குகளை நிரப்பிவிடுவோம் !'

சிற்சில இடங்களில் ஒரு சிறு துண்டு ரொட்டிக்காக மனிதனும் நாயும் சண்டையிட்டுக் கொள்வதையும் பார்க்கலாமே! ...

இவ்வாறு, அன்னதானம் செய்தவர்களே, தானம் செய்யப் பட்ட சோற்றைப் பிடுங்கித் தின்பதில் முனைந்திருந்தனர். கிடங்கு களிலிருந்தும் எடுப்பவர்கள் அதிகரிக்கவே துப்பாக்கி வீரர்களின் சூரத்தனம் நாளுக்கு நாள் அதிகரிக்கத் துவங்கியது. 'தானி யத்தைத் திருடுவதற்கு முன்பே துப்பாக்கி வெடிக்க ஆரம்பித்து விடுகிறதே! அதற்கு முன்னமேயே யார் திருடர்கள் என்பது தெரியுமா என்ன?' என்று மக்கள் சந்தேகிக்கத் துவங்கினர்.

இல்லாவிட்டால் காரணமின்றிச் சொல்ல அதிகாரவர்க்கத் திற்குப் பித்தா பிடித்திருக்கிறது? அந்தத் துப்பாக்கியிலேயே ஏதோ மாயவித்தை இருக்கிறது. அதற்குள்ளிருந்தே வீரன் வெளிவந்து விடுகிறான் போலும்.

எது எப்படியோ, ஆனால் மக்கள் திருட்டு – புரட்டு பற்றிய எண்ணத்தையே விட்டுவிட்டனர். அப்படியிருந்தும் டேகடியா வாழ் மக்களுக்கு ஒவ்வொரு தினமும் திருட்டைப் பற்றிய தகவல் கிடைத்துக்கொண்டே யிருந்தது. கிராமத்திற்கு வெளியே வாழ்ந்துவந்த மக்களுக்கு மரணத்தைப் பற்றிய தகவலும் அதே போல் கிடைத்துவந்தது. இந்த இரண்டு தகவல்களின் காரண மாகத்தான் துப்பாக்கிகள் 'டம் டமார்' என்று வெடித்துக் கொண்டே யிருந்தன.

ஒவ்வொரு நாளும் இதற்கிரையாகும் மக்களின் எண்ணிக்கை அதிகரித்துக்கொண்டே வந்தது. இந்த எண்ணிக்கையை இன்னும் அதிகரித்தவர் காலுவின் மாமனார்.

இரவு நேரம். களைப்பு — பசி இவற்றால் நடைபிணமாகிவிட்ட காலுவின் மாமன் ஒரு பிடி தானியத்துடன் வீடு திரும்பிக்கொண் டிருந்தான். திடீரென்று வாசலில் ஒரு குரல் கேட்டது — 'நாயே! நீயா? ..'

கிழவன் கதவருகே பாய்ந்தான். கதவைத் திறந்துகொண்டு இருளில் போய் அடைக்கலம் புகுந்துகொண்டான். நாயும் அங்கு ஓடிவந்தது. கால் நகங்களினால் பிறிவிட்டு 'வவ் வவ்' என்று குலைத்தது.

ஒரு வைஷ்ணவன் கதவைத் திறந்து ரொட்டித் துண்டைப் போட்டுவிட்டான். உடனே கதவை மூடச் சென்றான். அதற் குள் யாரோ பாய்ந்து ஓடிவருவது தெரிந்தது. கத்தினான்

'திருடன், திருடன்!' பக்கத்து வீட்டு வைஷ்ணவன் யாரென்று தெரிந்துகொள்ளாமலேயே உதவி செய்ய ஓடி வந்தான் ... 'திருடன் ... திருடன் ... ஓடு ... ...'

கடைத் தெரு முனையில் உட்கார்ந்திருந்த ஜமாதார் துப்பாக்கியுடன் பாய்ந்தோடி வந்தான். என்ன. ஏது என்று கேட்காமலேயே கிழவனின் மார்பைப் பார்த்துச் சுட்டான். வைஷ்ணவர்கள் உடனே கதவை மூடிக்கொண்டனர்— 'அட ராமா, இதென்ன அநியாயமல்லவா நேர்ந்துவிட்டது! ஜமாதார் துப்பாக்கியை எடுத்துச் சுட்டுவிட்டான் ... பாவம் வந்து சூழ்ந்துகொண்டு விட்டது. .... அட தெய்வமே!...'

காலு மட்டும் இதனால் மகிழ்ச்சிதானடைந்தான். சிதை எரியும் போது கூறினான் — 'உங்கள் வருத்தம் முடிவடைந்துவிட்டது. இதிலிருந்து விடுபட்டு விட்டீர்கள். ஆனால் நாங்கள் கொடுத்து வைத்தது ...'

மற்றவர்களிடம் கூறினான் — 'நீங்கள் எல்லோரும் இந்தத் துப்பாக்கியைத் திட்டுகிறீர்கள். ஆனால் எனக்கு இது மிகவும் நல்லதாகத்தான் படுகிறது. நீங்களே சொல்லுங்கள், நாயைப் போல் தெருத் தெருவாகத் திரிந்து சலித்துச் சாவதைவிட இந்தச் சாவு குறைந்ததா என்ன? 'படார்' என்ற ஒரு ஓசையில் துக்கமும் 'படார்' என்று போய்விடுமே!' பிறகு அழுதுகொண்டிருந்த ராஜியைப் பார்த்துக் காலு பெருமூச்செறிந்தான். நீண்ட மூச்சை இழுத்துக்கொண்டு உண்மையான வார்த்தையைச் சொல்ல ஆரம்பித்தான் — 'சீ! உங்கள் முப்பத்தாறு கலையும் நீங்களும்! மழையை நிலத்திற்குக் கொண்டுவரப் பாடுபடும் மக்களிடம் இந்தத் துப்பாக்கியைப் பிரயோகிக்கிறீர்களே! ஈன மனிதர்களே! உங்களை தேவ வடிவானவர்கள் என்று நாங்கள் கருதி வந்தோம். ஆனால் நீங்கள் தேவதையின் உருவில் கிளம்பிய அரக்கர்கள்!' காலுவின் மிதமிஞ்சிய கோபத்தில் ஊனமான கையும் மூடிக்கொண்டு உயரக் கிளம்பியது. பற்களைக் கடித்துக் கொண்டான் — 'ஆனால் நான்என்ன தான் செய்வேன்? .... என் வசத்திலிருந்தால் எல்லா விவசாயிகளையும் கொன்றுவிடுவேன். பிறகு உங்கள் பெண்டாட்டிகளுக்கு யார் மிருதுவான கோதுமை ரொட்டி தருகிறார்கள், யார் நிலத்தை உழுகிறார்கள் என்று பார்த்துவிடுவேன் ...'

காலுவின் இந்த வார்த்தைகளைவிட அவனது உள்ளம் பட்ட

பாடு மிகவும் பயங்கரமாக இருந்தது. ஆனால் பாவம், அவன் என்ன செய்வான்? ஆனால் அந்த மக்களிடம் முப்பத்தாறு கலைக ளுடன் கூட துப்பாக்கிகள் இருந்தனவே. இறைவன் எங்கே? கண்ணுக்குப் புலப்பட்டால்தானே? யாரிடம் கோபத்தைக் காண்பிப்பது? யாரிடம் சென்று புகார் செய்வான்? புகார் செய்ய யாரிடம் செல்ல நினைத்தானோ அவனே கருங்கல்லாகி விட்டானே!

அவன் இறக்கும் தருவாயில்தானிருந்தான். அருகே இருந்த இருப்பிடமும் இல்லையென்றாகி விட்டது. சாவதற்குள், முப்பத் தாறு கலைகளையுடைய வெள்ளையனோ, மிராசுதாரரோ, இல்லை, இறைவனோ, அரசாள்பவனோ, இந்த நால்வரில் யாராவது ஒருவர் எதிர்ப்பட்டாலும் சரி, பசியுடனிருந்த போதிலும் அவரைக் கொன்றுவிட்டுத்தான் மறுவேலை. அவருடைய உடலைக் கிழித்து ரத்தத்தைக் குடித்துவிட்டுத்தான் சும்மா இருப்பேன் — என்று நினைத்தான். ஆனால் என்ன செய்வான்? இந்த நால்வரில் ஒருவ ராவது எதிர்ப்பட்டால்தானே? இங்கு பகா — கோதர் முதலிய வர்கள் கூட அவனைக் கவனிப்பதில்லை. அது மட்டுமா? டேகடியா கிராமத்தில் அலைந்து திரியும் ஆயிரக்கணக்கான மக்களில் ஒருவ ராவது அவனை லட்சியம் செய்யவேண்டுமே! பலீயே அவனைத் தெரிந்துகொள்ளாதவளைப் போல் நடந்துகொண்டாள். எல்லோ ருக்கும் தத்தம் கவலைதான். பிறரைப் பற்றி யாருக்கும் கவலையே கிடையாது. அப்படியிருக்கக் காலுவைப் பற்றி யார் அக்கறை கொள்வார்?

ஆம். ஒரே ஒரு ராஜீ இருந்தாள். நேரம் கிடைக்கும்போதெல் லாம் அவன் கூறுவதைக் கேட்பாள். அவனைத் தன் கண்களில் வைத்து இமையில் மூடிக்கொண்டிருப்பவள் போல் வளைய வந்து கொண்டிருந்தாள் ...

கடைசிக் காலம் அருகே வந்துவிட்டாற் போலிருந்தது — காலு வின் மௌனத்தைப் பார்த்தால் அந்தப் பேச்சையும் விவாதத் தையும் அவன் அடியோடு விட்டுவிட்டான். உலகிலும் வாழ்க்கை யிலும் இருந்த உண்மைத் தத்துவத்தையே அவன் தகர்த் தெறிந்து விட்டான் — 'எல்லா முயற்சிகளும் வீண். ஒன்றும் பயனில்லை. உண்மை இரண்டில்தான் உள்ளது. ஒன்று ராஜீ, இரண்டு மரணம்!'

ஒவ்வொரு கணமும் மரணம் அருகே வருவதை அவன் உணர்ந்

தான். நான்கு நாட்கள் உயிர் வாழப் போகிறோம் என்று நினைத்து ராஜியுடன் மிகவும் அதிகமாக நெருங்கிப் பழக ஆரம்பித்தான். ராஜியிடம் அதைக் கூறியும் விட்டான் — 'நான் இனி அதிக நாட்கள் உயிருடனிருக்க மாட்டேன் — நான்கைந்து நாட்கள் தான் —'

ஆனால் ராஜி மட்டும் எத்தனை நாட்கள் உயிருடனிருக்கப் போகிறாள்? நீண்ட மூச்சு விட்டபடி அவள் கூறினாள் — 'மரணத்தை எதிர்பார்த்துக் கொண்டு நேரத்தைக் கழிக்கிறோம். அவ்வளவுதான் —'

முப்பத்தாறு கலைகளைக் கற்ற வெள்ளையர், துப்பாக்கி பிடிக்கும் அதிகாரி, கிடங்குகள் — இவை எல்லாவற்றையும் விட்டுவிட்டு ஒருவர் மற்றொருவருக்கு நிழலாக இருந்துகொண்டு வாழ விழைந்தனர். இறுதியில் இம்மாதிரி வாழ அந்தச் சோதனை நேரத்தில் போராடிக்கொண்டிருந்தனர். ஒருவர் மற்றவருக்கு ஆறுதலளித்தபடி மனதிற்குள் தனக்கு மரணம் வரவேண்டும் என்று பிரார்த்தித்துக் கொண்டனர்—எப்போது மரணம் வரும்? அதன் மடியில் எப்போது நான் நிம்மதியாகக் கண்களை மூடுவேன்?'

## 37

## உரலில் தலை

யன்னிரண்டு மாதங்களாகப் பெய்யாத மழை ஆனிமாதக் கடைசி பதினைந்து நாட்களில் பொழியும் எனும் நம்பிக்கை இருந்துவந்தது. மேகராஜன் உறங்கிவிட்டானா, அவனிடமிருந்த தண்ணீர்தான் தீர்ந்துவிட்டதா அன்றி, திரும்பி வரும் வழிதான் மிகவும் நீண்டு விட்டதா ஒன்றுமே புரியவில்லை.

நிலத்தில் மரணம்தான் மாரியெனப் பொழிந்து கொண்டிருந்தது. கானகத்திலும் வயல்களிலும் கடைத் தெருக்களிலும் பாதைகளிலும் — எங்கு பார்த்தாலும் பிணக்குவியல்கள்! எதை எரிப்பது, எதைப் புதைப்பது! பின்பு வருந்துவதும், ஈமக்கடன்கள் செய்து முடிப்பதும் எப்படி? எஞ்சியிருந்த உற்றார் உறவினர் தமக்குள் ஆறுதலடைந்தனர். இறந்தவரைக் காணாமலிருப்பதே நல்லது, வருத்தமடையாமலிருக்கலாமே என்றிருந்தனர்.

காலுவைப் போன்றவர்களுக்கு ஒரே பொறாமை! இந்தத் துக்கத்திலும், பசியிலும் ரண்சோட், சங்கர் இருவரும் சென்றுவிட்டனர். அவர்கள் அமரராகிவிட்டனர். எஞ்சியிருப்பவர் நாம்தான்! இன்னும் எத்தனை நாட்கள் பசியால் தவிக்கவேண்டும் என்று தலையில் எழுதியிருக்கிறதோ யார் கண்டார்கள்!

தானியமும் தீர்ந்துவிட்டது. 'இனி கேட்கமாட்டேன் சேட்ஜி!' என்று கடைக்காரனிடம் கெஞ்சிக் கேட்டு வாங்கிவந்த இரண்டு மணங்கு தினையும் தீர்ந்துவிட்டது. அதில் பாதி குப்பை — செத்தை, தண்ணீர் விட்டுக் கழுவுவதற்குள் போதும் போதும் என்றாகி விட்டது. அதுவும் ராஜி, இளைய மாமனார், மாமியின் மூன்று குழந்தைகள், பலீ, காலு — இத்தனை பேருக்கும் எத்தனை நாட்களுக்கு வரும்?

தானியம் குறைந்து கொண்டே வந்தது. மாமி, இளைய மாமனார் இருவரும் சிறு பெண்ணை விட்டுவிட்டு இறந்து போயினர். காலு ஒருபுறம் மகிழ்வுற்றான்; மறுபுறம் அதே அளவுக்கு வருத்தமும் அடைந்தான் — 'இந்த வெட்டி ஆசாமிகள் உயிர் வாழ்கின்றனர், வேலை செய்து வந்தவர் மடிந்துபோகின்றனர்!' வெட்டி ஆசாமிகளில் ஒருத்தி பலீதான்.

இம்மாதிரி தான் நினைத்தது தவறு என்று தன்னைத்தான்

அவன் கடிந்துகொண்டான். 'பிறர் சாகவேண்டும் என்று நினைத்தால், நீதான் முதலில் மடிவாய்!...'

இம்மாதிரிப் பஞ்ச நிலையை நினைத்துத்தான் இந்தப் பழமொழி வழங்கிவந்தது போலும் — 'பஞ்சத்தில் பல காலம்!'

ஆடி மாதத்து வானம் வெண்மையாக இருந்தது. ஆடு மாடுகள் மேயாமல் நிலம் வெறும் வயல்களால் சூழப்பட்டிருந்தது போலிருந்தது. தொலைவில் கண்ணுக்கெட்டிய இடமெல்லாம் மேகம் என்ற பேச்சே கிடையாது. இந்த ஆடிமாத வெயிலுக்கெதிரே வைகாசி ஆனிமாத வெயில் கூட ஒன்றுமில்லை என்றாகிவிடும் போலிருந்தது.

'வாழ ஒரே ஒரு வழிதான் — கொள்ளையடிப்பதுதான் — இருக்கிறது! ஆனால் தனி ஆளால் என்ன செய்ய முடியும்? பகா—கோதர் இருவரும் நம்பிக்கை யிழந்துவிட்டனர்!' — இவ்விதம் சிந்தித்தபடி யிருந்தான் காலு.

பணக்காரனுக்கும் ஒரே கவலை. செல்வந்தர்கள் வீடு கட்ட ஆரம்பித்தனர். 'இல்லை — உண்டு' என்று சொல்லியபடி வட்டிக்குக் கடனும் கொடுத்தனர். சில மக்களுக்கு அறிவுரையும் அளித்தனர் — 'வெள்ளையர் ரயில் தண்டவாளம் போடுகிறார்கள். அவர்களிடம் போய்ப் பணம் வாங்கிக் கொள்ளுங்கள். உயிர் வாழ விரும்பினால் செல்லுங்கள்!'

வெள்ளையர் யார்? தண்டவாளம் என்பது என்ன? இவர்களில் யாருமே டேகடியா எனும் ஊரைத் தவிர ஒன்றையும் காணாதவர்கள். இவர்களுக்கு அகமதாபாதும் பரோடாவுமே உலகின் மறுமுனை போன்றிருக்கும். இருந்த போதிலும் பல மக்கள் கிளம்பி விட்டனர். டேகடியாவிலிருந்து மட்டுமல்ல, அக்கம் பக்கத்து கிராமங்களையும் விட்டு...

அவர்களில் ரயில் தண்டவாளம் வரை சென்றவர்கள் எத்தனை பேர், வழியில் சிதையானவர்கள் எத்தனை பேர் என்று பரந்தாமனைத் தவிர வேறு யார் அறிவர்? யார் எங்கு சென்றனர் என்பதே யாருக்கும் தெரியாது. கணவனுக்கும் மனைவியின் தேவை கிடையாது. இல்லாவிட்டால் கோடி ஒரு முஸ்லீமுடன் செல்ல நாநா அதைக் கவனிக்காமலிருப்பானா?

டேகடியா கிராமத்தில் வயிறு நிரம்பச் சாப்பிட்டுவந்த சுகவாசிகள் கூட மரிக்கத் துவங்கினர். பயங்கர வெப்பத்தினாலோ அல்லது வெளியூர்களிலிருந்து வந்து வசித்த மக்களின் காரணத்

தாலோ, டேகடியாவில் வசிக்கும் சேட் சுந்தர் கூறுவதுபோல் — 'பசியால் வாடும் உழவர்கள் பெருவாரியாக மடிந்தார்கள்.'

ஒரு வைஷ்ணவர் துளசிதாசரின் அந்த ஈரடிச் செய்யுளைக் கூறி சேட் சுந்தரின் வார்த்தைகளை முடித்து வைத்தார்.

'உண்மையில் துளசிதாசர் கூறிச் சென்றது சரிதான் —

துளசி ஹாய் கரீப் கீ கப்ஹூ ந காலீ ஜாய்

முயே டோர் கே சாம் ஸே லௌஹ் பஸ்ம ஹோஜாய்!'

எது எப்படியோ, ஆனால் டேகடியா கிராமத்துச் செல்வந்தர்கள் சேட் சுந்தரின் வார்த்தைகளை மிகவும் கவனத்துடன் கேட்டனர். 'மழை பெய்யாவிட்டால், சாப்பிட உள்ளவர் கூட இறக்கவேண்டியது தான். எஞ்சியிருக்கும் இவர்கள்தான் ஒன்றுக்குப் பத்தாக விளையவைத்துத் தரப்போகிறார்கள். நாங்களா ஏர் உழப் போகிறோம்? ....'

டேகடியாவின் மிராசுதாரர், உள்ளேயிருந்து தானியத்தை எடுத்துத் தர ஒப்புக்கொண்டுவிட்டார். விலையும் பாதிதான் வாங்கிக்கொண்டார். பாதியை அறம் செய்வதாக நினைத்துக் கொண்டார்.

முதல் முதலில் ஒன்றும் கொடுக்காமல் சாப்பிடுபவர் குறைந்திருந்தனர். ஆனால் நாளாக ஆக அந்த எண்ணிக்கையும் வலுத்துக் கொண்டே வந்தது. மானம், கௌரவம் எல்லாவற்றையும் பசி உதறித் தள்ளிவிட்டது. காலுவையும் ராஜி எப்படியாவது சரிப்படுத்த முயன்றாள்.

'இந்தக் குவியலில் நம் தானியம் தானிருக்கிறது என்று நீங்கள் சொன்னீர்களே!'

'ஆம், நம்முடையதுதான்!'

'மிராசுதாரர் கொடுக்கிறார்; நாம் வாங்கிக்கொள்கிறோம். இதில் வெட்கப்படத் தேவை என்ன?'

'மானமுள்ளவர்கள் வெட்கப்பட்டுத்தானாக வேண்டும். நம் தானியம் இருப்பதால்தான் அதிக வெட்கம். தெரிந்ததா? நம் தானியத்தை நாமே வாங்கிக்கொள்ளக் கை ஏந்துவதா, பிச்சை ஏற்பதா?'

'போதும், போதும் போங்கள்! இந்த மாதிரி எண்ணத்திற்கெல்லாம் இடங்கொடுக்காமல் உட்கார்ந்திருங்கள். இல்லாவிட்டால், உங்கள் மீது ஆணை, நானும் போகமாட்டேன். இந்த இரண்டு சிறுவர்களும் பசியால் மடிந்தாலும் சரி!'

பிசைந்த மண் போல் உட்கார்திருந்த காலு எழுந்திருக்க நேர்ந்தது. ஆனால் ஒரு நிபந்தனைப்படி — 'நான் உன்னோடு வருவேன்; கை நீட்டி ஒன்றும் கேட்கமாட்டேன்!'

'வேண்டாம், உங்கள் சார்பில் நான் ஏந்திக் கேட்கிறேன். அவ்வளவுதானே!'

'சரியான பித்து' — காலுவின் இடுங்கிய கண்களில் பழுப்பழுவாக வெளியே நீட்டிக்கொண்டிருந்த எலும்புகளின் வழியாக அவன் சிரிப்பது தெரிந்தது. 'அந்த ஒன்றரை ஆழாக்குத் தானியம் நம்மை உயிருடன் வைக்கும் என்று நீ நினைக்கிறாய்? இரண்டு சேர் கொடுத்தாலும் என் வயிறு நிரம்பாது.' முன்னே நடந்தபடி கூறினான் — 'மழை வரும் என்று நீ எதிர்பார்க்கிறாய்? பிரளயம் தான் வரப்போகிறது. நாமும் உயிருடன் வாழப்போவதில்லை. இந்த மிராசுதாரரும் வாழப்போவதில்லை. அப்படியிருக்க உயிர் போகும் தருவாயில் இந்த விவசாயியின் மகளைப் பிறரிடம் போய் ஏன் கை ஏந்த வைக்கிறாய்? பிச்சை ஏற்க ஏன் வற்புறுத்துகிறாய்? ...முடியாது ...முடியவே முடியாது.... ராஜி! நீ தனியாகப் போ. நான் வரமாட்டேன்.' காலு நின்றுவிட்டான். வரிசையாக நின்றுகொண்டிருக்கும் தரித்திர நாராயணர்களை வறண்ட பார்வையுடன் பார்த்து அழுதபடியே நின்றுவிட்டான். ஆடவர், பெண்டிர் இவர்களின் அரை நிர்வாண நிலையில் படேல், அந்தணர்கள், வியாபாரிகள், வணிகர்கள் எல்லோரும் இருந்தனர். டாகுர் வகுப்பைச் சேர்ந்தவர்தான் எண்ணிக்கையில் அதிகமாகக் காணப்பட்டனர், எண்ணெய்க்காரர், சிப்பாய்கள் போன்றவர்களில் முஸ்லீம்களும் இருந்தனர். ஆனால் இவர்களில் பெரும்பாலோர் விவசாயிகள்தான். காலுவின் கால்கள் உணர்விழந்தாற் போலாகிவிட்டன. — 'கடவுள் உயிருடன் நம்மை வைக்க விரும்பினால், வெறும் சருகுகளைத் தின்றே ...'

'என்னுடன் வாருங்களேன்! என்னையும் பசியால் மடிய வைக்கவா நினைக்கிறீர்கள்? இந்த இரண்டு குழந்தைகளைப் பற்றியாவது நினைத்துப் பார்த்தீர்களா?' ராஜி தட்டுத்தடுமாறி நடந்தாள்.

'என்னைப்போல் நீங்கள் ஏன் மடியவேண்டும்? அழைத்துக் கொண்டு போ!' காலு மேலே நடந்தான்.

அருகில் சென்றபடியே அவன் சுற்றும் முற்றும் பார்த்தான். கோயிலின் தாழ்வாரத்தில் கண்கள் கூசும்படி சேட் சுந்தர் உடை

யணிந்திருந்தார் — வெண்மையான வேட்டி, சட்டை, சரிகைக் கரைபோட்ட சிகப்புத் தலைப்பாகை — அழகான போர்வையைத் தோளில் போட்டுக் கொண்டிருந்தார். உருண்டைத் திண்டின் மீது சாய்ந்தபடி மெத்தையில் உட்கார்ந்திருந்தார். மற்ற தனவந் தர்களும் அருகே அமர்ந்திருந்தனர்.

ஒரு நாற்காலியில் போலீஸ்காரர் அமர்ந்திருந்தார். துப்பாக்கி யும் கையுமாக நாற்புறங்களும் தன் பார்வையை மற்றொரு அதிகாரி செலுத்திக் கொண்டிருந்தார். சில சிப்பாய்கள் தடியும் கையுமாகச் சுற்றிக்கொண்டிருந்தனர். வருபவர்களைப் பின்னால் நிறுத்தி வைத்துக் கொண்டிருந்தனர். வாங்கிக் கொண்டவர் களுக்கு எச்சரிக்கை விடுத்தனர் — 'மறுபடியும் தப்பித் தவறி வந்தாயோ, மண்டையில் இந்தத் தடி விழும். ஆமாம்!'

களத்து மேட்டில் அந்தணர்களுக்கு வாரி வாரி தானம் வழங்கிய வர்களும் வரிசையில் நின்றுகொண்டிருந்ததைக் காலு கவனித் தான். ஒரு வேளைத் தானியத்தை வைக்கக் கூட வீட்டில் இடமில் லாமல் வாழ்ந்து வந்த மக்களையும் பார்த்தான். கேட்பதை ஈன மாக நினைக்கும் நானா, உடன் பிறந்தான் கொடுத்தால் கூட வாங்கிக் கொள்ளாத நானா கூட வரிசையில் நின்றுகொண்டிருந் தான்.

'அடடா! இந்தப் பாவிப் பசியின் கொடுமை இல்லாவிட்டால்—' காலுவின் கண்கள் நனைந்துவிட்டன. 'எந்த உயர்ந்த பிறவிக் கெதிரே மன்னாதி மன்னர்கள் கூடக் கை ஏந்திப் பிழைத்தார்களே, அவன் இன்று கை நீட்டிக்கொண்டு நிற்கிறான். அதுவும் ஒன்றரை ஆழாக்குத் தானியத்திற்காக... சீ! இதென்ன ஈனப் பிறவி!'

ஆனால் அப்படி நினைத்தவன் காலு மட்டுமல்ல. அங்கு வராத பலரும் அப்படி நினைத்துவந்தனர். சங்கர், ரண்சோட் — இரு வரும் உயிருடனிருந்தால் எது நடந்தாலும் சரி, இம்மாதிரி கை ஏந்திக்கொண்டு உலகத்தோருக் கெதிரே வந்து நிற்கவே மாட் டார்கள்!

காலு ராஜியையும் அந்த இரு சிறுவர்களையும் வரிசையில் நிறுத்திவிட்டு உடனே திரும்பிவிட்டான். சிப்பாய்கள் அவனைத் தடுத்தனர். 'ஏய் முடம்! எங்கே போகிறாய்?'

'என் இடத்திற்கு!' காலு திரும்பிப் பார்க்காமல் கூறினான். 'அடே மக்கு! நில்லடா! சொல்கிறது காதிலே விழலியா?' காலு நின்றுவிட்டான் — 'எனக்குச் சாப்பிட வேண்டாம்.'

'ஏன் வேண்டாம்? இத்தனை பேர் வாங்கிக்கொள்ளவில்லை? உனக்கு மட்டும் என்ன வந்துவிட்டது? பெரிய சேட்டு வந்து விட்டாரு!'

இந்த வற்புறுத்தல் காலுவிற்கு மிகவும் விசித்திரமாகத் தோன்றிற்று. அவனும் போய் நின்றுவிட்டான். — 'சேட்டா யிருந்தால் வாங்கிக்கொண்டிருப்பேன். விவசாயி பாருங்க! அதனால்தான் மாட்டேன் என்கிறேன். உயிரே போனாலும் சரி வேண்டாம். அடிக்க வேண்டுமானால் அடியுங்கள், இதோ நின்று விட்டேன்!'

நின்றுகொண்டிருந்த வரிசை முழுவதும் காலுவைப் பார்த்தது. நில அன்னையின் அந்தப் புதல்வனையே பார்த்தபடி நின்றது. அதி காரிகளும், சேட் சுந்தரும் கூட அவனைப் பார்த்தனர் — சிப்பாய் கள் தம் பலத்தை உபயோகிப்பதற்கு முன்பு அவர்கள் ஒரு மிராசுதாரரை அனுப்பிக் காலுவை அழைத்தனர் — 'ஏன் தம்பி படேல்? உனக்கு வேண்டாமா?'

காலு என்ன பதில் சொல்வான்! சொன்னாலும்தான், ஒரு விவசாயியின் உள்ளத்தை இவர்களால் எங்கே புரிந்துகொள்ள முடியும்? இந்தத் தானியக் குவியல் என்னுடையது என்று சொன்னாலும் அடிக்க வருவார்கள்; வேறு ஒரு பயனும் இருக்காது. ஆனால் ஏனிருக்காது? தானியத்தைச் செல்வமாக உடைய இந்த மக்கள் யாவரும் கை ஏந்துவதை விட்டு விட்டுக் கையை ஓங்க ஆரம்பித்தால், இந்தத் துப்பாக்கி வீரர்களெல்லோரும் மூலைக் கொருவராக ஓடி விடுவர், வாலைக் குழைத்துக்கொண்டு!

'என்ன கவலை? என்னிடம் சொல் தம்பி!' இனிமையான உள்ளத்தை உருக்கும் வகையில் சேட் சுந்தர் கேட்டார். நெருப்பு பொறி பறந்த காலுவின் அந்தக் கண்களினின்றும் டபடப் என்று கண்ணீர் உதிர்ந்தது — 'என்ன சொல்வேன் சேட்ஜி! நாங்கள் உழைத்து உண்டு பண்ணின இந்தத் தானியக் குவியலைக் கண்டு எங்களுக்கு எப்படியிருக்கிறது என்று என்னத்தைச் ...' வாக்கி யத்தை முடிப்பதற்குள் அழுகை பிறிட்டுக்கொண்டு வந்தது. அவன் வாய் விட்டு அழுதான்.

இத்தனை பெரிய மனிதர்களுடன் வாத — விவாதம் செய்து கொண்டிருந்த காலுவைத் தொலைவிலிருந்து பார்த்த நாநாவிற்கு ஆத்திரம் மூண்டெழுந்தது .... காலு அழுவதைப் பார்த்து. இனி இம்மாதிரி வாய்ப்புக் கிட்டுமோ கிட்டாதோ என நினைத்து நாநா

உரக்கக் கத்திவிட்டான் — 'கை நீட்டி வாங்க விரும்பாவிட்டால் பெண்பிள்ளையைப் போல் ஏன் அழுகிறாய்?'

ஆனால் இந்த வார்த்தைகள் சேட் சுந்தர், படைகளின் அதிகாரி இருவருக்கும் பிடிக்கவில்லை.

நாநா செய்த பாக்கியம், காலு பேசாமல் இருந்துவிட்டான். ஆனால் சேட் சுந்தர் கூறினார் — 'தம்பி! உன் தானியத்தையே நீ கேட்டு வாங்கவேண்டி யிருக்கிறதே என்று வெட்கப்படுகிறாய். இந்தத் தருமக் காரியம் செய்வதில் நாங்களும் அப்படியேதான் வெட்கமடைகிறோம்! உலகையே காக்கும் உழவர்களை நாங்கள் எத்தனை நாட்கள்வரை பாதுகாக்கப் போகின்றோம்? மேகத்திற்கு தண்ணீர் அனுப்புவது போலிருக்கிறது இந்த வேலை!' வறண்ட சிரிப்புச் சிரித்தார் சேட். பிறகு பெருமூச்செறிந்து கூறினார் — 'அசடே! என்னை ஒரு தடவை பார்! என்ன செய்வது? இயற்கைக் கெதிரே யாரும் ஒன்றும் செய்யமுடியாது!'

காலு மேலே பார்த்தான்.

'உனக்கு இது தானமாக அளிக்கப்படும் பிச்சை என்று தோன்றுகிறது. வேண்டாம். நாளையிலிருந்து இந்தத் திண்ணையை சுத்தம் செய். பெரியவரிடமிருந்து திண்டையும் மெத்தையையும் வாங்கிப்போடு. வேலை செய்யாமல் பிச்சை வாங்கித் தின்கிறோம் என்ற எண்ணம் இனித் தோன்றாது. சரிதானே?'

சேட்டின் பெருந்தன்மையான பேச்சைப் பணிவுடன் கேட்டு அதனை ஆமோதித்தான் காலு. கண்பார்வையிலேயே அவருக்கு வணக்கம் செலுத்திவிட்டு மனதிற்குள் சொல்லிக்கொண்டான் — சேட் இருந்தால் இப்படிப் பெருந்தன்மையுடன் இருக்க வேண்டும்!'

சேட் மறுபடியும் கூறினார் — 'உன்னைப்போல் வேறு யாராவது இருந்தாலும், அவர்களுக்கும் இவ்விதம் சொல். உங்கள் பொருளைத்தான் உங்களுக்குத் தருகிறோம், இதைப் பிச்சை என்று கருதவேண்டாம்!'

காலு தலையாட்டினான். நன்றி தெரிவிக்கச் சொல் அகப்படவில்லை. உடனே 'ஜய் ஸ்ரீ கிருஷ்ண' என்று கூறிவிட்டுப் போய் வரிசையில் நின்றுகொண்டான் — 'இது நம்முடையது — நாம் பெற்றுக்கொள்கிறோம் .... என் பங்கும் இதில் இருக்கத்தான் செய்யும். ஆலமரத்தருகே உள்ள வயலில் விளைந்த என்

தானியம் .... ஆமாம் இந்தக் குவியலிருந்து எடுத்துக் காண்பிக்கட்டுமா? உம்! சொல்!'

சிப்பாய்களுக்குக் காலு கண்களில் தூவப்பட்ட மிளகாய்ப் பொடியைப்போல் தோன்றினன். எப்போதும் தாங்கள் சலாம் செய்துவரும் சேட்ஜியுடன் பேசியிருக்கிருனே, அந்தக் காலுவை என்ன செய்யமுடியும்? ஆகையால் வரிசையில் நின்றுகொண்டிருந்த மற்ற மக்களின்பேரில் தங்கள் ஆத்திரத்தை அவர்கள் காண்பிக்க முற்பட்டனர் — 'சீ! வரிசையில் சரியாக நில்லடா கழுதை!'

கிழிந்த வேட்டியில் அந்த ஒன்றரை ஆழாக்குத் தானியத்தை ஏந்திக்கொண்டு சென்ற காலுவிற்குச் சிரிப்புத்தான் வந்தது. இவ்வுலகு — அவ்வுலகு இரண்டையும் இழந்த சாது மகாத்மாவின் கதைதான் நினைவிற்கு வந்தது; — 'போன மானம் போய்விட்டது. ஆனால் பசியும் ஆறவில்லை!'

காலு சொல்வது பொய்யில்லை. இதுவரை சோளம் — தினை போன்ற நல்ல தானியம் கிடைத்தது. ஆனால் இப்போது கிடைத்திருக்கும் தானியமோ காலு சொல்வதைப்போல் — 'ஒரு ஏப்பம் விட்டால், எல்லாம் ஜீரணமாகிவிடும்!' தன்னை எதிர் நோக்கி நின்ற ராஜியைப் பார்த்துக் கூறினன் —

'ராஜி! சொன்னவன் சரியாகத்தான் சொன்னன். கடவுளே! எவன் எவனுக்காகச் சம்பாதிக்கிருனே யார் கண்டவர்? இந்தப் பிடி தானியமும் நம் அதிருஷ்டத்தைப் போலத்தானிருக்கிறது!'

ராஜிக்குக் கோபம் வந்தது. அவனைத் துணுக்குற்ற பார்வை பார்த்தபடி கூறினள் — 'பகாவும் என் அண்ணனும் சொல்வது சரிதான். இதில் தயங்கவோ, யோசிக்கவோ என்ன இருக்கிறது? உங்கள் உடம்பைப் பார்த்தீர்களா? எல்லாவற்றையும் விடப் பயங்கரமான பிசாசு எது என்று தெரியுமல்லவா?'

காலுவிற்கு ராஜி கோபித்துக்கொண்டது இனிமையாகப் பட்டது. இனிமையாகக் கடிந்துகொண்டிருக்கிருள் ராஜி என்று அவன் தெரிந்துகொண்டான். சிரித்தபடியே குறுக்கே பேசினன் — 'ஆமாம், பசிதான் பெரிய பிசாசு ஆனால் ...'

ஆனல் ராஜிக்கு இப்போது விளையாட்டுப் பிடிக்கவில்லை. 'இல்லை கவலைதான் பெரிய பிசாசு. மனிதனை உயிரோடு தின்றுவிடும்!' என்று கூறினள்.

இதற்குப் பிறகு ராஜி அவனுக்கு மிகவும் அன்புடன் அறிவுறுத்தினுள்.

'சரி வா. இனிமேல் அப்படியெல்லாம் பேசமாட்டேன்!' கம்பீரமாக நடந்த காலு ராஜியைக் கேட்டான் — 'தொல்லையிலும் பெரிய தொல்லை எது தெரியுமா உனக்கு?'

'தெரியும். பசிதான்!'

'இல்லை. அதை விடப் பெரிய தொல்லையை நான் இன்று பார்த்தேனே!'

வேட்டியின் சிறு மூட்டையிலிருந்து காலுவின் பார்வை ராஜியின் பேரில் விழுந்தது. சுற்றும் முற்றும் பார்த்தபடியே அவன் கூறினுன் — 'பசியை விடக் கொடியது அவன் பிச்சை ஏற்பது. அது தெரியுமா உனக்கு? பசி எலும்பையும் சதையையும்தான் உருக்குகிறது. ... ராஜி!' காலு பிறகு தனக்குள் சொல்லிக் கொண்டான் —

'இந்தப் பிச்சையோ, நம் மானத்தை, கௌரவத்தை ... ஆத்மாவையே உருக்கிவிடுகிறது. தண்ணீராக இளக்கிவிடுகிறது நினைவிருக்கட்டும் —'

ராஜியால் இதைத் தாங்க முடியவில்லை. குழந்தையைத் தாய் கடிந்துகொள்வது போல் அவனைத் திட்டினுள். கையைப் பிடித்து உலுக்கினுள் — 'வாயை மூடிக்கொண்டு வீட்டிற்கு வருகிறீர்களா, இல்லையா? இல்லாவிட்டால் —' இத்துடன் அவளுடைய குரல் தளர்வடைந்தது. இரு குழந்தைகளையும் முன்னே பிடித்துத் தள்ளினுள் ராஜி — 'ஏன் இப்படி எல்லோரும் சேர்ந்து என்னை வதைக்கிறீர்கள்? அதைவிட நான் செத்துப் போயிருந்தால் நன்றுக இருந்திருக்கும்!'

ராஜியின் அலுப்பு காலுவை உணர்விற்குக் கொண்டுவந்தது. குடிகாரனின் போதை தணிந்தாற் போல் சுய நினைவிற்கு அவன் வந்தான். பச்சாத்தாபத்துடன் பேசினுன் — 'உன் மீது ஆணை ராஜி! இனி நான் அந்த மாதிரிப் பேசமாட்டேன்! —'

'உம் சரி, நடவுங்கள், வாயை மூடிக்கொண்டு!' — காலு கீழ்ப்படியும் சிறுவன்போல் நடந்தான். அந்த இரு சிறுவர்களுடன் சேர்ந்து நடந்தான்.

கோபித்துக்கொண்ட தாயைப் போல் ராஜியும் அவர்களைப் பின்தொடர்ந்து சென்றுள் — 'வீட்டில் தர்பார் நடப்பதுபோலத்

தான் எண்ணம். மரணம் வந்து கழுத்தைப் பிடிக்கிறது. மானம், கௌரவம் என்று பெரிய பெரிய பேச்சு !'

காலு பேசமாட்டேன் என்று சபதம் செய்திருந்தான். இல்லாவிட்டால் வழியில் துடிதுடித்துக் கொண்டிருந்த உற்ருர் உறவினர்களின் நிலேகண்டு அவனுக்கு ஆத்திரம் பற்றிக்கொண்டு வந்தது. துணிமணிகளுக்கும் உணவுக்கும் தான் பஞ்சமாயிற்றே. போதாத குறைக்கு இன்று அவர்கள் பிச்சைக்காரர்களே விட அவல நிலேயில் அவதியுற்றுக் கொண்டிருந்தனர் ... காலு கண்ணீர் விட்டான். மனதிற்குள் சொல்லிக்கொண்டான் — 'ஆடி மாதம் பாதி கழிந்துவிட்டது. இன்னும் மழையைக் காணும். உரலில் தலே இப்போது சிக்கிக்கொண்டிருக்கிறது. இந்த ஒன்றரை ஆழாக்கு தானியம் எதற்கு? இந்தப் பசியையும் தாங்க முடியவில்லே. உலக்கையைத் தலேயில் போட்டுவிடேன், இறைவா ! — வீட்டுத் திண்ணேமீதேறிய காலு கீழே விழுந்துவிட்டான். ஆவேசத்தாலோ, பசியினுலோ அன்றி வேறு எந்தக் காரணத்தினுலோ—

ராஜி பயந்து கத்தினுள் — 'கோதர், பகா ! யாராவது தண்ணீர் கொண்டு வாருங்களேன் ! ... கண்கள் ஏன் இப்படி ...'

கோதர் பகா முதலிய நான்கைந்து ஆடவரும், பலீ, ருக்கி முதலிய சில பெண்களும் திண்ணேயில் வந்து சூழ்ந்துகொண்டனர்.

ராஜி கண்களேத் தடவிக் கொடுத்துக் கொண்டிருந்தாள். கோதரும் பகாவும் தண்ணீரைத் தெளித்தனர். பலீ வசை பொழிந்தாள் — 'அனுபவியுங்கள். இப்போது தெரிகிறதா? தம்பிகளேயும் தாய்மார்களேயும் (ராஜியை) காப்பாற்ற ஓடினீர்களல்லவா, நன்ருக அனுபவியுங்கள் ! புண்ணியத்தை மூட்டை கட்டிக்கொண்டு பெரிய வீட்டுக்குப் போங்கள். அங்கே உங்கள் தாத்தா (கடவுள்) ராஜசிம்மாசனம் தருவார் !'

ஆனுல் பலீயை யாரும் கவனிக்கவில்லே. பாவாடை கட்டிக் கொண்டிருக்கும் ருக்கி மட்டும் பலீயிடம் சிரித்தபடி சொல்லிக் கொண்டிருந்தாள் — 'அடி ! சும்மா இரு ! செத்துப்போனுல் கூட நீ தூக்கத் தேவையிருக்காது. அப்படியிருக்க நீ ஏன் இப்படி? ...

## 38

## வெறிச்சோடிய வானம்

ஆடி மாதத்து வானவெளியைப் பார்த்து மக்கள் பெருமூச்செறிந்தனர். ஒவ்வொரு நாளும் மழை பெய்யும் எனும் நம்பிக்கையும் வாழ்க்கை பற்றிய நம்பிக்கையும் முறிந்து கொண்டே வந்தது. மக்கள் நீர்க்குமிழிகள் உடைவது போல் மடிந்தனர். உயிருடன் எஞ்சியிருந்தவர்கள் — 'இனி நம்மால் பசியைத் தாங்க முடியாது ராமா! ... உன் தர்பாரில் மரணத்திற்குக் கூடவா குறைவு? ஒரு முடிவு கூறேன்! மரணம் அல்லது மழை — இரண்டில் ஒன்றைக் கொடு!' என்று பிரார்த்தனை செய்தனர்.

ஆனால் காலுவின் உள்ளத்தில் இருந்த எண்ணமோ, முற்றிலும் வேறுபட்டிருந்தது.— 'கரை சேர்ந்த படகு மூழ்குமா என்ன? எனக்குச் சாவு கூட கிடைக்காதா? — இல்லாவிட்டால் முன்னும் வேண்டாம், பின்னும் வேண்டாம், மழை வரும்போதே உயிரையும் எடுத்துக்கொள்!'

உண்மையில் மரணம் கூட அவனிடம் கோபித்துக்கொண்டது போலும், மாரியை எதிர்நோக்கி நிற்கும் பரபரப்பில் அவன் மரணத்தைக் கூட மறந்துவிட்டான்.

மேக மன்னன் எப்போது கீழே இறங்கி வருவானோ, எப்போது நான் அந்தக் கட்டாந்தரையில் நல்ல வித்திடுவேன்! பசித்து நலியும் உலகிற்கு வயிாுற எப்போது உணவளிப்பேன். எங்கும் தானியத்தை அம்பாரமாகக் குவித்து விடுவேன் ... ஆனால் வானில் வீற்றிருக்கும் மன்னன் கீழே இறங்கி வந்தால்தானே இதெல்லாம் முடியும்? பௌர்ணமி கழிந்தது. இன்று இரண்டாம் நாள். இன்று பெய்யாவிட்டாலும் நாளைக்கு—மூன்றும் நாள் பொழிந்தே தீரும்—இல்லாவிட்டால் நான்காம் நாள் புல் பூண்டு கூட மிஞ்சாது.

ஆனால் நான்காம் நாளும் கழிந்தது—பஞ்சமியன்று காலுவின் கால்களே முறிந்துவிட்டன ... ஒன்றுமில்லை. பிரளயம் வந்து விட்டது!

அப்படியிருந்தும் அவனுடைய உள்ளம் மட்டும் 'வரும் வரும்' என்று சொல்லிக்கொண்டே யிருந்தது. ஏழாவது நாளும் பதினொன்றும் நாளும்—

மனிதன் தன்னம்பிக்கையுடன் இருக்கவும் ஒரு எல்லையிருக்கிற தல்லவா ? ஆனி மாதத்துப் பதினைந்து நாட்களையும் சேர்த்து எண்ணினால் நம்பிக்கையும் ஒன்றரை மாதமாக உயிர் வைத்துக் கொண்டு தானிருக்கிறது. பதினொன்றும் நாள் மழை பொழிந்தது உண்மைதான். ஆனால் இடி மின்னல் ஒன்றுமே கிடையாது. ஓரிரு கணங்களில் ஓய்ந்துவிட்டது. மக்களின் நம்பிக்கையும் துடித்து மறைய ஆரம்பித்தது — 'ஒன்றுமில்லை தம்பி! நாம் இப்படியே மடியத்தான் பிறந்திருக்கிறோம்!' நம்மை இது இப்படித்தான் துடிக்க வைக்கும்போல் தோன்றுகிறது!'

இனி மழையை நம்பி வாழ்வது வீண் என்று காலுவிற்குத் தோன்றிவிட்டது. பதினான்காம் நாளன்று இதுவரை எப்படியோ உயிர் வாழ்ந்திருந்த அந்த இரண்டு எருதுகளுக்கும் — தன் எருது ஒன்று, ரண்சோடின் எருது மற்றொன்று — உலர்ந்த இலைகளைப் பொருக்கிக்கொண்டு வந்து கொடுப்பதைக் கூட அவன் விட்டு விட்டான். ராஜியையும் போக விடவில்லை — இன்னும் ஒரு மணி நேரமோ, இரண்டு மணி நேரமோ, நான் உயிருடன் இருக்கப் போகிறேன் அதுவரை .... கடைசி நேரத்திலாவது நீ ...

அன்பு செலுத்த. ராஜியிடமும்தான் தெம்பேது? உண்மையில் அவள் காலுவைக் காட்டிலும் அதிக நலிவுற்றுக் காணப்பட்டாள். அந்த இரண்டு சிறுவர்களும் விளையாடுவதைக் காணும் எவரும் ராஜி பசிக் கொடுமையை ரொம்பவும் சகித்துக்கொண்டிருப்பாள் என்று சொல்வர்.

ஆனால் இப்போதே அவள் பசியைத் தாங்க வாழ்வதற்குத் தெம்பு கொள்வதையும் விட்டுவிட்டாள், தோல்வியை ஒப்புக் கொண்டுவிட்டாள். அவளும் புல் பூண்டுகளைச் சுமந்துகொண்டு வருவதை நிறுத்திவிட்டாள் ! — வீண் சுமை ! மழை பெய்துதானாக வேண்டும் என்றிருந்தால் கடந்த ஆனிமாதத்துப் பதினைந்து நாட்களிலிருந்து ஆடிமாதம் முடிவதற்குள் பெய்திருக்கக்கூடாதா? அவள் வீட்டிலேயே இருந்துவிட்டாள்.

ஒரே ஒரு நாளைய அனுபவத்திலிருந்து — பலீ — ருக்கியின் மகிழ்ச்சி நிரம்பிய பேச்சு, கோதர் — பகாவின் தன்னடக்க நிலை, இவற்றிற்கிடையே வீட்டிலிருப்பதைவிட அந்தச் சூனியமான வாழ்க்கையே தேவலாம் என்று காலு — ராஜி இருவரும் புரிந்து கொண்டுவிட்டனர்.

ஒருவருக்கொருவர் சொல்லிக் கொள்ளாமலேயே இருவரும்

விரும்பினர் — காலு கற்பனையிலேயே வட்டமிட்டுக் கொண்டிருந்தான். இருவரும் இறுகத் தழுவிக்கொண்டு அந்த ஆலமரத்தின் அடியில் இருக்கின்றனர். சிரித்துக்கொண்டு மரணத்தின் இனிமையைச் சுவைத்துக் கொண்டிருக்கின்றனர். இருவருடைய கண்களும் மூடியிருக்கின்றன .... சிறகடித்துப் பறக்கும் அந்த உயிர்ப்பறவைகள் சிறகோடு சிறகு சேர்த்தணைத்துக் கொண்டிக்கின்றன .... பாடிக்கொண்டே சுவர்க்கத்தின் வழியில் ....

மறுநாள் அவன் நாளுகவே தயாராகிவிட்டான். ஒன்றரை ஆழாக்கு அரிசியைக் கஞ்சியாக வைத்துத் தண்ணீர் ஊற்றிக் குடித்தான். சற்றே ஓய்வெடுத்துக்கொண்டான். பிறகு மாலை நேரம் வந்ததுமே இருவரும் எழுந்து நின்றனர்.

காலு, கோதர் — பகா இருவரிடமிருந்தும் விடை பெற்றுக் கொண்டான். ராஜியோ கடந்த நான்கைந்து தினங்களாகக் குழந்தைகளிடம் மிகவும் அன்புடன் நடந்துகொண்டாள். இப்போதே தான் சாகப் போவதற்கு முன்பு நடந்து கொள்வது போல் அவர்களிடம் அவ்வளவு ஆசையையும் அன்பையும் பொழிந்தாள். குழந்தைகளை விட்டுப் பிரியவே அவளால் இயலவில்லை.

அவளை எதிர்நோக்கித் தயாராக நின்றுகொண்டிருந்த காலுவிற்குச் சலிப்புத் தட்டிவிட்டது. அவன் கூறினான் — 'மனைவி கணவனைத் துறந்துவிட்டாள்; தாய் குழந்தைகளை விட்டுவிட்டாள். நீ இந்தக் குழந்தைகளை ... நம்மை அண்டிக் கிடக்கும் பிள்ளைகளை .. ?'

'பாவம்! அவைகளும் இப்போது எல்லோரையும் விட்டுப் பிரிந்து அனாதைகளாகத் தானே நிற்கப் போகின்றன! சில தினங்கள் வரைதான் — ஒருவேளை இன்று வரைதான் நான் உயிருடன் இருப்பேன்!' ராஜியின் உதடுகள் துடிதுடித்துக் கொண்டு முணுமுணுத்தன. இழுக்கப்படுபவளைப் போல் தன் வசமிழந்து நடக்க ஆரம்பித்தாள்.

வீட்டு மக்களையும் விட்டு, உலகைத் துறந்து, தன்னந்தனியே செல்லும் அவர்கள் மரணத்தை ஏற்பதன் சாக்கில் உயிர் வாழ விரும்பிச் சென்றார்களோ! அவர்கள் நடந்து சென்ற அந்த அரை மைல் தூரம் நடக்கக் கடினமாக இருந்திருக்கும். வழியிலேயே அவர்களுடைய வாழ்வு முடிந்திருந்தாலும் முடிந்திருக்கும்!

அப்படிப்பட்ட நிலை கடந்த பல தினங்களாக இருந்தது. பதின்மூன்றாம் நாளும் முடிந்துவிட்டது ...!

வழி முழுதும் காலு மௌனமாக இருந்தான். மேக மண்டலங்கள் சூழ்ந்து வருவதைக் கண்டு சற்றே நம்பிக்கை கொண்டான் — 'இன்று அமாவாசை நாள்! இன்று கூடவா மழை வராது? அடுத்த கணமே அவன் பெருமூச்செறிந்தான் — இல்லை, இல்லை, இப்படி மூன்று தடவை மேகம் மூண்டு வந்திருக்கிறது. ஆனால் மழை கிடையாது. அது நம்மை வீழ்த்தி விட்டுத்தான் மறுவேலை பார்க்கும்!' இவ்விதம் அவன் உலகில் உயிர் வாழும் நம்பிக்கையையே விட்டுவிட்டான். அந்தக் குன்றின் அடிவாரத்தில் உள்ள இலையற்ற ஆலமரத்தின் கீழ் — தன் லட்சிய இடத்தை வந்து சேர்ந்ததும் மௌனத்தைக் கலைத்துக் கொண்டான் காலு —

'எல்லோருக்கும் சாவு வருகிறது. நமக்கு மட்டும் ஏன் வர மாட்டேன் என்கிறது?' உலர்ந்த சருகுகளின் மேல் உட்கார்ந்து, முழங்கால்களில் கை வைத்தபடியே காலு கூறினான் —

'காக்கையைத் தின்றுவிட்டா வருகிறீர்கள்?' அருகே உட்கார்ந்தபடி ராஜி இலைகளைச் சேர்க்க ஆரம்பித்தாள்.

'உண்மை ராஜி! என்றால் இனி பசியைத் தாங்க முடியாது. உயிரை விட்டுவிடலாமா என்று தோன்றுகிறது!'

இதுவரை தனக்கும் காலுவிற்கும் மரணம் வராதா என்று ஏங்கிக்கொண்டிருந்த ராஜி காலுவின் முகத்தில் வேதனை படர்ந்திருக்கக் கண்டு, அவனுடைய குரலில் இருந்த வருத்தத்தைக் கண்டு துடித்துவிட்டாள். காலுவின் உடலில் பழுப்பழுவாகத் தெரிந்த எலும்புகளையே ராஜி பார்த்துக் கொண்டிருந்தாள். இடுங்கிக் கடந்த கண்களைப் பார்த்தாள்... 'உயிர் போய்விட்டால் நன்றாகத்தானிருக்கும்!' என்றுதான் சொல்ல ஆரம்பித்தாள் ஆனால்...

காலுவின் கண்களுடன் கண்கள் சந்தித்ததுமே வாடிப்போன தெம்பு எங்கிருந்தோ புத்துயிர் பெற்றெழுந்தது. பறந்த நகைச்சுவை அதன் சாயல்கள் எல்லாம் கண்களின் ஓரத்தில் வந்து நின்றன. 'ஆண்பிள்ளையாய்ப் பிறந்து' என்று இவ்வளவுதான் அவள் பேசினாள்.

காலு சருகுகளைச் சேகரிப்பதை விட்டுவிட்டான். பிறகு நிலத்தில் மெள்ளக் கால்களைப் பரப்பிப் படுத்தான். பதிலை எதிர்பார்த்தபடி ராஜியைப் பார்த்துக்கொண்டேயிருந்தான் — பெருமூச்சுடன் வார்த்தைகளும் வெளிவந்தன—'ஆண்பிள்ளையேதான்! ஆனால் பயனென்ன?...பசியுடன் போராட முடியவில்லையே ராஜி!'

ராஜிகூட எலும்பும் தோலுமாகத்தானிருந்தாள். அந்தக் கூரிய கண்களும் ஆழக் குழிகளில் இருந்தன. ஆனால் அந்த இனிய அழகு இப்போது எங்கே? அவள் கூறினாள்— 'மரணத்துடன் போராட முடியும் என்றால் பசியுடன் ஏன் போராட முடியாது காலு?'

ராஜியின் கடந்த காலப் பேச்சுகள் — அந்த புத்திசாலித்தனமான வார்த்தைகள் எல்லாம் வெட்டிப் பேச்சாகத் தோன்றின. அவன் கேட்டான் — 'இன்னுமா அப்படியே இருக்கிறாய்! அந்தப் புத்திசாலித்தனமான பேச்சுக்களை இத்தனை இன்னல்களுக்கிடையிலுமா நீ மறக்கவில்லை ராஜி!' காலுவின் கண்களில் சீற்றமும் அலட்சியமும் புலப்பட்டன.

ராஜி என்ன பதிலுரைப்பாள்? கல்லைக் கல்லால் அடித்தபடி கீழே பார்வையைச் செலுத்தினாள். பிறகு கூறினாள் — 'சரி சொல்லுங்கள்!' கண்களின் குழிகள் நிரம்பிவிட்டன. 'டப் டப்' என்று கண்ணீர் சொட்டிற்று.

காலுவினால் இதனைத் தாங்க முடியவில்லை. ஆனால் அவனுடைய குரலில் இன்னும் கோபம் தொனித்தது. 'நிலத்தில் தானியம் இல்லை; நீரில்லை... ஆனால் உன் கண்களில் மட்டும் கண்ணீர் இன்னும் வற்றவில்லை!' அவனுடைய கண்களும், ஏனோ தெரியவில்லை, கண்ணீரால் நிரம்பிவிட்டன.

'வாழவும் முடியாது!' ராஜியின் உதடுகள் மட்டும் முணுமுணுத்தன. மறுபடியும் கனவிலிருந்து விழிப்படைந்து உடனே எழுந்து நின்றாள் — 'உம்! எழுந்திருங்கள்!' பிறகு சொன்னாள் — 'எல்லாம் இப்போது தீர்ந்துவிட்டது. ஏதாவது தோலியாவது கையில் கிடைக்கிறதா என்று பார்க்கலாம்!'

ஆனால் காலு எழுந்திருப்பதற்குப் பதிலாகக் கால்களை நீட்டிப் படுத்துவிட்டான். வறண்ட சிரிப்புச் சிரித்தபடியே கூறினான் — 'மனிதப் பிறவி எடுத்த போதிலும், புல்பூண்டுகளைத் தின்றாகி விட்டது. ஆயினும் ...' பிறகு ராஜியைப் பார்த்துப் பேசினான் — 'ராஜி! ராஜி! நீ போ! நான் இங்கேயே — ராஜியின் கோபப் பார்வையை எட்டிப் பார்த்தபடியே—உண்மைதான் — என்னிடம் ஒரு துளித் தெம்புகூடக் கிடையாது!' என்று பயங்கரமான துக்கத்தில் துடிதுடித்தபடி, கைகளால் முகத்தை மூடிக்கொண்டு நாத்தழுதழுக்கக் கூறினான் — 'நீ போ! — நான் இறந்துவிட்ட செய்தியை எல்லோருக்கும் தெரிவி!' பிறகு தனக்குள் முணு

முணுத்தான் — 'யாருக்குத் தெரிவிப்பாய்? வீட்டுக்காரியோ — வேண்டாம் வேண்டாம் சாகும் தருவாயில் அவளைக் குறை கூறுவது சரியல்ல. இந்தப் பாவி வயிறு செய்த குற்றம் இது! ஆமாம் உண்மைதான் .... பசி மிகவும் கொடியது; மனிதன் கொடியவனல்ல!' பிறகு அவன் சுய நினைவிற்கு வந்தான். மனத் திருப்தியுடன் ராஜியையே பார்த்துக் கொண்டெழுந்தான்.... போதும் ... கடைசியாக 'சம்போ' என்று சொல்வோமே அந்தத் தெய்வமேதான் இது ....

ராஜியால் தாங்க முடியவில்லை. காலுவின் நெஞ்சில் உலர்ந்த ஆலமரக்கிளையே முறிந்து விழுந்தாற் போலிருந்தது!

கண்ணீர்த் தாரையில் மூழ்கிக் கொண்டிருந்த இரண்டு ஆத்மாக் களும் ஒருகணம் பிரார்த்தித்தன — 'இப்படியே மரணம் வந்து விடக் கூடாதா?' கேட்கும்போதே மரணம் கிடைத்துவிட்டால் மனிதனுக்கு வேறென்ன வேண்டும்?

அபார இச்சை இருந்தபோதிலும் இருவரில் ஒருவருக்குக் கூட மரணம் வரவில்லை .... களைத்துப் போய்க் காலுவின் மார்பிலிருந்த தன் தலையை உயர்த்தினாள். மனதிற்குள் முணுமுணுத்தாள் — 'அதிருஷ்டக் கட்டைகள் சாகக் கூடக் கொடுத்து வைப்பதில்லை!' பிறகு காலுவின் தோளை உலுக்கியபடி கூறினாள் — 'எழுந்திருங் கள். பச்சைக் குழந்தையைப் போல் இதென்ன வேலை ... கொஞ்சம் தைரியமாக இருக்கவேண்டும்!'

'தைரியமாக இருக்கத்தான் முயல்கிறேன் — ஆனால் உண்மை யில் ராஜி—' காலு ராஜியைப் பார்த்துக்கொண்டேயிருந்தான் ... எச்சரித்தான்—' இப்படிப்பட்ட மரணம் இனி கிடைக்காது ராஜி.' வறண்ட தொண்டையிலிருந்து வெளிவரும் சொற்களைப் போல் காலுவின் பேச்சில் தளர்ச்சி காணப்பட்டது.

அவனுடைய முகத்தைப் பார்த்த ராஜி நடுங்கிவிட்டாள் — 'இவன் என்னை விட்டுப் போய்விடுவானா என்ன?'

காலு உண்மையில் இறக்கும் தருவாயில் இருப்பதுபோல் அவ்வளவு பலவீனமாகக் காணப்பட்டான். ராஜி அதனால் தானே பயந்துவிட்டாள்! பலவித எண்ணங்கள் உள்ளத்தில் உதித்தன. 'ஆலமரத்துத் தளிர்களைப் பறித்து வரட்டுமா? இங்கு அருகே புளியங்கொழுந்தில்லையே ....பின்பு எதைத் தின்னத் தருவேன்? குடிக்கத் தண்ணீர் கூட இல்லையே! இல்லாவிட்டால்—'

'தண்ணீர்' என்று சொன்னதுமே ராஜிக்கு ஒரு எண்ணம்

தோன்றியது. காலுவின் கண்களும் அவளுடைய மார்பகத்துடன் ஒன்றியிருந்தன.

ராஜி பெருமூச்செறிந்தாள். அவள் காலுவின் கண்களை வறண்ட, ஆனால் போதைதரும் சிரிப்பினால் நிரப்பினாள்—அவள் கூறினாள்—

'அங்கே என்ன கிடைக்கப்போகிறது?' கிழிந்த ரவிக்கையைக் கையால் தடவிக் கொடுத்தபடியிருந்தாள்—

'கட்டை விரலில் இருந்தால்...'

எப்படித்தான் வந்ததோ, காலுவின் நாடிகளில் மின்வேகம் சுழன்றது. முழங்கையின் பலத்தால் எழுந்திருக்கப் பார்த்தான். அதற்குள் ராஜியே குனிந்தாள்— ராஜியின் உள்ளம் நெகிழ்ந்ததோ, அன்றி வாயிலிருந்து ஊறிற்றோ, இறைவனுக்குத்தான் தெரியும். ஆனால் தாகத்தால் வறண்ட தொண்டைக்கு ஆறுதல் கிடைத்தது. உடலுக்கு அமைதி கிட்டிற்று என்பதை மட்டும் காலு உணர்ந்தான். அந்தக் கண்களில் உயிர் சக்தி பள பளத்தது. முகத்தில் சிரிப்பு தாண்டவமாடியது. இதனை ராஜியும் பார்த்தாள்.

வடகிழக்குத் திசையையே பார்த்துக் கொண்டிருந்த காலுவின் கண்கள் பளபளவென்று பிரகாசித்தன. காதுகள் எதையோ உற்றுக் கேட்டன. உதடுகள் தள்ளி வந்துவிட்டன.— 'ஏதோ ஒலி கேட்கவில்லை? ஏன் ராஜி?' அவன் எழுந்து உட்கார்ந்தான்.

ராஜியும் உற்றுக் கேட்டாள்—மகிழ்வுற்றாள். காலு எழுந்தே நின்றுவிட்டான். கங்கையைத் தரிக்க சிவபெருமானே எழுந்தாற்போல் நின்றான் அவன்!

உண்மைதான். மேகங்கள் வடகிழக்குத் திசையில் ஒன்று திரண்டன. சற்றுத் தொலைவில் இடியோசையும் கேட்டது. மக்கள் தன்னைப் படுத்தும் அவமானத்தினால் கோபித்துக் கொண்டா, மகிழ்வடைந்தா, துணுக்குற்றா, ஆனந்த பரவசமடைந்தா

எப்படியிருந்தாலும் சரி, அது கோபித்துக் கொண்டாலும் சரி, அச்சமுற்றாலும், துணுக்குற்றாலும் அது மனிதனுக்கு ஆசியாகத் தான் முடியும். உலகம் முழுவதற்கு நலனாகத்தான் முடியும்.

இருள் சூழ ஆரம்பித்தது. ஆயினும் காலுவும் ராஜியும் உட்கார்ந்து தானிருந்தனர். மேகத்தின் நிறங்களை ரசித்தபடி, அதன் ஒலியைக் கேட்டபடி மழையை எதிர்நோக்கி உட்கார்ந்திருந்

தனர். இனியும் கவலை இருந்தது. 'இடித்துப் பெய்யாமல் விட்டு விட்டால், நம்மால் அதன் மூக்கையும் காதுகளையும் நசுக்கி விட முடியுமா என்ன ?'

ஆனால் அப்போதுதான் அமுதம் பொழிய ஆரம்பித்தது. ஒவ்வொரு சொட்டு மழையிலிருந்தும் காலுவின் அங்கங்களும் உடலில் அணுக்கள் யாவும் புத்துணர்வு பெற்றன. தெம்பு பிறக்கத் துவங்கிற்று...

நில அன்னையின் இந்தப் புதல்வன் ஒன்றும் புரியாமல் திகைத்தான். தூதனைப் போல் அமர்ந்திருப்பதா, அன்றி ஆனந்தப் பரவசத்தால் ஆடுவதா? பாட்டுப் பாடுவதா அன்றி கண்ணீர் பொழிவதா ?— அவனுக்கு ஒன்றுமே புரியவில்லை...

காலு மழையைக் கண்டு பித்தனைப் போலாகிவிட்டான். ராஜி காலுவின் பித்த நிலை கண்டு தன் நிலை தடுமாறிப் போனாள். துள்ளிக் குதிக்கும் உள்ளத்தை அடக்கிக் கொண்டு நின்றிருந்தாள் — 'இதோ பாருங்கள் ! எழுந்திருங்கள். இல்லாவிட்டால், இருள் சூழ்ந்து.........!'

காலு தெம்பு நிறைந்த மனிதனைப் போன்று எழுந்தான். — இருள் சூழ்ந்துகொண்டால் என்ன ?' என்று கூறியபடியே தன் கண்களால் ராஜியின் கண்களை ஒன்றாகப் பிணைந்தான். மிகவும் கம்பீரமாகச் சிரித்தபடியே ராஜியிடம் கூறினான் — 'அதனால் என்ன ? வாழ்க்கைக்கு வழிகாட்டியவன் — ! அவளுடைய பார்வை விண்ணை நோக்கிற்று ; 'வெறிச்சோடிய வானத்திலிருந்து அமுதம் பொழிய ...' பிறகு அவன் ராஜியைப் பார்த்தான். கேட்டுக் கொண்டே யிருந்தான். 'இப்போது நம்மை அவன் இருளில் தத்தளிக்க விட்டு விடுவானா ?'

ஒருகணம் 'காலு ஏன் பேசவில்லை ?' என்று ராஜி நினைத்தாள். அது உண்மைதான். காலுவின் அந்தராத்மா தான் பேசிக் கொண்டிருந்தது.

காலுவின் சொற்களில் ஒரு ஒளிவும் இல்லை போல் ராஜி அவனைக் கடிந்துகொண்டாள் — 'பேசாமல் நடவுங்கள். வெறிச் சோடிய வானம் மழை பெய்ய ஆரம்பித்தால் அவ்வளவுதான்' — அதை மறுக்க முயன்ற காலுவின் வாயை மங்கள அணிகலனற்ற ராஜியின் கரம் மூடிற்று — 'என் மீது ஆணை. நீங்கள் ஏதாவது சொன்னீர்களோ, அப்புறம் ...'

வாக்கியத்தை முடிப்பதற்குள் காலு தன் கரத்தால் ராஜியின் வாயைப் பொத்தினன்.

அந்த நிலத்தில் — முள் புதர் எல்லா இடங்களிலும் மழையின் வெள்ளம், காற்றின் சலசல ஓசை, மின்னெளி, இடியோசை — பன்னிரண்டு மாதத்துப் பிரிவாற்ருமையை முடித்துக்கொண்டு மேக மன்னன் தாண்டவ நடனம் ஆடுவது போலிருந்தது.

வீட்டை நோக்கிப் புறப்பட்டுக் கொண்டிருந்த காலுவின் அடிகளும் ஒலித்தாற் போலிருந்தது. வலப்புறம் நடந்துகொண்டிருந்த ராஜிக்கும் தோன்றிற்று. ... இனி காலனே வந்தாலும் இந்த ஆண்பிள்ளையைக் கொல்ல, அழிக்க அவனுக்குத் தைரியம் வராது என்று அவள் நம்பிக்கை கொண்டாள்.

# தமிழில் வெளிவந்துள்ள மற்ற நூல்கள்

## தேசிய வாழ்க்கை வரலாற்று வரிசை

| | | | ரூ. பை. |
|---|---|---|---|
| 1. | தியாகராஜர்—*பி. சாம்பமூர்த்தி* | ... | 1-75 |
| 2. | இராமாநுஜர்—*ஆர். பார்த்தசாரதி* | ... | 2-00 |
| 3. | குரு நானக்—*கோபால் சிங்* | ... | 2-25 |
| 4. | முத்துஸ்வாமி தீக்ஷிதர்—*டி. எல். வெங்கடராம அய்யர்* | ... | 2-50 |
| 5. | ரண்ஜீத் சிங்—*டி. ஆர். ஸமீத்* | ... | 2-75 |
| 6. | கபீர்—*பரஸ்நாத் திவாரி* | ... | 2-25 |
| 7. | ஹரிநாராயண ஆப்தே—*எம். ஏ. கரந்தீகர்* | ... | 2-75 |

## இந்தியா - நாடும் மக்களும் வரிசை

| | | | |
|---|---|---|---|
| 1. | வீட்டுப் பிராணிகள்—*ஹர்பன்ஸ் சிங்* | ... | 4-50 |
| 2. | சாதாரண மரங்கள்—*எச். சாந்தாபௌ* | ... | 4-75 |
| 3. | மக்கட் தொகை—*எஸ். என். அகர்வாலா* | ... | 3-75 |
| 4. | இந்தியப் பாம்புகள்—*பி. ஜே. டியோரஸ்* | ... | 6-50 |
| 5. | தோட்ட மலர்கள்—*விஷ்ணு ஸ்வரூப்* | ... | 6-00 |
| 6. | பூ மரங்கள்—*எம். எஸ். ரந்தாவா* | ... | 6-50 |
| 7. | நிலமும் மண்வளமும்—*எஸ். பி. ராய்சௌதுரி* | ... | 5-25 |

## அனைத்திந்திய நூல் வரிசை

| | | | |
|---|---|---|---|
| 1. | அக்னி நதி—*குர் அதுல்ஐன் ஹைதர்* | ... | 8-50 |
| 2. | மறைந்த காட்சிகள்—*பகவதி சரன் வர்மா* | ... | 8-00 |
| 3. | காகித மாளிகை—*முப்பான ரங்கநாயகம்மா* | ... | 4-25 |
| 4. | கதா பாரதி—இந்திச் சிறுகதைகள் *டா. நாம்வர்சிங்* | ... | 8-25 |
| 5. | அழிந்த பிறகு—*சிவராம காரந்த* | ... | 5-25 |
| 6. | வெண் குருதி—*நானக் சிங்* | ... | 6-00 |
| 7. | கவி—*தாராசங்கர் பந்த்யோபாத்யாய்* | ... | 5-50 |

ரூ. பை.

8. கதாபாரதி-தெலுங்குச் சிறுகதைகள்—(தொகு) புராணம் சுப்பிரமணிய சர்மா & வக்காட்டி பாண்டுரங்க ராவ் ... 7-75
9. கதா பஞ்சாப்—(தொகு) ஹர்பசன் சிங் ... 5-50

## பல்வகை நூல்கள்

1. காந்தியின் இந்தியா—வேற்றுமையுள் ஒற்றுமை ... 2-25
2. அக்பர்—லாரென்ஸ் பின்யன் ... 2-25
3. அறிவு வளர்க்கும் அறிவியல்—ஆட்சி கால்டர் ... 4-25
4. அசோக சாசனங்கள்—என். ஏ. நிகம் ரிச்சர்டு மக்கியோன் ... 3-00
5. கோதம புத்தர்—ஆனந்த கே. குமாரசாமி ஐ. பி. ஹாரர்னர் ... 6-00
6. மார்கோ போலோ—மௌரிஸ் காலிஸ் ... 5-75
7. குடதிசை குணதிசை ஞானப் பெண்மணிகள் —ஸ்வாமி காருநந்தா ... 6-00
8. இன்பத்தின் வெற்றி—பெட்ராண்ட் ரஸ்ஸல் ... 3-50
9. பாமர மக்களின் பரம்பரைப் பாடல்கள் —அழ. வள்ளியப்பா ... 1-25
10. விழவும் பூசையும்—எஸ். ஜி. கணபதி அய்யர் ... 1-25